அகதா கிறிஸ்டி

Agatha Christie

# மன்மதக் கொலை

## THE HOLLOW





கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 535

முதற் பதிப்பு : நவம்பர், 2007



E-mail: kannadhasanpathippagam@gmail.com
Our website : www.kannadhasanpathippagam.com

பதிப்பாசிரியர் - **காந்தி கண்ணதாசன்**



***Published in arrangement with*** **Agatha Christie Ltd., a Chorion Company, London, United Kingdom**

**விலை : 100/-**

**MANMATHAKKOLAI**- Tamil

Translated from the English Original **'The Hollow'**

- Written by : **AGATHA CHRISTIE**
- Translated by : **Dr. Korattur K.N. Srinivas**
- First Edition : November, 2007
- Publishing Editor : **GANDHI KANNADHASAN**
- Published by : **KANNADHASAN PATHIPPAGAM**
  23, Kannadhasan Salai, T. Nagar, Chennai - 017.
  Ph: 2433 2682, 2433 8712

**Our Branches**

- No.1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai - 625 003.** Ph. 0452 - 2373793
- No. 37, Bharathy Street, **Puducherry - 605 001.** Ph: 0413-4200143
- No. 1212, Range Gowder Street, **Coimbatore - 641 001.** Ph: 0422-2479774
- Old No. 43, New No. 117, Chunnambukara Street, **Vellore - 632 004.** Ph: 0416 - 2223312

- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17.

- Laser Typeset : **SIVAM'S,** Phone : 9444232005
- Printed at : **PTS Bind Graphics,** Ch.28, Ph: 24610018

# மொழிபெயர்ப்பாசிரியரின் உரை

**வா**சகனை, முதல் அத்தியாயம் முதல் கடைசி அத்தியாயம் வரை இருக்கையின் நுனி வரை இழுத்து வந்துப் படிக்க வைக்கும் சூத்திரதாரி - துப்பறியும் கதைகளின் சக்கரவர்த்தினியான அகதா கிறிஸ்டி. ஆனால், 'மன்மதக் கொலை' வேண்டிய அளவு த்ரில்லர் கொண்டு திகழ்ந்தாலும், கூடவே மனித உறவுகளின் உளவியல் குணாதிசயத்தை, மிக ஆழமாக விண்டும் வைக்கின்றது. இக்கதை இன்றளவும் வாசகர்களால் முதலிட நாவலாக வைக்கப்பட்டுள்ளதற்கு முக்கிய காரணம் இது.

இரு ஆண்கள். நாலு பெண்கள். ஆறு பேருக்குள்ளும் சுழலும் ஒரே பூதாகரச் சூழல் - காதல்! ஒருவரையே இருவர் காதலிக்க, அந்த இருவரை மற்ற ஒருவர் காதலிக்க... ஆற்றுச் சுழலாய் உணர்ச்சிப் போராட்டங்கள் வெடிக்கின்றன. இச்சுழல், இவர்களில் ஒருவரைப் பலி வாங்கி விடுகின்றது.

கொலை! செய்தது யார்?

இதற்கான பதில் தேடி, காதலின் அடியாழத்தைத் தொட்டுக் கொண்டுப் பிரயாணிக்க ஆரம்பிக்கும் துப்பறிதலின் சிறப்பான ப்ளஸ் பாயிண்ட்டாக அமைந்துள்ளது - காதல் தவிப்புகள். குழம்பியக் குட்டையாய் நடக்கும் காதல் போராட்டங்களை மெல்ல மெல்லத் தெளிய வைத்து சீர் செய்து, அனைத்துக் கதாபாத்திரங்களையும் ஆசுவாசப்படுத்தி விட்டு, கடைசி அத்தியாயங்களில் கொலைகாரனைக் காரண காரியங்களோடு அறிமுகப்படுத்துவது - நாவல் எனும் எழுத்து வகைக்கே இலக்கணம் வகுத்துத் தரும் மேதைமையாகி விடுகின்றது.

என்னைப் பொறுத்தவரை, இது இன்னுமொரு மோகமுள் - டிடெக்டிவ் சத்து ஊட்டப்பட்டு..!

என் அடி மனத்தாழத்துக் காதல் வலிகளைச் சுகமாக இன்னுமொரு முறை மீட்டிப் பார்க்க வகை செய்ததால், அவ்வலிகளுக்கே இதனை நான் காணிக்கையாக்குகின்றேன்!




முனைவர் கொரட்டூர் **கே.என்.ஸ்ரீனிவாஸ்**

252, இரண்டாவது தெரு,

கொரட்டூர், சென்னை-80.

srinivaskns@yahoo.co.in

# கதாபாத்திரங்கள்

1. **ஹாலோ :** விருந்து நடைபெறும் மாளிகை
2. **திருமிகு ஹென்றி ஆங்கட்டேல் :** 'ஹாலோ'வின் சொந்தக்காரர் - முன்னாள் ஆளுநர் - முன்னாள் கமிஷனர்
3. **திருமதி லூசி ஹென்றி :** ஹென்றியின் மனைவி.
4. **செல்வி. மிக்டே ஆங்கட்டேல் :** லூசியின் ஒன்றுவிட்ட சகோதரி முறை. எட்வர்டை மனமார நேசிப்பவர்.
5. **செல்வி ஹென்ரீட்டா :** சிற்பி.
6. **டாக்டர் ஜான் கிறிஸ்டோ:** மருத்துவர்கள் மண்டிக் கிடக்கும் அமெரிக்காவின் ஹேர்லி சாலையில் வசிக்கும் பிரபல மருத்துவர். ஆராய்ச்சியாளர். திருமணமாகியிருந்தும், ரீட்டாவைத் தீவிரமாகக் காதலிப்பவர்.
7. **திருமதி கெர்டா ஜான்:** ஜானின் மனைவி.
8. **சிறுவன் டெரன்ஸ், சிறுமி ஸெனா:** ஜான் தம்பதியரின் குழந்தைகள்.
9. **எட்வர்ட் ஆங்கட்டேல்:** ஹென்றியின் உறவு. ரீட்டாவைத் தீவிரமாய்க் காதலிப்பவர்.
10. **டேவிட் ஆங்கட்டேல்:** ஹென்றியின் உறவு. விடலைப் பையன்.
11. **வெரோனிக்கா க்ரே :** நடிகை. ஜானின் இளம் பருவத்தில் அவருடைய காதலி.

14. 4, 5, 6, 7, 9, 10, 11 ஆகிய அனைவரும் 2, 3 குடியிருக்கும் ஹாலோவில் ஒரு சனி மற்றும் ஞாயிறை இன்பமாய்க் கழிக்கக் கூடுகிறார்கள்.

11. **கட்ஜன்:** ஹென்றி வீட்டுச் சமையற்காரன். லூசியின் நன்மதிப்பைப் பெற்றவன்.
12. **க்ரேஞ்ஜ்:** இன்ஸ்பெக்டர்
13. **ஹெர்குல் பொய்ரெட்:** துப்பறியும் நிபுணர்.

# 1

வார இறுதியின் ஓய்வினையும் பொழுதுபோக்கினையும் நெருங்கிப் புலர்ந்துக் கொண்டிருந்த அந்த வெள்ளிக் கிழமைக் காலையில், கமிஷனர் ஹென்றியின் பரந்து விரிந்த பங்களாவான 'ஹாலோ'வில் அனைவரும் இன்னும் கொட்டும் பனியின் குளிர் தாக்கத்தால் படுக்கையில் சுருண்டே கிடக்க, தன் நீல விழிகளைப் பட்டென திறந்து, தனக்கே உரிய உடனடி சுறுசுறுப்புடன் மெத்தையிலிருந்துத் துள்ளி எழுந்தார், லூசி ஆங்கட்டேல். நெளிந்து, சோம்பி, குளிரால் வெடவெடத்து, இன்னும் கொஞ்சம் படுத்திருப்போமா என்று படுக்கையைத் திரும்பித் திரும்பிப் பார்த்து - என, எந்த மந்த நடவடிக்கையும் இல்லாமல், தன் பிரத்யேக முத்திரைச் சக்தியோடு கிளம்பினார் லூசி. முக்கியமான ஒரு விஷயம் குறித்து உடனடியாக ஆலோசனை செய்து உரையாட, எழுந்த குழந்தையின் துள்ளல் போன்ற யாராலும் ஈடுகொடுக்க முடியாத ஒரு வேகம் லூசிக்குள் புரண்டது. ஆலோசனைக்கு, நேற்று இரவு ஹாலோ வந்திறங்கியிருந்த இவரின் ஒன்று விட்டு சகோதரி மிக்டே-வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். படுக்கையிலிருந்து இறங்கிய லூசி, இந்த வயதிலும் இன்னும் பளபளப்புடன் மிளிரும் தன் இருதோள்களையும் அசட்டை கலந்து பெருமிதமாய்ப் பார்த்துக் கொண்டு, மிக்டே அறை நோக்கிப் பாய்ந்தார். தன்னுடைய இயல்பான வழக்கப்படி, மிக்டேவுக்கும் தனக்குமான சம்பாஷணையைத் தனது வளமிக்கக் கற்பனைத் திறனால் தன்னுள்ளேயே நிகழ்த்தி, அதற்கு மிக்டே தரும் பதில்களையும் ஊகித்துக் கொண்டு, சம்பாஷணையின் போது எப்படியெல்லாம் கொடிகட்டித் திகழலாம் எனும் திட்டமிடலூடே, மிக்டே அறை வாயிலை அடைந்தார்.

உள்பக்கம் தாளிடப்படாமல் அடைக்கப்பட்டிருந்த மிக்டே அறைக் கதவை, தடாலென்று திறந்து நுழையும் போதே, ''அன்பு சகோதரி...! நாளை விடியவுள்ள இந்த வார இறுதி நாட்கள் இரண்டும், நிச்சயம் சுலபமாயிருக்கப் போவதில்லை என்பதை நீ ஒப்புக் கொள்ளத்தான்

வேண்டும்...!'' என்று உச்சஸ்தாயியில் சொல்லிக் கொண்டே நுழைந்தார் லூசி!

இப்படி ஓர் இடியோசை, அமைதியாய் அடைக்கப்பட்டிருந்த அந்த அறைக்குள் எதிர்பாராது முழங்கியதும், ''யாஹ்...! ஹாவ்...! வாஹ்....!'' என்று, என்ன நடக்கிறது என்ற தெளிவற்றுப் பிழறி, திணறியபடி, தனது ஆழ்ந்த நிம்மதியான ஒரு மனோஹரக் காலைத் தூக்கத்திலிருந்து, அதிருப்தியாய் விழித்துக் கொண்டார் மிக்டே. தியானம் போல நிகழ்ந்துக் கொண்டிருந்த தூக்கத்திலிருந்து தூக்கி வாரிப் போட்டு எழுந்ததால், அவர் நெஞ்சும் விரல்களும் லேசாய் அதிர்ந்தன. அதே அதிர்வோடு எதனால் இப்படி ஒரு சப்தம் விளைந்தது என தலையைத் தூக்கித் தேடியவர் கண்களில், எதிரே, திரைச்சீலைகளை விலக்கி, செப்டம்பர் மாத வசந்தக் காலத்துக் காலைக் கதிரை அறைக்குள் நுழைய வழி செய்துக் கொண்டிருந்த லூசியும், ''ஆஹா....! பனியின் சிலிர்ப்பில் வளைய வரும், அதோ, அந்தப் பறவைகள் தான், எத்தனை அழகு...!'' என வியந்துக் கொண்டிருந்த அவரின் குரலும் அகப்பட்டன.

''என்ன...?'' என்று இன்னும் தெளிவு பெறாமல் கேட்டார் மிக்டே.

ஜன்னலின் வழியே வெளியே வழியும் இயற்கையைப் பார்த்துக் கொண்டிருந்த லூசி, ''வானிலை எந்தத் தொந்தரவும் தரப்போவதில்லை. அது, கோவையாக அமைந்து விட்டது. வருபவர்கள்தான் தொந்தரவு தராமலிருக்க வேண்டும்....! பலவித குணாதிசயங்களிலன்றோ நபர்கள் இங்கு வரவுள்ளனர்...! இப்படி வித்தியாசமானவர்கள் கூடும்போது, சாதாரண நிலையை விட, பத்து மடங்கு மோசமான சூழல் ஏற்பட்டு விடலாம் என்பதை நீ கூட ஒப்புக் கொள்வாய் மிக்டே...!'' என்று சொல்லி விட்டு, இப்போது மிக்டே படுத்திருந்த கட்டிலின் பக்கம் திரும்பி, கைகளைக் குறுக்காய்க் கட்டி நின்றுக் கொண்டு, மெலிதாய்ப் புன்னகை தவழத் தொடர்ந்தார்: ''சிறு விளையாட்டில் கூட பொறி கிளம்பி அது வினையாய்ப் போய் [illegible], ஏதோ விளையாட்டின் பொழுதுதான், நான், பாவம் அந்த [illegible] வெறுப்பேற்றி விட்டேன். பிறகு [illegible], அத்தனையும் என் சிந்தனையற்ற செயலால்தான் என்று சொல்லி வருந்தினேன். அவளை விட்டு விட்டு வா என்று [illegible] அழைத்தலும் தகாது ஆகையால், அவள்

தவிர்க்கப்படயியலாதவள். இருந்தாலும் அவளைப் போன்றோரால் தொந்தரவு மிகத் தான் செய்கின்றது! இதில் வருத்தம் தருவது எது தெரியுமா மிக்டே...! கொர்டா மிக நல்லவள், இனியவள், என்பது தான்....! பாவம்...! இவளைப் போன்ற அப்பிராணிகள், இப்படி சமயோஜிதம் என்பது முழுக்க அற்று, மூளையற்றவர்களாய்ப் படைக்கப்பட்டுள்ளதை நினைக்கும் போது, இறைவன் மீது கோபம் கவிழ்ந்து வயிறெரிகிறது....!''

''இப்போது எனக்குத்தான் வயிறெரிகிறது...! ஆனந்தத் தூக்கத்திலிருந்தவளை அதிரடியாய் எழுப்பி இப்போது நீ எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாய்...? ம்...?''

''இவ்வார இறுதி நிகழ்ச்சிகளைப் பற்றி தான்! நாளை இங்கு வரவுள்ளவர்களைப் பற்றி...! நேற்று இரவு முழுதும் இதே சிந்தனை தான், தெரியுமோ....! தூங்கவேயில்லை...! எப்போது விடியும், இந்த மன சங்கடத்தைப் பற்றி உன்னுடன் வந்து எப்போது பரிமாறி ஆலோசனை பெறுவேன், எனக் காத்துக் கொண்டிருந்தேன். விடிந்தது. ஓடி வந்து விட்டேன். நீ அறிவுள்ளவள். அனுபவமுள்ளவள். எப்போதும். அதனால்.''

''லூசி'' என்று கடுமையாய் அழைத்தார் மிக்டே. உப்புசப்பற்ற ஒரு காரணத்திற்காக தன் தூக்கம் கலைந்துப் போனதில் உண்டான கடுமை! ''இப்போது மணி என்ன தெரியுமா...?''

''தெரியாது மிக்டே....! எனக்கு மணி பார்த்து வேலை செய்யும் பழக்கமே கிடையாது....!''

''ஆறே கால்.''

''ஓ'' என்றார் லூசி, மிக்டே மீது துளியும் பரிதாபமில்லாத தொனியில்...!

மிக்டே இன்னும் கடுமையாய் லூசியைப் பார்த்தார். வேறொன்றும் செய்வதிற்கில்லை என்று அவருக்குத் தெரியும்! சுத்த பைத்தியக்காரி...! அசாதாரண படைப்பு...! இப்படி விவஸ்தையே இல்லாதவளோடு என்ன உறவு வேண்டிக் கிடக்கிறது...!

இவ்விதமாய்த் தூக்கம் கலைந்துப் போய்விட்ட கழிவிரக்கத்தில் மிக்டே தனக்குள் அழாத குறையாய்ப் பொறுமிக் கொண்டே யிருந்தாலும், கடைசியாய்த் தனக்குத் தானே கேட்டுக் கொண்ட கேள்விக்கான விடையும் அறியப் பெற்றவர் தான் இவர்...! எதிரே இன்னும் புன்முறுவிக் கொண்டே நின்றுக் கொண்டிருந்த லூசியின்

கல்மிஷமற்ற முகத்தைப் பார்க்கும் போது, காண்போரை ஊடுருவிக் கட்டிப் போடும் இவரின் மிகச்சிறப்பான வசீகரமும், அதனை அற்புதமாய்க் கையாண்டு உலகையே இவர் கட்டியாளும் திறனும் தான், சிறு பிள்ளையாய் நடந்துக் கொண்டாலும் லூசியோடு இன்னும் உறவு பேண வைத்துள்ளன என்று மிக்டே உணர்ந்தார்...! எத்தனை பிரபலங்கள்...! எத்தனை அரசு அதிகாரிகள்...! எத்தனை வெளிநாட்டு மனிதர்கள்...! எத்தனை எத்தனை பேர், லூசியின் கபடமற்ற வசீகரம் தந்த வீச்சால், இவரின் அத்தனை தொந்தரவுகளையும், இடைஞ்சல் களையும், அவை ஏற்படுத்திய குழப்பங்களையும் சகித்துக் கொண்டுள்ளனர்...! இதோ, அறுபது வயதினைத் தாண்டிவிட்ட நிலையில் கூட, லூசியின் வற்றாத வசீகரமும், அதை இவர் தனக்குச் சாதகமாகக் கையாண்டுப் பிரயோகித்துப் பெறும் வெற்றியும், ஈடு இணையற்று தோற்காமலுள்ளன. இவரின் குழந்தைத் தனமான துடுக்கும், குழந்தையைப் போன்ற வெகுளித்தனம் நிறைந்த துடிப்பினால் ஆன செய்கைகளும், இவை இவரிருக்கும் பகுதி முழுதும் தூவிவிடும் சந்தோஷமும் மகிழ்ச்சியும்தான், எந்த விமர்சனமும் இல்லாமல் இவரைப் போர்த்திக் காத்து விடுகின்றன. இவரிடம் வியாபித்திருப்பது கவர்ச்சி இல்லை; அது ஆபாசம்...! இது வசீகரம்; குழந்தையைப் பார்த்தக் கணத்தில் ஏற்படுத்தும் ஈர்ப்பு...! குழந்தை ஒன்று நம்மை எப்படித் தொல்லை செய்தாலும், அதன் முகத்தில் மிளிரும் வசீகரத்தால் நாம் அதனை விமர்சிக்காது தூக்கி நிறுத்தும் தராசுத் தட்டில்தான் லூசியும் வாழ்கிறார்!

''ஓ, மிக்டே...'' என்று ஏதோ நினைவில் பிடிபட்டவராய் அழைத்த லூசி, ''மன்னித்து விடு! மன்னித்தேன் என்று சொல்லி விடு! நீ என்னிடம் சொல்லியிருக்கலாம்...!'' என்றார், வேகவேகமாய்.

''எதை...? தூங்குகிறேன், எழுப்பாதே என்றா...?!'' - காரம் ஏறியது மிக்டேவுக்கு. ''இதோ இப்போது சொல்கிறேன். என்ன பிரயோஜனம்? நீ அடித்த கூத்தில் நான் முழுசுமாய் விழித்தாகி விட்டது...!''

''சே...! என்ன காரியம் செய்து விட்டேன்...!'' என்று வருந்திய லூசி, பார்ப்பவற்றுக்குள்ளேயே சட்சட்டென தளம் மாறி, கடந்த நொடியில் நடந்ததை மறந்து முன்னேறும் அவரின் வழக்கமான குழந்தை குணாதிசயத்தோடு, தொடங்கிய பிரச்சினைக்குள் நுழைந்துக் கேட்டார்: ''இருந்தாலும் நீ எனக்கு உதவுவாய், இல்லையா...?''

''என்ன உதவி? எதற்கு உதவி? இவ்வார இறுதி விழா என்றாயே, அதற்கா? ஏன்? அதற்கு என்ன இப்போது?''

இக் கேள்விகளைக் கேட்டதும், விருட்டென்று ஓடி வந்து வெகுளித்தனம் மிளிர தன் மெத்தை நுனியில் உட்கார்ந்துக் கொண்ட லூசியின் குழந்தைப் பரவதச்தைப் பார்த்த மிக்டே, அப்படி அமர்வது, வேறு யாரோ போல இல்லாது, சூட்சுமப் பொருளாய்க் காணப்படும் ஏதோ ஒரு தேவதை வந்தமர்ந்ததாய்ப் பொருள் கொண்டார். உட்கார்ந்த லூசி, மிக்டே'வின் இக்கணிப்புக்கு நெய் வார்க்கும் வகையாய், தன் வெண்கைகளை இறக்கையாக்கி, ''தனித்தனியாய் நல்லவர்கள் தான். அழகும் அற்புதமும் நிரம்பப் பெற்றவர்களும் கூட. ஆனால் கூடும் போது தான் தப்புத் தப்பாய் போய் விடுகின்றது. விதவித எண்ணங்களும் சிந்தனைகளும் உடையவர்கள். இப்படி விதவித குணாதிசய நண்பர்கள் வந்து இறங்கப் போகிறார்கள்'' என்று வானத்திலிருந்து இறங்கும் ஆகாய விமானமாய் விரித்த கைகளை நளினமாய் நடித்துக் காட்டினார். என்ன வசீகரம் என்று மிக்டே'வின் மூச்சே நின்று போனது. பின், ரகசியமாய், ''ஒன்றாய் வேறு, கூடப் போகிறார்கள்...!'' என்று குறிப்பிட்டார்.

''யார் யாரெல்லாம் வருகிறார்கள்...?'' இப்படிக் கேட்டு விட்டு, தன் நெற்றியில் விழுந்துக் கலைந்திருந்தக் கூந்தலைப் பின்னுக்குத் தள்ளியபடி எழுந்து அமர்ந்து, விலகியிருந்த கம்பளியைப் போர்த்திக் கொண்டார் மிக்டே. தன் இந்த செயல்கள் எதிலும் லூசியிடம் தெறித்த தேவதை சாயல் ஏதுமில்லையே என்றும் கவனித்து ஏங்கிக் கொண்டார்.

''ஜானும் கெர்டாவும். இவர்களைப் பிரிக்க முடியாது. பாவம் கெர்டா...! அவளை வழிநடத்த ஒருவர் எப்போதும் தேவைப்படு கிறார். நாமனைவரும் அவளிடம் அன்பாக - மிக மிக மிக அன்பாக நடந்துக் கொள்ள வேண்டும். அழகும் கம்பீரமும் கவர்ச்சியும் ஒருங்கே பெற்றுள்ள ஆணழகன் ஜானுக்கு இப்படி ஒருத்தி....!''

இக் கருத்தை ஏற்க இயலாதவராய், ''போனதையே சொல்லிக் கொண்டு திரியாதே லூசி. இப்போதெல்லாம் கெர்டா அவ்வளவு மோசமாக ஒன்றும் இல்லை....!'' என மறுத்தார்.

''ஆனாலும் அவள் பரிதாபகரமானவள்தானே....! மற்றவர்கள் சொல்லும் எதையும் அர்த்தப்படுத்திக்கொள்ள இயலாமல்தானே இன்னும் இருக்கிறாள்.''

''பிறகு...? ஹென்ரீட்டா வருவதாய்க் கேள்விப்பட்டேன். அப்படியா...?''

லூசியின் முகம் விறுவிறுவென பிரகாசமானது. ''ஆமாமாம்...'' - சொல்லும் போதே உற்சாகம் கரைபுரண்டது அவரிடம். ''அவள் தான் நமக்கெல்லாம் சிறப்பானதொரு சக்தியாய் இருக்கப் போகிறாள் என்பது என் நம்பிக்கை. அவள் ஒரு கலங்கரை விளக்கு. எப்போதும் உதவிக்கரம் நீட்டி கரையேற்றுபவளாய்தான் அவள் விளங்கியிருக் கிறாள். கனிவானவள். மேலோட்டமாக இல்லை மிக்டே. மனத்தாழத்திலும் அவள் மிக அன்பானவள். ஆதரவானவள். கெர்டாவுக்கு அவ்வளவு உதவியுள்ளார்! இதற்கு சென்ற வருட நிகழ்ச்சியே ஓர் எடுத்துக்காட்டு. பழமொழி எழுதுவதோ, குறுக் கெழுத்தோ, பாட்டுக்குப் பாட்டோ, இல்லை இது போல ஏதோ ஒன்றோ...! நாமெல்லோரும் விளையாட்டினை முடித்து விட்டு, யார் வென்றது என்ற முடிவினைப் படித்துக் கொண்டிருந்தோம், நினைவிருக்கிறதா...?''

ஆமாம் என்பது போல் தலையசைத்தார் மிக்டே.

''அப்போது தான், கெர்டா இன்னும் விளையாட்டைத் துவங்கக் கூட இல்லை என்பதையும், அவளின் மூளைக்குள் விளையாட்டின் சாராம்சம் துளியும் இறங்கவில்லை என்பதையும் கண்டு பிடித்தோம். எத்தனை கொடுமை...!''

''மண்டைக்குள் ஏறவில்லை என்றால், விளையாட வேண்டாம். உன்னைப் போன்ற வளவளாக்களோடு பேசிக் கொண்டாவது இருக்கலாமில்லையா...?''

மிக்டே'யின் இக்கேள்விக்கான விடையாய், ''நாமும் அதற்கு முயற்சி செய்யலாம்தான்'' என்று ஆதரித்துத் துவங்கிய லூசி, ''ஆனால் உரையாடல் கெர்டா'வுடன் என்றால் வயிற்றையன்றோ கலக்கு கின்றது...!'' என்றபடி தொடர்ந்தார்: ''எதைப் பேசினாலும் அப்படி ஒரு நடுக்கமும் அதிர்வும் கொண்டு, ஏதோ நாம் அவளை இழிவு செய்தே பேசுகிறோம் என்றல்லவா அவள் ஒதுங்குகிறாள். இப்படிப் பட்டவர்கள் பொது இடங்களுக்கு வராமலிருப்பது தான் சரி..! இந்தக் கூத்துக்கு நடுவில் ஜான் வேறு ஒரு பக்கமாய் இவளோடு பொறுமையின்றித் தத்தளிப்பார் பார்...! இதுகளையெல்லாம் எப்படி ஒருங்கிணைப்பது எனும்போது தான் ஹென்ரீட்டா உதவினாள். கெர்டாவின் மனத்தளமும் வாழ்க்கை முறையும் வித்தியாசமானவை

எனக் கணித்து, தானணிந்திருந்த சால்வையை அவளிடம் காட்டி, அதைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அது ஒரு சுமாரான பச்சை நிறம் தான். ஆஹா ஓஹா என்றெல்லாம் வேலைப்பாடுகள் இல்லை. எங்கோ தள்ளுபடியில் வாங்கியதைப் போன்ற தரம்தான். இருந்தாலும் சால்வையின் சுமாரான வேலைப்பாடுகள் நிறம் பற்றியெல்லாம் அப்படியே வியந்து விட்டது போல் ஹென்ரீட்டா பேச, கெர்டாவின் முகத்தைப் பார்க்க வேண்டுமே...! அதனை நெய்தது கெர்டாதான் என்பது போல அத்தனை சந்தோஷம்... பெருமிதம்..! அது தான் ஹென்ரீட்டா. மடக்கிப் போட்டு விடுவாள். இது ஒரு கலை.''

''இது போன்ற கிராக்கிகளை சமன்படுத்துவதில் அவள் இன்பமடைகிறாள்.''

''ஆமாம்...! எப்படி இவர்களை வலிக்காமல் கையாள்வது என்றும் தெரிந்திருக்கிறாள்.''

''உனக்குத் தெரியுமா லூசி...! அந்த சால்வையைத் தயார் செய்து சந்தையில் விட்டிருப்பதே ஹென்ரீட்டாதான்...!''

''ஓ...! அவள் கலை நுணுக்க மூளையின் பங்களிப்பு போல...! நீ என்ன நினைக்கிறாய் மிக்டே....! அது அவளுக்குப் பொருந்தி யிருந்ததா...?''

''ஆமாம். ஹென்ரீட்டா, அது நன்றாய் இருக்கும்படி மடித்து செருகி ஏதோ செய்து உடுத்திக் கொண்டிருந்தாள். அதனால் அவளுடம்பில் அது அழகாகவே இருந்தது.''

''சரியாய்ச் சொன்னாய். இதுதான் ஹென்ரீட்டாவுக்கும் கெர்டாவுக்குமான வித்தியாசம். தான் எது செய்தாலும், அவளுக்கே உரிய கலைநுணுக்கத் திறனால், சிரத்தை எடுத்துக் கொண்டு ஹென்ரீட்டா செய்கிறாள். அவள் அதிர்ஷ்டம், செய்யும் எல்லாமும் வித்தியாசமான கவர்ச்சியில் எடுபட்டு விடுகின்றன. மிக்டே, பார்த்துக் கொண்டேயிரு...! நாளையும் மறுநாளும், எல்லோரோடும் ஒத்துப் போய் நம்மை ஒருவர் வழி நடத்தவுள்ளாரென்றால், அது ஹென்ரீட்டாவாய்த் தானிருக்கும்...! கெர்டாவுக்கு ஆதரவா யிருப்பாள்; ஹென்றிக்குக் களிப்பூட்டுவாள்; கோபக்கார ஜானை அமைதியாகவே காத்து நிற்பாள்; டேவிடையும் சமாளித்து விடுவாள் என்பதும் என் நம்பிக்கை...!''

''டேவிட் என்றால்... டேவிட் ஆங்கட்டேல்...?''

''ம்...! டேவிட் ஆங்கட்டேலே தான்...! அவன் பல்கலைக் கழகத்திற்கு இப்பொழுது தான் சிறு விடுமுறை துவங்கியுள்ளது. இவ்வயது விடலைப் பசங்கள் ஒரு தொந்தரவு, தெரியுமோ...! அதிலும் இந்த டேவிட்டைப் போன்ற கூர்மையான புத்தி உடைய பசங்கள் ஆபத்தும் கூட...! டேவிட் அதிபுத்திசாலி. கற்பூரம். வயதாகி, நாம் சொல்வதை மற்றவர் கேட்கக் கூடிய ஓர் அனுகூலத் தகுதியை அடையும் வரை, சிறு வயதிலேயே பிரகாசிக்கும் அறிவு ஜீவித் தனத்தினைக் காட்டிக் கொள்ளாது அடக்கி வாசிப்பதே நலம் என்பது என் அபிப்ராயம்...! ஏதோ ஒரு விஷயத்தில் அதீத ஞானம் பெற்று தகதகத்துக் கொண்டு, இதன் ஆதிக்கத்தால் எப்பொழுதும் எதையோ சிந்தித்தபடி இருப்பதன் விளைவால் மிஞ்சுவது ஒன்றுதான். அது, நக இழப்பு...! ஆம்...! கை நகங்களைக் கடித்துக் கடித்து, அவை முழுவதும் குறைந்து, ஒரு நிலையில் ஆதாம் கடித்த ஆப்பிள் போல அவை மாறி விடுகின்றன....! இந்த வகைப் பசங்கள் பேசவே பேசாது. தவறி வாய் திறந்தாலோ, காட்டுக் கத்தலாய்க் கத்தி நாம் சொல்லும் எல்லாக் கருத்துக்களையும் ஆட்சேபித்துக் கிடக்கும்..!'' என்றபடி இருந்த லூசி, நம்பிக்கையாய் சொன்னார்: ''இவனையும் ஹென்ரீட்டா வளைத்து விடுவாள் என்பது திண்ணம். சாமர்த்திய மாய்க் கையாண்டு, இவனுக்கு உகந்த கேள்விகளை மட்டுமே ரொம்பவும் சிரத்தையாய்க் கேட்பது போல் கேட்டு, வழிக்குக் கொண்டு வந்து விடுவாள்''.

''ஹென்ரீட்டாவுக்கு எல்லாவற்றின் மீதும், முதிர்ந்த ஒருவரின் பெருந்தன்மையான சமபார்வை இருக்கின்றது. இதற்கு வலு சேர்க்கும் வகையில் இனிமையானவள். இவளோடு பேசுவதால், திருப்தி தருபவள்.''

''ஆமாமாம் மிக்டே...! மேலும் அவள் ஒரு கலைஞரல்லவா...! சிற்பி...! இந்தத் தகுதியும் அவளுக்கு மரியாதையான ஓர் அங்கீகாரத்தைப் பொது இடங்களில் உருவாக்கிவிடுகின்றது'' என்ற லூசி, ரசித்துச் சொன்னார்: ''மனித, மிருக, இயற்கை அவயங்களை மட்டும் அவள் கல்லில் செதுக்குவதில்லை, மிக்டே....! உலோகம் மற்றும் சுண்ணாம்பில் கூட தன் செதுக்கும் திறமையில் மிளிர்கிறாள். சென்ற வருடம் தன் விதவித படைப்புகளைக் கொண்டு ஒரு கண்காட்சி நடத்தியிருந்தாள். அதற்கு ஏகோபத்திய பாராட்டு. விமர்சனங்களே இல்லை. பெண்ணை, அழும் சாம்பல் மரமாக ஒப்பிட்டு அவள் செதுக்கியிருந்த சிற்பம் இருக்கிறதே....!

அப்பப்பா...! சிறப்பான கற்பனைக்கும் அவளின் கைத்திறனுக்கும் அற்புத எடுத்துக்காட்டு. ரொம்ப ரசித்தேன்....!''

தான் ஓரிரு வார்த்தைகள் மட்டும் பேச, அதற்கு லூசி, ஒரு பத்தி, அதுவும் சங்கதி விட்டு சங்கதி தாவி ஒரு பத்திப் பேசுவதில் அதிசயித்துப் போன மிக்டே, ''உன் மூளை இருக்கிறதே, லூசி - அது, ஒளியின் வேகத்தில் நிகழ்ச்சிகளை ஞாபகப்படுத்திக் கொண்டு முன்னேறுகிறது. அதனுடன் இணையாக நானும் வந்து உரையாட, ராட்சஸ அடிகள் வைத்து மூச்சு முட்டப் பிராயணிக்க வேண்டியுள்ளது....!'' என்று வியந்தார்.

இதற்கு குறும்பாக, ''ஆக, என்னைத் தாவித் தாவிப் பரபரக்கும் குரங்கு என்கிறாய்'' என்றார் லூசி.

''போதுமே லூசி'' என பொறுமையிழந்தார் மிக்டே. ''இது தான் நீ. உன் வேகத்துக்கு யாராலும் ஈடு தர முடியாதம்மா....! நீ பேச வந்ததோ இவ்வார இறுதியில் நடைபெறவுள்ள நம் நண்பர்களின் அளவளாவலைப் பற்றி...! அப்படித் தானே...? இப்போது ரீட்டாவின் சிற்பத் திறமை குறித்த விமர்சனத்துக்கு என்ன முகூர்த்தம் என்று புரியவில்லை....'' - சலித்துக் கொண்டார். ''இதோ பார் தாயே...! அளவளாவலின் போது எந்தக் குளறுபடியும் நிகழப் போவதில்லை. போதுமா...? கெர்டாவுடன் பேசும் போது அவளுக்கேற்றபடி அழகாய்ச் சமாளித்துக் கொண்டும் - எப்போதும் சிந்தித்தபடி வேறு உலகில் சஞ்சரிக்கும் டேவிடை ஹென்ரீட்டா கையில் ஒப்படைத்தும் - கோபக்கார ஜானை இயன்ற வரை தவிர்த்தும் - இப்படியெல்லாம் சமாளித்து விட்டால், என்ன விபரீதம் நேர்ந்து விடப் போகின்றது....?''

இவ்வாறு ஆறுதலளித்து, லூசியை வெளியேற்றிப் போர்வைக்குள் தஞ்சம் புக திட்டமிட்ட மிக்டே - ''இதெல்லாம் சரி தான்...''என்று ஆசுவாசமாய்க் கூறிய லூசி, ''எட்வர்டும் அல்லவா வருகிறார்...!'' என்று முடித்ததும் - ''ஓ... எட்வர்ட்! அவர்... அவருமா வருகிறார்..?'' என அப்பெயரை அதிர்ந்துக் குறிப்பிட்டு மேலே வார்த்தை எழாது அமைதியானார். அவரின் மனம் குழப்பமுற்றது. பிறகு சக்தியற்றவராய்க் கேட்டார்: ''உன்னை யாரடீ அவனை வெற்றிலைப் பாக்கு வைத்து நாளைய நிகழ்ச்சிக்கு அழைக்கச் சொன்னது...?''

''ம்கும்...'' என்று இடித்த லூசி, ''எட்வர்டை அழைக்கவில்லை என எனக்கு ரொம்ப வியர்க்கிறது பார்....!'' என்று முழங்கினார். தொடர்ந்தார்: ''நான் அழைப்பிழ் வைக்கவில்லை மிக்டே...!

ஆமாம்...! எப்படியோ விஷயமறிந்து அவர் தான் என்னை அழைத்து, அப்படியா? எனக் கேட்டார். வேறென்ன சொல்ல...? கிடையாது, அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்றா...? தானும் வந்து கலந்து கொள்ளலாமா என்று நேரடியாகவே கேட்டும் தொலைத்தார். உனக்கு எட்வர்டைப் பற்றித் தெரியாதா என்ன...! வேண்டாம் என்று மட்டும் பதில் சொல்லியிருந்தேன் என்றால், அவ்வளவு தான். பிறகு வேறெந்த விழாக்களுக்கும் வராது நம்மை அப்படியே ஒதுக்கி விடுவார். அப்படிப்பட்டவர் அவர்...!''

மிக்டே, ஏறிய கோபம் தணிந்து லூசியின் கருத்தை மெதுவாய் உணர்ந்து ஏற்றுக் கொண்டார். எட்வர்ட் அப்படிப்பட்ட ஓர் உணர்ச்சிபூர்வ ஆள்தான். மிக்டே தீவிரமாய் ரசித்த எட்வர்டின் முகம் - அந்த அழகிய மற்றும் காண்போரைக் காந்தமாய் ஈர்க்கும் எட்வர்டின் முகம் - மிக்டேவின் நினைவுக்குள் இப்போது வந்தமர்ந்தது. லூசியைப் போன்றே குழந்தை வசீகரம் பெற்று... ... ... அவளிடமிருந்து தெறிக்கும் தேவதை போன்ற சூட்சுமமும் கொண்டு... ... .... இருந்தாலும் அதைரியமும் தன்னம்பிக்கையும் மிகுந்த.. .... ....

மிக்டேவின் முகம் மூலம், அவரின் மன ஓட்டத்தைப் பிடித்த லூசி, ''அன்பு எட்வர்டே..'' என்று கேலியாய்ச் சொல்லிக் கலகலவென சிரித்தார். சில நொடிகள் தன்னிலை இழந்திருந்த மிக்டே நிகழ்காலத்துக்குள் நுழைந்து சுதாரித்துக் கொள்ளுமுன் தொடர்ந்தார் லூசி: ''ஹென்ரீட்டா எட்வர்டை மணக்க மனம் வைப்பாளா? தெரியவில்லை. அவளும் அவனை நெஞ்சு முழுக்கத்தான் விரும்புகிறாள். எனக்கு அது தெரியும். ஜான் இல்லாமல் இவர்களிருவரும் ஒரு வாரம் போல தனியாய் இருந்தார்களென்றால் விடிவு உண்டாகும். அவர்கள் காதலுக்குத் தடுப்புச் சுவரே ஜான் தான். எட்வர்டைக் கண்டால் ஜானுக்கு ஏனோ அப்படி பற்றிக் கொண்டு வருகின்றது...! கல்யாணமாகி, பிள்ளைக் குட்டிப் பெற்றாயிற்று! தன் வேலையைப் பார்த்துக் கொண்டு சும்மா இருந்துத் தொலைய வேண்டியது தானே...! இந்த இக்கட்டில், எவ்வளவுக்கெவ்வளவு ஜான் பொங்கி சீறுகின்றாரோ அவ்வளவுக்கவ்வளவு எட்வர்ட் அமுங்கியே வேறு போய் விடுகிறார்.''

அமைதியாய் ஒப்புக்கொண்டார் மிக்டே.

''ஜானைத் தவிர்க்கவும் முடியாது...'' - இயலாமைப் பீடித்தது போல் சொன்னார் லூசி. ''ஒன்று கெர்டாவுக்காக. இன்னொன்று,

இப்படி ஒரு நிகழ்ச்சியை இந்த வார இறுதியில் ஏற்பாடு செய்திருக்கிறோம்; அதற்கு வந்து விடு என்று சில வாரங்களுக்கு முன்னமேயே அவருக்கு அறிவித்தாயிற்று. இப்போது வேண்டாம் என சொல்லவும் முடியாது.''

மிக்டே பதிலேதும் கூறாமல் சந்தோஷ மனோநிலை உலுக்கப் பட்டவராய் இருந்தார். பிரிந்து விட்ட மனம் கவர்ந்தவரைப் பார்க்காமலே இருந்து விட வேண்டும். இல்லை, கை பிடித்து விட வேண்டும். அமைதியாய் சென்று கொண்டிருக்கும் வாழ்க்கையின் நடுவில், திடுதிப்பென்று மீண்டும் சந்தித்து..... சிலாகித்து.... பழையதையெல்லாம் மீண்டும் ஜீரணிக்கயியலாது அசை போட்டு....

''மேதாவியாய் நடந்து கொண்டு நகங்களைக் கடித்துத் துப்பும் டேவிட், கும்மாளங்களில் கலக்காமல் குழம்பியே இருக்கப் போகிற கெர்டா, எப்போதும் நம்பிக்கையான தீர்மானம் கொண்ட ஜான், இது எப்போதும் அற்ற எட்வர்ட், போன்ற கலவையோடு, அன்பு மிக்டே.... இவ்விழாவினை உருப்படியாக நடத்தி முடிக்க முடியுமா என திகிலாய் தானுள்ளது.''

இப்படியெல்லாம் மனதில் இருப்பதால் தான் தன்னை வந்து பார்த்து ஆலோசனைக் கேட்க லூசி விழைந்துள்ளார் என இப்போது உணர்ந்த மிக்டே, ''அனைவரும் ஒன்று சேரவுள்ள இந்த நிகழ்ச்சி எனும் இனிப்பின் உட்பொருட்கள், நம்பிக்கையற்றுத் தான் தோன்று கின்றன....!'' என அவரின் திகிலை கவிதையாய் ஆமோதித்தார்.

''சில சமயங்களில்...'' என்று லூசி புன்முறுவி, ''நம் திகிலை இளிக்க வைத்து விட்டு, நிகழ்வுகள் அனைத்தும் அமைதியாய் கூட முடிந்து விடும்...!'' என்று நம்பிக்கையற்ற ஓர் எதிர்பார்ப்பை வெளியிட்டார். பிறகு சொன்னார்: ''நிகழ்ச்சியை சுவையான இனிப்போடு கற்பனை செய்தாயே...! அந்த இனிப்பின் மிக முக்கிய உட்பொருளான முட்டை போல, நம் நிகழ்ச்சி எனும் இனிப்பில் விளங்க, ஒருவரை நான் அழைத்துள்ளேன்.''

''அது யாரம்மா அப்படிப்பட்ட முக்கியஸ்தர்...?''

''குற்றவாளிகளின் சிம்ம சொப்பனத்தைத் தான் குறிப்பிடு கிறேன்....! அவரைத் தான் சிறப்பு விருந்தாளியாக அழைத் துள்ளேன்....!''

''குற்றவாளிகளின் சிம்ம சொப்பனம்...?''

''துப்பறியும் புலி, ஹெர்குல் பொய்ரட்...! ஹென்றி முதன்மைக் கமிஷனராக பாக்தாதில் இருந்தபோது ஏதோ துப்பறியும் விஷயமாக

துப்பறியும் நிபுணர் அங்கு வந்திருந்தார். அவர் மற்றும் அவர் சகாக்களை விருந்துக்கு அழைத்திருந்தோம். எத்தனை ஆஜானுபாகு....! வெள்ளை சூட், சட்டையில் அழகிய பிங்க் நிற பூ, கறுப்பு நிற மொறுமொறு முழுக்கால் சட்டை, உயர் ரக தோல் காலணி, சகிதமாய் பிரமிப்பான தைரியம் முகமெங்கும் பொங்க வந்து சிறப்பித்தார்'' என்று நினைவு கூர்ந்த லூசி, அவரை விருந்தாளியாக அழைத்ததற்கான காரணத்தையும் கூறினார்: ''அவரைப் பிடித்த அளவு அவருடைய தொழிலில் எனக்குப் பிடித்தமே இல்லை தெரியுமா...? கொலையோ நிகழ்ந்தாயிற்று. கொலையாளியும் தப்பித்தாயிற்று. பிறகு என்ன துப்பறிதல்? கேலிக் கூத்தாய்ப்படவில்லை...? தேடித் தேடித் துருவித் துருவிக் கடைசியில் பல கொலை வழக்குகள் கிடப்பிலேயே கிடந்து விடுகின்றன. என்ன தொழில் இது...? ஆனாலும் அவரின் இனிமையான பழகும் விதமும், பயமற்ற ஆண்மையும், மறுபடியும் ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் நிச்சயம் அவரைப் பயன்படுத்திக் கொள்ளத் தான் வேண்டும் என என்னுள் ஒரு வேட்கையை வளர்த்து விட்டிருந்தன. இப்போது அந்த தாகத்தை வடித்துக் கொள்கிறேன்...!''

''இங்கும் ஏதாவது துப்பறியும் பணிக்காகத் தான் வந்துள்ளாரா...?''

''அடிப்பாவி...! பாவம் அவர்...! இப்படியா நினைப்பது...! அவருக்குக் கொலை பின்னால் மோப்பம் பிடிப்பதை விட்டால் வேறு வேலையே இல்லையா என்ன...! இங்கு அருகில் ஒரு சுமாரான, எளிய, சுற்றுலா வருவோர் தங்கும், சிறு சிறு குடில்களால் ஆன விடுதி ஒன்று உள்ளது. அடிக்கடி இங்கு வந்து இளைப்பாறும் வழக்கம் அவருக்கு உண்டு. ஒரு நடிகை கூட இவ்விடுதிக்கு வந்து இளைப்பாறுவதாய்ப் பேச்சு. லண்டன் மக்களுக்கு இப்படிப்பட்ட இடங்கள் அத்தியாவசியம். அவர்களது மண்டைக் குடையும் இயந்திர நகர, அல்லது நரக வாழ்க்கைக்கு, அவர்களுக்குள்ள நம்பிக்கையான ஆறுதல், இத்தகையக் குடில்கள்....! இங்கு வந்துள்ளார். அமுக்கி விட்டேன்....!''

இப்போது அமர்ந்திருந்த படுக்கை விளிம்பிலிருந்து லூசி, ''நிகழ்ச்சியை, வந்திறங்கப் போகிற மாறுபட்ட நண்பர்களோடு எதிர் கொள்ள, உன்னுடன் பேசியது உதவும் மிக்டே..!'' என்று வெளியேற ஆயத்தமானார். ''மிக்க நன்றியடி...! நீ இனிமையாயும் உதவிகரமாயும் ஆறுதலாயும் ஆலோசனை தந்தாய்....!''

பெருந்தன்மையாய் மிக்டே சொன்னார்: ''அப்படி ஒன்றும் பெரிய உதவியெல்லாம் நான் செய்து விடவில்லை.''

''அப்படியெல்லாம் சொல்லாதே'' என ஆச்சரியமாய்க் குறிப்பிட்ட லூசி, ''உன்னுடனான உரையாடல் என் மன இறுக்கத்தைத் தளர்த்தி விட்டுள்ளது, தெரியுமா...? சரி...! இனி நிம்மதியாய்த் தூங்கு....! தூக்கம் கலைந்ததும், எப்போதுமான உன் விருப்பம் போல, மூர்க்கத்தனமாய் எழுந்திரு....!''

''மூர்க்கத்தனம்...?'' - ஆச்சரியம் மேலோங்க விழித்தார் மிக்டே. ''ஏய், ஏய்...! எல்லோரையும் ஒரு விதமாய் நீ கணித்து வைத்துள்ளது போல, என்னை, மூர்க்கமானவள் என எண்ணியுள்ளாயா...?'' என சிரித்தார். ''போ, போ....! நீ என்னைக் குறிப்பிட்டதைச் சத்திய வார்த்தையாக ஆக்கிக் காட்டுகிறேனா இல்லையா பார்...!'' என்று பதிலுக்குச் சொன்னாள்.

சிறு புன்னகையை உதிர்த்து விட்டு வெளியேறினார் லூசி.

அறையின் வாசலை அடையும்போது, அங்கு இருந்த பெரிய கெண்டியைப் பார்த்த லூசியின் சுறுசுறுப்பான மூளை, 'டீ பிடிக்காதவர் இருக்க முடியுமா...? மிக்டேவை இன்னும் சில மணி நேரங்களுக்கு யாரும் அழைக்கப்போவதுமில்லை... தொந்தரவு செய்யப் போவதுமில்லை. பாவம்...! தூங்கி விழிக்கும்போது டீ தயாராயிருந்தால் மகிழ்வாளில்லையா...!' என ஒரு கணக்கிட்டுக் கொண்டு, டீக்கு வேண்டிய அனைத்தையும் கெண்டிக்குள் போட்டு, அதற்கான மின் சுவிட்சையும் தட்டி விட்டுப் போனார்.

வெளியே வந்து வராண்டாவில் நடக்கும் போது, லூசி, தன் கணவரின் அறையருகே நின்றார். மூடியிருந்த கதவின் பிடியை அமுக்கித் தள்ளிப் பார்த்தார். ஆனால், ஹென்றி ஆங்கட்டேலுக்கு, அந்த மாபெரும் நிர்வாகிக்கு, புகழ் பெற்ற கமிஷனருக்கு, தன் லூசியை நன்கு தெரியும். லூசி மீது சமுத்திரத்தை விடப் பெரும் அளவு அன்பும் காதலும் கொண்டிருந்தாலும், காலைத் தூக்கம் என்பது அவர் அலாதியாய் நேசிக்கும் ஒன்று. அது அவருக்குக் குலையக் கூடாது. எனவே கதவைத் தாளிட்டிருந்தார்....!

தன் கணவருக்குக் காட்டயியலாத முகத்துச் சுளிப்பைக் கதவுக்குக் காட்டிவிட்டு தன் அறைக்குள் புகுந்துக் கொண்டார் லூசி. மிக்டேவிடம் கதறியதையே ஹென்றியிடமும் கதறியிருப்பார். இப்போது இயலாமல் போய் விட்டது. அவர் எழுந்ததும் நிச்சயம்

ஹென்றியையும் ஒரு வழி ஆக்கத் தான் போகிறார்....! அறை ஜன்னலருகே நின்று, வெளியே பனியால் வெலவெலத்துள்ள நகரைப் பார்த்திருந்தவரின் கண்களில் தூக்கம் புரண்டது. நீண்ட கொட்டாவியும் எழுந்தது. படுக்கையில் படுத்தார். தலையணையில் தலை புதைத்தார். இரு நிமிடங்கள் மட்டுமே கடந்தன. ஆழ்ந்த தூக்கத்தின் பிடிகளில் உலவினார். குழந்தை மனத்தின் குணாதிசயம். பல கோடி பேருக்கு வாய்க்காத வரம்.

அங்கு மிக்டே அறையில் கொதிநிலை கடந்து நெருப்பாய் சுட்டுக் கொண்டிருந்தது கெண்டி. ''ஓ.... இன்னொரு கெண்டி காலி, திரு கட்ஜன்....!'' என்றான் அங்கு வந்த பணியாளன் சைமன். தன்னிடமிருந்த இன்னொரு நல்ல கெண்டியை மாற்றி வைத்து, கொதித்து பாழாகியிருந்த கெண்டியை அப்புறப்படுத்தினான்.

''இந்த அம்மா எப்பொழுதும் இப்படித்தானோ....'' என்றான் சைமன் கிசுகிசுப்பாய்.

''மிக இளகிய மனம் கொண்டவர் தான். ஆனால் மறதி ஜாஸ்தி'' என்றான் கட்ஜன். ''இப்படி நல்ல மனம் படைத்து இவரிருப்பதால்தான், இவர் மறதியால் நடக்கும் விபரீதங்கள் இவரின் கவனத்திற்குக் கொண்டு சென்று வெறுப்பேற்றாமல் விட்டு விடுகிறேன். பார்த்தாயல்லவா...! ஒரு புது கெண்டியை இப்போது மாற்றினேனே....! அதைக் கூட அவரிடம் நான் சொல்ல மாட்டேன். பாவம், குழந்தையாய் வருத்தப்படுவார்....!''

# 2

ஹென்ரீட்டா, சிறு துண்டு களிமண்ணை எடுத்து, உருவாகிக் கொண்டிருக்கும் சிற்பத்தில் தனக்குத் தேவையான இடத்தில் வைத்து, தேவையான அளவுக்குப் பதமாய்த் தட்டிப் பதித்தாள். ஒரு பெண்ணின் தலைப்பாகத்தைத் தன் அபரிமிதக் கலை நுணுக்கப் பயிற்சியால், துரிதமாக வளர்த்துக் கொண்டிருந்தார் ரீட்டா.

எதிரே, இதற்காக அமர்ந்திருந்த மாடல் பெண் டோரிஸின் வார்த்தைகள், ஹென்ரீட்டாவின் காதுகளில் விழுந்து கொண்டேயிருந் தாலும், அவள் கவனத்தின் விளிம்பை எட்டவேயில்லை.

''நான் செய்தது நிச்சயமாக சரியே என்பது எனது வாதம் ஹென்ரீட்டா...'' என்றாள் அந்த மாடல் பெண். தொடர்ந்தாள்: ''அவனைப் பார்த்து, 'ரொம்ப நல்லது' என்றேன். 'உன் முடிவு அதுவானால் நான் மறுப்பதற்கில்லை' என்று தடாலடியாய்ப் பதில் தந்து அவனை விலக்க எத்தனித்தேன். இது போன்ற பாதுகாப்பற்ற சமயங்களில் - நான் எதைச் சொல்ல வருகிறேன் என்று உங்களுக்கு விளங்கும் என நினைக்கிறேன், ரீட்டா! - தனிமையிலுள்ள பெண்ணொருத்திக்கு இக்கட்டு நேரும் தருணங்களில், ஒரு பெண், ஸ்திரமான சில முடிவுகளைத் தனக்குத் தானே எடுக்க வேண்டும் என்பது என் கருத்து....! 'என்னைச் சந்தேகித்து யாராவது பேசிக் கேட்டு எனக்குப் பழக்கமில்லை' என்றேன். 'என் மீது இப்படிப் புரளிப் பேசியதிலிருந்து நீ எப்பொழுதும் இப்படிப்பட்ட அழுக்குப் பிடித்த கற்பனையில் சஞ்சரிப்பவன் என்பது விளங்கி விட்டது' என கிளம்பினேன். அழகற்ற உடலை விரும்பலாம். மனத்தை...?''

இப்படிப் பேசிக்கொண்டிருந்த மாடல் சிறு இடைவெளி தந்ததும் உண்டான அமைதியை உணர்ந்ததால், அவள் என்ன பேசியிருந் தாலும், தான் கவனிக்காத அவ்வார்த்தைகளுக்குப் பொருந்தும் வண்ணம், ரொம்ப ஊக்கமாய் ''ஓ...!'' என்றார் ஹென்ரீட்டா. ரீட்டாவை நன்கு அறிந்தவர்களுக்கு, இந்த ஓ - எதிராளி பேசியதைக் கொஞ்சம் கூட கவனிக்காது, உரையாடலில் அமைதி உருவாகும் போதெல்லாம் மட்டும் ஏதோ கவனித்துக் கொண்டிருப்பது போல

காட்டிக் கொள்ள, ரீட்டா உதிர்க்கும் உற்சாக ஓ - என்பது நன்றாகவே புரிந்திருக்கும்....!

''ஏனோ தெரியவில்லை ரீட்டா...! எங்கு சென்றாலும் ஏதோ ஒரு வகையில் மனக் கிலேசம் ஏற்பட்டு·விடுகின்றது, என்னுடைய தவறு ஏதும் துளியும் இல்லாமலே....!'' என புகார் சொன்ன மாடல், மரியாதையற்ற கேலிச் சிரிப்பினை உதிர்த்தபடி, ''ஆண்கள் மிக உணர்ச்சிவயப்படுகிறார்கள், இல்லை....?'' - என்றாள்.

''எதிர்பாராதது...!'' - என்றார் ஹென்ரீட்டா, பாதிக் கண்களை மூடிச் சிந்தித்தபடி. இந்த வார்த்தையும், எதிர்பாராது வெகு திருப்தியாய் நிறைவாகியுள்ள சிற்பத்தின் முகம் கருதி தானே அன்றி, மாடல் சொன்ன ஆண் பற்றிய வர்ணனைக்கன்று...! 'அற்புதம்' என மூடிய கண்களுக்குள் சிந்தித்துக் கொண்டார். கண்களின் உடனடி கீழ்ப் பகுதி, அதாவது கன்னத்தின் அனைத்துப் பகுதியும் சேரும் மேடான கன்ன மேற்தளம், அளவுப் பரிமாணத்திலும், உணர்வுப் பங்களிப்பிலும், பிரம்மா சிருஷ்டித்த சதைக் கன்னம் போல் அமைந்து விட்டதாய் ஒரு ரசிக நிலையிலிருந்து உணர்ந்தார் ரீட்டா. 'ஆனால், முகவாய் கொஞ்சமே கொஞ்சமாய் கோணியுள்ளது. கோணத்தை மாற்ற வேண்டும். மெனக்கெட்டுச் செதுக்க வேண்டிய அவயம். நுணுக்க வித்தைக் காட்டித்தான் வெற்றி பெற முடியும்'

இம்முடிவுடன் கண்களைத் திறந்தவர் காதுகளில், ஏதோ பேசிக் கொண்டேயிருந்திருக்கிற மாடலின் பின்வரும் கடைசி வார்த்தைகள் மட்டும் விழுந்தன: ''சதையின் மீது அப்படி என்னதான் தீராத வெறியோ...?''

''உன் நிலை, பாவம், சங்கடம் மிகுந்ததாக இருந்திருக்க வேண்டும்'' என்றார் ஹென்ரீட்டா, அவள் பேசிய கடைசி வர்ணனையை மட்டும் காதுகளில் வாங்கிக் கொண்டு....!

''அவன் மனைவி, என்னையும் அவனையும் இணைத்து வைத்துப் பேசுகிறாளாம். உண்மையோ, இல்லை இவன் கற்பனையோ...! உண்மையெனில், தன்னை விட இளைய அழகானவர் மீதுதான், இச்சமுதாயம், எப்படிப்பட்ட குறுகிய பார்வை வைத்துள்ளது என மனத்தினை வாட வைக்கின்றது...!''

முழு கவனத்துடன் சிலையின் முகவாயில் தன் அத்தனை திறனையும் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந்த ரீட்டா, மீண்டும் ''ஓ...'' என்றார்.

அதே ஓ....!

தன் எண்ணங்களை நீர் புகா பெட்டிகள் போல் மூடி வைத்துப் பணியாற்றும் ஜால வித்தையை வரமாய்ப் பெற்றவர் ஹென்ரீட்டா. சீட்டுக் கட்டுகளை உள்ளங்கையில் அடுக்கி முனைப்போடு ரம்மி ஆடுவார் - புள்ளி விவரம் செறிந்து புத்திசாலித்தனமான உரையாடல் நிகழ்த்துவார் - குழப்பமில்லாமல் செல்லும்படி நன்கு வடிவமைக்கப் பட்ட கடிதம் வரைவார் - இவை எல்லாம், தனித்தனியாய் அல்ல. ஒரே நேரத்தில்! இப்பொழுது ரீட்டாவின் கவனம் முழுதும் அவர் கைகளின் நெளிவு சுளிவுகளில் வளர்ந்து வரும் 'நௌசிக்கா'வின் தலையை வெகு சிறப்பாகச் செதுக்கி முடிப்பதிலேயே இருந்தது ; வேறெதும் இவர் காதுகளைத் தாண்டி கருத்துக்குள் இறங்கவே முடியாது, ஆகையால், வழவழவென சிறு குழந்தையின் மிருதுத் தன்மையோடு திகழும் மாடலின் கன்னி இதழ்கள் வழி வெளியேறிக் கொண்டேயிருக்கும் உப்புசப்பற்ற வம்பு ஊற்று, ரீட்டாவின் மூளையைத் துளைத்து ஊடுருவி முன்னேற முடியாமல் காதுகளோடு நின்று போனது. இருந்தாலும், இதனை மாடல் துளியும் அறிந்து விடா வண்ணம் எந்தப் பிரயத்தனமுமின்றி செயல்பட்டு, அவள் அடித்துக் கொண்டிருந்த வம்புப் பேச்சினை வளர விட்டுக் கொண்டு தானிருந்தார். இது போன்ற பேசிக் கொண்டேயிருக்கும் மாடல்கள் ஒன்றும் இவருக்குப் புதிதல்ல. இந்தத் தொல்லை, விளம்பரத்தைத் தொழிலாகக் கொண்டு பயிற்சி பெற்ற மாடல்களிடம் இருக்கவே இருக்காது. பொழுது போக்குக்காக மாதிரிப் பொருளாய் வந்தமரும் மாடல்கள், தங்கள் முதுகெலும்பு ஆடாமல் அசையாமல் மணிக்கணக்காய் நிறுத்தப்படுவதை எதிர் கொள்ளயியலாமல், தங்களைப் பற்றிய நீண்ட அறிமுகம் செய்து கொள்ளும் வம்பில் ஈடுபட்டு விடுகின்றனர்.

ஆனால், ஹென்ரீட்டாவிற்கே உரிய குணாதிசயப்படி, இந்த அறை நிகழ்வுகள் எதிலும் பட்டிராத ரீட்டாவின் நினைவுகள், மாடலின் சில கேள்விகளுக்கு சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் பதில் தந்து கொண்டிருந்தாலும் - இங்கிருந்து பிரிந்து காததூரத்தில், எங்கோ இறைவனின் கைகளில் குடிகொண்டுள்ள 'கலை' எனும் புண்ணிய லோகத்தில் உலவிக் கொண்டிருந்த அவரின் உடல் பொருள் ஆவி நினைவுகள் அனைத்தும், நௌசிக்கா மீதே இருந்தன; அவை, 'சாதாரண சிற்பம் தான்! ஆனால்... இதன் கண்கள்... அப்பப்பா... கொள்ளை அழகு, கொள்ளை அழகு, கொள்ளை அழகு' என பூரண திருப்தியுடன் வர்ணித்த வண்ணமே இருந்தன.

கண்களைச் செதுக்குவதில் முழுக் கவனமும் அழுந்தியிருந்த போதிலும், டோரிஸ் பேசுவதில் குறுக்கீடின்றி நடந்து கொண்டார் ரீட்டா ; அவர் பேசுவதைத் தடை பண்ணவில்லை. சிலையின் இதழ் செதுக்கப்படும் போது மட்டும் மாடலைப் பேசாமலிருக்கக் கேட்டுக் கொள்வாள். மேல், கீழ் இதழ்களை இரு சிறு வளைவுகள் கொண்டு இளமை ததும்ப அமைக்கும் போது அவை வன்மத்தையும் பகைமையையும் பீறிட்டுப் பிரதிபலிக்க வேண்டும் எனும் எதிர்பார்ப்பு ரீட்டாவுக்குள் நிழலாடியது.

இந்நினைப்பினூடே, வடிக்கப்பட்டுக் கொண்டிருந்த சிலையினை ஆழ்ந்து நோக்கிக் கொண்டிருந்தவர், 'ஓ... என்ன முட்டாள் தனம்...' என திடீர் வெறி ஏறியவராய் ஆவேசமாகி, சிலைக்கண்களின் புருவ வில்லினைப் பாழ்படுத்தி விட்டதைக் கண்ணுற்றுக் கொதிப்பானார். ஏன் தவறு நடந்துள்ளது என்றாராய்ந்தவர், புருவ எலும்பினைத் தூக்கி அதற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, வளைந்து கவர வேண்டிய புருவ வில்லின் கூர்மையை சிறுமையாக்கி விட்டதைக் கண்டு பிடித்தார். இதை சரி படுத்த, மீண்டும் களி மண் உருண்டைக்கும், வளர்ந்து கொண்டிருந்த சிலைக்கும், எதிரே மேடையில் சதையும் உதிரமும் கொண்டு அமர்ந்திருந்த பெண்ணுக்குமாய், முக்கோணப் பிரயாணம் நடத்தினார் ஹென்ரீட்டா.

டோரிஸ் தொடர்ந்தார்: ''அவர் மனைவியும் அங்கு தானிருந்தார். 'உங்கள் கணவர் பிரியப்பட்டு எனக்கு ஓர் அன்பளிப்புத் தரக் கூடாது என நீங்கள் கருத இதில் ஒன்றுமேயில்லை' என்ற நான், 'இவ்வகையில் வேண்டாத கேள்விகளைக் கேட்டு அவரை உஷ்ணப்படுத்த வேண்டுமா...?' என்றேன். அவர் சத்துக்கு மிக மிஞ்சிய விலை கொடுத்து வாங்கப்பட்ட ஓர் அற்புதக் கைவளை அது. என் வளையல்களில் நான் மிகவும் விரும்புவது அதைத்தான். அதில் அவர் அன்பைத்தான் நான் காண்கிறேன். திருப்பித் தரப் போவதில்லை'' என்றவர், சிறு இடைவெளி தந்து, ''சரிதானே...?'' என்று ஆலோசனை கேட்டார்.

''சரி சரி'' என்றார் ஹென்ரீட்டா. மாடலின் கடைசி கேள்விக்கான பதில் மட்டுமே இதுவன்றி, டோரிஸ் நினைத்துக் கொண்டிருப்பது போல அவர் பேசிய முழு சாராம்சத்திற்கான ஆமோதிப்பல்ல...!

''ஓர் அன்பின் வெளிப்பாடாய்தான் நான் இந்த அன்பளிப்பைப் பெற்றுக் கொண்டேனே அன்றி, எங்களுக்குள் வேறெந்த மாதிரியான, அதாவது நெருக்கம் நிறைந்த வேறெந்த ஈர்ப்பும் இருந்ததே இல்லை.''

''இப்ப சரி...'' என்றார் முழு திருப்தியுடன், சிலையின் புருவ வெற்றியைப் பார்த்து...! இது தனக்குத் தான் என்று ஆசுவாசமானார் மாடல்....!

தொடர்ந்த அரை மணி நேரத்திற்கு அவரின் கலை வெறி வெகுண்டெழுந்து விளையாடியது. களி மண், ரீட்டாவின் கைத் திறனால் சிலைப் பெண்ணின் வெண்ணெய் போன்ற நெற்றியாய் மாறியது; தலைமுடியாய் படர்ந்துக் கொண்டது; காது மடல்களாய் விறைத்தெழுந்தது. முகம் விறுவிறுவென உயிர் பெற்றுக் கொண்டிருந்தது. இன்னும் சில மணி நேரங்களில், சிலை முழுவதுமாய் உருப் பெற்று உயிர் பெறும்போது, ரீட்டாவை வதைத்து வந்த உபாதை, கடந்த இரு வாரங்களாக அவருள் வளர்ந்துக் கொழித்திருந்த உபாதை, ஒரு முடிவுக்கு வந்து விடும்.

★ ★ ★ ★

நௌசிக்கா...! ரீட்டா, நௌசிக்காவாய் இருந்திருக்கிறார். நௌசிக்காவுடன் தூங்கி எழுந்து, காலை சிற்றுண்டி முடித்து, அவளோடு கூட வெளிவாசல் சென்று வந்துள்ளார். நௌசிக்கா, உயிர்த்துடிப்பாய் ஹென்ரீட்டாவுக்குள் நுழைந்து விட்டார். அமைதியற்ற பதைபதைப்புடன், நரம்பதிர, தெருத் தெருவாய், ஆவலாய், தேடித் தேடி அலைந்திருக்கிறார், ஹென்ரீட்டா...! நௌசிக்காவை...! மனதை எதிலும் வைக்க முடியாமல், தான் வரித்து வைத்த அந்த சந்திர வதன கற்பனை முகம் போன்ற ஒன்றினை, கற்பனையில்லாது நிஜத்தில் காண அப்படி ஓர் அலை அலைந்திருக்கிறார்....! அப்படி ஒருத்தி மட்டும் கிடைத்து விட்டால் அந்தப் பெண்ணையே மாதிரியாக அமர வைத்து, கற்பனைக்கு உயிர் கூட்டி, காலத்தால் அழியாத சிலையை செதுக்கி விடலாம் என பரிதவித்திருக்கிறார். இத் தேடலைக் கேள்விப்பட்டு பல மாடல்கள் வர, அவர்களை ரீட்டா பரீட்சிக்க, எல்லாம் திருப்தியற்றே முடிந்தன.

அவருக்குத் தேவை... அவருக்கு அத்தியாவசியம்... அவருடைய உடனடி அவசரம்... ஓர் ஆரம்பம்...! ரீட்டா ஏற்கெனவே கற்பனையில் முடித்து வைத்திருக்கும் உடலமைப்பை - நௌசிக்காவின் அமைப்பை - நிஜத்தில் மீட்டித் தர ஒரு சிறப்பான ஆரம்பம்...! அப்படி ஒரு துவக்கம் தரவல்ல நௌசிக்கா போன்ற மாதிரி பெண்...! பல தூரம் நடந்து தேடினார், மனதின் ஓயாத அவசர தாகம் தணிக்க...!

உடல் தளையத் தளைய...! மனம் தோல்வியில் சிதறச் சிதற...! தன்னைத்தானே அலைக்கழித்துக் கொண்டு...! கால் கை விட்டுப் போக வருத்திக் கொண்டு....! தன்னை முறுக்கி ஹிம்சித்துக் கொண்டு தேடுதல் வேட்டையில் இறங்கினார், எப்படியாவது அம்முகத்தைத் தன் அருகில் கொண்டு வந்து விட...!

தன் தேடலுக்கு உணவாக, உதவியாக, விடை ஒன்று கிடைக்காது போய் விட, தான் ஏன் குருடாகி விடக் கூடாது என கலங்கியிருக்கிறார் ஹென்ரீட்டா. நௌசிக்காவின் மீது அப்படி ஒரு பைத்தியம்...! தன் கற்பனைக்கு உயிர் தர இங்கிலாந்திலே யாருமே இல்லை என ஊர்ஜிதமாக்கிக் கொண்டார். இத்தோல்வியால் வெதும்பிப் போய் தன்னை அதிர்ஷ்டக்கட்டையாய் கருதி, மன நோய் கொண்டவராய் குறுகி, உதவாதவராய் நினைந்து சஞ்சலப்பட்டு... மொத்தத்தில் தன்னிலை இழந்தார்.

இந்நிலையில் சில நாட்கள் வீட்டுக்குள்ளேயே அடைப்பட்டுக் கிடந்து விட்டு, பிறகு ஆசுவாசமாகி கொஞ்சமாய் மீண்டார். அப்போது தான் ஒரு நாள் பேருந்தில் பிரயாணித்துக் கொண்டிருந்த போது தனக்கு நேரெதிராய் அமர்ந்திருந்த பெண்ணைப் பார்க்கிறார். இத்தனை நாட்கள் தேடிய கலைக் கண்ணுடனோ இலக்குடனோ இல்லாத, சாதாரண மனுஷியின் பார்வை தான் பார்க்கிறார். அது - நௌசிக்கா...! குழந்தை முகம் - செதுக்கிய மிருதுவான இதழ்கள் - மலர் போன்ற, வஞ்சகமில்லாத, பாலில் உருளும் திராட்சை போன்ற கவர்ச்சிக் கண்கள் - அவற்றில், முன்னால் உள்ள பொருட்களில் ஏதோ ஒரு தேடுதல்....! இவைதானே நௌசிக்காவும் பெற்றுள்ளவை...!

இன்ப அதிர்ச்சியிலிருந்து மீளாத தடுமாற்றத்தினூடே ரீட்டா தத்தளிக்க, தொடர்ந்து வந்த நிறுத்தத்தில் இறங்கினாள் - அந்த நௌசிக்கா...! அடித்து பிடித்துக் கொண்டு தானும் இறங்கிக் கொண்டு தொடர்ந்தார், ரீட்டா.

தேடுதல் போர் ஒரு வழியாக முடிந்து வேண்டியது கிடைத்து விட, அக்கணமே மன வலி தீர்ந்து, பல்திறன் வாய்ந்த பழைய ஹென்ரீட்டாவானார். ''தொந்தரவுக்கு மன்னிக்கணும்...'' என்று அந்தப் பெண்ணை அழைத்த ரீட்டா ''நான் தொழிலால் ஒரு சிற்பி. பெயர் ஹென்ரீட்டா. இத்துறையில் பிரசித்தமும் கூட'' என்றார். ''என் கனவுச் சிற்பமாய் நான் கருதி மனதில் வளர்த்து வைத்துள்ள சிற்பத்துக்காக நான் தேடித் தேடி அலைந்த முகவெட்டு அப்படியே உங்களிடம் அமைந்துள்ளது'' என தொழில்ரீதியாகத் தொடர்ந்தார்.

அந்தப் பெண்ணும் நட்புறவோடு, தன்னிடமிருந்து ஏதாவது எதிர்பார்க்கப்பட்டால் எப்படி அனுசரித்துப் பேசுவது என்ற நளினம் தெரிந்த முதிர்ச்சியோடிருந்தாள். இருப்பினும், ''பயமாயுள்ளது'' என்றாள், நிஜமான ஒரு சிறு அந்தரங்கத் தயக்கத்தோடு....! ''என் பெயர் டோரிஸ். ''சொல்வதற்கு மன்னிக்க...! உங்கள் நோக்கம் எனக்குப் புரியவில்லையே. மாதிரிப் பெண்ணாய் மாடலிங் செய்தெல்லாம் எனக்கு வழக்கமில்லை. ஆனாலும் நீங்கள் பழகும் விதம் ஏனோ ஈர்த்துள்ளது'' என்றவர், ''முகம் மட்டுமென்றால் பரவாயில்லை. இது கூட நான் செய்ததில்லை. மற்றபடி.... வேறெந்தப் பாகமும்...''

''முகம் மட்டுமே...!'' என்ற ரீட்டா, ''இதற்கு என் அலுவலக வழக்கப்படி நான் தரும் தொகையை மறுக்கவே கூடாது...!'' என பேசி முடித்தார்.

★ ★ ★ ★

இப்படி பிடிபட்ட நௌசிக்கா, தான் மையப் பொருளாக ஆக்கப்பட்டதை ரசித்தபடி, இதோ மேடையில், மாதிரிப் பெண்ணாக...! தான் ஒரு சிலையாக, இத்துறையில் ஜாம்பவனாக விளங்கும் ஒருவரின் கைத்திறனால் வளர்ந்து வருவதைக் கவனித்தும், பழக மிகவும் இனிமையான ஒருவரின் பூரணமான நட்பு கிடைத்த மலர்ச்சியிலும் இருந்தார் டோரிஸ். டோரிஸுக்கு அருகிலிருந்த மேஜையில், அவரது மூக்குக் கண்ணாடியிருந்தது. இதில்லாமல், தான் குருடு எனவும், ''இக்கண்ணாடி என் முகத்திற்கு அழகு கூட்டினாலும், இது இல்லாமல் ஓரிரு அடிகளுக்கு அப்பால் உள்ள எதையுமே என்னால் காண முடியாது'' எனவும் ஓர் எச்சரிக்கை தொனிக்க ஒப்புக் கொண்டுள்ளார் டோரிஸ். அதனால்தான் பேருந்தில் சந்தித்தபோது, கண்ணாடி அணிந்திராத டோரிஸின் கண்கள், எதிரே இருப்பவற்றை சரியாய் அடையாளம் காண இயலாது துழாவிக் கொண்டிருந்தன என்பது ரீட்டாவுக்கு இப்போது விளங்கிற்று.

மணிநேரங்கள் கடந்தன. ஒரு நிலையில், தன் சிற்ப உபகரணங்களை வைத்து விட்டு, கைகளையும் கால்களையும் அகட்டி விரித்து ஒரு நீண்ட சோம்பலினை வெளியிட்டார் ரீட்டா. ''முடிந்தது...'' என்றார். ''நல்லபடியாய் முடித்து விட்டேன். டோரிஸ், நீங்கள் ரொம்பக் களைப்பாய் உணருகிறீர்களா...?''

''அப்படியொன்றும் இல்லை ரீட்டா...! உங்கள் கரிசனத்துக்கு நன்றி...! எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. இவ்வளவு சீக்கிரமாய் முடிந்து விட்டதா...?''

ஹென்ரீட்டா ஆச்சரியம்மிக சிரித்து, ''ஓ... இல்லை.. இல்லை...!'' என அவசரமாய்த் திருத்தி விட்டு, ''முழுக்க முடிய வில்லை டோரிஸ்...! இன்னும் இச்சிற்பத்தோடு நான் மேற்கொள்ள வேண்டிய வேலைகள் ரொம்ப உள்ளன. உங்கள் பங்களிப்பைப் பொறுத்தமட்டில் முடிந்து விட்டது என்றேன். என் கற்பனையிலிருந்த முகத்தை உங்கள் மூலம் அடைந்து விட்டேன்.''

மேடையிலிருந்து இறங்கினாள் டோரிஸ். மூக்குக் கண்ணாடியை அணிந்துக் கொண்டாள். அக்கணத்தில், அவளின் கண் ஒளியைக் கண்ணாடி மறைத்து விட, டோரிஸ் முகமெங்கும் வியாபித்திருந்த வெகுளித்தனமும், குழந்தை ஈர்ப்பும் மறைந்தே போயின. அம்முகத்தில் வழக்கமான ஒரு பெண்ணின் அமைப்புகள் மட்டுமே மிஞ்சின. சிலையை நெருங்கினாள். ஆர்வமாய்ப் பார்த்து, தன்னைத் தேடியவள், ''என்ன ஹென்ரீட்டா இது..?'' என்றாள் ஒருவிதத் தோல்வி தோய்ந்த குரலில். ''முகம், முழுக்க முழுக்க என்னைப் போலவே இல்லையே...''.

புன்முறுவிய ரீட்டா, ''உங்களை நான் சித்திரம் தீட்டவில்லை தோழி....!'' என்றாள். சிற்ப முகத்திலும், டோரிஸ் முகத்தின் எந்த அமைப்பும் பிரதிபலிக்கப்படவில்லை! கண் அமைப்பும், புருவ வீச்சும், கன்னக் கதுப்புகளும், முகவாய் வெட்டும் மட்டுமே, நௌசிக்காவின் மிக முக்கிய அங்க அமைப்புகளாக ரீட்டா தேடி அலைந்தவை. தேன் உருகும் சிலையின் இதழ்கள், டோரிஸினுடை யவை அல்ல; நௌசிக்காவினுடையவை...! அவை பேசவுள்ள வார்த்தைகளும் இந்த மாதிரிப் பெண்ணுடையவை அல்ல; நௌசிக்காவுடையவை...! நௌசிக்கா...! ஒரு குருட்டுப் பெண். அவள் மீது பலர் கவிதை பாடவுள்ளனர், இதோ, இன்னும் சில நாட்களில்...!

நௌசிக்காவின் வேறெந்த அங்க அவயங்களும் விரிவாக வடிக்கப்படவில்லை. எல்லாம் கற்பனையில் தானுள்ளன... ... ...

''சரி ரீட்டா...! நீங்கள் இன்னும் மெனக்கெட்டுக் கூர்மையாகும் போது சிற்பம் நிச்சயம் பொலிவு பெறும். இனி நான் தேவையில்லை அல்லவா...?''

''ஆமாம் டோரிஸ்...!'' என்ற ரீட்டா, ''நீங்கள் ஒப்புக் கொண்டு இந்த அளவு ஒத்துழைப்பு நல்கியதற்கு மிக்க நன்றியம்மா. நான் உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன்'' என்றார்.

''நீங்கள் வேறு...! நான் சிறிது நேரம் உங்கள் கை களி மண் போல அசைவற்று அமர்ந்திருந்தேன். அதைப்போய் ஒத்துழைப்பு அது இது என்று...!'' என விடைபெற்றுச் சென்றாள் மாடல்.

''நன்றி, கடவுளே...'' என்றார் ரீட்டா. தேடலும், அதன் பயனும் முடிந்தன. ''இனி நான் பரிபூரணமாக பழைய ரீட்டாவாகி விடலாம்'' என துள்ளிக் குதித்து ஓடினார், அவருக்கு மிகப் பிடித்த பால் குறைந்த கறுப்பு காபி போட...!

மூளையின் தேடல் ஆக்கிரமிப்பு அடங்கியதும், தாமதமின்றி, ரீட்டாவின் மனம், விடுபட்டுப் போயிருந்த பழைய நினைப்புக்குள் மீண்டும் விழுந்தது.

ஜான்..!

''ஜான்..'' - ஒரு முறை இப்பெயரைச் சொல்லிக் கொண்டதுமே, அவர் உடலுக்குள் ஒரு கதகதப்பு ஓடி, காதல் ஏக்கம் பரவி, எண்ணத்தினைக் கொஞ்சம் வாட்டி விட்டது...! இருந்தாலும், இந்த ஏக்க உணர்வுகள், ''நாளை நான் 'ஹாலோ' செல்லப் போகிறேன்..! அங்கு ஜானைப் பார்த்து விடலாம்...!'' எனும் ஆறுதலால் மறைந்தன.

மெத்தையில் அசையாது அமர்ந்திருந்தவர், பின் எழுந்து, கொதித்து மணமணத்துக் கொண்டிருந்த கறுப்புக் காபியை அசதி தீர மூன்று கோப்பைகள் பருகினார். சுறுசுறுப்பு, வெள்ளம் போல் உள்ளே ஊறுவதை உணர்ந்தார்.

இரு வாரங்களாய்ப் பட்ட மன உளைச்சலிலிருந்து மீண்டு பழைய நிலையை அடைந்துள்ள திருப்தி, ரீட்டாவை, இது போன்ற மனிதப்பிறவியாய் தான் - எதையோ தேடி அலையும் குழப்ப நிலையற்ற பிறவியாய் தான் - மீண்டும் பிறக்க வேண்டும் என விரும்ப வைத்தது. தீவிர தேடுதல் வேட்கையோடு இண்டு இடுக்கெல்லாம் அலைந்த நிலை இனி எப்பிறவியிலும் கூடாது! சக்தியெல்லாம் கழன்றுப் போய் உபயோகமற்ற மனக் கிலேசம் நிறைந்த நிலை, மூடு பனியாய் மறைந்து போனதில் மாபெரும் விடுதலையை உணர்ந்தார். இனி, சந்தோஷமற்ற, ஒருவிதக் கலவரத்தோடு, பார்க்கும் முகங்களிலெல்லாம் நௌசிக்காவைத் தேடி தெருத்தெருவாய் அலைய வேண்டாம். எதிர்ப்படும் எல்லோரையும் உற்று உற்றுப்

பார்க்க, அறிமுகமற்ற அவர்கள் பதிலுக்கு நம்மை எரிப்பது போல் மறுபார்வை பார்த்து உண்டாக்கும் எரிச்சல்கள் இனி கிடையா. 'இனி சிலையை முடிக்கக் கடும் உழைப்பு மட்டுமே மீதம்...! கடின உழைப்புக்கு நானா சுணங்குவேன்...!'

மனம் இலவம் பஞ்சாக, குடித்து முடித்த கோப்பையை வைத்து விட்டு, மீண்டும் நௌசிக்காவை நெருங்கி நின்று உற்று நோக்கினார். நொடிகள் கரையக் கரைய, மீண்டும் ஒரு கலவரம் உள்ளுக்குள் பரவ, ரீட்டாவின் புருவங்கள், நெருக்கி முடிச்சிட்டுக் கொண்டு படபடத்தன.

இது அல்ல...! இது அல்ல...!

துல்லியமாக அமையாமலுள்ளதே...! என்னவோ தவறாகியுள்ளதே..!

தவறாகி விட்டதென்று உறைக்கும் மூளைக்கு என்ன தவறு என்று அறிய முடியவில்லையே...!

எது தவறாகியுள்ளது...? எங்கு தப்பு நேர்ந்துள்ளது...?

மேலும் நௌசிக்காவை நெருங்கி நின்று உற்று நோக்கினார்.

ஆமாம்...! அதோ...! அங்கே...! தவறு அங்கே நேர்ந்துள்ளது...!

குருட்டுக் கண்களில்...! நௌசிக்காவின் குருட்டுக் கண்களில்...!

வேறு எந்த பார்க்கும் கண்களை விடவும் அழகும் வெகுளித்தனமும் நிறைந்து ததும்பும் சிற்பத்தின் குருட்டுக் கண்களில்...!

பார்க்க இயலாதவை என்னும் நிதர்சன காரணத்தால் பார்ப்போர் நெஞ்சங்களைப் பிழியவல்ல குருட்டுக் கண்களில்...!

உருவாகி வரும் நௌசிக்கா கண்களில், ஒரு குருட்டுக் கண்ணின் நிஜம் உள்ளதா இல்லையா...? குருட்டுக் கண்களின் பரிதவிப்பு - வெகுளி - முக்கியமாய் நிர்சலனம் - இவையெல்லாம் உள்ளனவா இல்லையா...? உலகை மறந்து உற்று நோக்கி ஆராய்ந்தார். சில நிமிடங்கள் கரைந்தோடின. முடிவாய், 'இக்கண்களில், குருட்டுக் கண்களுக்குண்டான இயற்கை குணாதிசங்கள் அனைத்தும் உள்ளன' என முடிவெடுத்தவர், 'இருந்தாலும், இக்குணாதிசயங்களுடன் கூடவே இன்னும் என்னவோ வேறு சேர்ந்து உள்ளதே...!' என சிறு எரிச்சல் கொண்டார். அந்த 'என்னவோ' இருக்கக் கூடாது. ஆனால் இருக்கிறது! ஏதாவது குறைந்துள்ளதா என ஆயப் போய், கூடியிருக்கிறது என தெரிந்ததால் உண்டான எரிச்சல். சிலையில் பிரதிபலித்தக் கூடுதல் 'பாவம்' ரீட்டா திட்டமிடாதது. 'சிலை

அமைப்பு மிகச் சரி. ஆமாம். நிச்சயமாக. பின் எப்படி அந்தக் கபடு நிறைந்த சதி 'பாவம்' கண்களில் பரவியது...?!' என்ற வினா ஊர்ஜிதமாகி, அவரை பழையபடி நிலைகொள்ளாது ஆக்கிற்று. வன்மமும் பொறாமையும் கலந்த துன்முகிப் பார்வை...! இதை யார் செதுக்கியது? நானா?

மாதிரிப் பெண்ணின் உரையாடலை ரீட்டா கேட்கவேயில்லை. அவருக்கே உரிய குணப்படி, டோரிஸின் உரையாடலைத் தனிப் பெட்டிக்குள் போட்டுப் பூட்டித் தன்னை நெருங்காவண்ணம் தான் பார்த்துக் கொண்டிருந்தார். இருப்பினும், எப்படியோ, ரீட்டாவின் கருத்துக்குள் நுழையாமல் காதுக்குள் புகுந்த மாடலின் வார்த்தைகள் கை விரல்களில் வழிந்து, களி மண் வேலைப்பாட்டில் முடிந்துள்ளன.

இப்படி ஒரு வினை நிறைந்த முகமாய் விளைந்து விட்ட முகத்தினை, இனி நிச்சயமாய் மாற்றயியலாது என்பது - சிற்பி ரீட்டாவின் அனுபவத்துக்குப் புரிந்து போயிற்று.

இந்நினைவு விளைந்ததும், முதல் வேலையாய் சிலையருகிலிருந்து விலகி நாற்காலிக்குச் சென்றார் ஹென்ரீட்டா. 'இப்போது, சிலை குறித்து விளைந்திருப்பது ஒரு மனோ நிலை. ஆமாம்... நிச்சயமாய் இது ஒரு வகை 'பாவம்'. ஒரு கோணத்திலான நிலைப்பாடு. மனதின் இந்நிலைப்பாடு, கொஞ்சம் இடைவெளி விட்டு நாளை காலை எழுந்து பார்க்கும் போது மாறுபட்டு நிற்கும். பொறுத்திருந்து பார்ப்போம். சிலையின் முகம் நிறைவடைந்த கையோடு அபிப்பிராயப்படுவதை விட, கொஞ்சம் இடைவெளி விட்டுப் பார்த்தால்தான் நிஜம் தளம் தொடும். இப்போதைக்குக் குழப்பம் வேண்டாம்' என முடிவெடுத்தார்.

கூடவே, தைரியவீனமடைந்த அச்சத்தோடு, 'மனிதன் எவ்வளவு சீக்கிரம் கலக்கப்படுகிறான்.. காயப்படுகிறான்' எனவும் ஆழமாய் நினைத்தார்.

தூக்கமும் தளர்ச்சியும் கலந்த நடையோடு, இவரின் சில முக்கிய படைப்புகள் அடுக்கப்பட்டிருந்த சிற்பக் கூடத்தின் எதிர் மூலைக்குச் சென்று, அங்கு, த்யானம் செய்யும் நிலையில் இவர் தீட்டியிருந்த ஒரு பக்தரின் சிற்பத்தில் கண்ணும் கருத்தும் பதித்து நின்றார். ஹென்ரீட்டாவுக்கு 'இப்படி அப்படி மயிரிழை தவறியிருந்தாலும் பக்தி பாவம் சிதைந்திருக்கும். அவ்வாறு ஏதும் நிகழாது, பக்தி ரசம் சொட்டும் அற்புதப் படைப்பு' என திருப்தி பெருக வைத்த இவர்

படைப்பு...! வருடக்கணக்காய்ப் புதையலாய்ப் பாதுகாத்து வரும் இவர் உயிர்...!

கலக்கம் கண்டுள்ள இவர் மனதிற்கு ஆறுதலாய் அமைந்தது, இவரே மிக ரசித்த இவரின் இந்த த்யான சிற்பம். அதன் வேலைப்பாட்டைக் கூர்ந்து கவனித்து, விமர்சிக்கும் பார்வையைச் செலுத்தி, 'நிச்சயமாய் சிற்பத் தரம் மிகுந்துதான் படைக்கப் பட்டுள்ளது' என பரிபூரணமடைந்தார். முகத்தில் சொட்டும் கருணை - கடவுள் மட்டுமே பலம் என உணர்த்த, வைராக்கியமாய் புடைத்துத் தெறிக்கும் அந்தக் கழுத்து நரம்புகள் - இறைவன் முன் கூனிக் குறுகி, தான் பணிந்து விட்டதைப் பிரதிபலிக்கும் அந்த வளைந்த பவ்யமான தோள்கள் - இறைவனை நோக்கும் போதும் எண்ணும் போதும் அகந்தை அகன்று விடும் என்பதை பறை சாற்றும் அந்த உணர்ச்சியற்ற முக பாவம் - அது நிமிர்ந்து வானத்தில் எல்லையற்ற சக்தியைத் தேடும் அவசரம் - வெறும் வழிபாட்டினைக் கடந்து நிற்கும் மெய்ஞ்ஞானக் கொண்டாட்டம் - இறைவனுக்குப் பக்தன் செலுத்தும் முழு அர்ப்பணிப்பு - என எல்லாமே தத்ரூபம் எனும் பூரிப்பு ஹென்ரீட்டாவுக்குள் புது ஊற்றாய்ப் பொங்கும்போது, நௌசிக்கா ஏற்படுத்தியிருந்த ஏமாற்றம் நகர்ந்து நின்றது.

இந்த ஏகாந்த திருப்திக்கு இடையே செருகி நின்றது பின் வரும் நினைப்பு: 'ஜான் மட்டும் அன்று தேவையற்று அந்த அளவு கோபம் கொண்டு தாண்டவம் ஆடாமலிருந்திருந்தால்...?!'

ஜானின் கோபம் ஹென்ரீட்டாவைத் திடுக்கிட வைத்தது. அக்கோபம் ஜானுக்குள், அவரறியாமலேயே வியாபித்துள்ள ஏதோ ஒரு குரோதத்தையும் கோடிக் காட்டி ரீட்டாவை அதிரச் செய்தது.

இத்துணை முயற்சி எடுத்து, சிரத்தை கலந்து, நாடித் துடிப்போடு உள்ளது போல பிறந்திருக்கும் இந்த த்யான சிற்பத்தைப் பொது மக்கள் காட்சிக்கு வெளியிடப் போகும் நாளில், ''இதை நீ வெளியிடக் கூடாது'' என்றார் ஜான், படு சுலபமாய். அதிகாரமும் வெறுப்பும் கலந்த கலவையாய். எவ்விதக் கலா ரசனையுமின்றி.

ரீட்டாவும், அதிராமல், ''நான் வெளியிடுவேன்'' என்று கொஞ்சமும் எதிர்ப்புக் காட்டாமல் படு அமைதியாய் ஸ்திரமாய் மறுபதில் தந்தார். காட்சிக்கு சிலை பயணமானது.

சிறு உரையாடல் தான். ஆனால் ரீட்டாவின் மனத்தினைப் பூகம்பமாய் சில நொடிகள் ஆட்டிப் பார்த்த உரையாடல். ஏன்

கண்காட்சியில் வைக்கக் கூடாது? ஏன் அனைவரும் பார்த்துப் பாராட்டக் கூடாது? இதில் ஜான் இழக்கப்போவது எதை? இந்த வெற்றியின் விளம்பரத்தில் ஏனிந்தக் குரோதம், இவருக்கு? எதற்காக அற்புதமான ஜான் இப்படி திடீர் திடீர் என சிதைகிறார்? அவரறியாமலேயே அவருள் கூடும் இந்த வன்மம் எதனால்? இத்தனை கேள்விகளுக்கு நடுவில், மகிழ்ச்சியாய்க் கழித்திருக்க வேண்டிய தன் ஆத்மார்த்த சிலையின் வெளியீட்டு விழாவைக் குழப்பத்தின் இடையே நடத்தி முடித்தார் ரீட்டா.

இப்போது தான் நௌசிக்கா' விடமிருந்து விலகி இங்கு வந்து த்யான சிலையின் நினைவுகளில் ஆழ்ந்தார். ஆயினும் இருப்புக் கொள்ளாத குழப்பம். இதனால் உட்காரப் பிடிக்காமல் மறுபடியும் எழுந்து நௌசிக்காவை நெருங்கி நின்றார்.

சிலையின் முகப் பூர்த்தியில், அதுவும் அக்கண்களில், தோல்வி தெரிந்தது. எனினும் திருத்தம் செய்து வெல்ல முடியாது எனும் கட்டத்துக்கு இச்சிலையின் முகம் சென்று விடவில்லை என்பதும் தெளிவாயிற்று. இப்போதே முடிக்க அவரசமொன்றுமில்லை. பரபரப்பெல்லாம் டோரிஸ் கிடைத்தவுடனேயே தீர்ந்து விட்டது. அவளால், நௌசிக்காவின் முகத்துக்குத் தேவையான அத்துணைச் சாயலும் கிட்டியாயிற்று. தெளிவாய்ச் செதுக்கி முடிக்க பொறுமையும் குழப்பமற்ற மனோநிலையும்தான் அத்தியாவசியம். அது இப்போது இல்லை. எனவே தொடர்ந்து செதுக்க ஏதுவாக சிலை காயாது நிலைக்கப் பயன்படும் பாதுகாப்புத் திரவத்தைத் தெளித்து, துணிகள் கொண்டு உடனே மூடி வைத்தார். வரும் திங்கள் செவ்வாய் வரை தாங்க வேண்டுமே.

தொழில் ரீதியாக இன்று நடந்த அத்தனையையும் ஒதுக்கி வைத்தார். 'ஆஹா...' என மனம் புளகாங்கிதமடைந்தது. 'இப்போது எதிரே பிரகாசிப்பவை, விடிந்தால் விளையவுள்ள வாரக் கடைசியின் குதூகல நாட்கள் மட்டுமே...! அதுவும் எப்படி...! லூசி, ஹென்றி, மிட்டே - மேலும் ஜான் - இவர்களோடு...! சென்ற ஆண்டு போலவே, இந்த ஆண்டும், இச்சந்திப்பு, எத்துணை இன்பங்களை அள்ளித் தரப் போகின்றனவோ...!' - இவ்வாறு அவர் நினைவுகள் ஆட்டம் பாட்டம் கொண்டாட்டத்தின் எதிர்பார்ப்பில் நழுவித் துள்ளியது.

மன கனம் அகன்றதும், கொட்டாவி நீண்டது. தூக்கம். முன்னங்கால்களை இயன்ற வரை நீட்டி சோம்பல் கொண்டாடும்

பூனை போல, தன் உடல் சதைகளையெல்லாம் இயன்ற வரை இழுத்து நீட்டி பின் துவண்டார் ஹென்ரீட்டா. வலிமையை இழக்கச் செய்யும் களைப்பு.

கொதிநீரில் உடல் களைப்பும் வலியும் மன பாரமும் கரையும்படி குளித்து முடித்த போது சற்றே புத்துணர்வு தெரிந்தது. இருந்தாலும் வெகுண்டு நின்றதென்னவோ அசதிதான். ஜன்னலின் வழியே மினுமினுத்துக் கொண்டிருக்கும் நட்சத்திரங்கள் தெரியும் வண்ணம் சிறிது நேரம் மெத்தையில் மல்லாக்கப் படுத்துக் கொண்ட ரீட்டா, பிறகு, அறையின் சிறு வெளிச்சத்தில் ஒளிர்ந்தபடி, இவ்வறையின் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த, இவரின் ஆரம்பக் கால கைவண்ணமான கண்ணாடியினால் ஆக்கப்பட்ட ஒரு முகமூடி சிற்பத்தை ஊடுருவினார். அது ஒரு சாதாரண படைப்பு என இப்போது தோன்றியது. அந்நிலையிலிருந்து, சிற்ப நிபுணத்துவத்தில் சிறந்த சிலரில் தானும் ஒருவராய் இன்று உயர்ந்து விட்டதை எண்ணும் போது ரீட்டாவின் நெஞ்சு திருப்தியால் எழுந்து அமர்ந்தது.

இந்தத் திருப்தி ஆழ்ந்த தூக்கத்தைச் சுலபமாய் இழுத்து வந்தது. சற்றுமுன் ரீட்டா குடித்து முடித்திருந்த சூடான கறுப்பு காபி, எங்கோ ஆழ்ந்து சென்றுக் கொண்டிருந்த ரீட்டாவின் தூக்கத்தைக் கலைக்கப்போவதில்லை.

நினைவுகள் மூளைக்குள் புதைந்துக் கிடக்கின்றன. பலப்பல... பலப்பல. இவற்றில் பல நினைவுகள் நாம் மறந்தவை. நடந்து முடிந்த நிகழ்வுகளில் அதிகம் வசிக்காது - மூளையின் நகப்பிடியிலிருந்து அவற்றை மெதுமெதுவாய் நழுவ விட்டு - அப்படி நழுவி காலத்துக்குள் விழும் நினைவுகளைக் கவ்விப் பிடிக்காது மறைய விட்டு - அவற்றில் கவனமும் பதிக்காது - காலம் கழியக் கழிய அந்நினைவுகளை நம் கண்முன்னமேயே கழுவி விடுகிறோம்.

வெளியே கார் நிறுத்தப் பகுதியில் ஏதோ ஒரு கார் கிளம்பத் தகராறு செய்த வண்ணம் 'கர் கர்' என ஓசை எழுப்பிக் கொண்டி ருந்தது... அருகே ஏதோ அறையில் ஒரு கரகரப்பான துருப் பிடித்தக் குரல் கத்திக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தது... இவற்றை ஹென்ரீட்டாவின் பிரக்ஞையற்ற, சுய நினைவற்ற மனம் உள் வாங்கிக் கொண்டேயிருந்தது.

'கர் கர்' என கதறும் கார், ரீட்டா உடல் உறங்கினாலும் உறங்கா அவரின் மனத்துக்கு, உறுமும் புலியாய் புரிந்தது. கறுப்பும் மஞ்சளும் கலந்த கோடுகள் உடலெங்கும் வளைந்தோடும் புலி, அவர் மனக் கண் முன் உருவாகி பற்கள் துருத்தக் கத்தியது. கறுப்பு மஞ்சள் கோடுகள் - இலைகளுக்குள் ஓடும் நரம்புகள் போல - மரங்கள் - ரீட்டா மிக நேசிக்கும் இறை படைப்பு - மர இலைகளும் அவை தரும் நிழல் வசந்தமும் - மரங்கள் அப்படியே கூடக் கூட குளுமை நிறைந்த அற்புதக் காடு - காடு - உடனே சலசலவென சப்தம் - சப்தம் தரும் ஓடை - விரிந்த நீரோடை - கடலில் கலக்க என ஆரம்பித்து ஓடோடும் நதி - நடுவே நுழைந்து, 'போய் வருகிறேன்' என கொக்கரிக்கும் அடுத்த அறை கரகரக் குரல் - கரகரப்பு - ஜான்! - ஜான், ரீட்டா அருகேயிருந்த நாற்காலியில் அமர்கிறார் - இரவு உணவு நடக்கிறது - அவரைப் பார்த்து சிரிக்கிறார் ரீட்டா - பாவம், ஜான், வழக்கம் போல் கோபத்தின் கைகளில் - உணவு முடிந்து வெளியே வரும் போது இருட்டு - இரவுக் காற்று - காற்றில் கார் பறக்கிறது - அல்ல அல்ல, மிதக்கிறது - ரீட்டாவுக்கு மிகவும் பிடித்த கார்ப் பிரயாணம் - அதுவும் குளிர்க் காற்றுப் பிரயாணம் - உராய்வற்று வீசும் காற்றாய்த் தங்கு தடையின்றி லண்டனை விட்டே எங்கோ குறி வைத்து கார் சீறுகிறது - மரங்களைக் கீறி - தடைகளைக் கடந்து - இதோ, ஹாலோவுக்குள் நுழைந்து விட்டது, விமானம் போல தரையிறங்கி - ஹாலோ - வாவ் - லூசி - ஹென்றி - ஜான் - ஜான் - ரிட்ஜ் வே நோய் - ஓ, அன்பு ஜான் - ரிட்ஜ் வே நோய்.... ஜான்... ... ...

இப்படியெல்லாம் தாவித் தாவிப் பறந்த ரீட்டாவின் சுய நினைவற்ற உள் மனம் திடுமென கரைந்து காணாமல் போக - தூக்கத்தில் நேர்ந்த இந்த அனுபவத்தால் துக்ககரமான கிலேசம், ரீட்டா மனம் முழுதும் பாய - மூச்சை நிறுத்துவது போன்ற ஒரு குற்றவுணர்வு தொண்டையை அடைக்க - அவளை அறியாமலேயே செய்து விட்ட கொலை இப்பொழுது அவளுள் பூதாகாரமாய் எழ - 'ஹக்' கென வியர்த்து விறுவிறுக்க சுய பிரக்ஞைக்குள் நுழைந்தார் ஹென்ரீட்டா.

தூக்கம் கலைந்தது. கலைந்தது, கலவையாய் சிதறடித்த துர் சொப்பனத்தால் என்பதால், நெஞ்சு துடிதுடித்தது. விரல்கள் நடுங்கின, வியர்த்தது. மூச்சு வாங்கிற்று. ஸ்திரமாக்கிக் கொள்ளத் தண்ணீர் தேவைப்பட அருகிலிருந்த கோப்பை நீரை அருந்தினார். நெற்றியைத்

தாங்கிக் கொண்டு பேயறைந்தாற் போல் வெறித்து பூமியைப் பார்த்தார்.

'எத்தனை எத்தனை கலவையான எண்ணங்கள். அந்தக் கடல் - ஆறு - விண்ணில் ஏறி பறக்கும் கார் - புலி - ஜான் - அவர் கோபம் - ஓ...!' என விக்கித்தார். 'நான் அறியாமலேயே செய்து விட்ட கொலை...! எது அது...? யாரை...? எப்போது...?' என தட்டுத் தடுமாறி சிந்திக்கும் போது, விடையாய் விரிந்தாள், நௌசிக்கா.

நௌசிக்கா...?

சில நொடிகள் நழுவின. மெதுவாய், தளர்வாய், விருப்பின்றி, படுக்கையிலிருந்து இறங்கினார் ஹென்ரீட்டா. விளக்கு போட்டு ஒளி தந்து, அறையின் குறுக்காய் சத்தின்றி நடந்து, சுற்றப்பட்டு வைக்கப்பட்டிருந்த நௌசிக்கா'வின் துணிக் கட்டினை அவிழ்த்தார்.

மிக ஆழமான உள் மூச்சினை இழுத்து விட்டு, முகம் மட்டும் செதுக்கப்பட்டிருந்த சிலையினை நினைவுச் சிதறல் ஏதுமின்றி உற்று நோக்கினார்.

இது நௌசிக்கா அல்ல - டோரிஸ்...!

உள்ளம் தாங்கிக் கொள்ளா வேதனை ஹென்ரீட்டாவுக்குள் பாய்ந்தது. ரண வேதனை. ''நான் சரி செய்து விடுவேன்... நான் சரி செய்தே விடுவேன்...!'' எனத் தழுதழுக்கச் சொல்லிக் கொண்டார். ஆனால் முடியாதே எனும் நிதர்சனம் தெளிவான போது அவர் உடலும் சதையும் பிய்த்தெறியப்பட்ட நரக வேதனை அடைந்தார்.

'ம்...' - விரக்தி பொங்க நினைத்துக் கொண்டார். 'பூனையின் கதையாயிற்று' என முடிவாக்கிக் கொண்டார். 'பூனை, தன் சிறு குட்டிகளில் ஒன்றின் உடல் நலம் பாதிக்கப்படும்போது அதைக் கொன்று விடுமாம். சொஸ்தமாகாமல் இருந்தென்ன பயன் எனும் நோக்கத்தில்...!' என்ற மிருக தர்மம் அவரை அறைந்தது.

தன் தலையை, இடவலமாய், ஏதோ தீர்க்கமான முடிவெடுத்து விட்ட பாவனையில் உலுக்கி விட்டுக் கொண்டார். பின், கீழே, களிச் சக்கரத்தில் வைக்கப்பட்டிருந்த களி மண் அனைத்தையும் வழித்தெடுத்து, அருகிலிருந்த சிறு களிக் கிடங்கில் கொண்டு போய் போட்டார். கைகளில் மீதம் ஒட்டியிருந்த களி மண்ணினைப் பார்த்து, நீண்ட பெருமூச்செறிந்தார். நௌசிக்காவுக்காக உடலும் மனமும் திருகிப் போகும் அளவு, தான், தெருத்தெருவாய் அலைந்தது

நினைவிலாடிற்று. தன் முயற்சியனைத்தும் பூஜ்யத்தில் நிலைத்து, நௌசிக்காவை வெற்றிடமாக்கி விட்ட வலியோடு, கைக்களி மண் முழுவதையும் கழுவி விட்டார்.

'நௌசிக்கா...' என தனக்குத் தானே ஆதங்கம் பெருக அழைத்துப் பார்த்த ரீட்டா, 'இனி அவள் வர மாட்டாள்...!' என வருத்தம் தோய நினைத்துக் கொண்டார். நௌசிக்கா கருவானாள். பிறந்தாள். குலைந்துப் போனாள். எனவே, இறந்தும் போனாள்.

'ஆச்சரியம்..' என எண்ணினார், நம்மை அறியாமலேயே நாம் தாக்கம் கொண்டு விடும் அதிசயத்தை நினைந்து. டோரிஸ் கூறிய எந்த வார்த்தையையும் காது கொடுத்து கருத்துக்குள் நுழைத்துக் கொள்ளும் வண்ணம் ரீட்டா கேட்கவேயில்லை. ஆயினும், வெறும் வம்பு நிறைந்த 'மாடலின் விஷயமற்ற வசனங்கள், ரீட்டாவின் மூளைக்குள் இறங்கி, அவர் அறியாமலேயே அவருக்குள் தாக்கத்தை ஏற்படுத்தி, அவரின் கட்டளையின்றி கை விரல்கள் வழியே சிலைக்குள் வழிந்து நிலைத்துள்ளன. டோரிஸ் பேசிய வசனங்கள் மட்டுமே அந்த மாடலின் குணாதிசயத்தை முழுதுமாகப் பிரதிபலித்து, இதோ நௌசிக்கா'வுக்குப் பதிலாக, டோரிஸாய் உருப் பெற்று விட்டது.

கடைசியில் இப்போது நிற்கும் நௌசிக்கா - அதாவது டோரிஸ் - ரீட்டா எதிர்பார்த்த உயிர்த்துவத்தினை இழந்து நிற்கும் வெறும் களிமண். நாளையே சிதைக்கபட்டு வேறொரு சிற்பமாய் மாறப் போகும் மூலப் பொருள்.

இந்த அனுபவத்தால் ஹென்ரீட்டாவின் உள்ளே உறங்கும் கலைஞன் விழித்தெழுந்து கேட்டான் : ''எனில், இது தான் மரணமா....? இன்று ஓர் உருவமாகவும், நாளை மற்றோர் உருவமாகவும் மாறுவது தான் மரணமா...? மாற்றம் நியதியானால், மாறும்போது மரணம்தான் நிகழ்கிறதா...? நௌசிக்கா, டோரிஸாய் மாறி விட்டதால் இறந்து போய் விட்டாளா...? ஆம்...! இறந்துதான் போய் விட்டாள்...!'' - இவ்விதமாய் உயர்பட்ச சிந்தனைகளுக்குள் வீழ்ந்தார் ரீட்டா. ''ஒருவர் சாயல் இன்னொருவர் மீது விழுந்து நிலைப்பது இயற்கைதானா? அப்படியெனில் குழந்தையாய்ப் பிறந்தவுடன் நம்மீது நிலைத்திருப்பது யாரின் சாயல்....? நாம், இறைவன் திருக்கரங்களில் வெகு நாட்கள் இருந்து விட்டு இங்கு பிறப்பதால், இறைவனின் சாயலா...? அதனால்தான் எல்லாக்

குழந்தைகளும் ஆசாபாசமின்றி சாமியின் நிலையிலேயே வருகின்றனவா...?''

அடிக்கடி சித்தர்கள் கேட்டுக் கொள்ளும் பொதுக் கேள்வியும் கூடவே ரீட்டாவின் நினைவுக்குள் நிழலாடிற்று. ''என் நிஜம் எங்கே? அந்த முழு மனிதன்... அந்த உண்மையான மனிதன்... அவன் எங்கே...? என் நெற்றியில் தெரிகிறதா பாருங்கள்...! ம்...! பாருங்கள்...! இறைவனின் சாயல் என் தலையெழுத்தில் இருக்கிறதா...! பாருங்கள்...!''

ஒரு வேளை... ஒரு வேளை... இப்படித்தான் ஜான் தேடிக் கொண்டேயிருக்கிறாரா...? அடிக்கடி தன் த்ராணியெல்லாம் கரைந்துப் போய் ஜடமாய் தானாகி விட்டதாய் மருகுகிறாரே...! எதிலும் ஈடுபாடின்றி, பற்றின்றி, ஈர்ப்பின்றி, சித்தர் போல....! இதைச் சுட்டிக்காட்டத்தான், தூக்கத்தின் அடி ஆழத்தில் 'ரிட்ஜ் வே நோய்' என்ற பேய் அலறல் தோன்றியதா...? ரிட்ஜ் வே நோய் என்றால்...? எந்தப் புத்தகத்தில் அல்லது எந்த மருத்துவரைக் கேட்பது? இப்படி ஒரு நோய் வழக்கில் உள்ளதா என ஏதாவது ஒரு மருத்துவரைக் கேட்டால், பதிலுக்கு அவர், உனக்கு மன நோய் இருக்கிறதா எனக் கேட்டு விட்டால்...?!

ரிட்ஜ் வே நோய் என்றால் என்ன என்று முதலில் அறிய வேண்டும் என முடிவு செய்துக் கொண்டார் ரீட்டா.

## 3

ஜான், தனது ஆலோசனை அறையில், நோயாளியைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். தன் நோய் தரும் உபாதைகள் பற்றி, வந்திருந்த வயதான நோயாளிப் பெண்மணி விவரமாக விளக்கி விவரித்துக் கொண்டிருந்தபோது, தன் கண்களில் அனுதாபமும் தயையும் கொண்டு கவனித்தார், டாக்டர் ஜான். இந்நோய் தரும் உபாதைகளைத் தாங்கிக் கொள்வது கஷ்டம் தான் என்பதை உணர்ந்து ஒப்புக்கொள்வது போல கனிவாய்த் தலையசைத்த வண்ணம், பெண்மணியின் வார்த்தைகளை ஏற்றுக் கொண்டார் அவர். இடையிடையே வேறென்ன மாதிரி உபத்திரவங்கள் உள்ளன எனக் கேட்டு அவற்றைத் தாங்கிக் கொள்ள வழிமுறைகளும் சொன்னார். நோயாளியின் முகத்தில் பிரகாசம் உதயமாயிற்று. நம்பிக்கைப் பிரகாசம்...! இப்படிப்பட்ட நம்பிக்கைப் பிரகாசத்தை நோயாளியிடம் உண்டு பண்ணி விடுவதில் டாக்டர் ஜான் அற்புதமானவர். வலியினால் துன்பப்படும் நோயாளியின் அவதியைத் தணிப்பதில் அந்த அத்துணை ஈடுபாடும் உடையவர். அந்த அத்துணை ஈடுபாடும், உண்மையான கரிசனை - ஆத்மார்த்த விசாரம்...! வெறுமனே ஜானுடன் பேசிக் கொண்டிருப்பதிலேயே, நோயை வென்று விட முடியும் என ஆனை பலம் கொள்ளும் நோயாளிகள் அநேகர்.

நோயாளிப் பெண்மணி சொன்ன அத்தனை நோய் அறிகுறிகளை யும் கேட்டறிந்த ஜான், ஒரு தாளை உருவி எடுத்து, உட்கொள்ள வேண்டிய மருந்துப் பட்டியலை எழுத முனைந்தார். லேக்ஸ்ட்டைவ் தான் சரி எனப்பட்டது அவருக்கு. அதிக விலையும், பொதுவாக எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கா சற்றே அரியதுமான இம் மருந்தினை வாங்க அணுக வேண்டிய முகவரியையும் தந்தார். இப்போதைக்கு முடிந்தது இது தான். தற்போது நடந்து முடிந்த மருத்துவத்தால் இன்னும் ஓரிரு மாதங்களுக்கு இப்பெண்மணியை அப்படியே அமுக்கி வைக்கலாம்...! பிறகு மீண்டும் வருவாள். அப்போது அவள் சாந்திக்காக வேறு மாத்திரை மாற்றுவார்...! இப்பெண்மணியின் பலவீனத்தை - தேற்ற முடியாத, முன்னேற்ற

முடியாத பலவீனத்தைப் பொருத்தமட்டில் ஜானால் வேறொன்றும் செய்ய இயலாது. கொஞ்சம் மருந்துகள் எழுதப்பட்ட பட்டியலையும் நிறைய தன்னம்பிக்கையையும் பெற்றுக் கொண்டாள் அவள்.

உற்சாகமற்ற காலை. பணரீதியாக நல்ல லாபம்தான். மற்றபடி...? வேறெதுவுமில்லை. வெறுப்புப் படர்ந்தது ஜானுக்கு...! நோயாளிப் பெண்கள்... அவர்களின் தீராத நோய் நொடி...! இவற்றோடே உழல்வதில் அவர் மனம் தொய்ந்துப் போனது. நோயின் வீரியம் தணிக்கும்படி பேசுவது, தைரியம் தருவது, பிழைத்து விடலாம் என நோயாளியை நம்ப வைத்துப் பரிகாரம் அளிப்பது, இவை தவிர வேறில்லை. தினம் தினம். மாதா மாதம். வருடக்கணக்காய்...! ஒவ்வொரு நோயாளிக்கும் இப்படி பாதிரியார் போல் ஆறுதல் தந்துக் கொண்டே இருக்க வேண்டுமா, என சில சமயங்களில் விந்தையாய் எண்ணிக் கூடப் பார்த்திருக்கிறார். உடனேயே இந்தக் கழிவரக்கத்தை, முதிர்ந்த பிரஜைகளின் முகங்கள் வந்து விரட்டியடித்து விடும்...! மார்கரெட் மருத்துவமனையில், ஜானின் ஆதரவான பேச்சுக்காக ஏங்கி, வரிசையாய்ப் படுக்கையில் படுத்துக் காத்துக் கிடக்கும் நோயாளிகளும், திருமதி க்ரேப்ட்ரீ போன்ற மாமுதியோரின் பற்களற்ற பொக்கை வாய்ச் சிரிப்புகளும் நினைவுள் புகுந்து, ஜானை சமன் செய்து விடும்.

திருமதி க்ரேப்ட்ரீ...! மருத்துவர் ஜானும் நோயாளி க்ரேப்ட்ரீயும் அப்படி ஒத்துச் செல்பவர்கள்...! இப்போது வந்து போன நோயாளியைப் போல நெஞ்சுரமற்ற அசமந்தமல்ல, க்ரேப்ட்ரீ...! வாழ்க்கையின் புயல்கள் அத்தனையையும் ஒருசேர அனுபவித்தாலும், குடித்தே சீரழியும்-சீரழிக்கும் கணவன் மற்றும் சொல்பேச்சுக் கேட்காத விதண்டாவாத பிள்ளைகள் அடங்கிய குடும்பம் வாய்த்திருந்தாலும், உடைந்து நொறுங்கிப் போகாது எதிர்கொள்ளும் இரும்பு மனுஷி. இது தான் விதி என ஆகி விட்டதால், இரவு பகல் உழைத்தாவது குடும்பத்தைக் காப்பாற்றியே ஆக வேண்டும் என தனக்குத் தானே கடமை விதித்துக் கொண்டு, நீள நீளமாய் நீளும் எண்ணற்ற அலுவலக அறைகளைப் பெருக்கித் துடைத்தே வாழ்ந்தவர். குடும்பத்தை வாழ்வித்தவர். மாடாய் உழைத்தாலும் பணம் தேறாத பிழைப்பு... நாய்படாத பாடு...! ஆனால் - வாழ நினைத்தார். வாழப் பிரியப்பட்டார். ஜானைப் போலவே - வாழ்க்கையை வாழ்வதை ரசித்தார். இக்குணத்தாலேயே இருவரும்

அப்படி ஒத்துப் போயினர். வாழ்க்யையின் நிகழ்வுகளை அல்ல... வாழ்க்கையையே, அது தரும் இரசவாத சிலிர்ப்பினையே, ரசித்துப் போற்றினர். எதையும் விரும்பாது, இங்கு பூமியில் இருப்பதை மட்டும் ரசியோ ரசி என ரசித்துப் புளகாங்கிதமடைவதை விளக்க முடியாது. அனுபவிக்க வேண்டும். அனுபவிக்கத் தெரிய வேண்டும். தெரியாவிடில், கற்க வேண்டும். இது பற்றி ஹென்ரீட்டாவுடன் ஒரு முறை விளாவாரியாகப் பேச வேண்டும் என எண்ணிக் கொண்டார் ஜான்.

இந்த நினைப்பின் இறுதியில், அமர்ந்திருந்த பெண்மணி இருக்கையிலிருந்து எழுந்திருக்க கை தந்து உதவிய ஜான், நடக்க சிரமப்பட்ட அவளை நட்பும் அன்புக் கதகதப்பும் கூட்டி தன்னோடு மிருதுவாய் அணைத்து, அறை வாசல் வரை கொண்டு போய் விட்டார். கனிவும் அவர் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டும் அதிராமல் பேசினார். மிக சந்தோஷமும் நிம்மதியும் அடையப் பெற்ற அந்த முதிய நோயாளி வெளியேறி மறைந்ததும், கதவைப் 'பட்'டென்று மூடி, மீண்டும் தன்னிருக்கையில் வந்து அமர்ந்தார், ஜான். மன நிறைவோடு நோயாளி கிளம்ப வேண்டும் என்பதில் அத்துணை சிரத்தை எடுத்துக் கொள்பவர், டாக்டர் ஜான்...!

இப்போது, வந்திருந்த நோயாளியை, மனத்தளவில் மறந்துப் போனார் ஜான். உண்மையில் சொல்லப் போனால், அத்தனை கரிசனம் கொண்டு ஜான் நடந்துக் கொண்டாலும், அந்த மூதாட்டி இங்கு இருந்த போதே கூட, நோயாளி இருப்பதும் இல்லாததும் ஒன்றே எனும் மன நிலையில் தான் பழகினார். உணர்வுபூர்வமாய் எதையும் மனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. அவருக்குத் தெரிந்த மருத்துவத் திறமையைச் செயல்படுத்தினார்; அவ்வளவே. எல்லாம் இயந்திரத்தனம். இருப்பினும், நோயாளி படும் அவஸ்தை உணர்வுபூர்வமாய் ஜானின் நிலையைக் குழப்பாத இந்நிலையிலும், உடல் விட்டுத்தான் வந்தது அவருக்கு. நோயாளியின் நம்பகமிகு எதிர்காலமாய் - உத்தரவாதமாய் அவரை அறியாமலேயே ஜான் உழைத்து விடுவதால் உண்டாகும் களைப்பு...! எனவே வடிந்துப் போன சக்தியையும் அதனால் உண்டான அசதியையும் அவரால் உணர முடிந்தது.

'கடவுளே...' என்றழைத்து மீண்டும் வெறுப்பான மனோ நிலைக்குள் வழுக்கிப் போனார் டாக்டர்.

வரவேற்பறையில் இன்னும் ஒரே ஒரு நோயாளி தான் உள்ளார். பிறகு விடுதலை. வாரக் கடைசியில் திட்டமிடப்பட்டுள்ள கொண்டாட்டத்தை எதிர்கொள்ள விடுதலை. ஜானின் மனம் அந்நினைவுகளில் வாசம் கொண்டது. புதுப்புது இலைகளும் மலர்களும் பல நிறங்களில் வாசம் வீசத் துவங்கியுள்ள வசந்தக்காலம் - அத்தனை பேரும் சேர்ந்து மரக்காடுகளுக்குள் நழுவி, அங்கு குளிரடக்க மூட்டப்பட்ட தீயில் இணைந்து மகிழும் சுகந்தம் - லூசி.... ஆஹா... புத்துணர்வும் புத்துயிரும் தரவல்ல அபூர்வப் பிறவி - அவரின் சிரிக்கச் சிரிக்க ஈர்க்கும் வசீகரப் பேச்சு - என எல்லா எதிர்பார்ப்பு களும் ஜானைக் கிளுகிளுக்க வைத்தன. லூசியும் ஹென்றியும் தான், ஜான் அறிந்த ஆதர்சத் தம்பதியர். அவர்களின் இல்லமான ஹாலோ தான், இவர் மிக விரும்பும் கோயில். ஞாயிறன்று மரங்கள் குவிந்துக் கிடக்கும் வளைவுகளில் ஹென்ரீட்டாவுடன் நடந்து, குன்றின் உயரம் வரை சென்றடைய வேண்டும் என திட்டமிட்டுக் கொண்டார். ஹென்ரீட்டாவுடன் நீண்ட தூரம் நடக்கும் போதெல்லாம், அவரின் அதியற்புத கவரும் பேச்சால் உலகையே மறந்து அதனால் உலகில் உள்ள நோயாளிகள் எல்லோரையும் மறந்த சுதந்திர நிலைக்குச் சென்று விடுவார் ஜான். நல்ல வேளை, அப்போதெல்லாம், மறந்துப் போயிருக்கும் மருத்துவமனையையும் நோயாளிகளையும் நினைவுப் படுத்தும்படி என்னிடம் ஆலோசிக்க, ஹென்ரீட்டாவுக்கு எந்த வியாதியும் இல்லை என எண்ணிக் கொண்டார் ஜான்...!

இன்னும் ஒரு நோயாளி காத்திருக்கிறார். மேஜை மணியை அடிக்க வேண்டும். காத்திருக்கும் அவரை, பாவம், அழைக்க வேண்டும். எனினும், காரணமேயின்றி காலம் தாழ்த்தினார் ஜான். ஏற்கெனவே நேரம் ஆகி விட்டது. மாடியிலுள்ள சமையலறையில் மதிய உணவு சுடச்சுட தயாராகியிருக்கும். கெர்டாவும் குழந்தைகளும் காத்திருப்பர். இவர் வேகமாய் இடத்தைக் காலி செய்ய வேண்டும். ஆயினும் அசைவின்றி அமர்ந்தேயிருந்தார். எதிலும் நாட்டமற்ற வெறுப்பு. அசதி. தன் உடம்பைத் தானே தூக்கி வேலை செய்ய அனுமதியாத விருப்பமின்மை. வெறுப்பு.

கொஞ்ச நாட்களாகவே இவருக்குள் வளரத் துவங்கியுள்ளது இந்த அயர்வு. குறையாது வளரும் ஒருவித, காரணமற்ற, தாளாத எரிச்சலின் வேரிலிருந்து கிளம்பும் அசதி. தான் தேவையற்று எரிச்சலடை வதையும் துவண்டுத் துகள்களாவதையும் ஜானும் அறிந்திருந்தாலும்

ஏன் இது என இவரால் பிரித்தாராய்ந்து விடை அடைய முடிய வில்லை. மருத்துவராயிருந்தும்...! கெர்டாவின் நினைவு விரிந்தது. அப்படியொரு விட்டுக் கொடுக்கும் வகை. ஒரு பிரச்சினையில் தவறு எனும்போது, கொஞ்சமும் தாமதியாமல் என்னமாய் மன்னிப்புக் கேட்டு விடுகிறாள். அதில் ஐம்பது சதத்திற்கும் மேல் தவறு ஜான் மீது தானிருக்கும்; ஆயினும் அத்துணை கீழ்ப்படிதல், கெர்டாவிடம்...! பல முறை,கெர்டா எது சொன்னாலும் அல்லது செய்தாலும், அவை ஒவ்வொன்றும், ஜானின் கோபத்தைக் தூண்டி எரிச்சலூட்டும் சதியாகவே சென்று முடியும். அப்போதெல்லாம் கெர்டாவின் அதீதமான சரணடையும் குணம் தான் எரிச்சலுக்குக் காரணம் என இரக்கப்பட்டுள்ளார் இவர். கெர்டாவின் பொறுமை, சுயநலமற்ற அவரின் அணுகுமுறை, ஜானின் அனைத்து அபிலாஷைகளையும் உடனுக்குடன் பூர்த்தி பண்ண விழையும் போக்கு, என இவை போன்ற எல்லாமும் ஜானின் நிம்மதியைத் தூண்டிப் பார்த்தன. தன் பொறுமையிழந்து ஜான் வெடிக்கும் போதெல்லாம், தானும் இணையாக குரோதங்கொள்ளாமல் தாழ்மையாய் அமைதி காக்கும் கெர்டா... தன் கருத்து தான், ஜானின் கருத்தை விட சிறந்தது என ஒரு போதும் விமர்சித்து வாதாட கெர்டா... எந்த ஒரு தருணத்திலும் தன் விருப்பத்தை மட்டுமே பிரதானமாக்கி தலைகனம் கொள்ளாத கெர்டா... ஆகிய எல்லாமே ஜானைக் கொதிக்க வைத்துத் தான் அடங்கின.

*(கெர்டா அடிபணிந்தே இருப்பாள் என்பதால் தானே மணந்துக் கொண்டாய் என்றது ஜானின் உள் மனம்..! பிறகேன், தொந்தரவற்ற அவள் குணத்தின் மீது புகார் கூறுகிறாய்...? ஸான் மிகைல்' வில் கழிந்த அந்த ஒரு கோடை.. அந்தக் கோடை தந்த தாக்கம்... அதற்குப் பிறகு தான் இப்படி...!)*

இவ்விதமாய், கெர்டாவின் எந்தெந்தக் குணங்களெல்லாம் ஜானை எரிச்சலாக்கி வாழ்க்கையையே வெறுக்க வைக்கின்றனவோ, அந்தக் குணங்களெல்லாவற்றையும் தான், ஜான் ஹென்ரீட்டாவிடம் மிக அத்தியாவசியமாக நாடினார் என்பது தான் இங்கு ஆச்சரியம்...! ஆனாலும், இங்கும், அநேகமாய் எல்லா விஷயங்களிலும் ரீட்டா காட்டும் ஸ்திரமான நேர்மை - அந்த நிமிர்ந்த நோக்கு ஆகியன - ஜானை எரிச்சலாக்கி, கோபத்தின் உச்சம் வரை இட்டுச் செல்கின்றன. சில சமயங்களில் ரீட்டாவின் இப்பிரத்யேகக் குணாதிசயம், ஜானை வேர் வரை உலுக்கித்தான் விடுகின்றது.

இந்த வித்தியாசமான குணாதிசயத்தால் பாதிக்கப்பட்டு, ''எனக்குத் தெரிந்தமட்டில் ரீட்டா...'' எனத் தொடங்கி, இருவரிடையே நிகழ்ந்த ஒரு சந்திப்பின் போது, ''உலகிலேயே மாபெரும் புளுகன் - நீ தான்...!'' என்று சொல்லியிருக்கிறார் ஜான்.

''ஓஹோ...!''

''எதிரிலிருப்பவரைக் குளிர்விக்கும் வார்த்தைகளை மட்டுமே பேசி உரையாடலைக் கொண்டு செல்வதில்தான் நீ கண்ணும் கருத்துமாயிருக்கிறாய்...!''

''அது தான் எனக்கு முக்கியமாய் - அத்தியாவசியமாய்ப் படுகின்றது.''

''அதாவது உண்மையைப் பேசுவதை விட முக்கியமாய்...! இல்லையா..?''

''ம்..! நிச்சயமாய்.''

''அப்படிச் செய்கிறாயில்லையா..! பொய்யாயினும் பரவாயில்லை எனக் பேசிக் கிளுகிளுக்க வைக்கிறாயில்லையா...! அது போன்ற பொய்யை என்னிடம் பேசும் போதும் பிரயோகிக்கக் கூடாதா...?''

''உங்களிடமா...?''

''ஆமாம்.''

''இயலாது ஜான். உங்களிடம் முடியாது.''

''முடிய வேண்டும்! நீ என்னிடம் எதைச் சொல்ல வேண்டுமென நான் காத்துக் கிடக்கிறேன் என உனக்குத் தீர்க்கமாய்த் தெரிந் திருக்கும். தெரியும். பலமுறை புரிந்திருக்கும். இருந்தும் நீ...''

போதும், போதும்.

இப்பொழுது ஹென்ரீட்டாவின் மீதான எண்ணத்தை வளர்க்கக் கூடாது. இன்று மதியம் தான் அவளைப் போய்ப் பார்க்கப் போகிறாரே, பிறகென்ன. இப்பொழுது செய்ய வேண்டியதெல்லாம், அதோ, மேஜையின் மூலையிலிருக்கிறதே மின் பொத்தான், அதை அழுத்தி, கடைசி நோயாளியாய் வெளியில் தவசு கிடக்கும் அந்தப் பெண்மணியை உள்ளே அழைக்க வேண்டிய வேலையைத் தான்...! இன்னுமொரு நோய் பிடித்த ஜந்து...! நினைக்கும் போது ஜானுக்கு வெறுப்புக் கலந்த அசதி தலைதூக்கிற்று. வழக்கமான அசதி...! மருத்துவம் - நோயாளி என எண்ணாத போது எட்டிப் பார்க்காத அசதி. அந்த நோயாளிப் பெண் பட்டியலிடப் போகும் அறிகுறிகள் பத்தில், ஒன்று நிஜமாயிருக்கும். மீதி ஒன்பதும் அற்புதக் கற்பனையா

யிருக்கும். ஆனால் பத்துக்கும் ஓ' வென கதறுவாள். 'ம்...!' - எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது ஜானுக்கு. அதுதான் காசு அழுது சிகிச்சை பெற்றுக் கொள்ள வசதி இருக்கிறதில்லையா... பிறகு நரம்பதிரக் கவலைப் பட்டு என் உயிரை வாங்காமல் நோயினை அனுபவித்துப் போக வேண்டியது தானே...!

மருத்துவ வேலையை ஏற்க இயலாமல் அருவருப்பு கலந்த அலுப்பு வென்று நின்றது. ஸ்மரணையற்றுப் போனவராய் அமர்ந்தே யிருந்தார். அலுப்பு. உடலுக்கு அல்ல. மன அலுப்பு. போதும் போதும் என தோன்றியது. அத்தியாவசியமாய் அவர் மனம் ஒரு மாற்றினை எதிர்பார்த்தது. என்ன மாற்று அது? வெளியே நோயாளி நம்பிக்கை யோடு வந்தமர்ந்திருக்கும் இத்தருணத்தில் மாற்று வேண்டும் என பிடிவாதமாய் நினைத்துக் கலவரமானால் என்னத் தான் செய்வது...?

மாற்று...? மாற்றம்...?

என்ன மாற்றம் எனக் கூர்மையாய்த் தேடியவரின் உள், மின்னல் கீற்றாய்ப் பிரகாசித்தது பதில்: **'எனக்கு வீட்டுக்குப் போக வேண்டும்.'**

இப்பதில் ஜானை ஆச்சரியத்தில் முக்கி எடுத்தது. எங்கிருந்து வந்தது இப்புதிய தேடல்? இல்லம் ? என்ன பொருள் இதற்கு? பெற்றவர்கள் ஆங்கிலோ-இந்தியர்கள். மாமாவிடமும் மாமியிடமும் மாற்றி மாற்றி எறியப்பட்டு வளர்ந்தவர் ஜான். அங்கு பாதி நாள், இங்கு பாதி நாள் என விடுமுறையைக் கழித்தது போக மீதியத்தனை யும் பள்ளிக் கூடத்தில் தான். இவருக்கென்று வைத்திருக்கும் இல்லம் - இதோ, மருத்துவர்கள் வாழும் பகுதியான லண்டனின் இந்த ஹார்லி தெரு மருத்துவ இல்லம் தான். ஒரு வேளை தன் குடும்பம் வாழும் இந்த வீட்டையே இல்லமாய் அங்கீகரித்துக் கொண்டு மனம் அப்படி எண்ணியதா...? இதோ, இங்கேயே, இப்பொழுதே, ஜானின் இந்த வீட்டிலேயே, மருத்துவச் சூழலை விட்டு வெளியேறி சாமானிய வீட்டுச் சூழலுக்குள் புகுந்த விட மனம் துடிப்பதன் பிரதிபலிப்பு தானா, இது...?! 'ம்ம்...' என தனக்குதானே மறுத்துத் தலையசைத்துக் கொண்டார். 'இல்லை. அப்படியில்லை' என அவருக்குத் தெரியும்.

ஜானுக்குள் திகழும் புத்திசாலி மருத்துவன், பின் எதற்கு **'எனக்கு இல்லத்துக்குப் போக வேண்டும்'** என மனம் திடுமென அல்லாடியது என ஆராய முற்பட்டு - ஏதோ காரணம், ஏதோ ஒரு பிம்பம் - இந்தத் திடீர் மாற்றத்தை நாடக் காரணமாய் உள்ளது என முடித்தார். அந்தப் பிம்பம் - அந்த மனோபாவனை எது?

கண்களை மூடிக் கொண்டு, இப்படி தோன்றியதற்கான பின்னணியைக் கண்டறிய முற்பட்டார், ஜானுக்குள் திகழும் மருத்துவன்.

மனக்கண் பிரகாசமாக, அங்கு வெளிச்சம் தென்பட, அந்த ஒளியில் விரிந்தன, நீலக் கம்பளமாய் ஆடிய மத்திய தரைக் கடல் - கரையில் ஏராளமாய் வளைந்தும் நெளிந்தும் அடர்ந்துக் கிடந்த தெங்கு பனை மரங்கள் - கரையெல்லாம் பரவியிருந்த பாசிச் செடிகள் - புளிக்கும் பேரிக்காய் மரங்கள்! அந்தக் கோடையில் மத்திய தரைக்கடல் பரப்பி விடும் கடல் வாசத்தை இந்த அறைக்குள் இப்பொழுது நுகர்ந்தார் ; பிறந்த மேனியாய் கடற்கரையில் குப்புற விழ்ந்துக் கிடக்க உடலெங்கும் மேவிச் செல்லும் குளிர் கடற் காற்றையும் உணர்ந்தார்.

அந்தப் பிம்பம் - ஸான் மிகைல்...!

புரிந்ததும் திடுக்கிட்டார். உலுக்கப்பட்டார். ஸான் மிகைல். ஜான் வாழ்க்கையில் என்னவெல்லாமோ அரங்கேற்றியுள்ள ஸான் மிகைல்'லை மறந்து - அல்ல அல்ல, நினைக்காதிருந்து - பல வருடங்கள் ஓடி விட்டன. வெகு நிச்சயமாய், தன் வாழ்நாளில், இன்னுமொரு முறை, அப்பகுதிக்குச் செல்ல இவருக்கு ஆசை கிடையாது; கிடையவே கிடையாது. ஸான் மிகைல் கொடுத்த அனுபவம், இவர் வாழ்க்கை எனும் புத்தகத்தின் கடந்து போன அத்தியாயங்கள்...! பயமுறுத்தும் அத்தியாயங்கள்...! ஆனால் அவை ஏன் மன ஆழத்தில் மறுபடியும் பூதாகாரமாய் விழித்தெழ வேண்டும் என எண்ணும் போதே உலுக்கப்பட்டார். 'எனில், ஸான் மிகைல்' லை நான் நினைக்க மறுத்து வாழ்ந்துள்ளேனே தவிர, மறக்கவில்லையா?' - அதிர்ந்துக் கேட்டுக் கொண்டார் ஜான்.

★ ★ ★ ★

கிட்டதட்ட பதினாலு பதினைந்து வருடங்களுக்கு முந்தைய கதை. தான் வெரோனிக்கா'வை, படு தீவிரமாக மனதில் இறக்கிக் காதலிப்பதை உணர்ந்து அறிந்த நாள். கூடவே, இருந்தாலும் இக்காதலைக் கைகூட வைப்பது உகந்ததல்ல எனவும் தீர்மானித்துக் கொண்ட நாள்...! அவளுக்கு மட்டும் வாழ்க்கைப்பட்டு விட்டால், தன்னை உடல் உயிர் சேர்த்து விழுங்கி ஏப்பம் விட்டு விடுவாள் என மிகச் சரியாய் நிர்ணயித்து வைத்திருந்தார் ஜான். அப்படிப்பட்ட

தலைக்கனம் - கர்வம் - அகங்காரம் கொண்ட படைப்பு, வெரோனிக்கா. வெறிபிடித்தவள். தான் அடைய விரும்பும் எதையும் - அது தர்மமோ இல்லையோ, எப்படியாயினும் - அப்படியே கவ்விப் பறித்து வெற்றி பெற்று விடும் ஓர் அகங்காரப் பிறவி. ஆனால், அவளால், ஜானை மட்டும் தன்னகப்படுத்திக் கொள்ளயியலவில்லை. இவர் தப்பித்து விட்டார்! தன் ஒவ்வொரு பணிகளிலும் செயல்களிலும் யாரும் குறுக்கிடாத சுதந்திர வாழ்க்கையை வாழ விரும்பியவர் ஜான்... இது வெரோனிக்கா'வோடு இணைந்தால் நிச்சயம் இயலாது. அவளின் அடிப்படைக் குணத்தின்படி, அவள் தன் வாழ்க்கையை வாழ - தன் வாழ்க்கையை மட்டும் வாழ விரும்பி னாள். இத்தோடு நின்று விட்டால் கூட ஒத்துழைத்துப் போயிருக்க லாம். ஆனால், ஜானை, இவள் வாழ்க்கைக்கு ஒத்தூதும் ஓர் இணைப்பாய்க் கூட்டிச் செல்ல விழைந்தாள். ஜான் விழித்துத் தப்பித்தது இங்கே தான்...!

அவள் வாழ்ந்து வந்த ஹாலிவுட் பகுதிக்கு தன்னுடன் வந்து விடுமாறு அழைத்தபோது, ஜான் திட்டவட்டமாக மறுத்த கணத்தில் அதிர்ந்து தான் போனாள். தண்மையற்று சொன்னாள் : ''நீ டாக்டராகத் தான் வேண்டும் என்று முடிவிலிருந்தால், அப்பட்டத்தை ஹாலிவுட்டிலேயே பெறலாம். இது சாத்தியம் தான்.'' பிறகு கர்வம் தொனிக்க, ''கட்டழகனான நீ இன்னும் வாழ்ந்து அனுபவிக்க எவ்வளவோ உள்ளது. அத்தனைக்கும் வழி செய்ய என்னிடம் பணம் கொட்டிக் கிடக்கின்றது. எனவே, நீ மெனக்கெட்டு மருத்துவராக வேண்டியதெல்லாம் அனாவசியம்...!'' என்று விட்டு, முகத்தில் விழுந்துப் புரண்ட கற்றை முடியை விரல்களால் அகங்காரமாய் சீவிப் பின்னுக்குத் தள்ளி விட்டுக் கொண்டு, ''என்ன...?'' என்று ஜானை முறைத்தாள்!

தன் மருத்துவப் படிப்பில் வெற்றி காண வேண்டும் என ஏங்கியது ஜானின், இளைய, எதையாவது கண்டறிய வேண்டும் என துடிதுடித்த மனம். உக்கிரமான குரலில் பதில் தந்தார் ஜான் : ''நான் என் துறையில் குறியாயிருக்கிறேன். எனக்கு ராட்லே உடன் பணியாற்றியே தீர வேண்டும்.''

''ம்...'' எனக் கிண்டலாய் மூக்குறிஞ்சிய வெரோனிக்கா, ''யார்...! அந்தக்கோமாளி டாக்டரிடமா...!'' என்றாள்.

''ஆமாம்...'' என்று நறநறத்த ஜான், ''அந்தக் கோமாளியிடம் தான்'' என கோபமாய்ப் பேசினார். ''அந்தக் கோமாளி தான், உலகே

தன் பக்கம் திரும்பிப் பார்க்கும் அளவுக்கு, குழந்தை நோய்களின் மீது அதிசயிக்கத்தக்க ஆராய்ச்சி முடிவுகளைத் தந்துள்ளார்.''

''ஒழியட்டும். தந்து முடித்து விட்டாரல்லவா...?'' என்று வேகமாய் இடைமறித்துத் தடுத்த வெரோனிக்கா, ''ஜான். கலிபோர்னியா போன்ற - வாழ உகந்த கிளுகிளுப்பான தட்ப வெப்பம், அமெரிக்காவில் எங்கும் கிடையாது. அது போன்ற சூழலிலிருந்து உலகை ரசிப்பது - தனி சுகம்'' என்றாள். பின் லயித்தபடி பேசினாள் : ''தனிமையிலல்ல. உன்னுடன். ஆமாம், உன்னுடன் இணைந்து உலகைக் காண விழைகிறேன். நீயில்லாது அங்கு வாழ்வது இனி கொடுமை. அப்படி ஒரு வாழ்க்கை நான் விரும்பாதது, ஜான்...! எனக்கு நீ வேண்டும் ஜான்...! நீ அவசியம்!''

இதைக் கேட்ட ஜான், வெரோனிக்காவைப் பிரமிப்பூட்ட வைக்கும் பின்வரும் ஆலோசனையைத் தந்தார்: ''நடிக்க உனக்கு வந்திருக்கும் ஹாலிவுட் வாய்ப்பினை விட்டு விட்டு, என்னை மணமுடித்துக் கொண்டு, எனக்கு ஒத்தாசையாய் இங்கு லண்டனில் தங்கி விடு. என்ன..?''

அவனை வினோதமாய்ப் பார்த்தாள். தன் முடிவை விட்டுக் கொடுப்பதாவது! உறுதியாய் நின்று அவள் நிலைப்பாடு தான் அரங்கேறியாக வேண்டும் என்று கட்டளையாய்ச் சொன்னாள்: ''ஹாலிவுட் செல்வேன். நடிப்பேன். உன்னைக் காதலிப்பதைத் தாரை வார்க்க மாட்டேன். புரிகிறதா? நீ என்னை மணந்தாக வேண்டும். வேறு வழி கிடையாது ஜான். மணந்துக் கொண்டு இங்கும் இருக்கக் கூடாது. என்னுடன் வந்தாக வேண்டும். என் அழகுக்கும் அதன் கவர்ச்சி மிகு பலத்துக்கும் நீ பணிந்தே ஆக வேண்டும்.''

வெரோனிக்காவின் இந்த வசனங்கள், இது நாள் வரை ஜான் புரிந்து வைத்திருந்த வெரோனிக்காவை முழுமையாய் ஊர்ஜிதப் படுத்தின. இதற்கு தீர்வாய் ஒரு வழிதான் உள்ளதாய்க் கண்ட ஜான், அதனைச் செயல்படுத்துவதைக் தவிர வேறு வழியில்லை எனவும் தெளிந்தார். உன்னுடனான உறவு போதும் எனக் கடிதம் எழுதி வைத்துக் கிளம்பினார்.

இதற்கு விலையாய் - தலைக்கனமும், ஜானை உடமையாக்கிக் கொள்ள என்றே வெறியும் பிடித்தலைந்த வெரோனிக்காவால் - பன்முனைத் தாக்குதலுக்கு ஆளானார், ஜான். பரவாயில்லை என எதிர் கொண்டார். தன் சுதந்திர முடிவினால் விளைந்த -

வெரோனிக்காவிடமிருந்து விடுதலை, பங்கமற்று தொடரும் தன் மருத்துவப் படிப்பு போன்ற அனுகூலங்கள் - அவரைப் பொறுமை காக்க வைத்தன. லண்டன் திரும்பி, டாக்டர் ராட்லே'யின் கீழ் மருத்துவப்பட்டம் முடித்து, எல்லா வகையிலும் வெரோனிக்காவின் அதிரடியான குணத்துக்கு மாறான கெர்டாவை மணமுடித்தார்.

★ ★ ★ ★

தள்ளுக்கதவைத் திறந்து உள்ளே நுழைந்த காரியதரிசி பெரில், ''இன்னுமொரு நோயாளி காத்திருக்கிறார்'' என நினைவுபடுத்தினாள்.

''ம். தெரியும்.''

''மறந்து விட்டதாய் நினைத்தேன்.''

ஜானின் அறையைக் கடந்து எதிர்புறமிருந்த இன்னுமோர் அறைக்குள் புகுந்தாள் பெரில். ஜானின் கண்கள் அமைதியாய் நழுவிய அவளையே வெறித்துக் கொண்டிருந்தன. சாதாரணப் பெண், ஆனால் அசாத்திய - அசாதாரண திறமை. ஆறு வருடங்களாகப் பணியமர்த்தியுள்ளார். தன் பணியில் சிறு தவறு கூட நிகழ்த்தாதவள். பதைபதைப்பு கிடையாது. கவலை இருக்காது. பதற்றமிராது. சர்வ சாதாரணமாக சிக்'கென வேலையை முடிப்பாள். கருகருவென கருத்த கூந்தலும் மாநிற மினுமினுக்கும் தோளும், இவற்றை ஸ்திரப்படுத்திக் காட்டும் தீர்க்கமான முகவெட்டும் அமையப் பெற்றவள். மூக்குக் கண்ணாடி கடந்து பாயும் பெரில்'லின் குழப்பமற்ற கருவிழிகள், ஜானை, உலகின் பிற மனிதர்களை எவ்விதப் பாசப் பிணைப்புமின்றி பார்த்துக் கணக்கிடுவது போலவே மதிப்பிட்டன. எப்போதும்.

இதில், ஜானின் பிரத்யேகக் குணத்துக்கு, மனத்தாங்கல் உண்டு. எந்தப் பழிச்சொற்களுமற்ற, சுத்தமான, சாதாரண காரியதரிசியை ஜான் எதிர்நோக்கியிருக்க, அது போலவே, எந்தப் பழிச்சொற்களுமற்ற, சுத்தமான, சாதாரண காரியதரிசியே ஜானுக்குக் கிடைத்திருந்தாலும், சில சமயங்களில், இவ்விஷயத்தில், எவ்வித நியாயமுமின்றி மனம் நொந்துப் போவார் ஜான். உலகின் முதலாளி-பணியாள் நியமப்படி, எதிர்பார்ப்பற்ற அர்ப்பணிப்போடு பெரில் இயங்க வேண்டும். இது நிகழ்ந்ததே கிடையாது. எதற்கும் வெறுத்துப் போகும் ஜான், இதனாலும் அதிகம் மனம் புண்பட்டுப் போவார்! ஒரு சக மனிதன் எனும் அளவில் மட்டுமே ஜானை ஏற்று தனக்கான

பணியை ஆற்றும் பெரில்' லின் சிரத்தையில், ஜானிடம், பொதுவாய் விவரிக்கப்பட்டுள்ள ஒரு தொழிலாளியின் அர்ப்பணிப்போ பயமோ இருந்ததே கிடையாது. அவள், ஜானின் சுபாவத்தால் கவரப்படவு மில்லை. அவரின் ஆண்மையால் ஈர்க்கபடவுமில்லை. இவற்றால், தன்னை, அவள் கொஞ்சமேனும் விரும்புகிறாளா எனும் ஐயம் கூட ஜானுக்கு எழுந்ததுண்டு.

ஒரு முறை தன்னுடைய தோழி ஒருத்தியோடு தொலைபேசியில் உரையாடிக் கொண்டிருந்தபோது ''அப்படி ஒன்றும் சுயநலவாதி போல் எனக்குத் தோன்றவில்லை. சிந்திப்பற்று செயல்படுகிறார். ஆராய்ந்தறிபவராயும் படவில்லை'' என்று பெரில் குறிப்பிட்டதைக் கேட்டார். தன்னைப்பற்றித் தான் உரையாடல் நிகழ்ந்தது என அறிந்து, கேட்ட இந்த ஒரிரு வார்த்தைகளினாலான வசனத்தின் மீதே, கிட்டதட்ட ஒரு முழு நாளும் எரிச்சலாகிக் கிடந்தார் ஜான். காரணம்...? அவரும், யாரும் அறியாதது.

கெர்டா செலுத்தும் இணையற்ற ஈடுபாடு ஜானுக்குள் உண்டாக்கும் எரிச்சல் போலவே, ஜானை அதிகம் பொருட்படுத்தாது தன் வேலையை செவ்வனே செய்துச் செல்லும் பெரில்'லின் தீவு போன்ற அணுகுமுறையும் ஜானுக்குள் எரிச்சலை மண்டச் செய்தது. இப்படி சிந்திக்கும் போது, வர வர, தன்னைச் சுற்றி நடக்கும் எல்லாமும், தன்னை உடனடியாய் எரிச்சலூட்டுவதாய் உணர்ந்தார் ஜான்.

எங்கோ தவறு நடக்கிறது! அதீத வேலைப் பளு...? இருக்கலாம் எனத் தோன்றினாலும், ம்ம், இது வெறும் சாக்கு என்று நிதர்சனம் உறைத்தது. வளரும் இருப்புக் கொள்ளாமை, பொறுமையின்மை, படபடப்பு, வெறுப்பு இவற்றால் உண்டாகும் அயர்ச்சி, ஆகிய இவற்றிற்கெல்லாம் ஏதோ மனத்தாழத்து முக்கியத்துவம் உள்ளது. நினைக்கும் போதே ஜானுக்குள் ஒரு திகில் பரவி, 'நிலைமையை இப்படியே விட்டுவிடக் கூடாது. என்ன ஆகியுள்ளது - எனக்கு?' எனக் குரல் எழுப்பி, 'எப்படி தப்பிப்பது? என்ன தப்பிப்பு இருக்கிறது?' என கேட்டது. இக்கேள்விகள் எழுந்தவுடனேயே, குருட்டுத்தனமாய் உருண்டோடி வரும் அதே பதில் வந்து விழுந்தது:

'வீட்டுக்குப் போக வேண்டும்.'

எந்த வீட்டுக்குப் போவதென்று இப்படி ஒரு பாழாய்ப் போன எண்ணம் எழுகின்றது?! இதோ, 404, ஹார்லி தெரு.... இது தானே...

இந்த மருத்துவமனையின் மேல் பாதி தானே என் வீடு! பின் எங்கே ஓடுவது....!

'எனில் இத்தனை நாட்களாக - பதினைந்து வருடங்களாக - நான் வசிக்கும் இந்த வீட்டினை, என் மனம், வீடு என ஏற்றுக் கொள்ளாமல் உள்ளதா? என் மனத்துக்கு வீடு என்பது, பிறகு வேறா?'

நினைக்கவே பயமாயிருந்தது ஜானுக்கு. வெளியே அமர்ந்திருக்கும் நோயாளியும், அவர் குறித்த எண்ணங்களும் ஜானுக்குள் உதித்தன. வியாதிகளாலேயே உருவாக்கப்பட்டதாய் எண்ணியெண்ணி மருகும் மூதாட்டி. அவளுக்கு மிக அதிகமாய் பணமும் அதைவிட அதிகமாய் வெட்டி நேரமும் இருக்கின்றன. - இந்நோயிருக்குமோ அந்த இயலாமையிருக்குமோ என்று பட்டியலிட்டு ஜான் உயிரை வாங்க!

ஜானின் மீது அக்கறைமிகு ஒரு நண்பர் அறிவுறுத்தியிருக்கிறார் : 'ஹே ஜான்! இது போன்ற பணம் பற்றி கவலையற்ற பணக்காரக் கிழங்கள், தாங்களே ஏதோ ஓர் அசௌகரியத்தைக் கற்பனை செய்துக் கொண்டு வந்து விடாப்படியாய் உன்னைத் துளைத்தெடுப்பதால் தான், நீ கொஞ்சங்கொஞ்சமாக இப்படி வெறுப்பில் ஊறியுள்ளாய். முதலில் இது போன்ற கற்பனை நோயாளிகளை நிறுத்து. ஏழைகள் பக்கம் போய் உதவு. அவர்கள் தான் உண்மையிலேயே ஏதேனும் சுகவீனம் இருப்பின் உன் போன்ற மருத்துவரை நாடுவர். அந்த மருத்துவத்திலும் ஓர் அர்த்தமிருக்கும்.'

நோயிருப்பதாய் உருவாக்கிக் கொண்ட கானல் எண்ணத்துடன், பல பணக்கார நோயாளிகள், ஒரு வாரத்திற்கு ஐந்து மருத்துவர்களைச் சந்தித்து அவர்களை உண்டு இல்லையென்று ஆக்கும் கதை, ஜான் அறிந்ததே. பாட்டில் பாட்டில்களாய் மருந்துகள்! முதுகு வலி - இருமிக் காட்டி நம்ப வைக்கும் தாளா கபம் - தூக்கமின்மை - ஜீரணமின்மை - என, எல்லா யூகித்துக் கொண்ட நோய்களுக்கும், அந்தந்த நிபுணர்களிடம் வாரமொரு முன்பதிவு! இதில் அனுபவமிகு மருத்துவரிடம் செல்லும்போது, 'அந்த அனுபவமற்ற இளைய மருத்துவர் தந்த நீளமான குண்டான வெள்ளை மாத்திரை, ம்ம்... பிரயோஜனமில்லை டாக்டர்...! அது ஏனென்று உங்களைப் போன்ற அனுபவமிகு மருத்துவர்களுக்கே வெளிச்சம்! பதினான்கு வருடங்களாக நான் எடுத்துக் கொண்டிருந்தேனே, அந்த ப்ரவுன் நிற மாத்திரை, அதுவே மேல் போலுள்ளது' போன்ற மேதாவித்தன ஆலோசனைகள்!

நல்ல உடல்நலத்தோடும் கோயில் மணி போன்ற கிண்'ணென்ற ஆரோக்கிய உரையாடலோடும் இருந்தாலும், ஒருவித மயக்கத்தை செயற்கையாய்க் கொண்டு வந்து, 'ஏன் நேரமாகுது?' என்று மயங்கும் நடுக்கத்தோடு வெளியே நோயாளிப் பெண் கேட்டுக் கொண்டிருந்தாள். உள்ளே வந்து ஒரு வண்டி நோய் அறிகுறிகளைச் சொல்லப் போகிறாள். ஜானும், மருத்துவ நோயாளி அட்டையிலோ அல்லது மருந்துப் பெயர்களைப் பட்டியலிடும் தாளிலோ பல மருந்துகளை எழுதித் தருவார் - தன் மாறாத கனிவு மிகுசம்பாஷணையோடு! தினம் தினம் இதையே ஆள் மாற்றி ஆளுக்கு செய்து செய்து, முழுக்க முழுக்க வெறுத்து விட்டார் ஜான்.

*நீலக் கடல்.... மலர்களின் சுகந்த வாசம்... குளிர் தணிக்கும் சூரியன்... பதினைந்து வருடங்களுக்கு முன்னால்! நடந்தது! முடிந்தது! ஆமாம்... யார் செய்த புண்ணியமோ, முடிந்தும் விட்டது! அந்த இக்கட்டில் முழுவதுமாக அறுத்துப் போடுமளவு சமயோஜித துணிவுமிருந்தது ஜானுக்கு.*

துணிவு? சமயோஜிதம்? அதுவும் ஒரு பேரிக்கட்டில்? எப்படி முடிந்தது உன்னால், என்று உள்ளிருந்து ஒரு குரல் நமட்டுச் சிரிப்புச் சிரித்துக் கேட்டது! எப்படியோ! அது தேவையற்றது! ஒரு புத்திசாலி முடிவினை செயல்படுத்தினார் என்பதே நிஜம். அது ஒரு புதைக் குழி. வலிக்க வலிக்க உள்ளிழுத்துக் கொல்லவல்ல சேற்றுக் குழி. நல்ல வேளையாக அந்தக் கொடூர வலி முதலிலேயே அனுபவமாகியதால், சமயோஜிதமாய்க் கை கழுவி விட முடிவெடுக்க இயன்றது. அனுபவமாகாமலிருந்திருந்தால், ஓ... அந்த நரக அனுபவம் வாழ்நாள் முழுதுமன்றோ நிலைத்திருக்கும்...!

ஜானுக்கு, மருத்துவமனையைக் கொண்டு செலுத்த இடையூறளிக்காத காரியதரிசியும், வீட்டினை இழுத்துச் செல்ல அடங்கியே போகும் மனைவியும் வாய்த்துள்ளனர். இது தானே இவர் எதிர்பார்த்தது! டாக்டர் ஜானைப் பொருத்தமட்டில் அழகு இரண்டாம்பட்சம் தான். அழகின் அழகினை ஆழமாய் அனுபவித்தவர் ஜான்! வெரோனிக்கா போன்ற அபரிமித அழகுத் ததும்பும் பதுமைகள் அந்தக் கவர்ச்சியின் அனுகூலத்தால் என்னவெல்லாம் செய்வர் என அனுபவித்தவர் இவர். வெரோனிக்காவிற்குப் பிறகு இவர் வேண்டியதெல்லாம் பாதுகாப்பு.

பாதுகாப்பு, அமைதி, அர்ப்பணிப்பு, விட்டுக் கொடுத்தல் ஆகிய குணநலன்கள் பெறப்பட்ட பெண். இவற்றால், கொ்டா, ஜானுக்குத் தேவையாய் தானிருந்தது...! வாழ்க்கை என்ன என ஜான் வரையறுக்கிறாரோ அப்படி இயங்க - தனக்குச் சொந்தமாய் எந்த முடிவுகளும் எடுக்காமல் ஜான் கூறும் முடிவுகளுக்கு மட்டும் தலையை ஆட்டி ஆட்டி இயங்க - ஒருவர் தேவைப்பட்டது ஜானுக்கு...! அப்படியே அலுவலகத்திலும் வீட்டிலும் பெண்கள் வந்து விட்டாலும், நெஞ்செங்கும் வெறுப்பு மட்டும் மண்டியே கிடந்தது, ஜானுக்கு.

***ஓ... பிடிக்கவில்லையே....! எதுவும்...!***

'வாழ்க்கையின் பெறும் சோகமே, நாம் எது கேட்கிறோமோ, எதை எதிர்பார்க்கிறோமோ, அது அப்படியே கிடைத்து விடுவது தான்...' என சொன்ன பிரகஸ்பதி யார்...? இப்படி ஓர் எண்ணம் உதித்து, ஒரு வேளை இந்த அளவு பதவிசாய் பெண்டாட்டி கிடைக்காமலிருந்திருந்தால், குழப்பம் மட்டுப்பட்டிருக்குமோ என, தன் பங்குக்கு எரிச்சலைக் கூட்டியது.

வெகுண்ட ஆத்திரத்தை அப்படியே மேஜை மணியில் செலுத்தினார். அப்படி ஓர் அழுத்தம். மணி அலறியது.

காத்திருந்த கடைசி நோயாளியின் கவலைகளைக் கேட்டறிய கால் மணி நேரம் பிடித்தது ஜானுக்கு. கற்பனை நோய்களில் வாழும் இன்னொரு பணக்கார மூதாட்டி. ஜானுக்கு எரிச்சலூட்ட என்றே வரும் கிழவிகள். ஆனாலும், முகம் மலர பொறுமையாய் கேட்டு - இப்படி இருக்கிறதா... அப்படி படுத்துகிறதா என்றெல்லாம் கேள்விகள் புனைந்து - ஆதரவாய் வருந்தி - நம்பிக்கை தந்து - கருணையால் நனைத்து - மருந்து ஏதேனும் கொண்டு ஊசி போடாமல் தனக்கே உரித்தான ஒத்தட வார்த்தைகளால் மன ஆறுதல் ஊட்டி - மருத்துவராயில்லாது ஒரு சர்வ ரோக நிவாரணியாய் நின்றார் ஜான். பணம் செலவானால் தான் நோய் குணமாகும் என்ற ஒரே கருத்தில் எதிரே அமர்ந்திருந்த மூதாட்டியை ஏமாற்றாது, இன்றைக்குக் கடைசியாய் மீண்டுமொரு நீண்ட மருந்துப் பட்டியலை எழுதித் தந்து எழுந்தார் ஜான். மறவாது மூதாட்டியைக் கைத் தாங்கலாய்ப் பிடித்து வந்து வாசல் வரையும் விட்டார்!

உள்ளே நுழைந்த ஜான் தன் இருக்கையில் அமர்ந்து ஒரு காண்டா மிருகமாய் வாய் திறந்து சோம்பலை நீக்கிக் கொண்டார். இன்றைய பொழுதுக்கு இனி விடுதலைதான். மேலே போய் கெர்டாவுடனும் குழந்தைகளுடனும் அமைதியான சந்தோஷத்துடன் மதிய உணவினை ரசிக்குமளவுக்கு - நாளை அறிவிக்கப்பட்டிருக்கும் நண்பர்களுடனான களிப்பாட்டத்திற்குக் குதூகலமாய்த் திட்டமிடும் அளவுக்கு - எல்லா நோயாளிகளையும் அவர் தம் நோய்களையும் மறந்து தொலைக்குமளவுக்கு - விடுதலை தான்.

கைக்கெட்டும் தூரத்திலுள்ள இந்தக் கொண்டாட்டங்களெல்லாம் நினைக்க நினைக்க ஆவல் மிக எழுவது மூளைக்கு உறைத்தாலும், ஒரு வினோத பலவீனம், நம்பிக்கையை அடக்கி ஆளும் ஆச்சமூட்டும் அக்கறையின்மை, அவருக்குள் பரவி, எழுந்து நகரக் கூட ஈடுபாடு அற்றுப் போகும் ஜடமாய் ஆக்கியது.

அயர்ந்து - களைத்து - நொந்து - வெறுத்து - கசந்துப் போனார் ஜான்.



மருத்துவமனையின் மேல் தளத்திலிருந்த பகுதியில், சமையல் மேஜையில் இருந்த ஒரு மட்டன் துண்டின் மீது தீவிரமாய் கண்களைப் பதித்து அமர்ந்திருந்தார் திருமதி கெர்டா ஜான்...!

இந்த மட்டன் துண்டினை மறுபடியும் சூடாக்க, சமையலறைக்கு எடுத்துச் செல்வதா வேண்டாமா எனும் கேள்வியின் ஆதிக்கத்திலிருந்தார் கெர்டா. ஜான் வருவதற்கு இன்னும் காலந்தாழ்ந்தால், இது ஆறிப்போய் கெட்டியாகி விடும். சாப்பிடும் நிலையிலிருக்காது. இருக்கும் கடைசி நோயாளியை உடனடியாய்ப் பார்த்து முடித்து விடும் பட்சத்தில், ஜான் எந்த நொடியிலும் வந்து விடலாம். மட்டனைச் சூடாக்க அடுக்களைக் கொண்டு போய் அந்த நேரம் பார்த்து ஜான் வந்து நின்றால், பொறுமையென்பதே அற்ற ஜானுக்கு முன்னால், நிலைமை மோசமாகிவிடும். 'நான் இப்போது வருவேன் எனத் தெரிந்திருந்தும், என்னைப் பட்டினி போட என்றே....' எனும் தொனியில் அடக்கி வைத்த எரிச்சலை ஒருவர் கொட்டும் பாணியில் பேச ஆரம்பித்து விடுவார் அவர். ஒன்றுமில்லாத இது போன்ற விஷயங்களுக்காக நிலைமையைப் படுமோசமாக்கித் தள்ள வல்ல அவர் குமுறல், கெர்டாவைப் பயமுறுத்திற்று.

மறுபடியும் சூடாக்குவதால் இறைச்சியின் பதம் தப்பிப் போய் விடும் வாய்ப்பு அதிகம். பதம் மாறிய உணவு, ஜானுக்குப் பிடிக்காது. இது ஒரு புறம். இப்படியே விட்டு விட்டால், மட்டன் குளிரில் விறைத்து விடும். குளிர்ந்த எந்த உணவும் ஜானுக்கு ஒவ்வாது. இது மறு புறம்.

இப்படியும் அப்படியுமாக மனம் ஊஞ்சலாட, இதனால் விளைந்திருந்த மனக் கிலேசமும், கவலையும், கெர்டாவுக்குள் இன்னும் ஊன்றிச் சென்றன. உலகமே, அதோ தட்டில் கிடக்கும் ஆட்டின் கால் துண்டுக்கு சுருங்கி விட்டிருந்தது, கெர்டாவுக்கு....!

சமையல் மேஜையின் எதிர்புறம் அமர்ந்திருந்த கெர்டாவின் பன்னிரெண்டு வயது விடலைப் பையன் டெரன்ஸ் சொன்னான்: ''போரஸிக் உப்பு வகை இருக்கிறதில்லையாம்மா...! அவை பச்சை

ஜ்வாலையுடனும், சோடியம் வகை உப்புகள் மஞ்சள் ஜ்வாலை யுடனும் எரியும்.''

இப்படிச் சொன்ன மகனை, தொந்தரவாய்ப் பார்த்தார் கெர்டா. அவன் எதைப் பற்றிப் பேசுகிறான் என்ற அறிவற்றுப் பார்த்த பார்வை அது.

''இது உனக்குத் தெரியாதா அம்மா..?''

''எது டெரன்ஸ்...!''

''உப்பின் வேதியியல் குணங்கள் பற்றி...!''

மகன், தான் படித்த உப்பு வகைகளை, அம்மாவிடம் பேசுவதன் மூலம் புரட்டிப்பார்த்துக் கொண்டிருக்க, கெர்டாவின் மனமோ, உப்பு என்ற வார்த்தை காதுகளில் விழுந்ததும், மேஜையிலிருந்த உப்பு மிளகுத் தூள்கள் அடங்கிய சிறு பாத்திரங்களின் மேல் பதிந்து நின்று, சென்ற வாரம் நடந்த ஒரு சம்பவத்தை நினைவுகூர்ந்தது! அன்று, சமையல்காரி லூயிஸ், இவ்விரு பாத்திரங்களையும் கொண்டு வந்து வைக்கத் தவறியிருந்தாள். அது ஜானை எரிச்சலாக்கியது. ஏன் இங்கு இல்லை என கதறினார். எத்துணை பிரயத்தனப்பட்டு செய்தாலும், ஏதாவது ஒன்று தப்பிப் போய், அவரை எரிச்சலாக்குகின்றது, என்றது கெர்டாவின் மனம்.

''இதெல்லாம் வேதியியல் பரிசோதனைகள் மூலம் அறிய லாமம்மா'' என ஆர்வமாய்ச் சொன்னான் டெரன்ஸ். ''விறுவிறுப் பான - குஷியான - பரிசோதனைகள்.''

அவனருகிலிருந்த ஒன்பது வயது அழகு பொம்மை ஸெனா, ''ம்ம்...'' என குழந்தைக்கே உரிய அடம் கலந்த சிணுங்கலை முன் வைத்து, ''பசிக்கிறதம்மா...! சாப்பிடலாமா...! எனக்குப் போடேன்...!'' என்றாள்.

''என் கண்ணல்ல...'' என்ற கெர்டா, ''ஒரு நிமிஷம். ஆரம்பித்து விடலாம். நாம் அப்பாவுக்காகக் காத்திருக்க வேண்டும் என் செல்லம்...!'' என்றாள்.

இடைபுகுந்த டெரன்ஸ், ''காத்திருக்க எல்லாம் வேண்டாமம்மா. நாம் ஆரம்பித்து விடலாம். அப்பா ஒன்றும் நினைக்க மாட்டார். வந்ததும் 'டபக் டபக்' கென்று வேகவேகமாய் அள்ளிப் போட்டுக் கொண்டு பறந்தே விடுவார் அவர்'' என்றான்.

இனி குழந்தைகள் பசி தாங்காது என அறிந்துக் கொண்டு ஒப்புதலாய்த் தலையசைத்தார் கெர்டா. இப்போது மட்டனை வெட்ட

வேண்டும்! இதிலும் படபடப்பு தொற்றிக் கொண்டது கெர்டாவை. கத்தியின் எந்தப் பக்கத்தைச் செலுத்தி மாமிசத்தை வெட்டுவது என்பதில் எப்போதும் கெர்டாவுக்குக் குழப்பம் உண்டு. நல்ல வேளையாக லூயிஸ் கத்தியைச் செருகி வைத்துள்ளாள். இன்று பிழைத்தாயிற்று. கத்தியின் கூரற்ற பக்கத்தைத் தவறி செலுத்தி விட்டால் போதும்... எரிச்சலாகி விடுவார் ஜான். அதற்கு ஒரு கதறல்! அதென்னவோ எப்போது கத்தியைக் கொண்டு மாமிசத்தை வெட்ட ஆரம்பித்தாலும், அது கத்தியின் மொக்கை பக்கமாகவே அமைந்து, தப்பிப்பற்ற நிலைக்கு கெர்டாவை இட்டுச் சென்று அவரின் பிராணனை வாங்கி விடும்...!

குளிரில் இறுகி இறுகி, ஆட்டிறைச்சியின் மேல், மெல்லிய ஆடை போன்ற போர்வை கூட விழுந்தாயிற்று. சூடு ஆறியிருக்கும். அடடா... இதோ ஜான் வந்து விடுவார்...! பொறிக்குள் மாட்டிக் கொண்ட எலியாய், கெர்டாவின் மனம் தப்பிப்புத் தேடி அலைபாய்ந்தது.

★ ★ ★ ★

தன் மருத்துவ அறையில் மிக வசதியாக இருக்கையில் சாய்ந்தபடி, மேஜையில் மெலிதான தாளமிட்டுக் கொண்டிருந்த ஜான், மேலே சூடாய் உணவு தயாராகிக் காத்திருக்கும் என்றறிந்திருந்தும், உடலைக் கொண்டு செலுத்தி எழுந்து செல்ல கிஞ்சித்தும் ஈடுபாடின்றி, விருப்பமின்றி, எரிச்சல் மண்ட அமர்ந்திருந்தார்.

*ஸான் மிகைல்.... நீலக் கடலின் பேரிரைச்சல்... மலர்களின் சுகந்த வாசம்... பச்சை பசேல் நிறம் கொண்டு எங்கும் இலைகளாய் நெடுநெடு வென வளர்ந்திருக்கும் அடர் மரங்கள்... குளிர் தணிக்கும் சூரியன்... காதல் மற்றும் அது தரும் வலி... வெரோனிக்கா... வெரோனிக்கா... வெரோனிக்கா...*

ஓ கடவுளே...! வேண்டாம்...! அந்த நினைவுகள் வேண்டாம்...! தயவு செய்து, இறைவா...! என்னை மீண்டும் அந்நினைவுகளுக்குள் திணிக்காதே....! அது முடிந்தாயிற்று...! இனி தொடர இயலாது...! தொடர வேண்டாம்...! இறைவா..!

இப்படிக் குழம்பக் காரணமான மூன்று பெண்களான - வெரோனிக்காவை அறியாமல் - கெர்டாவை மணக்காமல் - ஹென்ரீட்டாவைப் பார்க்கவே பார்க்காமல் இருந்திருக்கக் கூடாதா - எனப் பதறினார் ஜான்.

திருமதி க்ரேப்ட்ரீ போன்ற நோயாளிகள் துணையோடு நிகழ்த்தப்படும் ஆய்வுகள், தன் மனத்தினை ஆட்டிப் படைக்கும் இம்மூன்று பெண்மணிகளைக் காட்டிலும் எவ்வளவோ பரவா யில்லை என இப்போது எண்ணிக் கொண்டார் ஜான். மோசமான பொழுதாய் அமைந்த ஒரு கடந்த வார மதியம். பரிசோதனைகளுக்கு ஈடுபடுத்தப்படும் சீமைப் பெருச்சாளியாக திருமதி க்ரேப்ட்ரீ உபயோகப்படுத்தப்பட்ட மோசமான மதியம். எல்லாப் பரிசோதனைகளும் எவ்வித அபாயமுமில்லை என முடிந்த போது, திடுமென, ஆய்வு நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருந்த திருமதி க்ரேப்ட்ரீ'யின் உடலில் ஏற்றப்பட்டிருந்த நச்சுத் தன்மை, கிடுகிடுவென உயர்ந்து போய் நின்றது.

வயதான இம்மூதாட்டி மூச்சு விட சிரமப்பட்டுக் கிடந்தாள். முகமெங்கும் நீலம் பாய்ந்தது. நாடி குறைந்தது. இந்நிலையிலும் பிடிவாத வன்மம் பொதிந்து 'என்னாவானாலும் சளைக்க மாட்டேன்' என்ற பார்வையால் ஊடுருவிய மூதாட்டி, ''என்னைப் பலிகடா வாக்கிப் பரிசோதனை நிகழ்த்திப் பார்க்கிறீர்கள்... இல்லையா...? உங்கள் யூகங்களுக்கு விடை காண என் மீது பரிசோதனை...!'' என்றாள்.

''நிச்சயமாய் உங்கள் உயிரின் மீது பணயம் வைத்து அல்ல. உங்களுக்கு எந்தப் பாதிப்பும் இன்றியே ஆய்வு செய்ய விரும்பு கிறோம்'' - அவர் முகத்தைப் பார்த்துப் புன்முறுவியபடி சொன்னார் ஜான்.

''அதாவது உங்களுக்கு முடிவு கிடைக்கும் வரை. இல்லையா...!'' - திடுமென ஜானைத் துளை போடுவது போல எதிர் பார்வை பார்த்துக் கேட்டார் மூதாட்டி. ''எனக்குக் கவலையில்லை, டாக்டர். நீங்கள் தொடருங்கள். நோய்க்கான தீர்வினை, யாரோ ஒருவர் முதன் முதலில் கண்டுபிடித்த ஆக வேண்டும் இல்லையா...? அது நீங்களாக இருக்க விரும்புகிறீர்கள்...! நடக்கட்டும். என் மீது, உங்கள் மருத்துவ லீலைகளைக் காண்பித்து எதையாவது கண்டறியப் பிரயத்தனப்படு கிறீர்கள். நான் தாங்குவேன். ம்...!''

''இப்போதைக்குப் போதும்...'' என்ற ஜான், ''மிக களைப்பா யிருப்பீர்கள்'', என்றார், மூதாட்டியின் நாடித் துடிப்பினைப் பரிசோதித்தபடி. ''மோசமாயில்லை'' என்று தலையசைத்தார்.

''பயப்படாதே. நான் தாங்குவேன்.''

''நீங்கள் நன்றாய் தானிருக்கிறீர்கள். உங்களைப் போல மனோதிடத்துடனான நோயாளிகள் எனக்குக் கிடைக்க வேண்டும் என்பதே என் விருப்பம்.''

''ஏனென்றால் நான் வாழ விரும்புகிறேன். 'நான் வாழ்வேன்' என்பதால் விளையும் மனோதிடம். என் தாயார் எண்பத்தெட்டு வயது இருந்தார். பாட்டி தொண்ணூறு. எங்கள் குடும்பத்துக்கு எப்போதுமே நீண்ட ஆயுசு...!''

ஏன் இப்படி ஆயிற்று எனும் சந்தேகத்தில் நம்பகமிழந்த நெஞ்சத்தோடு, துக்கமுற்று வெளியேறினார் டாக்டர். தான் சரியான பாதையில் சென்று கொண்டு ஆய்வினை நடத்தி வருவதாய் தான் எண்ணியிருந்தார் ஜான். பின் எங்கு தவறு நேர்ந்தது? இந்த ஆய்வில் கண்ணுக்குப் புலப்படாது - இன்னும் யாராலும் கண்டறியப்படாது புதைந்து கிடக்கும் அத்தனை தடைகளையும் மடக்கி வென்று விட்டதாய் சந்தேகத்துக்கிடமின்றி திடமாய் நம்பியிருந்தாரல்லவா - அந்த கண்மூடித் தனமான நம்பிக்கையினால்தான் தவறு நேர்ந்துள்ளது.

'பரிசோதனையால் கூடும் நச்சின் அளவினை மிகக் குறைவாக மட்டுப்படுத்தி, ஹார்மோன் அளவுகளின் சமநிலையை எங்ஙனம் நிலைநிறுத்துவது...? உடலுறுப்புகளின் இயக்கத்தைப் பாழாகாது எப்படி காப்பது?' - வருந்திக் கொண்டிருந்தார் ஜான்.

★ ★ ★ ★

இதே போன்ற தோல்வி நிகழ்ந்த அன்றொரு நாள்...! 'ஏன் ஏன்... ஏன் இப்படி ஆயிற்று? அந்தக் கிழவி மண்டையைப் போட்டிருந்தால் நிலைமை என்னவாயிருக்கும்?' போன்ற விபரீத கற்பனை எண்ணங்களின் ஆதிக்கத்தால், திடீரென முளைத்த பிடிப்பற்ற தனிமையுணர்வு ஜானை வென்று கொக்கரித்தது. மருத்துவமனையிலேயே நீண்ட நேரம் கிடந்து செய்த பணி வேறு, வெறுப்பினைக் கூட்டிற்று. ஹென்ரீட்டாவை நினைத்தார். எதேச்சையாக; அவரை நினைக்க வேண்டும் என்ற உந்துதலினால் அல்ல. உடனே - ரீட்டாவின் அழகு, மலர்ந்த பூ போன்ற புத்துணர்ச்சி, அவரிடமிருந்து பிரகாசித்துப் பரவும் இளமை ஊட்டம், தவறாது கூந்தலிலிருந்து நழுவிக் கொண்டேயிருக்கும் ரோஜா மணம் - எல்லாமும் ஜானின் நினைவுள் தோன்றின.

மாடிக்குப் போய் கூட சொல்லாமல், ஒரு மிக அவசர விஷயமாய் வெளியே செல்வதாய் சுருக்கமான தொலைபேசி சேதி அனுப்பி விட்டு, அகலக் கால் பாய்ச்சலில் ரீட்டாவின் அலுவலகம் போய்ச் சேர்ந்தார் ஜான். ஓட்டமாய் கலா அரங்கத்துக்குள் நுழைந்தவர், ஹென்ரீட்டாவைத் தீவிரமான ஆர்வம் பொங்க கைகளால் அள்ளிக் கொண்டு நின்றார்.

இப்படிப்பட்ட பிடி, இவர்களிருவரின் உறவில் மிகப் புதிது...!

துரிதமான ஆச்சரியம் ரீட்டா கண்களில் மின்னி அடங்கிற்று. தவிர்க்க வேண்டும் என அறிவுறுத்துவது போல விடாப்பியாய் ஜானின் இறுக்கத்திலிருந்து தன்னைத் தானே தளர்த்திக் கொண்ட ரீட்டா, விலகி, இருவருக்கும் காபி கலக்கும் ஜோரில் நகர்ந்தார். நகரும் போதே 'நேராய் மருத்துவமனையிலிருந்தா வருகிறீர்கள்...?' போன்ற பிடிப்பற்ற, இலக்கற்ற கேள்விகளைக் கேட்டபடி சென்றார்.

எந்த எரிச்சலால் இங்கு வந்தாரோ அதே எரிச்சல் - மருத்துவமனை - பற்றிப் பேச ஜானுக்கு கொஞ்சமும் இஷ்டமில்லை. வந்தது, ஹென்ரீட்டாவுடன் அன்பாய் - ஆதரவாய் - இசைவாய் - ஏன், காதலாய் இருக்க...! மருத்துவமனை - ரிட்ஜ்வே நோய் - அந்த ஆய்வுக்கு உதவும் திருமதி க்ரேப்ட்ரீ - போன்ற எந்த நினைவுகளும் வேண்டாம்.

ஆயினும் முதலில் சுணங்கினாலும் வரிசையாய் சில கேள்விகளை ரீட்டா அடுக்கிக் கொண்டே போகும் போது பதிலளிக்கத்தான் வேண்டியிருந்தது. ஏதோ ஒரு பரபரப்பு மிகுந்து, நீளநீளமான அடிகளை வைத்து அப்படியும் இப்படியும் நடந்தபடி, மருத்துவ வியாக்கியானங்களை, மடைதிறந்த வெள்ளமாய்ப் பொழிந்துக் கொண்டிருந்தார் ஜான். ஆங்காங்கே சிறு சிறு இடைவெளி தந்து, பண்ண வேண்டிய மருத்துவ வேதி வினைகள் குறித்து சுருக்கமாய் விளக்கங்கள் தரவும் முயன்றார். இந்தப் பிரசங்கத்தின் ஒரு நிலையில், ''மிக முக்கியமான மருத்துவப் பரிசோதனையான...'' என்று முன்னேறிய ஜானைத் தடுத்து, ''ஆமாமாம்...! D L பரிசோதனை என்று பெயர். சரி தானே. இதைப் பற்றித் தானே சொல்ல வந்தீர்கள். இதன் முடிவு சாதகமாய் வர வேண்டும். எனக்கு இது தெரியும். இதற்கு மேலே 'செய்ய வேண்டியதைச் சொல்லுங்கள்'' என்றாள் ரீட்டா.

ஜான் வியந்தார். ''மருத்துவர்களுக்கே அதிகம் பரிச்சயமில்லாத D L பரிசோதனை குறித்த விளக்கங்கள் உனக்கெப்படி தெரியும்...?''

''இது குறித்த புத்தகம் வைத்துள்ளேன்.''

''என்ன புத்தகமது? யாரெழுதியது?''

அங்கிருந்த ஒரு புத்தக அலமாரி நோக்கி நகர்ந்துப் போய் ஒரு புத்தகத்தை எடுத்தாள். பொறுமையற்ற ஜான் அது என்ன என எட்டிப் பார்த்து அறிந்து, ''ஸ்கோபெல்? ஸ்கோபெல் பிரயோஜனமற்றவர் ரீட்டா. மருத்துவ அடிப்படையில் பலவீனமான ஆசிரியர். ரிட்ஜ் வே நோய் குறித்து சிறப்பாக அறிய வேண்டுமானால், இது வேண்டாம். இதற்கு பதில்... ... ...''

''... ... ... வேறெதும் வேண்டாம்'' என ஜானை இடைமறித்த ரீட்டா, ''மருத்துவ சம்பந்தமான சில பதங்களை நீங்கள் பயன் படுத்தும் போது அவற்றின் அர்த்தம் தெரியுமளவு ஞானமிருந்தால் அதுவே எனக்கு யதேஷ்டம். நீங்கள் விவரிக்கும் போது, அது என்ன இது என்ன என உங்களை நிறுத்தி நிறுத்தி அர்த்தம் கேட்டு சோதிக்காமல் இருக்க வேண்டும். இதுதான் என் நிலை. இதற்கு ஸ்கோபெல் புத்தகம் எனக்கு வசதியாய் உள்ளது. நான் என்ன அறுவை சிகிச்சையா பண்ணப் போகிறேன், ரொம்பவும் விவரமாய் அறிந்துக் கொள்ள...! நீங்கள் விளக்கலாம். எனக்குப் புரியும். ம்..'' என்றாள்.

''ஸ்கோபெல் அடிப்படையில் சரியான தளம் அமைத்துக் கொள்ளாததால், பல விவரங்களைத் தவறான கோணத்தில் தந்திருக்கிறார். நினைவிருக்கட்டும்'' என எச்சரித்து விட்டு, மருத்துவ ஆய்வுகளின் பின்னடைவுகள், நோய் உண்டாவதற்கான சாத்தியக் கூறுகள், அவற்றை விளக்கவல்ல கோட்பாடுகள் எல்லாவற்றையும் மேற்கோள் காட்டி, தொடர்ந்து இரண்டரை மணிநேரம் உரையாற்றித் தள்ளினார். ஹென்ரீட்டா எனும் மானுடம் எதிரே அமர்ந்திருப்பது கூட மறந்து போனவராய், அத்துணை ஈடுபாடு கொண்டு, தன்னிலை அற்று, தானறிந்து வைத்துள்ள அனைத்து விவரங்களையும் கொடுத்துக் கொண்டிருந்தார். இடையிடையே, ஒரு சில சமயங்களில், சில மருத்துவ மேற்கோள்களை ஞாபகப்படுத்த ஜான் சிந்தித்த போதெல்லாம், சொல்ல வந்த அந்த விஷயத்தை அவர் நினைவுக்குள் கொண்டு வருமுன், ரீட்டா, தனது அபரிமித புத்திக் கூர்மையால், ஜான் தன் மூளைக்குள் துளாவிக் கொண்டிருந்த அக்குறிப்பினை சரியாய் எடுத்துக் கொடுத்து, தடையின்றி அவர் முன்னேற, பிரமிப்பூட்டும் வகையில் உதவினார். இருவழி கருத்துப் பரிமாற்றம். இது போல விமரிசையாய் ஆரோக்கிய வாக்குவாதங்கள் நிகழ்வது அபூர்வம்.

ஜான் தன்னை மறந்து சந்தோஷமானார். இருவழி உரையாடலினால், தன் கோட்பாடு சரியே - பரிசோதனையின் போது திருமதி க்ரேப்ட்ரீ அடைந்த அசௌகரியங்களையெல்லாம் அடுத்த முறை சமாளித்து வென்று விடலாம் - போன்ற நம்பிக்கைகள் துளிர் விட்டுத் தளம் தொட, ஜான் புளகாங்கிதமடைந்தார். 'அடுத்த சோதனையின் போது க்ரேப்ட்ரீக்கு எதுவும் நேராது செய்து விடலாம். நாளை காலையே, நிகழ்ந்த தோல்விக்குப் பரிகாரம் தேடி விடலாம். காலந்தாழ்த்தக் கூடாது. உதவியாளனுக்கு ஃபோன் செய்து, குறிப்பிட்ட சில திரவங்களைக் கலந்து, புது கரைசலைத் தயார் செய்யச் சொல்ல வேண்டும்' என படர்ந்த ஆக்கபூர்வ திட்டங்கள் ஜானை நிலை கொள்ளாது செய்தன.

ஆனால் இவையெல்லாம் அவர் தன்னிலை மறந்து கிடக்க, அப்போது அடைந்த உச்சங்கள். உரையாடலின் முடிவில், இந்த பூமிக்குள் அவர் நினைவு மீண்டும் புகுந்தக் கணமே, அவரைப் பீடித்திருந்த வெறுப்பு - மனக் கிலேசம் - அதுவும் வந்தே விட்டது. ஏன்? என்னாயிற்று - என் மனதுக்கு? இப்போது ஏன் மனசு வாடுகின்றது? என்று காரணம் தேடியபடி, அவருக்குள் விளைந்திருந்த அத்துணை உற்சாகமும் வடிந்துப் போயிற்று.

ஓ...! நான் எல்லாவற்றையும் வெறுக்கிறேனே...! இற்று வருகிறதே...!

வெறுத்துப் போய் போர்வையை இழுத்து மூடி தூக்கத்தினுள் விழுந்தார். மனக்குடைச்சலின் இடையே தூக்கமும் வந்தது. பிரேதம் போல் தூங்கினார்.

கண் விழித்த போது, காலை சூரிய ஒளி கொண்டு வந்திருந்த இன்னுமொரு புது வசந்தத்தில் ஒளிர்ந்தபடி எதிரே ரீட்டா டீ தயார் செய்து கொண்டிருந்தார். எழுந்தவுடனேயே தன் முதல் வசனமாய் ''எதிர்பார்த்தபடி எதுவுமே நடப்பதில்லை'' என்ற வெறுப்பான வார்த்தைகளை அமைத்துக் கொண்டார் ஜான்.

''அதைப் பொருட்படுத்தத்தான் வேண்டுமா?''

இக்கேள்வியால் சற்றே அதைரியம் நீங்கப் பெற்றவர், ''தேவையில்லைதான்'' என்று ஹென்ரீட்டாவை நம்பிக்கையாய்ப் பார்த்து, ''நீ ஒரு பொக்கிஷம் ரீட்டா'' என ரசித்துச் சொன்னார். அவர் கண்கள் ரீட்டாவின் அருகிலிருந்த புத்தக அலமாரியில் பட, ''மருத்துவ விஷயங்களை அறியும் ஆவல் அதிகமெனில் சொல் ரீட்டா, சரியான,

கனம் நிறைந்த புத்தகத்தைத் தருகிறேன். ஸ்கோபெல் புத்தக மெல்லாம் வீண்'' என்றார்.

''அவ்வளவு ஆழமாய் அறிய எனக்கு என்ன தேவையுள்ளது ஜான்? ஆழமான புத்தகங்களெல்லாம் எனக்கு வேண்டாம்'' என்றவள், சிறு இடைவெளி விட்டு, முக்கியப்படுத்தி சொன்னாள்: ''என் விருப்பமெல்லாம்... உங்கள் மீது தான், ஜான்.''

''ஸ்கோபெல்லைத் தூர எறி. அவன் ஒரு மூட வைத்தியன்'' என்றவர் அவருக்குக் கோபமூட்டிக் கொண்டிருந்த ஸ்கோபெல்'லின் காத்திரமான புத்தகத்தை வேண்டா வெறுப்பாய்த் தூக்கினார்.

ஜானின் வெறியைக் கண்டு மெலிசாய் நகைத்தார் ரீட்டா. ஸ்கோபெல் புத்தகத்தின் மீதான தனது கண்டனமும் விமர்சனமும் இவளுக்கு ஏன் விந்தையாய்ப் பட்டு நகைக்க வைக்க வேண்டும் என புரியாது பார்த்தார் ஜான்.

தன் நடவடிக்கைகள் பார்த்து நகைக்கப்படுவதை அதிகம் அனுபவிக்காதவர் ஜான். இவர் பழகிய பெண்கள் யாரிடமும் அப்படி வாய்ப்புகள் கிட்டாமலேயே தான் இருந்துள்ளன. கெர்டா, ஜானை முழு பதிவிரதா கோணத்தில் தான் வைத்துள்ளாள். வெரோனிக்கா நேரெதிர் வகை; அவளுக்கு, அவள் நடவடிக்கைகளைத் தவிர வேறு எதன் மீதும், யார் நடவடிக்கையின் மீதும் நினைவு சென்றதில்லை; ஆகவே ஜானைத் தவிர ஜானின் எந்தவிதமான நடவடிக்கைகளும் அவளை நெருங்கியதேயில்லை. ஹென்ரீட்டா, இவ்விரு வகையையும் சாராது, ஜானை உள்ளங்கைகளுக்குள் அடக்கிய மாயமறிந்தவர்! தலையை வெகு கவர்ச்சியாய் ஒரு பக்கமாய் சாய்த்துப் பார்த்து, ஒரு கண் மூடி மறு கண்ணால் ரீட்டா காட்டும் வசியக் கிறக்கமும், அப்போது பாதி மலர்ந்த புதுப்பூவாய் இதழ் சுழித்து ''ஜான் எனும் இந்த கோமாளிப் பையனை சுத்தமாகப் பார்த்துக் கொள்கிறேன்...! இவனை அப்படியே கடத்திக் கொண்டு ஆளற்ற தூர தேசம் போய், இக்கோபக் கிறுக்கனை மட்டும் பார்த்துக் கொண்டே... ... ....'' என அவர் விடும் தூதும் ஜானைக் கட்டித்தான் போட்டுள்ளன. இருந்தாலும், இப்படியாய், ரீட்டா ஜானை வைத்த கண் வாங்காமல் பார்க்கும் சரணாகதி பார்வையிலும், நொந்துத்தான் போகிறார் ஜான்!

'இந்தப் பார்வை - என்னை அவள் ஆவல் பொங்கக் கவரும் பார்வை - தான் வரைந்த ஓவியத்தை அல்லது செதுக்கிய சிற்பத்தை அவள் திருகித் திருகிப் பார்க்கும் பார்வை வகையே தான். ஆம்.

சந்தேகமில்லாமல் அவ்வகைப் பார்வை... இல்லையில்லை, நோட்டம் தான் இது!' என்றெண்ணித் துடித்துப் போவார். 'இப்பார்வை - பாழாய்ப் போன இப்பார்வை - ஓர் ஒட்டுறவற்ற பார்வை. நேசமற்ற பார்வை. அழகாயுள்ளதா இல்லையா என கணிக்கப் பார்க்கும் பார்வை. அவ்வளவே. அதற்கு மேல் உள்ளே புகாத - அர்ப்பணிப்பு பாராட்டாத பார்வை.' ஆக, தன்னுள் புகாமல் பிரிந்திருக்குமாறு ஹென்ரீட்டா ஊடுருவும் பார்வை, ஜான் விரும்பாதது. இவரைப் பொருத்த அளவில், ரீட்டாவின் கண்கள் எப்போதும் இவர் மீதே படிந்திருக்க வேண்டும்; அவரின் கனவிலும் நினைவிலும்! ஜானிமிருந்து வழுவாத பார்வை - மனப்பார்வை தான் - ரீட்டாவிடம் ஜான் எதிர்பார்ப்பது; வேண்டுவது!

*('அதாவது, கொர்டாவிடம் நீ எப்போதும் அதிகாரமாய் எதிர்பார்க்கும் அதே அடிமை நடத்தை?!' என்றது ஜானுள் ஒரு குரல்...!)*

எதெப்படியோ! இன்னும் ஒரு மணி நேரத்தில் லண்டன் எல்லையை விட்டு - வியாதி வியாதி என ஜானைச் சுற்றிச் சுற்றி வந்து நொறுங்கடிக்கும் நோயாளிகளை விட்டு - அவர்களின் ஊசிய மருந்து வாசனையை விட்டு - காட்டு மர வழியில் நழுவி ஓடியேப் போகப் போகிறார். அப்போது - குளிரடிக்கும் வசந்தக் காலக் காற்றின் தீண்டலும் - காட்டு மரங்களின் சுவாசமும் - கிளுகிளுக்க வைக்கும் காரோட்டமும் தான் கொள்ளைக் கொண்டிருக்கும்.

லண்டனிலிருந்து இத்தனை சுகந்தக் கனவுகளோடு நழுவினாலும், தன் கை மூட்டில் ஏற்பட்டுள்ள சுளுக்கின் காரணமாக கொர்டா தான் கார் ஓட்ட வேண்டும் எனும் எண்ணமும், காரின் காதினைத் திருகிக் கிளப்பும் போதே பல விகாரங்களைச் செய்யவல்ல கொர்டாவால் தனக்கு நரம்பதிர்வு ஏற்படப் போவது நிச்சயம் எனும் பயமும், இப்போது நினைத்துக் கொண்டு மகிழ்ந்தது போல இல்லாது, பிரயாணத்தை ரசிக்க இயலாமல் தான் செய்யப் போகின்றன என உணர்ந்து வெறுப்படைந்தார் ஜான். காரைக் கிளப்ப கொர்டா அமர்ந்து ஆரம்பக் கியரைப் போடும் ஒவ்வொரு தடவையும், ஜான் கஷ்டப்பட்டு வரவழைக்கப்பட்ட அமைதியுடன், பற்களைக் குரோதமாய் நறநறவெனக் கடித்தபடி, தவறிக் கூட கொர்டா அடிக்கும் கூத்தை விமர்சித்து ஏதும் பரிகாசமாய்ச் சொல்லிவிடாமலிருக்கப் பிரயத்தனப்பட்டு, நெருப்பில் அமர்ந்திருப்பது போல அருகில் தெய்வமேயென்று உட்கார்ந்திருப்பார்! ஏற்கெனவே பல

சந்தர்ப்பங்களில் அனுபவித்த கசப்பான கார் அனுபவங்கள் கற்றுத் தந்துள்ள பாடம்! 'அதெப்படிடீ உன்னால் மட்டும் மிகச் சரியாக, தவறாகக் காரைக் கிளப்ப முடிகின்றது.... அதுவும் ஒவ்வொரு முறையும்' எனும் கிண்டலான ரீதியில், வெடித்துச் சிதறி எரிமலையாய்க் கத்த வேண்டிய கட்டமானாலும் அப்படியே அடக்கிக் கொண்டு, வெறும் குமுறும் எரிமலையாய் ஜான் கேட்டால் கூட போச்சு... கெர்டாவின் நிலைமைக் கட்டுப்பாடிழந்துக் கவலைக்கிடமாகி விடும்! ஒருவர் கூட கெர்டாவுக்குக் காரைக் கிளப்ப சொல்லித் தந்து வெற்றி பெறவில்லை என்பது தான் இங்கு விநோதம். கெர்டா ஒழுங்காக கார் ஓட்ட, தன் எரிச்சலுக்குப் பதில், ஹென்ரீட்டாவின் புத்துணர்ச்சியும் கார்களின் மீது ரீட்டா வைத்துள்ள உணர்வுபூர்வ பந்தமும் உதவலாம் என்று கூடக் கருதி, ரீட்டா மூலம் முயன்றிருக்கிறார், ஜான். ஆனால், கெர்டாவிடமா, அவரின் நடுக்கத்திடமா, எடுபடும்! ம்ம்!

ஹென்ரீட்டா காதலித்தார் - கார்களை. வசந்தக்காலத்தையும், காலையில் கண்ணில் படும் முதல் பனித்துளியையும் வர்ணித்து மகிழும் கவிஞனின் மகிழ்ச்சியில் கார்களைப் பாடுவார், ரீட்டா. ஒவ்வொரு காரும், ஓர் ஆணழகன் ரீட்டாவுக்கு! ''சொல் ஜான். அவன் எத்துணை கம்பீரமாய் உள்ளான், இல்லையா? அவனைப் போன்ற வலிமை மிகு ஆணழகனைக் கண்டதுண்டா...! கரடுமுரடான குன்றுகளைக் கடக்கும் போது கூட, செல்லம், ஒரு குலுக்கலில்லாமல் கொண்டு சேர்க்கிறான் தெரியுமா!''

''நிறுத்து ரீட்டா! கார், கார், கார்! இப்புராணத்தை நிறுத்தித் தொலை! காரின் மீது நீ காட்டும் ஈடுபாட்டை ஓரிரு நிமிடங்களாவது என்னிடம் காட்டினால் உனக்கு என்ன குறையப் போகின்றது!'' என ஜான் எகிற எகிறப் பேசும் வரை தன் கார் பிரியத்தைத் தொடர்ந்துக் கொண்டிருப்பார் ரீட்டா.

வெடிப்பு. தன்னைத் தானே வெட்கப்பட வைக்கும் எதிர்பாரா - தேவையற்ற வெடிப்பு. எந்த நேரத்தில், எந்த விஷயத்துக்குத் தான் வெடிப்போம் என்பது ஜானுக்கே தெரியாது. நேற்று அவர் ஒத்துப் போய் ஏற்றுக் கொண்ட ஒரு சம்பவம் இன்று மீண்டும் இடம் பெற்றால் வெறுப்பேறி வெடிப்பார். அப்படி ஒரு ஸ்திரத் தன்மை அற்ற மனம். இதே போன்ற மனோநிலையில் தான் ரீட்டாவின் கலை வெளியீடுகளிலும் ஜான் நடந்து கொள்கிறார். ஹென்ரீட்டாவின் ஓவியங்களை, சிற்பங்களைப் பிரமித்திருக்கிறார் - அதே சமயம், தான்

பிரமித்த அந்தக் கலை வேலைகளைத் தானே விமர்சித்துத் தூக்கியும் வீசியிருக்கிறார். இருவருக்குமிடையே தீவிரமான வாக்குவாதம் கூட, ரீட்டாவின் கலைப் பணியின் மீதுதான் நடந்தது.

ஒரு நாள் ஜானிடம் கெர்டா சொன்னார் : ''ஹென்ரீட்டா, ஒரு சிற்பத்திற்கான மாதிரியாக அமர என்னைக் கூப்பிட்டுள்ளாள்.''

''என்ன...?'' - ஜானின் அதிர்ச்சி, அடித்து நொறுக்கப்பட்டதைப் போன்ற உணர்வில் எழுந்தது. ''உன்னையா...?''

''ஆமாம். நான் நாளை அவள் பட்டறைக்குச் செல்கிறேன்.''

''முட்டாள். போகப் போகிறாளாம்'' - கெர்டாவின் முடிவினை அவதூறாய் விமர்சித்தார். ''உன்னைப் போயா மாதிரிப் பெண்ணாய் ஆக்கிப் பார்க்கிறாள் அவள்? நீயும் பல்லிளித்துக் கொண்டு கிளம்புகிறாய். தூ!''

ஆம். இவ்விஷயத்தில் ஜான் நாகரீகமாக நடந்து கொள்ளவில்லை. மாதிரிப் பெண் என்றால் தவறென்றெல்லாம் மண்டையில் கருத்து இல்லாத கெர்டா, தனக்காக்கும் இந்த வாய்ப்புக் கிட்டியுள்ளது என சந்தோஷத்திலிருந்தாள். பத்து நாட்களுக்குப் பிறகு ஜான் வரவென்றே காத்திருந்து ஓடி வந்த கெர்டா, வெற்றியடைந்து விட்ட கம்பீரத் தொனியில், ஒரு சிறு சுண்ணாம்புச் சிலையை, அவரிடம் சந்தோஷமாய் நீட்டினாள்.

சிற்ப நுணுக்கத்துடன், அற்புதமாய், ரீட்டாவின் சிறப்பான பங்களிப்பு நிறைந்து வடிக்கப்பட்டிருந்த சிறு சிலை. அது கெர்டாவைக் கோடிக் காட்டியது; இதில் கெர்டாவும் மிக சந்தோஷமடைந்திருந்தார்.

''மிக நன்றாய் வந்துள்ளது, ஜான்.''

''இது ரீட்டா செய்ததா? எனக்கு இதிலொன்றும் சந்தோஷம் கொள்ளுமளவுக்கு அர்த்தம் பிடிபடவேயில்லை. விரலளவுக்கு என்னது இது? இதை எதற்கு அவள் செய்துத் தந்துள்ளாள்?''

''அவள் வழக்கமாய் செய்வது போன்ற பெரிய அளவிலான சிற்பமாயில்லாவிட்டாலும், ஜான், இது வித்தியாசமானது. இது நன்றாயுள்ளது. சிறிதாயினும் எல்லா விவரங்களும் துல்லியமாய் உள்ளதே.... அது தான் வெற்றி.''

இக்கருத்துக்கு வேறுபட்டு நின்ற தன் கருத்தை மேலும் ஜான் கூறவில்லை. குஷிப்பட்டுக் கொள்ளட்டும் என்று கெர்டாவை அப்படியே விட்டு விட்டார். ஆனால் மறுமுறை ரீட்டாவைப் பார்த்த சந்திப்பில் இப்பிரச்சினையை எழுப்பினார்.

''சொல். கெர்டாவைப் பயன்படுத்தி அப்படி ஒரு சிறு சிலையை ஏன் செய்தாய்? காரணம் வேண்டும். உன் சிறப்புத் தகுதிக்கு அது ரொம்பக் குறைவானது. நீ அற்புதக் கலைகளைப் படைப்பவள்.''

ஹென்ரீட்டா, ஆரம்பமே அதிரடியாய்த் தொடங்கும் ஜானிடம் தானும் அதிர்ந்து விடாமலிருப்பதில் விழிப்பாய் இருந்து சொன்னாள்: ''அது தரமற்றது என எனக்குத் தோன்றவில்லை. அதைக் கண்ட கெர்டா மிக மகிழ்ந்தாள்.''

''அவள் கிடக்கிறாள். அவள் மகிழ்வாள். என்ன தெரியும் அவளுக்கு? எதிரேயிருக்கும் சிலைக்குள்ளும், தொங்கும் வண்ண ஓவியத்திலும் புதைந்துக்கிடக்கும் கலையையும் அதை சிருஷ்டித்தவரின் திறமையையும் கண்டறியத் தெரியாத ஜடமவள்.''

தன்னை அடக்கிக் கொண்டாள் ரீட்டா. தொடர்ந்து அமைதியாய் விளக்கினாள்: ''ஒரு ரசிகனாய் சொல்கிறேன், அது மோசமானதில்லை ஜான். அது, உருவாகவுள்ள சித்திரம் ஒன்றின் பிம்பம் - மாதிரி. இதிலெந்த குற்றமும், மறைந்து வைக்கும் மாமாலமும் கிடையாது.''

''இது போன்ற ஒப்பேறாத மாதிரி சிலைகளில் நீ நேரம் கழிப்பவளில்லையே...!'' என்று இன்னமும் கெர்டாவை மாதிரியாக உபயோகப்படுத்தியுள்ளதில் சந்தேகம் தொனிக்கவே விசாரித்துக் கொண்டிருந்த ஜான், ''ஏய்... இதென்ன...?'' என்று தற்காலிகமாய்த் திசைமாறினார், ஐந்தடி தள்ளி வைக்கப்பட்டிருந்த ஒரு புது மரச் சிலையைக் கண்ணுற்று.

''ஒரு சர்வதேச அலுவலகத்துக்கென்று பிரத்யேகமாகச் செய்தது. ஒரு வகை சந்தன மரம். பக்தையின் சிற்பம்.''

இதற்குப் பதிலேதும் தராத ஜானைப் பார்த்துக் கொண்டிருந்தார் ரீட்டா. சிலையைக் கூர்மையாய் முறைத்துக் கொண்டிருந்த ஜான், ஒரு கணத்தில், வெறி வந்து ரீட்டா பக்கம் திரும்பி, ''ஓஓஓ...! இதற்குத் தான் கெர்டா உனக்குத் தேவைப்பட்டிருக்கிறாள்! இல்லையா! எத்தனைத் திமிர் உனக்கு!'' என இங்கிதம் அற்றுக் கத்தினார்.

''உங்களுக்கு இதில் கெர்டா தெரிகிறாளா ... ... ...'' என, ஜானின் கோபத்தைத் தன் சிற்பமடைந்துள்ள வெற்றியாய்க் கருதி கண்ணகலக் கேட்ட ரீட்டாவிடம், ''தெரிகிறாளாவா...? தெரியாமலென்ன! நன்றாய்த் தான் தெரிகிறாளே....! அவள் முழுக்க முழுக்க, இதோ, இங்கே....'' என்று சிலையின் பருத்த கழுத்து மற்றும் தோள் பாகத்தினைச் சுட்டிக் காட்டி, ''இங்கே இருக்கிறாள்'' என தேவையற்று அதீதமாய்ப் பதறினார் ஜான். ''என்னை வைத்துப் பணம் பண்ணுகிறாயா?''

ஜானின் கடைசி அசிங்க விமர்சனத்தைக் கருத்தில் கொண்டால் சண்டை, ஒரு போராய் வெடிக்கும் என்று நுகர்ந்த ரீட்டா, தன் காதுக்குள் நுழைந்த அவ் வார்த்தைகளைக் கருத்துக்குள் நுழையாமல் வெட்டியெறிந்து விட்டு, ''ரொம்பச் சரி'' என்று ஜானைப் பாராட்டுவது போல நடித்து ''ஆமாம். உண்மையான பக்தையின் தோளும் கழுத்தும் தான் நான் தேடி அலைந்தவை. இறைவனை நம்பி வளையும் அந்த நம்பிக்கை நிறை முதுகு வளைவு - அதில் தெறிக்கும் அர்ப்பணிப்பு மற்றும் பவ்யம் - குனிந்த நிலை மாறாது நிமிர்ந்து இறைவனைத் தேடிப் பார்க்கும் பார்வையின் பயபக்தி....! எல்லாம் எத்தனை தத்ரூபம்!'' என்றார்.

''தத்ரூபம்...? ஹஹ்ஹா'' - வில்லனாகவே மாறிப் போனார் ஜான். ''இதோ பார் ரீட்டா. இதை என்னால் அனுமதிக்க இயலாது. மாற்று.''

''எதை?''

''இதைத்தான். வேறு எதை? கெர்டா இதில் தெரியக் கூடாது.''

''கெர்டாவே வந்து பார்த்தாலும் கண்டுபிடிக்க மாட்டாள் ஜான். அவளென்ன... யாராலும் அறிய முடியாது. இச்சிலைக்குள் புதைந்துக் கிடக்கும் கெர்டாவை, சத்தியமாய் கெர்டா... கெர்டா மட்டு மென்ன... யாராலும், கண்டு அறியவே முடியாது. புரிந்து கொள்ளுங்கள். இது மட்டுமல்ல. இது கெர்டா கிடையாது. வேறு யாரும் கூட கிடையாது. என் கற்பனையும் கலைத் திறனுமே. இதையும் புரிந்து கொள்ளுங்கள்.''

''பிதற்றாதே. நான் கண்டுபிடித்துவிடவில்லை?''

இப்போது இத்தனை நேரமாகக் குதித்துக் கொண்டிருந்த ஜானை அடித்து வீழ்த்தினார் ரீட்டா : ''நீங்கள் வேறு ஜான்! வித்தியாசமானவர்! நீங்கள் காணும் - பேசும் அனைத்திலும் உள்ளே உள்ளே போய் அர்த்தம் தேடுபவர்'' - தப்பர்த்தம் தேடுபவர் எனப் பொடி வைத்து முடித்தார் ரீட்டா.

''அந்தக் கழுத்துப் பகுதியைப் பார்க்கப் பார்க்க எனக்கு எரிகிறது. நான் இதை வெளியிட அனுமதிக்கவே மாட்டேன். கொஞ்சமும் நியாயமற்ற செயலாய் இது தோன்றவில்லை - உனக்கு?''

''அப்படியா?''

இந்த ஒரு வார்த்தையில் இன்னும் பற்றிக் கொண்டார் ஜான். ''பழிக்கிறாயா? இது, ஏமாற்றி செய்தது என புரியாதவளா நீ?

எப்போதும் நீ பேசும் உணவுபூர்வமான அணுகுமுறையும் ரோஷமும் எங்கே போயின?''

இவனோடு சரிக்குச் சரியாய்க் கத்திப் பிரயோஜனமில்லை என நன்கு அறிந்தவர், ரீட்டா. எனவே அதிராது, ஆனால் சரியான வார்த்தைகளை இட்டு நிரப்பிப் பேசினார் : ''உங்களுக்குப் புரியவில்லை ஜான். என்னால் உங்களுக்குப் புரிய வைக்க முடியும் என்றும் தோன்றவில்லை. தன் கலை சம்பந்தமாய் ஒரு விஷயத்தை, ஒரு கலைஞன் தேடி அலையும் போது, அது கிடைக்கும் வரை, ஒவ்வொரு நாள் தேடலின் போதும் அவன் அனுபவிக்கும் வலி, உங்களைப் போன்ற வறட்டுப் பிடிவாதம் பிடிப்போருக்கு விளங்காது; விளங்க வைக்கவும் முடியாது. அங்கு பாருங்கள்... மரச் சிலையில், அந்தப் பக்தையின் வழிந்தோடும் கழுத்து வளைவு - பவ்யமாய்ப் பணிந்து குனிந்து முதுகு நிமிராது, வானத்தை அண்ணாந்துப் பார்த்து இறைவனைத் தேடும் முகத்தின் கோணம் - பக்திக் கோணம் - இத்தேடலால் கழுத்தில் பிரதிபலிக்கும் கனம், தேடல் கனம் - இறைவனின் தரிசனத்தை இறைஞ்சி இறைஞ்சித் துடிதுடிக்கும் உதடுகள்...! ஒவ்வொரு முறை கெர்டாவைப் பார்க்கும்போதும் நான் கண்டுப் பூரித்தவை இவை. இவற்றையெல்லாம் ஒட்டுமொத்தமாக வடித்தெடுக்க ஒரு வாய்ப்புக்காகக் காத்திருந்தேன். இப்போது வாய்த்தது; தீர்த்துக் கொண்டேன்.''

''பழிக்கஞ்சாதவள்.''

''இருக்கலாம். சிறப்பான செயல்களைப் பழிக்கஞ்சாமல் செய்ய வேண்டுமெனில், அப்படி செய்துத் தான் முடித்துக் கொள்ள வேண்டும்.''

''மற்றவர்களின் உரிமைகளை எப்படி மீறுவாய் நீ...? கெர்டாவின் உரிமையை மீறியுள்ளாய். அவளைப் பற்றி நீ எண்ணிப் பார்க்க வில்லை. நினைவிருக்கட்டும்.''

''முட்டாள்தனமாய்ப் பேசுகிறீர்கள். கெர்டாவின் அனுமதியோடு செய்தது தான் இது. இதை நீங்கள் நினைவில் கொள்ளுங்கள். எனவே தவறு கிடையாது. அவளைப் பற்றி எண்ணிப் பார்த்ததால் தான், இதைப் பிரத்யேகமாய் செய்தேன். கெர்டாவுக்காக. சந்தோஷமே அற்றுள்ள அவளை இன்புறுத்த, மகிழ்ச்சியூட்ட. அவள் மகிழ்வாள் என எனக்கு நன்கு தெரியும். நான் மனிதாபிமானமற்றவள் அல்ல ஜான்.''

''மனிதாபிமானமற்றள் என்பதன் சரியான உதாரணம் நீ.''

''உண்மையாகச் சொல்லுங்கள். இதில் ஏதேனும் அசிங்கமோ, அவமரியாதையோ தெரிகிறதா? ம்? வாதிட வேண்டும் எனக் கத்தாதீர்கள். இதனைப் பார்க்கும் கெர்டாவால், இதில், தன்னைக் காண முடியும் என்றா நினைக்கிறீர்கள்?''

இஷ்டமின்றி அச்சிலையை மீண்டும் பார்த்தார் ஜான். சில நொடிகள் நழுவின. அவரறிந்து, முதன் முறையாய், அவரின் கோபமும் பிடிவாதமும், அவருக்குக் கட்டுப்பட்டன; அடங்கின. அமைதியானார். ஆனால், இதுவரை - ஏதோ தான் ஏதும் கத்திக் கூப்பாடு போடாதது போல சிறிதும் கவலைப்படாது - சிலையின் மீது ஆழமாய் அர்த்தம் தேடினார். கீழ்ப்படிந்து தன்னை அப்படியே ஒப்படைக்கும் பிரதி உபகாரம் நாடாத வினோதமான முகம் - கண்ணுக்குத் தெரியாத ஆனால் தான் மிக விரும்பும் இறை மகா சக்திக்கு, பக்தி சூழ வணக்கத்தை மட்டும் அர்ப்பணிக்கும் முகம் - குருட்டுத் தனமாய், எதையும் கருதாது பக்தியை மட்டும் காணிக்கையாக்கும் முகம் - அம்முகத்தில் பிரதிபலிக்கும் அச்சுறுத்தும் சக்தி, அபரிமித நம்பிக்கை...

''உன்னைத் தவிர வேறில்லை என்ற தீவிரமான பக்தியை அதிர அதிர வடித்துள்ளாய் ஹென்ரீட்டா.''

''ஆமாம். இந்த உணர்வு - உன்னைத் தவிர வேறில்லை என்ற தீவிரமான பக்தியை அதிர அதிர உணர்த்தும் பாவத்தினைத் தான் - கெர்டா மூலம் கடைந்தெடுத்துத் தந்துள்ளேன்; வேறெதையு மில்லை.''

ஜான் கூர்மையாய்க் கேட்டார்: ''அப்படி என்ன தான் தேடுகிறாள் இவள்? இத்தனை பவ்யமும் பக்தியும் யாருக்குச் செலுத்துகிறாள்? இந்தப் பக்தையின் முன்னாலிருப்பது தான் யார்?''

பதிலைக் கொஞ்சம் தயக்கி, உன்னிடமிருந்து இந்தக் கேள்விக்குத் தான் மகனே காத்திருந்து, உன் எகிறல் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டேன் என எண்ணியபடி, ''எனக்குப் புள்ளி வைத்துச் சரியாய் விளக்கத் தெரியவில்லை ஜான். ஆனாலும் -'' எனச் சொல்லி, பின் சற்று நிறுத்தி, ஜானின் முழு கவனத்தையும் தான் சொல்லவுள்ள சொற்களின் பக்கம் திருப்பி நிலைநிறுத்திவிட்டு, சிறு அழுத்தம் தந்து சொன்னார் : ''அப்பழுக்கற்ற இத்தனை அர்ப்பணிப்பும் நிறைந்து, அந்த பக்தை, உனக்காகப் பார்த்துக் கொண்டிருப்பதாய்த் தோன்றுகிறது ஜான்.''

## 5

சாப்பிடும் மேஜையின் பதார்த்தங்களைப் பார்த்துக் கொண்டே அமர்ந்திருந்த சிறுவன் டெரன்ஸ், இன்னுமொரு வேதியியல் கூற்றினைச் சொன்னான்: ''ஈய உலேகத்தினாலான உப்பு, கொதி நீரை விட குளிர் நீரில் விரைவாய்க் கரைந்து விடும். இத்துடன் பொட்டாஷியம் அயோடைட் கலந்தால், ஈய அயோடைட் எனும் மஞ்சள் நிறக் கசடு அடியில் தங்கும்.''

தான் அறிந்திருந்த இந்த விஷயத்தைச் சொன்ன மகிழ்ச்சியில், இதைக் கேட்டுக் கொண்டிருந்த அம்மாவிடம் எந்த மாற்றமும் இருக்காது என்று தெரிந்திருந்தும், ஆர்வமாய் கெர்டாவின் முகத்தைப் பார்த்தான் சிறுவன். கேட்டான் : ''நான் சொன்ன விஷயம் உனக்குத் தெரியுமாம்மா..?''

''வேதியியல் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது கண்ணா...''

''இதையெல்லாம் புத்தகத்தில் படித்துக் கூட அறிந்துக் கொள்ளலாமே அம்மா...'' - டெரன்ஸ்.

சிறுவன் சொன்ன இக்கூற்று ஒரு வேதியியல் உண்மையாயினும், அதற்கு பின்னால் ஓர் ஏக்கம், ஓர் ஆழ்ந்த சிந்தனை பொதிந்திருந்தது. அந்தப் புதையலை கெர்டா காணவில்லை.

அவர், தன்னைப் பீடித்துக் கவலைக்குள்ளாக்கியிருந்த மனக் கிலேசத்திலேயே, விடுபட இயலாமல் அடைப்பட்டுக் கிடந்தார். காலை எழுந்ததிலிருந்தே, இவ்வார இறுதி நாட்களில் லூசி வீட்டுக்குச் செல்ல வேண்டுமே எனும் எண்ணம் பயங்கர தலைப்பாரமாய்த் தோன்றி, கெர்டாவைத் துக்கப்படுத்திக் கொண்டுதான் உள்ளது. லூசியின் இல்லமான ஹாலோவுக்குச் சென்று தங்க வேண்டும் எனும் எண்ணம் கெர்டாவை எப்போதும் கதிகலங்க வைக்கின்றது. எப்போதும். நாள் நெருங்க நெருங்க, கதியற்றுக் கைவிடப்பட்ட துர்ப்பாக்கியவதியாக எண்ணித் தடுமாறி, இதனால், செய்யும் எதிலும் குழப்பம் நிறைந்து பதறுவார். லூசிதான் கெர்டாவை பயமுறுத்தும் ஆசாமி. முடிவுறாத வாக்கியங்களை அமைத்து சட்சட்டென்று விஷயம் மாற்றி விஷயம் பேசுவது, அதில் காட்டும் அபரிமித வேகம் ஆகிய லூசியின் குணாதிசயங்களும் -

அவற்றோடு ஈடுகொடுக்க முடியாமல் கெர்டா பதுங்கும் கோலம் - அதனை கனிவு கொண்டு லூசி ஒதுக்கும் நிலை ஆகியவையும், ஹாலோவில் எப்போதும் நடைபெறுபவை; கெர்டாவை மற்றவர்களிடமிருந்து தனித்தீவாக்கி இழிவு படுத்தப்பட்டதாய் அவரை நினைக்க வைப்பவை! லூசி மட்டும் தான் என சொல்லிவிடவும் முடியாது. வேறொருவருடனும் கூட இணைந்து இருக்க இயலாத கெர்டாவுக்கு, அங்கு கூடும் எல்லோருமே ஒரு பயங்கரமான கெட்ட கனவு தான்! கெர்டாவுக்கு, வரும் இரு நாட்களும் ஒரு நாடு கடத்தல்! கடுங்காவல்! ஜானுக்காக பொறுத்துக் கொள்ள வேண்டிய தண்டனை...!

கால்களையும் கைகளையும் நீட்டி மடக்கி ஒரு பெரும் சோம்பல் முறிப்போடு எழுந்த ஜானுக்கோ, இவ்விரு நாட்களும் சந்திக்கவுள்ள நண்பர் வட்டத்தின் எதிர்பார்ப்பு, கற்பனைக்கெட்டாத உற்சாகத்தைப் பெருக்கும்படி அமைந்தது. ''லண்டனுக்குள் செல்லப் போகிறோம் என்பதே எத்தனை தெம்பு தருகிறது பார்த்தாயா கெர்டா. உனக்கு ஒரு நல்ல பொழுதுபோக்காய் இது அமையத்தான் போகிறது, பார்.''

இயந்திரத்தனமாய்ச் சிரித்த கெர்டா, சந்தோஷமடைந்துப் போகட்டும் எனும் சுயநலமற்ற நல்லெண்ணத்தால், ''ஆமாம், இன்பகரமாய்த்தான் இருக்கப் போகின்றது'' என்றார்.

சந்தோஷமிழந்திருந்த கெர்டாவின் கண்கள், படுக்கையறையில் பதிந்து எழுந்தன. கண்ணைக் குளிர்விக்கும் க்ரீம் நிற வண்ணமிகு சுவர்த் தாள்கள், விசாலமான கண்ணாடி பொருத்தப்பட்ட அலங்கார மேஜை, சுறுசுறுப்பளிக்கும் பளீர் நீல நிறுத்தினாலான உயர் ரக தரைவிரிப்பு, ஓவியமாய்த் தொங்கும் பல இயற்கைக் காட்சிகள். எல்லாமும் கெர்டாவுக்கு அன்னியோன்யமானவை. அவற்றை திங்கள் விடியல் வரை பிரிந்திருக்க வேண்டும்.

நானில்லாத போது சலசலவென ஓசையெழுப்பிக் கொண்டு, என்னவோ தான்தான் உலகிலேயே பெரிய வேலைக்காரி என்பது போல, பணியாள் வருவாள். காலைக் காபி கொடுத்து என்னை அனுப்ப வழிவகை செய்வாள். பிறகு, அவ்வளவுதான்...! எல்லா வேலைகளையும், கண்காணிப்பு இல்லாத காரணத்தால், இன்னும் இரு நாட்களுக்கு சுமாராகத் தான் செய்து செல்வாள். நினைக்கும் போதே பற்றிக் கொண்டு வந்தது கெர்டாவுக்கு. சுத்தமாய்ச் செய்யப்படாத வீட்டு வேலைகள் எதுவும் கெர்டாவுக்கு சம்மதமில்லாதவை. இங்கு

வீட்டை விட்டுப் போவதிலும் நிம்மதி கிடையாது; அங்கு போயும் அக்கூட்டத்தோடு இணைய இயலாமல் பயந்து ஒதுங்க வேண்டும் என்பதிலும் சுகம் கிடையாது. இவற்றையெல்லாம் சகித்துக் கொண்டு, தன்னைத் தானே ஆசுவாசப்படுத்திக் கொள்ள 'இன்னும் ஒரு நாள் தானே..' என ஒரு பரிதாபப் பொய்யைச் சொல்லிக் கொண்டார் கெர்டா. பள்ளிக் குழந்தை ஒரு நாள் முடிந்தால் விடுமுறை வந்து விடும் என எண்ணிக் காத்திருக்குமே, அது போல...!

கெர்டா பள்ளி நாட்களிலும் சந்தோஷமாக இருந்தது கிடையாது. இவர் பயத்தை அகற்றிப் பழக ஒரு நம்பிக்கையான பிரகாச இடமாய்ப் பள்ளிக் கூடம் அமையவில்லை. இதற்கு வீடு எவ்வளவோ பரவாயில்லை எனத் தோன்றினாலும், ஓர் ஒப்பீட்டில் தான் வீடு உயர்ந்து தெரிந்ததே அன்றி, வீடும், அந்த அளவு ஒன்றும் கெர்டாவுக்குச் சாதகமாய் அமைந்து விடவில்லை. கெர்டாவை விட அனைவரும் புத்திசாலித்தனம் மிகுந்தும் துரிதமாகவும் வேகமாகவும் தான் இயங்கினர். கெர்டாவைப் பற்றி அவர்கள் கூறிய வர்ணனைகள், இவர் செய்கைகளை மெதுவாய் செய்வதைப் பொறுமையாய் அனுமதிக்க இயலாமல் கருணையற்று அனைவரும் கூறிய வசைகள் எல்லாம், காது துளைத்து ஒலியெழுப்பும் சூறைக் காற்றாய் தான் கெர்டாவுக்கு இருந்தன.

'சீக்கிரம் கெர்டா...',

'அட அசமஞ்சமே. போதும் நீ செய்த அழகு. வேலையை என்னிடம் விடு...',

'அய்யய்யோ... கெர்டாவிடம் அந்த வேலையை விடாதீர்கள்... உங்களுக்கு நரை தட்டும் போது தான் முடியும். ஹஹ்ஹா...',

'அவள் மண்டை மரமண்டையோ... எதுவுமே ஏற மாட்டேன் என்கின்றது...'

இவ்வகை நம்பிக்கையிழக்க வைக்கும் வர்ணனைகள், கெர்டாவை, இன்னும் சீரில்லாமல் ஆக்கி, அவரை அடி முட்டாளாக்கி விடும் என ஏன் அவர்கள் உணரவில்லை...? இவற்றால், செய்யும் வேலைகளில் படுமோசமானார் கெர்டா. வேலையை முடிக்க இயலாமல், கைகள் நடுநடுங்க பரபரத்து நின்றார். எதைச் சொன்னாலும், 'ஆங்...' என விக்கித்து, ஒரு காலிப் பார்வையைப் பார்த்தபடியே இருக்கும் நிலை வந்து சேர்ந்தது.

திடீரென, கெர்டாவே எதிர்பார்த்திராத வண்ணம், தன்னைச் சாடும் சுற்றத்தாரிடமிருந்து விடுதலை அடையும்படியான ஒரு வழி

கிடைத்தது அவருக்கு. ஏறத்தாழ, ஒரு விபத்து போலத் தான், தன்னைத் தற்காத்துக் கொள்ள உதவும் கவசத்தைக் கண்டுபிடித்தார்.

நாளுக்கு நாள், இன்னும் மெதுவாகப் பணிகளைக் கையாளும் நிலைக்குத் தள்ளப்பட்டார் கொர்டா. எதற்கும் கலக்கமுற்றுத் திகைக்கும் அவர் பார்வை மேலும் சூனியமாயிற்று. பிரமை பிடிக்காத குறையாயிற்று அவர் நிலைமை. இந்நிலையில்தான் அந்தக் தற்காப்புக் கவசத்தைக் கண்டறிந்தார். மற்றவர்கள், பொறுமையிழந்து 'அடியே கொர்டா.. ஏனிப்படி முட்டாளாய் வளைய வருகிறாய்... இந்தச் சின்ன வேலையைக் கூடவா உனக்குச் செய்ய வராது...?' என பழிக்கும் போது, ரோஷம் மேலோங்கி உருவாகும் மலங்க மலங்க விழிக்கும் நிலையையும் தாண்டி, தான் கண்டறிந்த கேடயத்தைப் பயன்படுத்தித் தப்பிக்க முயன்றார். கேடயம்...! அவர்கள் நினைப்பது போல, தான் முட்டாள் அல்லவே அல்ல எனும் உண்மை பொதிந்த கேடயம்...! இப்போதெல்லாம், பல சமயங்களில், என்ன கூறுகிறார்கள் என்று புரியாதது போல விழிக்கும் போதெல்லாம், புரிந்தே இருந்தோர் கொர்டா...! இதுவே அக்கேடயம்...! கேடயம் சிறப்பாய் பாதுகாப்பது புரிந்ததும், தனக்கிடப்பட்ட எந்தக் காரியமானாலும், அதை வேண்டுமென்றே அதீதமாய்த் தாமதப் படுத்தி இவர் நீட்டிக்க, இதனால் பொறுமையிழக்கும் அடுத்தவர், அக்காரியத்தைத் கொர்டாவிடமிருந்து பிடுங்கி வேண்டா வெறுப்பாய் முடிப்பதை, லேசாய் புன்முறுவி ரசிக்கலானார்.

நாளடைவில் வெறும் பராக்கு பார்க்கும் பார்வையாளராகவே மாறிப் போனார் கொர்டா. ஏனையவர்கள் இவரிடமிருந்து பணிகளைப் பிடுங்கிப் பிடுங்கி முன் வந்து முடிக்கும்போது வேடிக்கைப் பார்க்காமல் வேறென்ன செய்ய...?! செயலைச் செய்து முடிக்க முடியும் என்றிருந்தாலும், அப்படிச் செய்ய இயலும் என்பதை பிறர் அறியாதவாறு ரகசியமாய்ப் போட்டு மூடியே வைத்து பிழைக்க ஆரம்பித்தார். ஒரு கதகதப்பும், இன்பமும் கூடின. இது ஓர் அனுகூலத்தைச் சேர்த்துத் தருவதையும் அவர் கூடவே உணர்ந்தார். மற்றவர்கள், உங்களின் திறனற்ற நிலைக்கு பயந்து உங்கள் வேலைகளையும் அவர்களே செய்து முடித்து விடுவதே அந்த அனுகூலம்...! இது, உங்களைப் பல ரகளைகளிலிருந்து காத்து விடும். இது பழகி, உங்கள் வேலைகளை எல்லாம் இழுத்துப் போட்டுக் கொண்டு ஏனையவர்கள் உங்களுக்காக முடித்து விடுவது வாடிக்கையாகும் பட்சத்தில், உங்களுக்கு வேலைகள் வருவது

முழுவதுமாய் நின்று விடுவதோடு மட்டுமல்லாமல், வேலையை உங்களுக்குத் தந்து அதைத் தவறாக நீங்கள் முடித்து வாங்கிக் கட்டிக் கொள்ளும் பழிச் சொற்களும் நின்றே போகும். இறுதியில், பரந்து விரிந்துக் கிடக்கும் உலகின் ஏனைய புத்திசாலிகளுக்கு இணையாக நீங்களும் சமமாகிப் போவீர்கள்.

ஆனால் இந்த ஏய்ப்புக் கவசம், லூசி ஆங்கெட்டல் கூட்டத்திடம் செல்லவே செல்லாது என்ற பயமும் கெர்டாவுக்கு இல்லாமல் இல்லை. தாவித் தாவி விரைவு ரயில் போல துரிதமாய் முன்னேறும் அக்கூட்டத்தின் பலத்திற்கு இணையாக தயங்கித் தயங்கி வேலைகளை முடிக்கும் கெர்டா, நிச்சயம், ஓர் ஒதுக்கப்பட்டவராய் - கண்டுகொள்ளவே படாதவராய்த்தான் இருக்க முடியும். லூசியை மையமாக்கி உள்ள அக்கூட்டத்தையே வெறுத்தார் கெர்டா. ஆனால் ஜானுக்கு அவர்கள் வெகு பிரசித்தம்; மிக வேண்டப்பட்டவர்கள். அங்கிருக்கும் போதெல்லாம், ஜானுக்குள் எழும் அத்தனை வெறுப்பும் தணிந்து விட, அயர்வும் குறைந்தே காணப்படும்.

உயிரான ஜான்... நினைத்தார் கெர்டா. ஜான் அற்புதமானவர்தான். எல்லோரும் கருதுவது போல, மிக புத்திசாலி மருத்துவரும் நோயாளிகளின் மீது அபரிமித கருணையும் கருத்தும் கொண்ட மனிதரும் ஆவார். ஜானுடன் பழகத் துவங்கிய ஆரம்பக் காலங்களிலேயே தன் தொழில் மீது அவர் காட்டிய பக்தியும் நேர்த்தியும் அவரை உயர உயர இட்டுச் செல்லும் என மனப்பூர்வமாய் நம்பினார். கெர்டா. இரு குடும்பங்களிலும் திருமணப் பேச்சு எடுக்கப்பட்டபோது, கெர்டாவைப் பார்த்துத் தேர்ந்தெடுத்தார் ஜான். இப்போது அதை நினைவு கூர்ந்தார் கெர்டா. எந்தச் செயலையும் அதிக திறமையற்று மெதுவாகவும் புரிந்துக் கொள்ளாமலும் செய்யும் கெர்டாவின் நிலையையோ... அல்லது கெர்டாவின் சுமாரான உடல் வனப்பையோ... ஜான் பெரிசாய்க் கொள்ளவில்லை; மாறாக, 'நான் உன்னைக் கவனித்துக் கொள்வேன்...' என்று, இனிமையாக, கெர்டாவை மடக்கிப் போடும் கவர்ச்சியோடு நம்பிக்கை அளித்தார். 'பார்த்துக் கொள்வோம் கெர்டா. உன் பழக்க வழக்கத்துக்கு முக்கியத்துவம் தர வேண்டாம். உன்னையும் நான் கவனித்துக் கொள்கிறேன்' என அளவு கடந்த நம்பிக்கை அளித்தார்.

ஒரு பெண்ணுக்கு உயர் குண மனிதன் தரவல்ல ஆதரவு. தன்னைத் தேர்ந்தெடுத்து வாழ்வளித்துள்ள ஜானை எண்ணயெண்ண பெருமிதம் பொங்கிற்று கெர்டாவுக்கு.

அந்த இனிமையும் கவர்ச்சியும் குன்றாத குரலில், 'என் வழியில் வேலைகளைச் செய்வதே எனக்கு பிடித்தம், கெர்டா' என்றும் சொன்னார். அவரின் அடிப்படை குணத்தை ஆரம்பத்திலேயே ஓர் எதிர்பார்ப்பாய் கெர்டாவின் முன் வைத்தது சரியே. இதனை இதயத்தின் அடி வரை இறக்கிக் கொண்டு, எப்படியும் அவரின் வழியில் இடையூறாய் இருக்கக் கூடாது என சபதமாகவே வாழ்ந்தார் கெர்டா. தன்னால் இயன்ற அத்தனையையும் தந்தார். கலியாணமான பிறகு, சிறிது சிறிதாக, ஜான், எதனாலும் அமைதியடையாமல் மாறி, கையாளக் கடினமானவராகவும் அதிர்வுடனேயே அல்லாடுபவராயும் ஆகிப்போன பொழுதில் கூட, கெர்டா, ஜானின் அமைதி கருதி, அவர் சாந்தமடைய வேண்டும் என்ற ஒரே இலக்கு கருதி, தன்னாலியன்ற அத்தனையையும் அளித்து, அவர் போக்குப் படியே சென்று, இடையூறின்றி பார்த்துக் கொண்டார். இருந்தாலும், கெர்டா கையாளும் ஒவ்வொரு செயலும், ஜானுக்குத் தவறாகவே தோன்றுவதாய்த்தான் அமைகின்றன. கோபப்படும் ஜானையும் குற்றம் சொல்லிப் பிரயோஜனமில்லை. தன் துறையில் மிகப் பிரபலமான, நோயாளிகளுக்காகவே வாழும் அர்ப்பணிப்பான டாக்டர், எத்தனைதான் வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொள்ள முடியும்...?!

★ ★ ★ ★

ஓ... அந்த மட்டன்....! கண்ணில் பட்ட மட்டன் மறுபடியும் அச்சுறுத்தியது. ஆறிக் குளிரத் துவங்கி விட்ட ஆட்டிறைச்சியை, சூடு பண்ண அனுப்பியிருக்க வேண்டும். இது புரிந்தும், செய்வதறியாது அதனைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார். சரியெனப்படுவதை ஏன் முடிவெடுத்து நடத்தித் தொலைக்கக் கூடாது? சுட வைப்பதா வேண்டாமா எனும் சஞ்சல பய அலை, மீண்டும் கெர்டாவைத் தாக்கிற்று. ஆட்டிறைச்சி...! இதையேத் தான் அவர் மனம் எண்ணிக் கொண்டேயிருந்தது. இதன் கூட, இன்னும் இரண்டு நாட்களுக்கு எதிர் கொள்ள வேண்டிய ஆங்கட்டேல் கூட்டம்...! கண்டமாய்த் தோன்றிய இவ்விரு நினைவுகளும் சேர்ந்து, கத்தி நுழைப்பது போன்ற வலியினை, இரு நெற்றிப் பொட்டுகளிலும் உண்டு பண்ணின. தலைவலி வருவதற்கான அறிகுறி. தலைவலி என்று சொல்லி விட்டாலே வெறி கொண்டு எரிச்சலாகும் ஜானின் நிலை எண்ணத்தில்

நிழலாடி, துக்கமாயிருந்த கெர்டா மன நிலையை இன்னும் ஆழமாய்த் துயரப்படுத்தின. எத்தனை பயங்களைத் தான் பாவம் தொடர்ச்சியாய் எதிர் கொள்வார்...! ஒரு பிரபல மருத்துவராயிருந்தும், அடிக்கடி தலைவலி வந்து அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் துடிக்கும் கெர்டாவுக்கு உடனடியாய் குணமாக மருந்து தரும் தகுதியும் வசதியுமிருந்தும், இப்படியெதையும் செய்யாமல் ஜான் சொல்வார் : ''தலைவலி இருக்கிறது என்று நினைக்காதே! மருந்தைத் தின்றுத் தின்று உன் உடம்பைப் பாழாக்கிக் கொள்ளாதே! போ! போம்மா! போய் சுறுசுறுப்பாய் காலார ஒரு நடை போய் வா...!''

எதையும் பொருட்படுத்திக் கொள்ளவில்லை கெர்டா. தன்னைப் பெண் பார்த்த போது ஜான் குறிப்பிட்டிருந்த 'என் வழியில் வேலைகளைச் செய்வதே எனக்குப் பிடித்தம், கெர்டா' எனும் வேண்டுகோளுக்குப் பங்கம் வராமல்தான் பார்த்துக் கொண்டு வருகிறார்.

இன்னும் இன்னும் ஆறிப் போய்க் கொண்டேயிருந்த மட்டன் துண்டினைப் பார்க்கப் பார்க்க நெற்றிப் பொட்டின் வலி வீரியம் 'மட்டன்.... மட்டன்... மட்டன்...' என அலறிக் கொண்டே கூடியது. தன்னுடைய கையாலாகாத்தனத்தைத் தன்னாலேயே மீறி வெற்றிக் காணயியலவில்லையே எனும் சுய பச்சாதாபம், கெர்டா கண்களின் கண்ணீராய் பிரதிபலித்தது. அழுதாள். ''ஏன்..? ஏன்...?'' என தன்னைத் தானே கேட்டுக் கொண்டவர், ''ஏன் நான் எது செய்தாலும் அது தவறாகவே முடிகிறது. அல்லது மற்றவர்களால் தவறாகவே எடுத்துக் கொள்ளப்படுகின்றது. ஏன் இறைவா, ஏன்...?''

டெரன்ஸ் அம்மாவைப் பார்த்தான். தட்டில் கிடந்த ஆட்டிறைச்சியையும் கவனித்தான். ஆட்டிறைச்சிக்கும் தன் மனதுக்குமாய் அல்லாடும் தன் தாயின் பாதிப்பையும் உணர்ந்தான். 'முட்டாள் மனிதர்கள். மூளையற்றவர்கள். வளர்ந்து என்ன பயன்? சாப்பாட்டு சமயத்தில் இப்படியா குடும்பத்தையே காக்க வைத்துக் குளிர் காய்வது? வராவிட்டாலிருக்கட்டும். நாம் ஏன் பசியாறக் கூடாது?' - என எண்ணங்கள் சீறின, சிறுவனின் உள்ளத்தில். தன் ஆதங்கத்தைக் காட்டிக் கொள்ளாத விழிப்புடன், ''அம்மா... உங்களுக்கு நிக்கில் தெரியுமல்லவா?'' என்று கேட்டான்.

''தெரியும். உன் வகுப்பு மாணவனில்லையா...?''

''வெகு சரி. அவன் அப்பாவின் தோட்டத்திலிருந்து நானும் அவனுமாய் சேர்ந்து நைட்ரோ-கிளிசரின் தயார் செய்யப் போகிறோம்.''

''அப்படியா கண்ணா...?'' என வியந்த கெர்டா, ''நல்லது நல்லது'' என, தன் மகன் படிப்பில் விருத்தியடைவதாய் எண்ணி மகிழ்ந்தாள். இப்படிச் சொன்னாலும் மனமென்னவோ பணியாள் லூயிஸைக் கூப்பிட்டு ஆறியே போய் விட்ட மட்டனை சூடு பண்ணிக் கொண்டு வரச் சொல்லலாமோ என இருதலைக் கொள்ளியாய்க் குழம்பிக் கொண்டு தானிருந்தது.

டெரன்ஸ், அம்மாவை சிறு வியப்பு மேலோங்க பார்த்தான். உள்ளூர 'விஷயமறிந்த எந்தப் பெற்றோரும் தன் மகன் நைட்ரோ-கிளிசரின் போன்றவற்றைத் தயாரிப்பதை அனுமதிக்கவே மாட்டார் கள்', என்று எண்ணிக் கொண்ட சிறுவன், வேதியியலெல்லாம் அறியாத கெர்டாவின் ஆமோதிப்பையே கெட்டியான அனுமதியாய் எடுத்துக் கொண்டு, தான் சொல்லிய காரியத்தை நிறைவேற்றிக் கொள்ள அற்புத வாய்ப்பு கிடைத்து விட்டதாய், ஸ்திரமான முடிவினை எடுத்துக் கொண்டான். அவனுக்குள் குளிர்ச்சி பரவியது. தப்பித் தவறி, இத்தயாரிப்பில், நைட்ரோ கிளசரின் தன் பண்புகளைக் காட்டிக் குழப்பமேற்படுத்தி விட்டாலும், 'அம்மாவிடம் சொல்லி விட்டுத் தானே இதைத் தயாரிக்க இறங்கினேன்' எனும் பரிதாப வார்த்தைகளை விட்டுத் தப்பி விடலாம்!

'எனினும்...' என்று சற்று நம்பிக்கையிழந்தான் டெரன்ஸ், 'அம்மா கூட, நைட்ரோ-கிளசரின் பற்றி அறிந்துக் கொள்ளுதல் அவசியம்' என்ற ஓர் ஆழ்ந்த எதிர்பார்ப்பால்...! அந்த அளவு வேதியியல் வினைகளில் ஈர்க்கப்பட்டிருந்தான் சிறுவன். தன் விருப்பங்கள் வீட்டில் யாராலும் ஆர்வத்தோடு விவாதிக்கப்படாததால், ஒரு குழந்தைக்குள் பூதாகாரமாய் உணரப்படும் தனிமை, டெரன்ஸைப் புயலாய் கடந்தது. பொறுமையற்ற அப்பா; இதிலெல்லாம் கவனமே வைக்கயியலா அம்மா; வேதியியலின் அட்சரம் தெரியும் வயதற்ற குழந்தை ஸெனா. பக்கம் பக்கமாய் புல்லரிக்க வைக்கும் வேதியியல் வினைகள்! இருந்தும் அதைக் களமாய்க் கொண்டு விவாதித்துக் தன்னைக் கிளுகிறுக்க வைக்கத்தான் நாதியில்லை!

வானில் இடித்த பேரிடியாய்க் கீழ்த் தளத்திலிருந்து ஓசை வந்தது. அமர்ந்திருந்த கெர்டா எழுந்து தயாராகிக் கொண்டார். வந்த

இடித்தாக்கு, ஜானின் மருத்துவ அறைக்கதவு மூடப்பட்ட ஓசை. இதைத் தொடர்ந்து ஜான் ஓடி வரும் ஓசை - படிகளில் படபடப்போடு ரெண்டு படிகள் மூன்று படிகளாய்த் தாண்டித் தாண்டி விரைந்து ஓடி வரும் ஓசையும் வந்தது.

தன்னோடு கூட, தன் பிரத்யேக அதிரடி சக்தியையும் சுமந்தவாறு, வெடிக்கும் வெடியாய் உள்ளே நுழைந்தார் ஜான். ''கடவுளே...'' என விரக்தியாய் வார்த்தை உதிர்த்தபடி சாப்பாடு மேஜையருகே அமந்தவுடனேயே, தட்டருகே வைக்கப்பட்டிருந்த மாமிசம் நறுக்க என இருந்த கத்தியைத் தேய்த்துத் தேய்த்து சாணை பிடித்தபடி, ''போதுமப்பா இந்த நோயாளிகள்....! ஊஃப்ப்ப்...! வெறுப்பு...!'' என்றார்.

''ஓ, ஜான்...'' என்று நிந்தித்து ஆரம்பித்த கெர்டா, ''ஒரு போதும் இப்படி பேசாதீர்கள். உங்களை மலை போல நம்பியுள்ள நோயாளிகள், இதைக் கேட்டால், உண்மையிலேயே நீங்கள் அவர்களை வெறுப்பதாய் எண்ணி விசனப்படுவார்கள்'' என்றார்.

''நான் பணிக் களைப்பால் சொல்லவில்லை கெர்டா'' என்றார் ஜான். ''உண்மையிலேயே தான் சொல்கிறேன். போதும் போதும் என்றாகிறது. நோயாளிகளே இருக்கக் கூடாது.''

ஜான் இப்படி பேசுவதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த டெரன்ஸிடம், ''உன் அப்பா ஜோக்' கடிக்கிறார்'' என்றார் கெர்டா.

''எனக்கு அப்படிப்படவில்லை'' என்ற டெரன்ஸ், தன் வாழ்க்கையில் நடக்கும் எதையும் ஆத்மார்த்தமாய், உணர்வு பூர்வமாய் எடுத்துக் கொள்ளாது, பரீட்சிக்கும் அதே பார்வையில், தன் அப்பாவைக் கூர்மையாய்ப் பரிசோதனை செய்து கொண்டிருந்தான்.

''நீங்கள் நோயாளிகளை வெறுக்க மட்டும் ஆரம்பித்து விட்டால்...'' என்ற கெர்டா, மேஜையில் மூடியிருந்த பதார்த்தங் களைத் திறந்து கொண்டே, ''உங்களால் ஒரு சிறப்பான மருத்துவராய் இருக்கவே முடியாது'' என்றார், வலிக்காமல், சிறு சிரிப்பினூடே.

தட்டில் வைக்கபட்ட இறைச்சியைத் தொட்டுப் பார்த்த ஜான், ''என்ன இது...?'' என விறுவிறுவென கோபத்தின் உச்சிக்கு சென்றார். ''இறுகிப் போன ஐஸ் கட்டியாயிருக்கிறது இந்த இறைச்சி. என்ன பிடுங்கிக் கொண்டிருந்தாய். நான் வருவதற்குள் இதைச் சுட வைத்திருக்கலாமில்லை...?''

''நீங்கள் எப்போது வரப் போகிறீர்கள் என தெரியவில்லையே ஜான்.''

அர்த்தமற்ற பதிலாய்ப்பட்டது ஜானுக்கு. தன் கோபத்தையும் எரிச்சலையும் மேஜைமணி மேல் காட்டினார். அழுத்திக் கொண்டே யிருந்தார். நீண்ட மணியோசை. அடித்துப் பிடித்துக் கொண்டு லூயிஸ் வந்தான்.

''ம், எடுத்துக் கொண்டு போ. சுட வைத்து எடுத்து வா'' - கனல் பறக்கும் கட்டளையாய்ச் சொன்னார் ஜான். அமைதி நிலவியது. கெர்டா, நின்றுப் போன உரையாடலுக்குத் தொடர்பின்றி சொன்னார்: ''மன்னித்து விடுங்கள் ஜான். தவறு என்னுடையது தான். என்ன செய்வது? நீங்கள் வரும் நேரத்தில் தான் சுடச்சுட எல்லாவற்றையும் கொண்டு வந்து வைத்தேன். வழக்கம் போல வந்து விடுவீர்கள் என நினைத்தேன். ஆனால் நேரமாகி விட்டது. மீண்டும் அனுப்பி சுட வைக்க என... ... ....''

''ஓ...'' என தலை முடியைப் பிடித்து இழுத்துக் கொள்ளாத குறையாய் கத்திய ஜான்,''அதற்கு என்ன இப்பொழுது? விளக்கமா முக்கியம்? காரியம் நடக்கவில்லை. இத்தனை வசனம் பேசி இப்போது எதற்கு நாட்டிய நாடகம்...?'' என படபடத்தார்.

வார்த்தைகள் அம்பு அம்பாய் வந்து விழ, எதிர்த்து பதில் பேசவியலாமல் அமைதியானார் கெர்டா.

கார் இருக்கிறதா என்று கேட்டு ஊர்ஜிதப்படுத்திக் கொண்ட ஜான்,''சாப்பிட்டு முடித்ததும் கிளம்புகிறோம்'' என்று துரிதப் படுத்தினார்.

ஹாலோ நோக்கிப் போகும் வழியில் எதிர்படும் ஒவ்வோர் இடத்தையும் - பசுமை மரங்களையும் - நெளிந்தோடும் நதிகளையும் - காட்டுப் பிரதேசங்களையும் - வசந்தக் காலத்தில் செடிகள் முளைவிட தளதளக்கும் குன்றுகளையும் - என, சந்தோஷப் பிரயாணம் ஒன்றுக்குத் திட்டமிட்டபடி, லூசி, ஹென்றி... ஹென்ரீட்டா! எனக் குதூகலமாகிக் கொண்டிருந்தார் ஜான்.

ஜான், ஹென்ரீட்டாவைச் சில நாட்களாகச் சந்திக்கவில்லை. கடைசியில் இருவரும் பார்த்துக் கொண்டபோது ஜான் கோபத்தின் பிடியில் சிக்கிக் கத்த, அதிரடியாய் வாக்குவாதம் நிகழ்ந்தது. அப்போதும் அதிராத ரீட்டாவின் கண்களிலோ, விநோதப் பார்வை ஒன்று மிதந்துக் கொண்டிருந்தது. விவரிக்க முடியாத - இலக்கில்லாத - ஆனால் எதையோ குறி வைத்த பார்வை. அங்கில்லாத, ஆனால் இருப்பது போல பாவித்து அதைத் துளைக்கும் பார்வை. எதையோ

குண்டு துளைக்கும் குறியோடு பார்க்கும் பார்வை. எதையோ... எதையோ... ஆனால் அது நிச்சயமாய் ஜானில்லை...!

நினைத்துக் கொண்டார் : 'அவள் ஒரு சிற்பி. சாதாரண சிற்பியல்ல. மிகத் திறமைசாலி. கற்பனை வளமும் கலை நயமும் மிகும் பிறவி. இருந்தும்... இருந்தும்... அந்தக் கண்றாவிக் கலையை, சிறிது நேரம் தூக்கிக் கடாசக் கூடாதா? எனக்காக ! எனக்கே எனக்காக! சில நொடிகள், அவள், என்னைப் பற்றி மட்டும், வேறெதைப் பற்றியும் நினைக்காமல் என்னைப் பற்றி மட்டும், நினைக்க மாட்டாளா?'

இவ்விதமாய் வேறு ஒரு பெண்ணை, தன் மனைவியில்லாத வேறு ஒரு பெண்ணை நினைப்பது அவலட்சணம் என்று அவருக்கும் தெரியும். முடியவில்லை. ஹென்ரீட்டா அவருக்கு வேண்டும். அவ்வளவுதான். வழக்கமான கலைஞர்களைப் போல, எப்பப்பாரும் தன் கலையைப் பற்றியே பேசித் தள்ளிக் கொண்டிருக்கும் தற்பெருமை வகையைச் சார்ந்தவரல்ல ஹென்ரீட்டா. தான் பிதாமகராய்ப் பரிமளிக்கும் சிற்பக் கலை, தன்னை முற்றுகையிட்டு, ஏனைய உலகவியலிலிருந்து தன்னைப் பிரித்து விடாவண்ணம், மிக அழகாய்த் தான் வலம் வருகிறார் அவர். சில சமயங்களில், அவருக்குள்ளேயே ஊறிக் கிடக்கும் கலைக் கண்கள் விழித்தெழும் வெகு சில சமயங்களில், ஜானின்மீது தான் செலுத்தும் பிரியம் குலைக்கப்படுவதை ரீட்டா அறிகிறார். சொற்பமான சிற்சில சமயங்களில்தான் இப்படி நடக்கின்றன. ஜான் பொறுத்துப் போகலாம்... ஆனால் மாட்டார். இவை, ஜானின் எரிமலைக் கோபத்தை உடனடியாய் வெடிக்க வைக்கத் தவறுவதேயில்லை.

கடுமையும் கூர்மையும் கொண்டு, ஒரு முறை ஜான் கேட்டார்: ''நான் கேட்டால் செய்வாயா...?''

இக்கேள்வி, எந்த விபரீதத்துக்கான அடித்தளம் என விளங்காது, ''எதை...?'' என்று கேட்டார் ரீட்டா.

''இதையெல்லாம் விட்டு விடு என்று என நான் கேட்டுக் கொண்டால், ஒரேயடியாக உதறித் தலை மூழ்குவாயா....?''

''இதை என்றால்...! எதை..?'' - நளினமான தன் குரலில் ஆச்சரியம் மிகக் கேட்டார் ரீட்டா.

''இதை... இதை...'' - விறுவிறுவென அதிர்வாகி, ''இதைத் தான்...'' என்றார் ஜான், சிற்பக் கூடத்தைச் சுற்றிச் சுற்றிக் கையை காட்டி....! ''இதையெல்லாம் தான்.''

அவ்வார்த்தைகள் வெளியானதும், வெறி இறங்கி, 'எவ்வளவு பெரிய முட்டாள் நான்...' எனத் தணிந்தார். 'இப்படி ஒரு கேள்வியை ஏன் நீ கேட்டாய்...?' எனத் தனக்குத் தானே கேட்டுக் கொண்டவர், இதற்கான பதிலையும் தனக்குத் தானே அறியப் பெற்றார் : 'நிச்சயமாய்...' என அவள் சொல்கிறாளா எனப் பார்க்கத்தான்...! பொய்யாவது சொல்லட்டும். 'உங்களுக்காக இதைக் கூடவா செய்ய மாட்டேன்' என அவள் சொல்லட்டும்! மனதார சொல்லா விட்டாலும் இப்படிச் செய்ய மனமில்லாவிட்டாலும் - உதட்டளவிலாவது சொல்லட்டும். ஆனால் அவள் சொல்லியே ஆக வேண்டும். 'நிச்சயமாய்' எனும் வார்த்தையைப் பதிலாக்கி அவள் சொல்லியே ஆக வேண்டும். என் அமைதிக்காக...!'

ஜானின் நினைப்பு இப்படி இருக்க, ரீட்டாவோ, பதிலாக மௌனத்தையே தந்துக் கொண்டிருந்தார். சற்றுக் கோபம் கொண்டார். சில நொடிகள் நழுவிவிட, ஸ்திரமாய் சொன்னார் : ''விட்டு விடுவேன் என்றே நினைக்கிறேன்.'' ஹென் ரீட்டாவின் வார்த்தைகள் அதிர்வில்லாமல், அமைதியாய், அழகாய் வந்து விழுந்தன: ''தேவையிருக்கும் பட்சத்தில்.''

''தேவையிருக்கும் பட்சத்தில்? இதென்ன சொக்குப் பொடி வேண்டிக் கிடக்கிறது....!''

''தெரியவில்லை ஜான். தேவையிருக்கும் பட்சத்தில்..! ஏன் இப்படி சொன்னேன் எனத் தெரியவில்லை. பெரிய வியாதி ஒன்று வந்து, கையையோ காலையோ நறுக்கிப் போடும் நிலை வருகிறது இல்லையா...! அது போல நிலை வந்தால் ஒரு வேளை விட்டு விடுவேன்...!''

''அவ்வளவு கஷ்டமா என்ன...? அறுவை சிகிச்சை செய்து தான் உன் சிறப்புக் கலையை உன்னிடமிருந்து பிரிக்க வேண்டுமா...!'' - சற்றே கிண்டல் மேலோங்கக் கேட்டார் ஜான்.

''நீங்கள் கோபத்தில் உள்ளீர்கள் போல...! நான் என்ன விடைத்தான் சொல்ல வேண்டும் என எதிர்பார்க்கிறீர்கள்...?''

''பசப்பாதே. உனக்கு அது நன்றாகவே தெரியும். ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் போதும்! இப்படி வீணான விவாதமும், என் ரத்தக் கொதிப்பும் இருந்திராது. ஒரே வார்த்தை...! 'நீ சொன்னால் இக்கலைத் தொழிலை விட்டு விடுவேன்' எனும் ஒரே வாக்கியம். நீ ஏன் இப்பதிலைத் தந்திருக்கக் கூடாது...? மற்றவர்களை சமாதானப்

படுத்தவும் நட்புறவாடவும் நீ என்னவெல்லாமோ பேசுகிறாய் - பேசுவது உண்மையா பொய்யா எனக் கூட அறியாமல்...! என்னிடமும் ஏன் அப்படிக் குளிர்ச்சியாய்ப் பேசக் கூடாது...! ஏன்...! ஏன்...!''

இதற்கும், ''தெரியவில்லை... உண்மையாகவே தெரியவில்லை'' என் அதிராது விடை தந்த ரீட்டா, பின் முடிவாய் சொன்னார்: ''என்னால் முடியாது. அவ்வளவுதான். உங்களிடத்தில், மற்றவர் களிடம் பேசுவது போல் என்னால் பேச இயலாது.''

பற்களைக் கடித்தபடி எழுந்தவர், அங்குமிங்குமாய் சில நிமிடங்கள் நடந்து விட்டு, ''என்னைப் பைத்தியமாக்கி விட்டுத் தான் ஓயப் போகிறாய். பார்த்துக் கொண்டேயிரு'' என்று ரீட்டாவின் முகத்தருகில் வந்து உறுமியவர், ''நீ இப்படி செய்வதால், உன் மீது எனக்கு உரிமை இருப்பதாகவே என்னால் நினைக்க முடியவில்லை'' என்றபடி மீண்டும் வேகவேகமாய் இப்படியும் அப்படியும் நடக்கலானார்.

''என் மீது என்ன உரிமை உங்களுக்கு இருக்க வேண்டும்? அப்படி ஏதாவது இருக்க வேண்டும் என ஏன் எதிர்பார்க்கிறீர்கள்...?''

''அதெல்லாம் தெரியாது. ஆனால் நான்... உன்.. உன்... மீது... உன் மீது உரிமைக் கொண்டாடத்தான் வேண்டும்...! கொண்டாடு வேன்...!'' - சொல்லி விட்டு தொப்பென்று நாற்காலியில் விழுந்தார். சொன்னார் : ''உன்னைப் பொருத்தவரை நான் தான் முதலாவதாக இருக்க வேண்டும்.''

''நீங்கள்தான் முதல் ஜான்...!''

''அப்படித் தோன்றவில்லை. என்னை விட உன் கலைத் தான் உனக்கு உசத்தி. நான் ஒரு வேளை மண்டையைப் போட்டு விட்டால், கண்களில் பொங்கி வழியும் கண்ணீரோடு என் உடம்பின் அருகில் உட்கார்ந்திருப்பதை விட்டு விட்டு, சோகம் கொண்டாடும் ஒரு பெண் முகத்தைச் செதுக்க நீ கிளம்பியிருப்பாய்...!''

இந்த வார்த்தைகள் ரீட்டாவை எவ் வகையிலும் பாதிக்கவில்லை. மாறாக, ''பிரமிக்கிறேன் ஜான். அப்படித் தான் நான் செய்யக் கூடும். ஆம். சே...! அது எத்தனை கொடூரம்...!''

அமர்ந்தபடி, ஜானை, நம்பிக்கையற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் ரீட்டா.

★ ★ ★ ★

ஆறியிருந்த பதார்த்தங்கள் சூடுபடுத்தப்பட்டுத் திரும்பியிருந்தன. அவற்றைப் புருவ நெருக்கலோடு ஜான் பார்க்க, நிறுத்தி விடு எனச் சொல்லியிருந்தாலும் கேளாது, மீண்டும் மீண்டும் மன்னிப்புக் கோரி, முடிந்த நிகழ்வினைப் பற்றிப் பேசிப் பேசியே ஜானை வெறுப்புக் குள்ளாக்குவதிலிருந்தார். கெர்டா : ''மன்னித்து விடுங்கள், ஜான். இது ஏன் நடந்தது என விளங்கவேயில்லை. நீங்கள் வருவதற்குத் தாமதமானவுடனேயே சுட வைக்க அனுப்பியிருக்க வேண்டும். என் தவறு தான்; உணர்கிறேன். ஆடை தட்டிப் போயிருக்கும் மேல் பாகத்தை விட்டு விடுங்கள். அதை நான் எடுத்துக் கொள்கிறேன். சுடச்சுட இருக்கும் அடிப்பாகத்தை நீங்கள் சாப்பிடுங்கள்.''

இக் குடும்பமே விகிதாச்சாரமின்றி இயங்குகின்றது. உணவுப் பொருள்கள் ஆறிப் போனதும், அதனால் அவை மறுபடியும் அடுக்களை சென்று சூடு செய்யப்பட்டு திரும்பியிருப்பதும், ஜானால்தான். தன் மருத்துவ அறையில், தேவையேயில்லாமல், வெறுமனே, ஒன்றே கால் மணி நேரமாய் அமர்ந்திருந்து விட்டு, ஹென்ரீட்டா, திருமதி க்ரேப்ட்ரீ போன்றவர்களையெல்லாம் அசை போட்டு விட்டு, மறுபடியும் திரும்பிப் போகமாட்டோமா... அதே சுக தினங்களை அனுபவிக்க மாட்டோமா எனும் கோணத்தில் கடந்தக் கால ஸான் மிகைல் கடற்கரை நிகழ்வுகள் பற்றி எண்ணியெண்ணி மருகி விட்டு, இதோ, இப்போது காலந்தாழ்த்தி வந்துள்ள ஜானால்தான் சுடச்சுட சமைக்கப்பட்டிருந்த அத்தனையும், வசந்தகால தட்பவெப்பத்தின் குளிர் தாங்காமல் சீக்கிரமாய் ஆறிப் போயிருக்கின்றன. எல்லாம் ஜானின் தவறு. தன்னால்தான் நிகழ்ந்தது என கெர்டா பழியைத் தன் மேல் போட்டுக் கொள்வது ஒரு முட்டாள்தனம். அதிலும் கெட்டித்துப் போய் ஆடையாயிருக்கும் பதார்த்தங்களின் மேல் பாகத்தை - சுவை குன்றிப் போயிருக்க வல்ல அப் பாகத்தை - தவறே செய்யாத தான் உண்பதாய் வேறு பணிந்துப் போவது, முழு முட்டாள்தனம். கணவன், கணவன் என்று விதித்துக் கொண்ட கொள்கைப் பிடிப்பால், கெர்டா, இப்படி ஏன் தான் தியாகங்கள் செய்துத் தொலைக்கிறாரோ? இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருக்கும் சிறுவன் டெரன்ஸ், புருஷன் - பொஞ்சாதி சண்டை என ஒதுக்கித் தள்ளாமல் ஏனிப்படி வெறித்து, மிக ஈடுபாடு நிறைந்து, குறியாய்க் கவனிக்க வேண்டும்? குழந்தை

*ஸெனா, பாவம் என்ன நடக்கிறது என புரியாமல் ஏனிப்படி பேயறைந்தாற் போல் பேசவே திராணியற்று வெறிக்க வேண்டும்? ஒவ்வொரு நொடியும் எரிச்சலும் பயமும் கொண்டு இக் குடும்பம் ஏனிப்படி சுழல்கின்றது?*

*ஜானின் கடுங்கோபம் ஸெனாவின் மீது பாய்ந்தது : ''மூக்கைச் சிந்தவே மாட்டாயா நீ? இப்படியாய ஒழுகிக் கொண்டேயிருக்க வேண்டும்?''*

*''அவளுக்கு ஜலதோஷம் ஜான்.''*

*''வாயை மூடு'' என தேவையின்றி கெர்டாவின் மீது இப்போது பாய்ந்தார். ''ஜலதோஷமும் கிடையாது, ஒரு மண்ணும் கிடையாது. நீயாவது அவள் மூக்கினைச் சுத்தம் செய்திருக்க வேண்டும். நீ மாட்டாய். அது தான் நீ. எப்போதும் குழந்தைகளுக்கு ஜலதோஷம் உள்ளது என நினைத்துக் கொண்டிருப்பதே உன் வேலை, கெர்டா. அவள் நன்றாய் தானிருக்கிறாள்.''*

*பதில் சொல்ல முடியாது வாயடைக்கப்பட்டதாய் உணர்ந்தார் கெர்டா. தங்கள் நோயாளிகளிடம் அத்தனை நேரம் செலவழித்து, குசலம் விசாரித்து மருந்துகள் தரும் மருத்துவர்கள், தங்கள் குடும்ப அங்கத்தினர் என வரும் போது, ஏன் தான் வெகு வித்தியாசமாய் நடந்துக் கொள்கின்றனரோ, என புரியாமல் பார்த்தார் கெர்டா. இவர்கள் மூன்று பேர் சம்பந்தமான எந்த நோயைப் பற்றிக் குறிப்பிட்டாலும் இப்படித் தான் எரிந்து விழுந்து ஒதுக்கித் தள்ளுகிறார் இவர், என சங்கடப்பட்டுக் கொண்டார். ஜலதோஷ மில்லாமலா இப்படி, மூக்கு, ஒரு கெட்டி அருவியாய் குழந்தைக்குக் கொட்டிக் கொண்டிருக்கிறது....!*

*குழந்தை பரிதாபமாய், முக்கியத்துவம் கொடுத்து, ''அப்பா, அப்பா...! நான் சாப்பிட வரும் முன்.. ம்...'' என அழகாய் சிந்தித்து விட்டுச் சொன்னது: ''எட்டு முறை சிந்தி விட்டுத் தானப்பா வந்தேன்...!''*

*இப்போது ஜலதோஷம்தான் என புரிந்தது ஜானுக்கு. இருந்தாலும் இப்போதுதானே இல்லை என அடித்துச் சொன்னார். இவர் தவறாய்ச் சொன்னதென இருக்கக் கூடாது! எனவே, ''வெப்ப ஜலதோஷம்'' எனக் குறிப்பிட்டார்.*

''இல்லை'' என்று கடுமையாய் மறுத்தான் டெரன்ஸ். ''சூரியன் கொளுத்தியா தள்ளுகின்றது, வெப்ப ஜலதோஷம் பிடிக்க....! அதோ, அறையின் அந்த வெப்பமானியும் வழக்கமான 30 டிகிரியைத் தான் காட்டுகின்றது.''

அவனை உற்றுப் பார்த்தார் ஜான். பின் எழுந்து, ''நான் முடித்து விட்டேன். குழந்தைகளா! நீங்களும் சாப்பிட்டு விடுங்கள். கெர்டா, தாமதிக்காமல் உடனே கிளம்ப வேண்டும்.'' என்றார்.

''சில நிமிடங்களில் ஜான்...! சில சாமான்களைப் பெட்டிக்குள் வைக்க வேண்டியுள்ளது.''

''காலை முழுதும் என்ன செய்துக் கொண்டிருந்தாய்...? நிச்சயமாய் இதற்குள் நீ எல்லாவற்றையும் எடுத்து வைத்துத் தயார் செய்திருக்கலாம். இல்லையா...? நீ மாட்டாய். என்னை சூடேற்றிப் பார்க்க வேண்டுமே.''

கொதிநிலை குறையாமல் அருவருப்பாய் இங்கிருந்து வரவேற்பறை நோக்கி நகர்ந்தார் ஜான்.

கெர்டா படபடவென படுக்கையறைக்குள் நுழைந்தார். சீக்கிரம் சீக்கிரம் என அவசரப்படுத்தி கெர்டாவுக்குள் ஜான் புகுத்தியிருந்த படபடப்பு இன்னும் அவரை மெதுவாகத்தான் இயங்க வைக்கப் போகின்றது எனும் மனநிலையை ஏனோ ஒரு மருத்துவராயிருந்தும் ஜான் உணரவில்லை. இது ஒருபுறமிருந்தாலும், ஜான் குறிப்பிட்டது போல, ஓரிரு நாட்களுக்குண்டான பொருட்களையும் துணிமணி களையும் எடுத்து வைத்துக் கொண்டு ஏன் இவரும் தான் காலை யிலேயே தயாராகியிருக்கக் கூடாது...?! ஜான் தன் துணிமணிகளையும் பொருட்களையும், காலையில் சில நிமிடங்கள் சீக்கிரமே எழுந்து எடுத்து வைத்து விட்டார். இப்போதும் வழுக்கியது கெர்டாதான்...!

வரவேற்பறைக்குள் நுழைந்த ஜானை, முண்டியடித்துக் கொண்டு முந்திய ஸெனா, ''அப்பா...'' என அழகாய் சிணுங்கினாள். ஜான் தலை குனிந்து, தனது கால் முட்டியளவு வளர்ந்து நின்றுக் கொண்டு, தன்னைப் பார்த்து சிரித்த, புது மலர் போன்ற ஸெனாவை, ''என்னடா...'' என வாஞ்சை பொங்கக் கேட்டார்.

கெர்டா அருகிலில்லா விட்டால், ஜான் தண்மையானவர் தான்...!

கையை மேல் நோக்கி நீட்டியது குழந்தை. அப்படியே அள்ளித் தூக்கிக் கொண்டார். ''அப்பா...! நான் உங்கள் எதிர்காலத்தைச்

சொல்லவா...? எனக்கு இப்போது ஜோசியம் தெரியும். அம்மா வுடைய, டெரன்ஸுடைய, லூயிஸுடைய... என எல்லோருடைய எதிர்காலத்தையும் சொல்லி விட்டேன். நீங்கள் தான் பாக்கி.''

எங்கேயோ ஜோசிய விளையாட்டைக் கற்றுக் கொண்டு வந்து குழந்தைக் குதூகலிக்கிறது என புரிந்துக் கொண்ட ஜான், ''நான் தயார்'' என்றார்.

''சரி. என்னை இறக்கி விட்டு இப்படி உட்காருங்கள்.''

குழந்தை சொன்னதை செய்யும் போதே இந்த கெர்டா இன்னும் எத்தனை நேரம் ஆக்கப் போகிறாளோ எனத் தோன்ற, தணிந்திருந்த வெறுப்பு அவனுக்குள் மீண்டும் மூண்டது. கோபமூட்டிக் கொண்டேயிருக்கும் இந்த வீட்டை விட்டு, எரிச்சலூட்டிக் கொண்டேயிருக்கும் - துடிக்கும், அழும், மூக்கைச் சிந்தும் - நோய்வாய்ப்பட்ட சீக்காளிகளை விட்டு,ஓடியேயாக வேண்டும். வழியெங்கும் நிறைந்திருக்கும் வனாந்திரம், தளிர் இலைகள் வெளியேற்றும் பச்சை வாசம், குழந்தைத் தனம் மிகுந்து நோய் நொடியே இல்லாதது போல நம் சொந்த உடம்பையே மறக்க வைக்கவல்ல லூசியுடனான தெய்வீகத் தனிமை, எல்லாம் இந்தக் கணம் ஜானுக்குத் தேவையாயின. தாமதம் ஏற்புடையதாயில்லை.

தன் கையுள் அகப்பட்டிருந்த சீட்டுக் கட்டின் சீட்டுகளை, கருத்துப் பொதிந்த ஈடுபாட்டுடன், கை கொள்ளாமல் குலுக்கிக் கெண்டிருந்தது குழந்தை. குலுக்கப்பட்ட சீட்டுக்களிலிருந்து ஒரு சீட்டை உருவிப் பார்த்த குழந்தை, ''வாவ்,... கிங் ஹார்ட்ஸ். அப்பா. நீ அதிகாரம் செலுத்தவல்ல ராஜா மாதிரியானவர். சரி. இனிதான் எதிர்கால ஜோசியம் ஆரம்பமாகின்றது'' என ஒரு கை தேர்ந்த ஜோசியக் காரனாய் பேசியபடி சொன்னது: ''உன் வலப்பக்கம் ஒரு சீட்டு. இடப்பக்கம் ஒன்று. உன் தலை மீது ஒன்று - இது தான் உன்னை அடக்கி அதிகாரம் செய்ய வல்லது. உன் காலடியில் ஒன்று. ம். காலைத் தூக்கு. ஆங்... அப்படித்தான். இது, நீ அடக்கி அதிகாரம் பண்ண வல்லது. கடைசியாய் - உன் இருதயத்தில் ஒன்று. இது தான் முக்கியம்.''

இவ்வாறு விவரித்தபடி தனித்தனிச் சீட்டுக்களாய்த் திருப்பிப் போட்டு ஜானின் உடம்பில் பதித்த குழந்தை, ''இப்போது ஜோசிய முடிவினைப் பார்க்கலாம்'' என்று மறைத்துத் திருப்பிப் போடப்

பட்டிருந்த ஒவ்வொரு சீட்டாய் எடுத்து ஆரூடம் சொல்ல ஆரம்பித்தது.

''உங்கள் இடப்பக்கமிருப்பது டைமண்ட் ராணி'' என்று மேதாவித்தனமாய் ஒரு நீண்ட உள் மூச்சினை விடுவித்த ஸெனா, ''உங்கள் மனதுக்கு நெருக்கமாய் - வைரம் போல தகதகத்த படி - ஒரு பெண் தான் உள்ளாள்'' என்றாள்.

'அது ஹென்ரீட்டா' என தாமதியாது நினைத்துப் பூரிப்பானார் ஜான். அக் கணத்தில் ஸெனாவின் ஜோசியத்தின் மீது ஆவலும், அதன் புனிதத்துவத்தின் மீது நம்பிக்கையும் துளிர்த்தன ஜானுக்கு.

''உங்களின் இடப்புறமிருப்பது எட்டு ஸ்பேட். இது ஒரு ரகசிய எதிரியை - ஒரு கொடூரனைக் குறிப்பிடும். அப்படி ஏதாவது விரோதம் உள்ளதா அப்பா...?''

''எனக்குத் தெரிந்து இல்லையம்மா.''

''உங்கள் தலையிலுள்ள சீட்டு இது'' என்றபடி எடுத்துத் திருப்பிப்பார்த்த ஸெனா, ''ராணி - ஹார்ட்ஸ்...! அப்படியானால், உங்களைத் தன் மனதில் பூட்டி வைத்து ஒரு பெண் இருக்கிறாள். அவள் உங்களை விடாமல் எப்படியாவது அபகரித்து உங்களை ஆளத்தான் போகிறாள்; பார்த்துக் கொண்டே இருங்கள்...!''

'வெரோனிக்கா' என நினைத்துக் கொண்டார். உடனேயே, 'எத்தனை முட்டாள் தனமான சிந்தனை. என் வாழ்க்கையை விட்டுப் பல வருடங்களுக்கு முன்னால் தொலைந்து விட்ட வெரோனிக்கா, இப்போதைய என் வாழ்க்கைக்குத் துளியும் சம்பந்தமில்லாதவள்' எனவும் சமாதானமானார். ஆயினும் குழந்தை கடைசியில் சொன்ன வார்த்தைகள் அவருக்குள் சிறு பிரமையை உண்டுபண்ணத் தவறவில்லை.

''இப்போது உங்கள் காலடியில் கிடக்கும் சீட்டு. நீங்கள் அதிகாரம் செலுத்தும் நபர்'' என்றபடி குழந்தை அந்தச் சீட்டினை எடுத்துப் பார்த்து, ''இதுவும் ராணிதானப்பா'' எனும் போது, இதற்கு விடையாய் உள்ளே நுழைந்தார் கெர்டா. ''எத்தனை ராணிகளப்பா உனக்கு!'' என சிரித்தது குழந்தை.

''நான் தயார் ஜான். கிளம்பலாம்.''

''ஒரு நிமிஷம்... ஒரே ஒரு நிமிஷம் அம்மா, இதோ ஒரு சீட்டுத் தான் பாக்கியுள்ளது. அனுப்பி விடுகிறேன்'' என்று துரிதமான ஸெனா, ''இதுதானப்பா எல்லாவற்றையும் விட மிக முக்கியமானது.

உங்களை எது சூழ்ந்திருக்கிறது என சொல்ல வல்ல சீட்டு'' என்படி ஜானின் மார்பில் வைக்கப்பட்டிருந்த சீட்டினை எடுத்துத் திருப்பிப் பார்த்தாள்.

திடுக்கிடும் பெருமூச்சினை வெளி விட்டாள். ''ஓ... இது ஏ' ஸ் ஸ்பேட்...! இது மரணத்தைக் குறிக்கும் சீட்டப்பா...!'' என்று கண்ணகல சொன்னது குழந்தை.

''உன் தாயிருக்கிறாளில்லையா...'' என ஆரம்பித்த ஜான், ''அவள் கார் ஓட்டும் திறனால், நாங்கள் லண்டனுக்குப் போகும் வழியில் எவன் மீதாவது ஏற்றி வைக்கப் போகிறாள். அதைத் தான் இந்தக் கடைசிச் சீட்டுச் சொல்லுகின்றது...'' என விட்டேற்றியாய் விளக்கி விட்டு, ''கிளம்பு கெர்டா. வருகிறோம் குழந்தைகளா...! அமர்க்களம் போட்டுப் படுத்தாமல் இரு தினங்கள் சமர்த்தாக இருக்க வேண்டும் தெரிகிறதா...? என்ன வேண்டுமோ அதை வேலையாட்களிடம் கேட்டுக் கொள்ளுங்கள்'' என விடைபெற்றுக் கொண்டார்.



மிக்டே'வுக்குப் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே இஷ்டமில்லை. சனிக்கிழமைக் காலை, பதினொரு மணியைக் கடந்த பிறகு சாவகாசமாய்ப் படியிறங்கித் தோட்டத்துக்கு வந்தார் மிக்டே. படுக்கையிலேயே காலைச் சிற்றுண்டியை முடித்து, படுத்தபடி ஏதோ புத்தகத்தை மேய்ந்து, மறுபடியும் ஆழமாய்த் தூங்கிப் போய், இப்போது தோட்டத்துக்கு வந்து சேர்ந்தார் மிக்டே. களைப்பாய் உணரும் தருணங்களில், இது போல சோம்பேறியாய்ப் படுக்கையோடு கிடப்பது பரம சுகமாய்த் தோன்றியது அவருக்கு.

என்றுமில்லாமல் இன்று, வசந்தக் காலத்தின் கடுங்குளிருக்கு இதமாய் சூரிய ஒளி பரவியிருந்தது. சாய்வு நாற்காலியில் அமர்ந்து காலை செய்தித்தாளை அலசிக் கொண்டிருந்தார் ஹென்றி. அவருக்கு மிக்டே மீது ப்ரீதி அதிகம். எனவே வாசற்கதவைத் திறந்து தோட்டத்தில் இறங்கிய மிக்டேவைக் கண்டதும், ''வா, வா, அருமை மிக்டே...'' என வாயார வரவேற்றார்.

''ரொம்ப நேரமாக்கி விட்டேனோ...?'' என்று தெரியாதது போல கேட்ட மிக்டே'வுக்கு, ''பரவாயில்லை. நல்ல வேளையாக மதிய உணவு முடிந்து விடவில்லை'' என நகைச்சுவையாய்ப் பதில் தந்தார் ஹென்றி.

அவரருகிலிருந்த இருக்கையில் அமர்ந்த மிக்டே, மிக உணர்ந்து சொன்னார்: ''இங்கிருக்க எனக்கு மிகவும் பிடித்துள்ளது.''

''ரொம்ப தளர்ச்சியாய் தோன்றுகிறாய் மிக்டே.''

''அதெல்லாம் இல்லை. நான் நலமாய்த் தானிருக்கிறேன்'' என்றவர், ''நாம் மிக விரும்பும் நபர்களோடு, விருந்தாளியாய், எந்த வேலையும் செய்யாமல், வசந்தத்தையும் வாழ்க்கையையும் மட்டும் முங்கி முங்கி அனுபவிப்பதில்தான் எத்தனை சுகந்தம் நிறைந்துள்ளது...!'' என்ற மிக்டே'வின் உச்சந்தலையில் கை பதித்து வாஞ்சையாய் அழுத்திய ஹென்றி, ''மிக மோசமானதாகக் கூட இருக்கும்...'' என்றார். தான் சொல்லியதை நியாயப்படுத்தும் வகையில் சொன்னார் : ''மதியம் 12.15க்கு எட்வர்ட் வருகிறார்.''

''அப்படியா?'' என்று ஓரிரு நொடிகள் பேசாதிருந்த மிக்டே, ''நீண்ட நாட்களாக நான் எட்வர்டைச் சந்திக்கவேயில்லை'' என்றார்.

''அவர் மாறவேயில்லை'' என்றார் ஹென்றி. ''அப்படியே இருக்கிறார். ஏய்ன்ஸ்விக்'கிலிருந்து வருவதேயில்லை. எப்பவாவது தான் வருகிறார்.''

ஏய்ன்ஸ்விக் - மாகாணத்தின் பெயர் காதுகளில் மோதி எதிரொலிக்க, ''ஏய்ன்ஸ்விக்'' என அளவு கடந்த ஏக்கத்தோடு சொல்லிப் பார்த்துக் கொண்டார் மிக்டே. பசுமை நிறைந்த ஏய்ன்ஸ்விக் நினைவுகள். அங்கிருந்து கொட்டமிட்டக் காலங் களெல்லாம் மளமளவென நினைவிலாடின. நாளை ஏய்ன்ஸ்விக்'குக் குப் புறப்படப் போகிறோம் என்ற குதூகல எண்ணத்தில் இரவெல் லாம் தூங்காது படுத்திருப்பார், மிக்டே. மறுநாள் காலை - கொம்மாளத்துக்கென்றே விடியும். ஒரு குக்கிராமம் போன்ற மாகாணம். முன்னமேயே ரயில் காப்பாளரிடம் சொல்லி வைத்தால்தான் லண்டன் எக்ஸ்பிரஸ் ஏய்ன்ஸ்விக் நிறுத்தத்தில் நிற்கும்! இல்லையென்றால் போயே விடும்! காவலாளி வந்து அழைத்துப் போக நிலையத்தில் காத்திருப்பான். பிறகு கார்ப் பிரயாணம் - மரங்களூடே சீறி, ஆளரவமற்ற சிறு சாலைகளூடே பாய்ந்து, முடிவில், இந்த மரக்கூட்டங்களெல்லாம் கடந்து ஒரு பெரிய திறந்த வெளியில் பார்வை விரியும்போது, பிரதானமாய், எப்போதும் வெள்ளை வெளேர் நிறத்தில் அழுக்கின்றி பளபளக்கும் பங்களா, தன் அன்புக் கைகள் நிட்டி வரவேற்கும். தாத்தா ஜோஃப்ரி, அங்குமிங்கும் ஒட்டுப் போடப்பட்ட கம்பளி அங்கி ஒன்றைப் போர்த்திக் கொண்டு, வாயெல்லாம் பல்லாய் நல்வரவு சொல்வார்...!

விசாரிப்பு முடிந்ததும், வாசலிலேயே, ''அன்பு இளைஞர்களே....! ஆரம்பமாகட்டும் உங்கள் இளமைக் கொண்டாட்டம்'' என மனமார வழி விட்டு நிற்பார் ஜோ. கூத்தும் கொம்மாளமுமாய் அப்படி மகிழ்வார்கள். ஹென்ரீட்டா அயர்லாந்துக்காரி. எட்வர்ட் ஈடன் நாட்டினன். ஐரோப்பாவின் சந்தை மிகுந்த வடக்குப் பகுதியைச் சேர்ந்த மிக்டே. எப்படியாப்பட்ட சொர்க்க நாட்கள் அவை...!

ஆனால் அனைத்தும் எட்வர்டை மையப்படுத்தித்தான் நடக்கும். எட்வர்ட், நல்ல உயரம். கொஞ்சம் தன்னம்பிக்கையற்று அதைரிய மானவர்; ஆகவே மிருதுவானவர். ஹென்ரீட்டா இருந்து விடும் காரணங்களால், எட்வர்டால் அதிகம் கண்டுகொள்ளப்படாமலேயே இருப்பார் மிக்டே.

புது வீட்டுக்கு வந்த விருந்தாளி போல பெரும் கூச்சத்தோடு தன்னை ஒரு கூட்டுக்குள்ளேயே மறைத்துக் கொண்டு வாழும் குணாதிசயம்தான் எட்வர்டிடம் செழித்திருக்கும், ஆதலால், ஒரு நாள் தோட்டக்காரன் ட்ரெம்லெட், ''இந்த அத்தனையும், வீடு வாசல் நில-புலம் எல்லாம், ஒரு நாள் எட்வர்டுக்கு என்றே சொந்தமாகப் போகின்றன'' என்று சொன்னபோது, மிக்டே, வெலவெலத்துப் போகும்படி ஆச்சரியமானார்.

''எப்படி ட்ரெம்லெட்? அவர் ஜோஃப்ரியின் பிள்ளை யில்லையே.''

''எட்வர்ட் வளர்ப்பு மகன், மிக்டே. எனவே அசையாச் சொத்துக்கள் அவருக்குத்தான் வரும் என்கின்றனர். ஜோஃப்ரியின் ஒரே மகளான லூசிக்கு, அவர் பெண் என்னும் காரணத்தால், எந்தச் சொத்தும் செல்ல வாய்ப்பில்லை. ஹென்றி மாப்பிள்ளையாகிறார். ஆக, சட்டரீதியாக, இவற்றை அடைய, எட்வர்டுக்கு மட்டும் தான் பாத்யதை உள்ளது.''

எட்வர்ட், ஏய்ன்ஸ்விக்'கில் தனியாய் வாழ்ந்து வருகிறார். ரொம்ப அரிதாய் தான் வெளி வாசல் வந்து செல்கிறார். இந்தச் சொத்து விஷயத்தில் லூசி தன் கருத்தைச் செலுத்துகிறாரா என சந்தேகம் வருவதுண்டு, மிக்டேவுக்கு. ஆனால் லூசியோ, இதென்றில்லை, வேறு எதிலாவது கருத்தைச் செலுத்திக் கவலைப்படுவாரா என்பது சந்தேகமே!

இப்படியெல்லாம் இங்கு விஷயங்கள் நடந்துக் கொண்டிருந் தாலும், லூசியைப் பொறுத்தமட்டில், ஏய்ன்ஸ்விக், அவரின் விருப்ப வீடு. தன்னை விட இருபது வயது இளைய எட்வர்ட்,வயதான அப்பா ஆகிய ரத்த பந்தங்கள் உறையும் இல்லம். அக்காலத்தில், லூசியின் அப்பா, ஏய்ன்ஸ்விக்'கில் பெரும்புள்ளியாய் வளைய வந்தவர். ஏகப்பட்ட சொத்து. கொடை பணக்காரர். இவற்றில் பெரும் பகுதி லூசிக்கு என ஜோஃப்ரி தந்து விட, ஒப்பிட்டுப் பார்க்கையில் எட்வர்ட் ஏழையாய் தோன்றினார். அவர் வாழ்க்கை செலவுக்குத் தேவையான சொத்துக்கள் மட்டும் எட்வர்டுக்கு வந்தன; ஆனால் நிலைமை அப்படியே இருந்து விடவில்லை.

சொத்தின் பல பகுதி லூசிக்குச் செல்லக் காரணம், எட்வர்ட், படாடோபமாய் பணத்தைச் செலவழித்து வாழும் வகை போன்றக் காரணங்களால் அல்ல. நல்ல சம்பாத்தியம் மீட்டுத் தந்த அரசு எந்திரத்தில் தான் பணியிலிருந்தார் எட்வர்ட். ஆனால் ஏய்ன்ஸ்விக்'

கில் வந்து வாழ வேண்டும் என தன் வேலையை ராஜினாமா செய்து வந்த போது, இந்த பங்காள உட்பட பல அசையா சொத்துக்கள் எட்வர்டுக்கு வந்தன. எனவே இதர சொத்துக்கள் லூசிக்குச் சென்றன. எட்வர்ட் ஒரு புத்தகப் புழு. வெளியாகும் அனைத்துப் புத்தகங்களின் முதல் பிரதியையும் பெற்று, படித்து, ஆசிரியருக்கோ அல்லது பதிப்பகத்தாருக்கோ விமர்சனக் கடிதம் எழுதி வாழ்வது அவரின் தினசரி பணி. இப்படிப்பட்டவர் தீர்க்கமாய் முடிவெடுத்துத் தன் வாழ்நாளில் செய்த ஆர்வமான ஆழமான-மனம் ஒப்பிய செயல் : இவரின் உறவான ஹென்ரீட்டாவைத் தன்னை மணந்துக் கொள்ளும்படி கேட்டது...! மிக ஆர்வமாய் மூன்று முறை முயன்றிருக்கிறார்.

கடந்த காலத்தின் பல நிகழ்வுகளைக் கதம்பமாக்கி நினைத்த வண்ணமிருந்தார் மிக்டே. எட்வர்ட் வருவதால் மனம் மகிழ்கிறதா இல்லையா என்று சரிவர பிரித்தறிய முடியவில்லை. வந்தால் வந்து விட்டுப் போகட்டும் என்று வைக்கும்படியானவர் அல்ல எட்வர்ட்...! எட்வர்ட் போன்றோரிடம் பத்தோடு பதினொன்றாகப் பழகுவது கடினம். தனிப்பட்ட மிருதுவான முத்திரை கொண்டவர் எட்வர்ட். இதோ, இப்பொழுது இங்கு வரவுள்ள இந்த ஏய்ன்ஸ்விக் மாகாணத்தின் எட்வர்டும், ஆரம்பக் காலங்களில் லண்டன் உணவகங்களில் உள்ளே நுழையும் மிக்டே'வை வரவேற்க எழுந்து ஆசையாய் கை குலுக்கிய இளைஞன் எட்வர்டும், மனத்தளவில் ஒருவரே. மனம் நாடிய அளவில் ஒருவரே. மன்ம் விரும்பிய அளவில், இன்னும் மாறாத, ஒருவரே. ஆம்...! என்ன ஈர்ப்போ... அல்லது விட்ட குறை தொட்ட குறை எனும் கஷ்டமோ... முதன் முதலில் பார்த்த கணம் முதல், எட்வர்டை மனமாழம் வரை விரும்புகிறார் மிக்டே. இன்னமும்...! துளியும் குறையாமல்...!

எட்வர்டின் நினைவால் காதல் துக்கம் அடைய இருந்த மிக்டே'வின் மனோநிலையை, ஹென்றியின், ''லூசி எப்படி யிருக்கிறாள்...? நீ என்ன நினைக்கிறாய்..?'' என்ற கேள்வி காப்பாற்றியது.

''அவள் கொடுத்து வைத்தவள். ஒரு காதில் விழும் எதுவும் மறு காது வழியே வெளியேதான் போகுமே தவிர, கருத்துக்குள் நுழைந்து இம்சிக்காது. அப்படி ஒரு குழந்தை. மாறவேயில்லை அவள்.''

''ஆமாம்...'' என்று குடித்துக் கொண்டிருந்த சிகரெட் பைப்'பை இழுத்து உறிஞ்சியவர், ''ஆனாலும் மிக்டே...'' என்று சொன்னார் :

''சில சமயங்களில், அவளைப் பற்றிய பயமும் கவலையும் எனக்கு அதிகமாய் எழுகின்றன.''

''பயம்...? கவலை...?'' - அவரை ஆச்சரியமாய்ப் பார்த்த மிக்டே கேட்டார்: ''ஏன்...?''

லூசியைப் பற்றி உண்மையாகவே கரிசனம் கொண்டவராய்த் தலையை அசைத்து உணர்த்திய ஹென்றி, ''அவளிடம், அவள் செய்யக்கூடாத சில விஷயங்கள் இருக்கின்றன என்பதை எத்தனை முறை உபதேசித்தாலும் உணர்ந்துக் கொள்ள மாட்டேன் என்கிறாள்'' என்றார்.

மிக்டே விழித்தாள். அவர் தொடர்ந்தார் :

''எந்த நேரத்தில் எதைச் செய்வது என்றே தெரியாமல் நடந்துக் கொள்கிறாள். அரசு செயலகத்தில் ஒரு விழா. அந்த விழாவின் புனிதத்தையே அலட்சியப்படுத்தினாள் இவள். அவ் விழாவின் சாப்பாட்டு வேளையில் ஒரு கூட்டத்தை அமைத்துக் கொண்டு மெல்லிசைப் பாட்டெல்லாம் பாடி விளையாடி மானத்தை வாங்கினாள்! ஒத்தே வராத இரு விரோதிகளை அடுத்தடுத்து அமர வைத்து, விளையாடுகிறேன் பேர்வழி என ஏதோ ஒரு விளையாட்டை விளையாடி, அவர்களுக்குள் மேலும் கலகம் ஏற்படுத்தி விட்டு விட்டாள். களேபரம்! என்ன செய்ய...? இருந்தாலும் எதிலும் குற்றம் காணப்படாமல் தப்பி விடுகிறாள். கேடி...! ஒரு சிரிப்பு... 'என்ன செய்வது, இது தான் என் குணம்' என்பது போன்ற பாவமான பார்வை... இவற்றால் தப்பித்து விடுகிறாள். எனக்கல்லவோ தர்ம சங்கடமாகின்றது. வேலைக்காரர்களையும் விட்டு வைப்பதில்லை. அவர்களுக்கு எத்தனை தொல்லைகள் ஏற்படுத்துகிறாள். செய்த வேலையையே அவர்கள் மீண்டும் மீண்டும் செய்ய வேண்டி வருவது போல நடந்துக் கொள்கிறாள். பாவம் அவர்கள்...!''

''இப்போது நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் எனத் தெளிவாகிறது, ஹென்றி'' என்றார் மிக்டே, ஆழ்ந்த சிந்தனையோடு. ''நாம் செய்தால் மற்றவர்களுக்கு எந்த அளவு கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டுபண்ணுமோ, அந்த சில்மிஷங்களெல்லாம், லூசி செய்யும் போது சாதாரணமாகி விடுகின்றன. உண்மைதான். அவளின் குழந்தைக் தனமான துடிப்பா...? ஈர்க்கும் அந்தக் குழந்தை முகக் காந்தமா...? ஆச்சரியமாயிருக்கிறது! அவளைக் காப்பது எது...?''

இரு தோள்களையும் ஒரு சேர மேலே தூக்கிக் குலுக்கி, 'என்ன கஷ்டமோ' என்பது போல பார்த்தார் ஹென்றி. ''அவளோடு நான் வாழ்க்கைப்பட்டதிலிருந்து இப்படித் தானிருக்கிறாள் அவள். எதற்கும் ஓர் எல்லை - வரைமுறை உண்டு என அவள் எண்ணுவதே கிடையாது. ஏனிப்படி...? இந்த அளவுக்கா குழந்தை போல ஒருவர் நடந்துக் கொள்ளயியலும்..?'' என்றவர் அதிசயித்துச் சொன்னார்: ''இப்படி அனைவரையும் அலைக்கழிப்பதை உணரயியலாத லூசி, மதிய சாப்பாடு சாப்பிட்டாற் போலக் கருதி, ஒரு கொலை செய்தால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.''

★ ★ ★ ★

பட்டறையிலிருந்த தன் காரைப் பழுதுபார்த்துக் கொண்டு வந்து கொடுத்த தொழிலாளியிடம், ''என்னாயிற்று இவனுக்கு...? ஏன் நேற்று கண் விழிக்காமல் அப்படி அல்லாடினான்...?'' என ரொம்ப வேண்டிய உறவின் ஆரோக்கியத்தை விசாரிப்பது போல விசாரித்தாள் ஹென்ரீட்டா. காரைத்தான்! அவன் சொன்ன தொழில்நுட்பக் காரணங்களுக்கு, தான் சாந்தமாகும் வரைக் குறுக்குக் கேள்வியெல்லாம் கேட்டு விட்டு காரை எடுத்துக் கொண்டு கிளம்பினார் ரீட்டா.

''கார் ஓட்டுவதை ஒரு திருவிழா போல ஆக்கி விடுகிறீர்கள்'' என்ற தொழிலாளிக்குப் பெருமிதப் புன்னகையைப் பதிலாக்கி, ஹாலோ நோக்கிப் பயணமானார். தன் முடிக்கற்றைகளையெல்லாம் பிய்த்தெறிவது போலக் கிழித்தக் காற்றை மனசார ருசித்தபடி காரில் பறந்தார் ரீட்டா. கார் ஓட்டும் போது, அந்தச் சுகந்தத்தை ரசிக்க விடாது அருகில் யாராவது தொணதொணக்கா வண்ணம் தனிமையில் பயணிப்பதையே வெகுவாய் விரும்பினார் ரீட்டா. காரோட்டும் மகிழ்ச்சியையும், இயற்கையோடு கை கோத்துக் கொண்டு மிக இணையும் அத் தருணங்களையும் அத்தனை விரும்பினார், இந்தச் சிற்பி.

காரோட்டும் போது வழக்கப்பட்ட - அறிவிக்கப்பட்ட பாதையையே தொடராமல், புதுசுபுதுசாய்ப் பாதைகளைக் கண்டறிந்து அவற்றுள் நுழைந்து செல்வது, இன்னும் சீக்கிரமாய்ச் சென்றடைய வழிகளை ஆராய்வது, சந்து பொந்தெல்லாம் போய் வழி தேடுவது என வித்தைகள் செய்யாவிடில், காரோட்டிய திருப்தியே இராது

இவருக்கு. போக்குவரத்து நெரிசலில் நுணுக்கமாய்க் காரைச் செலுத்தி, அனைவருக்கும் முன்னால் முன்னேறுவதில் வெற்றிப் பெருமிதம் பொங்கும் ரீட்டாவுக்கு. இப்போது கூட தென் கிழக்குப் பகுதியில் தான் புதிதாய்க் கண்டறிந்துள்ள பாதை வழியாக, அங்கிருக்கும் பட்டித் தொட்டியினரெல்லாம், இவள் கார் போகும் மின்னல் வேகத்தைக் கண்டு பயந்து திகைப்பதை ரசித்த வண்ணம் லண்டனுக்குப் பறந்துக் கொண்டிருந்தார் ரீட்டா.

இப்போது வழியில் தென்பட்ட மிக நீளமான அணைக்கட்டு ஒன்றினைக் கடந்துக் கொண்டிருந்தார் ரீட்டா. மணி மதியம் பன்னிரண்டரை. அணைப்பாலத்தின் குறிப்பிட்ட ஒரு பகுதியினைக் கடக்கும் போது காரினை மெதுவாக்கிக் கொண்டார். இந்தப் பகுதியின் கோணத்திலிருந்து, அணையின் பக்கங்களிலெல்லாம் விரிந்துக் கிடக்கும் இயற்கைச் சொத்துக்களை, ஆனந்தக் கண்ணீர் மல்க ரசித்துப் பார்ப்பது இவர் வழக்கம். பாலத்தின் நுனியிலிருந்து கீழ் நோக்கிக் 'கடகட'வென விழத் தொடங்கும் சாலைப் பகுதியில் காரை நிறுத்தியே விட்டார். எல்லாப் பக்கங்களிலும் அதளபாதாளம்; அது முழுதும் எங்கெங்கும் மரம், மரம். தங்க நிறத்திலிருந்து பச்சைக்கும், அதிலிருந்து நழுவி மஞ்சளுக்குமாய் மாறிக் கொண்டு, சுற்றிவர மர இலைகளின் போர்வை. வசந்தக் கால சூரிய ஒளியில், பிரகாசமாய், தங்க அலங்காரத்தில் மின்னும் அதிசய உலகமென, வளைந்து விரிந்து கண்ணுக்கெட்டும் தூரம் வரை வளர்ந்திருந்த காடு.

'இறைவன் தான் எத்தனை சிறந்த சிற்பி' - வியந்துக் கொண்ட ரீட்டா, 'நான், சிற்ப உலகின் பிதாமகனாம்...!' எனத் தன்னைத் தானே பரிகாசமும் செய்துக் கொண்டார்.

வேறெந்தப் பருவத்தையும் விட, செழிப்பான வசந்தக் காலம் மட்டுமே பிரமாதம்...! வாழ்க்கையின் ஏதோ ஒரு நொடியில் உடலின் ஒவ்வொரு செல்லும் உணரும் ஆழமான உணர்வுபூர்வ சந்தோஷத்தை ரீட்டாவின் அடிமனம் இப்போது உணர்ந்தது. உலகின் அழகினைப் புரிதல். புரிந்து வியத்தல். வியந்து, அந்த ஏகாந்த சந்தோஷத்தில் புதைந்துக் கரைதல். தனக்குத் தானே மகிழும் பேரின்ப நிலை இது. ஒரு கலைஞனால் மட்டுமே அடையாளம் காணவல்ல தருணம். அது வாய்த்துள்ளது ரீட்டாவுக்கு, இப்பொழுது. 'இது போல.... இந்நொடி போல.... இக் கணத்தின் பின்ன அளவு போல, மனத்தில் மயான நிம்மதி நிலவும் ஒரு தருணம், மீண்டும் ஒருநாள் எனக்கு வாய்க்காது.' - எண்ணிக் கொண்டார் ரீட்டா. 'இனி எதற்கு வாழ்வு...?'

நாற்புறமும் எங்கெங்கும் விரிந்துக் கிடக்கும் பச்சை மரப் பள்ளத்தாக்கை வைத்தக் கண் வாங்காமல் பார்த்துப் பார்த்துப் பூரித்துக் கொண்டிருந்தார் ரீட்டா. பள்ளத்தின் மர இலைகள் ஆடும் போது, பச்சை அலைகள் எழுந்து பின் தங்களுக்குள்ளேயே விழுந்துக் கரைந்துக் கொண்டிருப்பதாய்ப் பட்டது; அவை ஆக்ரோஷ அலை ஓசையையும் எழுப்பின.

பிறகு பிரியா விடை பெற்றுக் கிளம்பி, காரை வழக்கம் போல் புயலென செலுத்தி, குன்றுகளையெல்லாம் கடந்து, ஆளரவமற்ற மரக் கூட்டத்துக்குள் தனியாய் விரைந்து, விழுந்து விழுந்து கீழ் நோக்கிச் சென்ற சாலைகளில் லாகவமாய் ஓட்டி, 'ஹாலோ ஹாலோ' என சந்தோஷமாய்ப் பாடிய வண்ணம் வந்துக் கொண்டிருந்தார் ரீட்டா.

★ ★ ★ ★

ஹென்ரீட்டா வந்த அதே வேகத்தில் காரை ஹாலோவுக்குள் நுழைக்கும் போது, மாடியின் பால்கனியில் அமர்ந்திருந்த மிக்டே, மகிழ்ச்சிப் பூரிப்பில் கையசைத்து வரவேற்றார். தனக்குப் பிடித்த மிக்டேவைப் பார்த்ததில் ரீட்டாவும் உவகைக் கொண்டார்.

வாசலில் எட்டிப்பார்த்த லூசி, ''ஓ... ஹென்ரீட்டா'' என வாயகலக் கூப்பிட்டு விட்டு, ''வா, வா. உன் காரை குதிரை லாயத்தில் அடைத்துத் தவிடு பொடியை மசித்து ஊட்டி விட்டு நீ வரும் போது, மதிய உணவு தயாராகியிருக்கும்'' என்றார்.

''துளைத்துத் தாக்கும்படியாக இருந்தது, லூசியின் வரவேற்பு'' என்று லூசி வரவேற்றதை நினைவு கூர்ந்தார் ரீட்டா. மிக்டேவுடன் மாடி ஏறிக் கொண்டிருந்தபோது இப்படிச் சொன்னார்: ''நான் ஐரீஷ்காரி. இருந்தாலும் என் மூதாதையர் போல வெறும் குதிரைகளைக் கட்டிக் கொண்டு அழும் அவர்களின் நிழலிலிருந்து நான் தப்பித்து விட்டதில் அத்தனை பெருமை எனக்கு! குதிரை குதிரை என்று ஜபித்தபடி இருக்கும் மக்களோடு வளரும் போது, ஏதோ நாம் தான் குதிரைகளின் சிருஷ்டிகர்த்தா எனும் இறுமாப்பில், அவற்றைப் பற்றிப் பொறுப்பாய், கவலைப்படாமலேயே விட்டு விடுகிறோம். லூசி என்னடாவென்றால், நான் ஓட்டி வந்த வேகத்தைப் பார்த்து, நான் காரைக் குதிரை போல ஓட்டுவதாய்ச் சொல்லிக் காட்டுகிறார்.'' சற்றே நிறுத்தியவர், ''உண்மை தான் அது.

சத்தியமாய் ஒப்புக் கொள்கிறேன். இதில் சொல்லிக் காட்ட என்ன இருக்கிறது...?'' என்றும் சொன்னார்!

''லூசி குத்திக் காட்டி நொறுங்கத்தான் செய்கிறார்'' என்று ஏற்றுக் கொண்ட மிக்டே சொன்னார்: ''இன்று காலை என்னைப் பார்த்து, நான் இங்கிருக்கும் போது எத்தனை அடங்காப்பிடாரி யாயிருந்தேனோ அப்படியே இப்போதும் நடந்துக் கொள்ள வேண்டும் என்றார்.''

மிக்டேவின் இக் கூற்றினை மனத்தில் நிறுத்திக் கொண்டார் ஹென்ரீட்டா. கேட்டார் : ''யாரெல்லாம் வருகின்றனர்?''

''ஜான் குடும்பம். எட்வர்ட் சற்று முன் தான் வந்தார்.''

''எட்வர்ட்...? வெகு சந்தோஷம்...! அவரைப் பார்த்து யுகம் ஆகிறது. வேறு யாராவது...?''

''டேவிட். லூசியின் எதிர்பார்ப்புப்படி இங்கு தான் உன் உதவி நிஜமாய்த் தேவைப்படுகின்றது. அவன் நகம் கடிக்கும் பழக்கத்தை நீதான் நிறுத்த வேண்டுமாம்...!''

''என் குணத்துக்கு ஒவ்வாத வேலை இது'' என்றார் ஹென்ரீட்டா. ''மற்றவருடன் குறுக்கிடுவதை நான் வெறுக்கிறேன். நான் அவர்களுடைய தனிப்பட்ட பழக்க வழக்கங்களைக் கண்காணிப்ப தாய் என்னால் கனவு கூட காண முடியாது. லூசி என்னதான் சொன்னாள்?''

''இந்த அர்த்தத்தில்தான் சொன்னாள். சிந்திக்கிறேன் பேர்வழி என்று நகம் கடித்துக் கடித்து அவன் விரல் முழுதும் ஆதாம் ஆப்பிள் போன்ற வடிவத்திலுள்ளதாம்.''

''இதில் போய் நான் செய்யவோ சொல்லவோ என்ன உள்ளது...?'' - ரீட்டா ஓர் அலறலாகவே கேட்டார்.

''நீ கெர்டாவிடம் கருணையோடு நடந்துக் கொள்ள வேண்டுமாம்'' என்று தொடர்ந்த மிக்டே, ''துப்பறியும் துறையின் பிரபலம் ஒருவர் நாளை நம்முடன் மதிய உணவு பகிர்ந்துக் கொள்வதாய் ஏற்பாடு'' என்று கூடுதல் தகவலும் தந்தாள்.

''அவருக்காக நாம் ஏதாவது கொலை நாடகம் அரங்கேற்றப் போகிறோமா...?''

''அப்படி ஏதும் எனக்குத் தெரியவில்லை. பக்கத்து வீட்டுக் காரராம். அழைத்திருக்கிறார்கள். விருந்துக்காகத் தான் வரப் போகிறார்.''

இப்படிச் சொன்ன மிக்டே, தன் குரல் சற்றுத் தாழ்ந்து மாற, ''அதோ... நம்மைப் பார்க்க எட்வர்ட் வருகிறார்'' என்றாள்.

எட்வர்ட், அமர்ந்திருந்த இரு இளம் பெண்களையும், சிறு புன்முறுவலை உதிர்த்தபடி நெருங்கி நின்றார். அவர் நெடுநெடு உயரத்துக்கு அவரின் மெலிந்த தேகம் அழகூட்டிற்று.

''ஹாய் ஹென்ரீட்டா. உன்னைப் பார்த்து ஒரு வருடத்துக்கும் மேலாகின்றது. எப்படியிருக்கிறாய்?''

''எட்வர்ட்'' என்றழைத்த ஹென்ரீட்டாவால் மேலே பேச முடியவில்லை. எத்தனை அருமையான எட்வர்ட்! அந்த நளினமான புன்னகை! கண்களின் இரு வெளி நுனிகளிலும் துருத்தித் தெரியும் வில் வளைவு! ஒல்லியான தேகமாயினும் இளமை வெடிக்கத் தெறித்து நிற்கும் எலும்புகள் - அவை கொட்டும் கவர்ச்சி! 'அந்தக் காம எலும்புகள் தான் என்னைக் கவர்ந்திருக்கின்றன' - நினைத்துக் கொண்டார் ரீட்டா. தன்னைக் கடந்து எட்வர்ட் நோக்கி நீளும் அபிலாஷையின் கதகதப்பு ரீட்டாவைக் காதல் கை கொண்டு நெறித்தது.

எட்வர்டை எத்தனை நேசித்தவள் இந்த ரீட்டா...! அவரருகிலில்லாததால், கால ஓட்டத்தில் அவர் குறித்த வசந்த நினைவுகள் மறந்திருக்கின்றன.

★ ★ ★ ★

மதிய உணவு முடிந்ததும், ''ஒரு சிறு நடை சென்று வருவோம். வா ரீட்டா'' என்று அழைத்தார் எட்வர்ட். எட்வர்ட் அதிகம் நேசிக்கும் உலா...! பொழுது போக்கான சிறு நடை...!

பரந்துக் கிடந்த பங்களாவின் பின் பகுதியிலிருந்து நெடுநெடு மரங்களுக்குள்ளே புகுந்து வளைந்து சுழிந்த ஒரு பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு மரக் காட்டுக்குள் மெள்ள நழுவினர். ஏய்ன்ஸ்விக் காட்டுக்குள் போட்டக் கூத்தெல்லாம் நெஞ்சுக்குள் மீண்டும் முளைத்து சுக பாரம் தந்தன ரீட்டாவுக்கு. உயிரை மீட்டும் ஏய்ன்ஸ்விக் மண் வாசம். மீண்டும் வருமா அப்படி ஒரு காலம்? வந்தாலுமே, அப்போதிருந்த கவலையற்ற மனோ நிலையில் மறுபடியும் மனமொப்பக் கொட்டமடிக்க இயலுமா? தனக்குள் இப்படி ஓர் ஆதங்கக் கேள்வியைக் கேட்டுக் கொண்ட ரீட்டா, அந் நினைவுகளை மீண்டும் எட்வர்டுடன் மீட்டிப் பார்க்க விழைந்தார்.

''ஹே எட்வர்ட்...! அந்த அணில் கதை நினைவிருக்கிறதா, இல்லை மறந்து விட்டதா...?''

''மறக்குமா, டியர்'' என்ற ரீட்டாவின் மலரும் நினைவுகளுடன் பங்குக் கொள்ளத் தாம் தயார் என விமரிசையாய்ப் பச்சைக் கொடி காட்டினார் எட்வர்ட்.

பூரிப்பு மேலோங்க, ''அதன் கூரான நகம் பொதிந்த பாதம் உடைந்திருப்பதைப் பார்த்து எப்படித் துடித்துப் போனோம்...! எப்படியோ, ஒரு தனிக் கூட்டில் வைத்து அதன் காலை சரி செய்து விட்டோமா இல்லையா...?'' - ரீட்டாவின் பெருமையையும் பழைய நினைவுகளின் பால் அவருக்குள்ள அளவற்ற பாசத்தையும் ரசித்த எட்வர்ட், ''ஆமாமாம். அதற்கு ஒரு வாயில் நுழையாத பெயரிட்டோமே...! அது என்ன...? சட்டென நினைவில் வரவில்லை.''

''மர்ஜோரி-பாங்க்ஸ்.''

''ஓஓஓ...! அதே தான்...! மர்ஜோரி-பாங்க்ஸ்...! எங்கிருந்தப்பா பிடித்தோம் இப்படி ஒரு பெயரை...!''

வயிறு வலிக்கச் சிரித்தனர் இருவரும்.

''அந்தத் துக்கிரி வேலைக்காரி பாண்டி...! அவளைக் கொல்ல வேண்டும். 'நீங்கள் இவ்வளவு மருத்துவம் செய்கிறீர்கள். இது ஒரு நாள் புகைப் போக்கியை எட்டிப் பார்த்து கீழே அடுப்புக்குள் விழத்தான் போகிறது' என்றாள்.''

''அந்த வார்த்தைக்கு அவள் மீது நாம் எத்தனை வெறுப்பும் கோபமும் காட்டினோம்...! ஆனால்... ....''

''மர்ஜோரி-பாங்க்ஸூம், அப்படியே செய்துத் தொலைத்தது.''

''அவள் நாக்கு பலித்தது'' என்றாள் ஹென்ரீட்டா ஸ்திரமாய். ''கூண்டுக்குள் வைத்து மர்ஜோரியை நாம் சுகப்படுத்தும் போதெல்லாம் அவள் வந்து இப்படி சொல்லிச் சொல்லியே, தன் பய எண்ணத்தையும் அணிலின் மூளைக்குள் ஏற்றி விட்டிருக்கிறாள்.''

தொடர்ந்தாள் : ''ஊர் அப்படியே தான் இருக்கிறதா, இல்லை மாற்றம் கண்டு பிட்டதா எட்வர்ட்...? எனக்கு உற்சாகம் அளித்த நிலையிலேயே தான் ஊர் இருக்கிறது என்றே நான் கற்பனையில் வாழ்கிறேன்.''

''ஒரு முறை வந்துப் பார்க்கக் கூடாதா ரீட்டா...! நீ அங்கு வந்து எவ்வளவு நாட்கள் ஆகி விட்டன...!''

''ஆமாம்.'' - சொல்லிவிட்டுத் தரையை உற்று நோக்கி அமர்ந்திருந்தார் ரீட்டா. ஏன் இவ்வளவு மாதங்களாய் அங்குப் போகாமலேயே இருந்துள்ளோம் என துணுக்குற்று உணர்ந்தார். சிற்பப் பணி - புது மனிதர்களின் மீதான ஈடுபாடு - தனி மனித வேலைகள் - போன்ற சிடுக்குகளில் அகப்பட்டுக் கொள்ளும் போது... ...

சிந்தனையைத் தடுத்தது எட்வர்ட்டின் ஆர்வமான் பேச்சு: ''எந்நேரத்திலும் உனக்கு அங்கு ரத்தினக் கம்பள வரவேற்பு நிச்சயம். வா.''

''நீ இனிமையானவன் எட்வர்ட்'' என மனமொப்பிச் சொன்னாள். அப்போது ரீட்டா அதிகம் கிறங்கும் எட்வர்டின் நரம்புகளிலும் இளமை எலும்புகளிலும் புது ரத்தம் ஊறி, அவற்றை நீல நிறமாய் ஒளிரச் செய்தது.

''உனக்கு ஏய்ன்ஸ்விக் இந்த அளவு பிடித்துப் போயிருப்பதில் எனக்கு ரொம்ப மகிழ்ச்சி ரீட்டா.''

ரீட்டா அனுபவித்துச் சொன்னார் : ''உலகின் எந்தப் பிரதேசத்தையும் விட அழகும் ஆளுமையும் நிறைந்த ஒரே இடம் அது.''

தலை முடியையெல்லாம் அள்ளி வாரிப் பின்னாமல் அப்படியே பறக்க விட்டு, புள்ளி மானாய்க் குதித்துத் திரிந்து அலைந்த பெண் - பார்ப்போர் வியக்கும் வண்ணம் அதிசயிக்கத்தக்க உயரம் கொண்ட பெண் - தன் வாழ்க்கை எதிர்வரும் நாட்களில் என்னவெல்லாம் செய்யப் போகின்றது என ஆரூடமறியாமல், சந்தோஷம் மட்டுமே கொண்டு துள்ளித் திரிந்த பெண் - மரம் என்றால் போதும், தன் சுவாசத்தையும் தரவல்லவளாய், மரக் கூட்டங்களைத் தேடித் தேடி அலைந்த பெண் - இப்படி அலைந்தவள் 'தான்' என உணராமலேயே அலைந்த பெண் - ஹென்ரீட்டா...!

'இப்போதுள்ள வாழ்க்கை முறைக்கு முழு முழுக்குப் போட்டு விட்டு, மறுபடியும் அங்கு போய் வாழும் வரம் மட்டும் கிடைத்து விட்டால்... ... ...' - பெருமூச்சு விட்டு நினைத்துப் பார்த்தார் ரீட்டா.

சட்டென்று நினைவு வந்தவராய், ''எட்வர்ட்... எட்வர்ட்...'' என வேகமாய் ஆரம்பித்தவர், ''அந்த மாபெரும் சிந்தூர மரம்... அது எப்படியிருக்கிறது எட்வர்ட்...? எத்தனை கிளைகள்! எத்தனை இலைகள்! அதில் வந்தமரும் பறவைகளில்தான் எத்தனை விதங்கள்!'' என்று சிந்தித்தபடி கேட்டார்.

''ஒரு பேரிடி தாக்கியதில் அது பொசுங்கி விட்டது.''

''எட்வர்ட்...!' - கதறினார் ரீட்டா. பேச்சடைத்துப் போனார். மாபலம் பொருந்திய அரக்கனாய் நின்ற சிந்தூர மரமது. அதன் இலைகள் பழுத்து விழுவதைக் கூடத் தாங்காதவர் ரீட்டா. போய் விட்டது. 'கடவுளின் தாக்குதலால் பச்சை மரம் அழியும் ஊரில் எதுதான் பாதுகாப்பாயிருக்க முடியும்?' என ஏதோ அபசகுனமாய் உணர்ந்து மனக் கிலேசம் கொண்டார் அவர். பச்சை மரம் எரிந்த அவ்வூருக்கு என்னால் போக முடியாது...!

''கலங்காதே ரீட்டா. அதன் ஆயுசு அவ்வளவுதான். அந்த மரத்தைக் குறிக்க நீ ஒரு படம் வரைவாயே... நினைவுள்ளதா...?''

''வேறெந்த மரத்தையும் விட, அந்தச் சிந்தூர மரத்தை நான் அந்த அளவு மனதில் இறக்கிக் கொண்டு விட்டேன்! நினைவிருக்கிறது எட்வர்ட்...! தொலைபேசிப் புத்தகத்தில், மலைப் பாறைகளில், எதையாவது தீவிரமாய்ச் சிந்தித்துக் கொண்டிருக்கும் வேளைகளில், எத்தனை முறை அதை வரைந்துத் தள்ளியிருப்பேன். என் மனத்தை ரணமாக்கி விட்டது அதன் பேரிழப்பு. ஒரு பென்சில் கொடு.'

எதிர்பார்ப்பு கலந்த சிரிப்பினூடே தன் பேனாவையும், சட்டைப் பையிலிருந்த சிறு குறிப்பெழுதும் நோட்டுப் புத்தகத்தையும் தந்தார் எட்வர்ட். நகைச்சுவைப் பொங்க வைக்கும்படி அந்த மரத்தினை வரைந்தார் ரீட்டா.



''அதே தான்'' என்ற எட்வர்ட் கலகலவென சிரித்தார். ''எப்படித்தான் இப்படி ஒரு சித்திரத்தைத் தேர்ந்தெடுத்தாயோ.''

பேசிபடி, பாதை முடிவடைந்த ஒரு குன்றின் உச்சிக்கு வந்திருந்தனர் இருவரும். முறிந்து விழுந்துக் கிடந்த ஒரு பருத்த மரத் தண்டில் ரீட்டா அமர்ந்துக் கொள்ள அவரருகில் அமர்ந்தார் எட்வர்ட்.

சுற்றிவரக் குழுமிக் கிடந்த மரப்புதருக்குள் கண்களால் மேய்ந்த ரீட்டா, ''இந்த இடம் ஒரு சிறு பாக்கெட் அளவு ஏய்ன்ஸ்விக் போல உள்ளது. எட்வர்ட்...! ஒரு வேளை இந்த சாயல் தந்த ஈர்ப்பினால்தான், லூசியும் ஹென்றியும் இப் பகுதியைத் தேர்ந்தெடுத்து நிரந்தரமாகத் தங்கி விட்டனரோ என்று கூட எனக்குத் தோன்றும்.''

''சாத்தியமுண்டு.''

முக்கியத்துவம் தந்து ரீட்டா சொன்னார்: ''லூசி மூளைக்குள் என்ன சிந்தனை ஓடிக் கொண்டிருக்கிறது என்று ஒருவராலும் கண்டறிய இயலாது. லூசியைப் பொருத்தமட்டில்... எட்வர்ட், அகத்தின் அழகு முகத்தில் தெரியாது''. இப்படிச் சொல்லிவிட்டுக் கேட்டார் : ''நான் உன்னைக் கடைசியில் பார்த்ததற்குப் பிறகு நீ என்ன செய்துக் கொண்டிருக்கிறாய் எட்வர்ட்...? எங்கு வேலை...? என்ன வேலை...?''

''ம்ம்..'' என்று தோள்களைக் குலுக்கிக் கைகளை ஏதுமில்லை என விரித்து, ''நத்திங் ரீட்டா. ஒன்றும் செய்யவில்லை'' என்றார் எட்வர்ட்.

''நிம்மதி'' - சிரித்துக் கொண்டார் ரீட்டா.

''கொடுக்கும் வேலையை சிறப்பாய்ச் செய்வதில் நான் திறனற்று இருக்கிறேன் ரீட்டா.''

அவரை நிமிர்ந்து ஊடுருவினார் ரீட்டா. அவர் சொன்ன விதத்தில் என்னவோ புதைந்திருந்தது மாதிரி தோன்றிற்று. ஆனால் எட்வர்ட் அமைதியாய்ப் புன்னகைத்துக் கொண்டுதானிருந்தார். இப்போது அவர் மீதான அடிமனத்து அபிலாஷைப் பொங்கிக் கொண்டு சீறியது ரீட்டாவுக்கு. ''ஒரு வேளை நீ அதிபுத்திசாலியாயிருப்பதால், மற்றவர்கள் உன் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாததால் கூட உனக்கு இவ்விதம் தோன்றலாமில்லையா...?''

''புத்திசாலி...?''

''ம்.''

''யார்...?''

''நீ...!''

''பல துறைகளில் வெற்றிக் கொடி கட்டிப் பறக்கும் நீ, என் இயலாமையைப் பெருமையாய் எடை போட்டு இப்படிச் சொல்வது, நம்பும்படி இல்லை ரீட்டா.''

''நான் வெற்றியடைந்தவள் என்றா நினைக்கிறாய்? சரியான கேலிக் கூத்து...!''

''ஆனால் நீ... அருமை ரீட்டா... நீ ஒரு சிற்பி. குறிப்பிடும்படியான சிற்பி. கலைஞர். இது குறித்து நீ களிப்படையத்தான் வேண்டும். முகஸ்துதிக்காக ஒதுக்குவதெல்லாம் முடியாது.''

''எனக்கும் தெரியும்'' என்றார் ரீட்டா. ''பலர் என்னிடமே சொல்லியிருக்கிறார்கள். இப்படிச் சொல்வதன் அர்த்தமே அறியாதவர்கள் அவர்கள். நீயும் தான். இப்படித் தான் செதுக்கப் போகிறோம் என திடுமென ஒரு சிற்பம் குறித்த முடிவெடுத்து, முயற்சி செய்து, வெற்றி அடைவதல்ல சிலை செதுக்குவது...! எது குறித்தோ ஒரு பொறி முதலில் தோன்றும் - அதைப் பிடித்துக் கொண்டு அலைய வேண்டும் - அந்தப் பொறியின் முழு குணாதிசயமும் அறிந்து மனதுள் நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும் - அவ்வப்போது மூளைக்குள் தோன்றி அது தரும் தொந்தரவில் கூட அதன் அடையாளத்தைத் தேட வேண்டும் - சில முறை பேயாய் உலுக்கி பயமுறுத்தும்... தாங்கிக் கொள்ள வேண்டும் - இப் பிரயாணத்தில், உடனடியாகவோ அல்லது வெகு காலம் தாழ்த்தியோ, அந்தப் பொறியோடு நாம் ஒத்துப் போய் இயையும் நிலை உருவாகும். அப்போது தான் விடிவு!'' என்றவர், ''ஒன்று தெரியுமா...?'' என தன் அனுபவத்தை வைத்துக் கொண்டு சொன்னார் : ''சில சமயங்களில், ஏற்பட்ட விடிவில் கூட ஐயம் விளைந்து, மறு நாள் காலையிலிருந்து, பட்டபாடெல்லாம் மீண்டும் தலைவிரித்தாட ஆரம்பிக்கும்...!''

''இந்தக் குழப்பம், நிம்மதியைப் பாதிக்குமில்லையா ரீட்டா..?'

''பின்னே ...? பாதிக்காதா...?''

''எனில், நீ நிம்மதியாக இருக்க ஏங்குகிறாயா...?''

''ஆமாம் எட்வர்ட்...'' என்றார் ரீட்டா. ''சில சமயங்களில், உலகின் வேறெதுவும் தேவையில்லாது, வெறும் நிம்மதியோடு மட்டும் கிடக்க ஏங்குகிறேன் தெரியுமா...?''

''அந்த அமைதி உனக்கு ஏய்ன்ஸ்விக்'கில் தான் கிடைக்கும். நீ அங்கு, உன் மரக்காடுகளுக்குள் நழுவிப் போய்க் கலந்து, நிம்மதியின் முகவரி காண முடியும் என எண்ணுகிறேன். வந்து விடு ரீட்டா. நீ என்...என்... என்னுடன் வந்து வாழ்வதானாலும் வரவேற்கிறேன் ரீட்டா. ஏய்ன்ஸ்விக்'கில் நான் தனியாக வசிக்கும் ஜாகைக்கு வந்து அதனை உன்னுடையதாக ஆக்க மாட்டாயா...? அந்த வீடு வெகு நாட்களாய்க் காத்துக் கிடக்கிறது ரீட்டா, உன்னை எதிர்பார்த்து.''

அவர் பக்கமாய் தன் முகத்தை மெதுவாய்த் திருப்பிப் பார்த்தார் ரீட்டா. சிறு குரலில் சொன்னார் : ''நான் உன் மேல் பைத்தியமாய் இல்லை என கருதுகிறேன் எட்வர்ட். உன் விருப்பத்துக்கு முடியாது எனும் பதிலைத் தர மிக மிகக் கடினமாய் உள்ளது.''

''ஏன் முடியாது எனச் சொல்ல வேண்டும்...?'' - துரிதமான எட்வர்டுக்கு, ''ஏனென்றால்... ஏனென்றால்...'' என்றுத் தடுமாறிய ரீட்டா, ''ஏ... ஏனென்... ஏனென்றால், அது தான் பதில் எட்வர்ட்...!'' - நிமிர்ந்திருந்த தன் தலையை, காலுக்கடியிலிருந்த பூமி நோக்கிப் போட்டுக் கொண்டார் ரீட்டா.

''முடியாது தானா...?''

''மன்னித்து விடு எட்வர்ட்.''

''இது வரை நான் முன் மொழிந்த போதெல்லாம் நீ எனக்கு முடியாது என பதில் சொன்னதே கிடையாது ரீட்டா. அமைதியாகத் தானிருந்திருக்கிறாய். இந்த முறை நல்ல பதிலை எதிர்பார்த்தேன்'' என்ற எட்வர்ட், இம்முறை என்னை நீ கொல்லாமல் கொன்றே விட்டாய் என்பதை சொல்லாமல் உணர்த்தி, ''நீ என்னைப் பார்த்த இன்றைய மதியம் முதல் பூரிப்பான சந்தோஷத்தில்தான் இருக்கிறாய். உண்டா இல்லையா...?'' என்று தொடர்ந்தார்.

''மிக மிக. உலகமே இப்போது என் கைகளில்.''

''உன்னால் அதை மறுக்க முடியாது.''

''மறுக்கவில்லை. மறுக்க மாட்டேன்.''

''உன் முகம், இன்று காலை இருந்திருப்பதை விட, என்னைக் கண்டக் கணம் முதல், இளமைப் பொங்க இன்ப அதிர்விலுள்ளது.''

''நானும் உணர்ந்தேன்.''

''இருவரும் வெளியே உலாவ வந்தது முதல், இணைந்துள்ள திருப்தி ஒன்றினால் மட்டும் வெகு இன்பமாயுள்ளோம். ஏய்ன்ஸ்விக்

பற்றியே நினைக்கிறோம்... பேசுகிறோம்... சுவாசிக்கிறோம்...! இவையெல்லாம் என்ன உணர்த்துகின்றன என விளங்கவில்லையா ரீட்டா...?''

''உனக்குத் தான் அவை என்ன உணர்த்துகின்றன என சரியாய் விளங்கவில்லை எட்வர்ட். நாமிருவரும் கடந்தகாலத்திலேயே இந்த மதியம் முழுதையும் கழித்துள்ளோம். அந் நினைவுகளால் சிலிர்த்துச் சிலிர்த்துப் போகிறோம். அவ்வளவே.''

''சில சமயங்களில், கடந்த கால பசுமையே நாம் நிம்மதியாய் இருக்க மிகச் சிறப்பான தளமாய் அமைகின்றது.''

''இருக்கலாம். ஆனால், ஒருவரால், அந்தக் கடந்தக் காலகட்டத்துக்கே மீண்டும் போய்விட முடியாது. காலத்தைப் பின்னுக்கு ஓட்ட முடியாது எட்வர்ட்.''

எட்வர்ட் அமைதியானார். பிறகு, உணர்வுக்கு ஆட்படாத இனிய குரலில் சொன்னார்: ''இடைபட்டக் காலம் மாற்றி விட்டது என்கிறாயா...?''

''... ... ...''

''என்ன சொல்ல வருகிறாய் ரீட்டா...? ஜான் இருப்பதன் காரணமாக நீ என்னை மணக்க மாட்டாய் எனச் சொல்ல வருகிறாயா...?''

ரீட்டா இதற்குப் பதில் ஏதும் தரவில்லை. எட்வர்ட் தொடர்ந்துக் கொண்டிருந்தார்: ''அது தான். இல்லையா...? இந்த உலகத்தில் ஜான் என்பவர் இல்லாமல் போய் விடும் பட்சத்தில் நீ என்னை மணந்துக் கொள்வாய். அப்படித்தானே''

அடிக்கும் அலையாய் குரலை விரைவாய்ச் செலுத்தி, ''ஜான் இல்லாத ஓர் உலகை, ஓ கடவுளே, என்னால் கற்பனை செய்துக் கூடப் பார்க்க இயலாது. இதைத்தான் நீ பாரபட்சமின்றி உணர வேண்டும். புரிந்துக் கொள்ள வேண்டும்'' என்றார் கோபமாய் ரீட்டா.

''அது தான் முடிவு என்றால், ஜான், தன் மனைவியிடமிருந்து விவாகரத்துப் பெற்று விடுதலையாகி, ஏன் உன்னை மணந்துக் கொள்ளக் கூடாது...? நீ ஏன் தனியாகவே காலத்தை ஓட்ட வேண்டும்...?''

''ஜான் அவர் மனைவியை விலக்கி வைக்க விரும்பவில்லை. அவர் அப்படி ஏதேனும் செய்தாலும் கூட அவரை நான் மணந்து

கொள்வேன் என எனக்குத் தோன்றவில்லை...! அது போன்ற ஓர் உறவுக்காகத் தான் நாங்கள் பழகி வருவதாய் நீ நினைத்துள்ளாய். அது · அப்படியல்ல.''

கருத்துக் கொடுத்து ஆழ்ந்து சொன்னார் : ''ஜான்...! ஜான்....! உலகில் எத்தனையோ ஜான்'களைப் பார்க்க முடியும்.''

இது ரீட்டாவுக்குப் பிடிக்கவில்லை. ''இருக்கலாம். ஆனால் நம் ஜானைப் போல ஒருத்தர் கூட இருக்க முடியாது.''

ரீட்டாவின் சமயோஜிதமான இந்தப் பதிலின் உதவியோடு, ஜான் குறித்து அவருக்குள் இறங்கியிருக்கும் எண்ணங்களைக் களைந்தெடுக்கப் பல நாட்கள் செலவழிக்க வேண்டியிருக்கும் என விளங்கியது எட்வர்டுக்கு.

''ஓஹோ...! அப்படி ஓர் உயர் எண்ணமுள்ளதெனில் நல்லது.''

''இதைத்தான் நானும் நினைத்திருந்தேன்...!'' என்றவர் எழுந்தார். சொன்னார்: ''கிளம்புவோம்.''



கெர்டாவும் ஜானும் காரில் ஏறியதும், லூயிஸ் வீட்டுக் கதவை அடைத்து மூடிய போது, நாடுகடத்தப்பட்டது போன்ற தாளாத மன வலி தன்னை அறைவதாய் உணர்ந்தார் கெர்டா. அவர் வீட்டிலிருந்தே கெர்டாவை இரு நாட்களுக்குப் பிரித்து வைக்க என இறுதியாய் மூடப்பட்ட கதவுகள். விரும்பாத வெளியேற்றமும், இந்த வாரக் கடைசியில் ஆங்கட்டெல் கூட்டம் கெர்டாவுக்குள் ஏற்படுத்தவுள்ள லஜ்ஜைகளும் சேர்ந்து, சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் நிற்கும் கைதியென ஆனார். எத்தனைக் குடும்ப வேலைகளை அப்படி அப்படியே விட்டு விட்டுக் கிளம்புகிறேன் எனும் எண்ணம் வேறு அவரை பூதாகாரமாய் நச்சரித்தது. அந்தக் குளியலறைக் குழாயின் காதைத் திருகி மூடி விட்டுத் தான் கிளம்பினேனா...? சலவைக்காரனுக்கு எழுதிய அந்தச் சீட்டை எங்கே வைத்தேன்...? பணியாட்களோடு குழந்தைகள் சரியாய் சொல் பேச்சுக் கேட்டு நடந்துக் கொள்ளுமா...? டெரன்ஸ் வேறு இந்த அமிலம் அந்த வேதி வினை என்றே அலைகிறான்...! இரு நாட்களுக்கு எந்த விபத்தும் நிகழாமல் சமர்த்தாயிருப்பானா...? பாவம் என் கண்மணி ஸெனா...!

இதே மன துக்கம் தலைதூக்கி ஆர்ப்பரித்திருக்க, தொய்ந்த தோள்களோடு ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்த கெர்டா, வேண்டா வெறுப்புக் கலந்த படபடப்போடு காரைக் கிளப்பினாள். காரைக் கிளப்பும் திருகினை அமுக்கி அமுக்கிக் கிளப்பப் பார்த்தாள். ம்ம். அது கிளம்பவேயில்லை. ஒவ்வொரு திருகலுக்கும் கிர்கிர்'ரெனக் கதறிற்று. ''நீ, சாவியை முதலில் பொருத்தி விட்டுக் கிளப்பினால், கார் படுத்தாமல் கிளம்பும் கெர்டா.''

''ஓ, ஜான்...!'' என இன்னும் அதிகம் பரபரத்த திருமதி ஜான், ''எத்தனை பெரிய முட்டாள்'' என, தன் கணவனை முந்திக் கொண்டு, தன்னைத் தானே விமர்சித்துக் கொண்டார்! தான் செய்த காரியத்துக்கு ஜான் எரிச்சல் மண்ட கத்தப் போகிறார் எனும் எதிர்பார்ப்பில், ஜானை, பயபக்தி கலந்து பார்த்தாள். அவரோ, சிறு புன்னகையை மட்டும் பதிலாக்கி விட்டு அடங்கினார். ஆங்கட்டெல் வீட்டிற்கு

செல்வதால் விளைந்துள்ள அதீத இன்பம், இப்போது தன்னை, அவரின் எரிச்சலிலிருந்துக் காப்பாற்றியுள்ளது என மின்னலென வெட்டிய புத்தி கூர்மையால் ஊகித்து அறிந்துக் கொண்டார் கெர்டா. கடும் உழைப்பாளி, ஜான்...! சுயநலமேயற்று, நோயாளிகளுக்கென வாழ்க்கையை அர்ப்பணித்து வாழும் அபூர்வ உழைப்பாளி. ஆகவே, தன் மனம் கவர்ந்தவர்களோடு ஒரு சில நாட்களைக் கழிக்க வேண்டும் என காத்திருந்து கிளம்புவதால், முழு சந்தோஷத்தில் இருப்பதில் ஒன்றும் வியப்பில்லை தான்.

இச்சிந்தனையுடன், மதிய உணவின் போது கெர்டா சொன்ன வார்த்தைகளை நினைவில் கொண்டு வந்தபடி காரை உசுப்ப, அது தாவிக் கிளம்பியது. ''ஜான்... ஒன்று தெரிந்துக் கொள்ளுங்கள். விளையாட்டாய் கூட உங்கள் நோயாளிகளை வெறுப்பதாய் நீங்கள் சொல்லவே கூடாது. இந்த அளவு அவர்களோடு கலந்து, உணவு வீடு எல்லாம் மறந்து உழைப்பது மகத்தானது. அது எனக்குப் புரியும். ஆனால் குழந்தைகளுக்குப் புரியாது. அவர்களுக்கு முதிர்ச்சி இன்னும் வரவில்லை. சிறுசுகள். டெரன்ஸ், பேசுவதன் உள்ளர்த்தத்தைப் புரிய இயலாமல், அப்படி அப்படியே அர்த்தப் படுத்திக் கொள்கிறான்.''

''பல சமயங்களில், ஸெனா மாதிரி இல்லாமல், சராசரி மனிதனாய் வரத் தகுதி வாய்ந்தவனாய் விளங்குகிறான் டெரன்ஸ். ஸெனா குட்டி இருக்கிறதே....'' என்ற ஜான், தன் பெண் குழந்தையைப் பாசத்தோடு நினைந்து புன் முறுவியபடி, ''இந்தப் பெண் பிள்ளைகள் இன்னும் எத்தனை காலத்துக்குத் தான் இப்படிப் பாச மூட்டைகளாகவே வாழப் போகின்றனவோ...'' என்றார்.

கெர்டா, மெலிசான, ஓர் சுவைமிகு புன்னகையை உதிர்த்தார். ஜான் இவரைத் தான் கேலி பண்ணுகிறார் என்பது விளங்கிற்று. இருந்தாலும் ''பாருங்கள் ஜான். குழந்தைகளுக்கு, ஒரு மருத்துவரின் வாழ்க்கையில் உள்ள சுயநலமற்றப் போக்கும், தொழில் பத்தியும், அர்ப்பணிப்பும், இது போன்ற யாவும், விளங்கியே ஆக வேண்டும்'' என்றார். தன் அடிமனத்து முடிவுகளை மட்டும், இறுக்கமாய் ஒட்டியப் பசையாய் மாற்றிக் கொள்ள விரும்பாது வலியுறுத்தும் கெர்டாவின் குணமது.

இப்போது கெர்டாவின் கவனம், ஜானிடமிருந்து சற்றே திசை மாறியது. சாலையின் கோடியில் ஒளிர்ந்துக் கொண்டிருந் போக்கவரத்து சமிக்ஞை விளக்கு, நெடு நேரமாக பச்சையிலேயே

இருந்தது. எனவே அது சிகப்புக்கு மாறக் கூடிய தருணம் வந்து விட்டதாய் முடிவெடுத்துக் கொண்டார் கெர்டா. எனவே அப்படியே வேகத்தைக் குறைக்க ஆரம்பித்தார். ஆனாலும் பச்சை மாறிய பாடில்லை...!

கெர்டா ஓட்டும் போது எரிச்சலாகிக் கத்தி விடக் கூடாது எனும் சபதத்திலிருந்த ஜான், அதை மறந்து, ''எதுக்குடீ இப்போது காரை நிறுத்துகிறாய்...?' என கதறியே விட்டார்.

''பச்சையிலிருந்து சிகப்புக்கு மாறி விடும் என நினைத்து.. ... ...''

''மண்...!''

அவசர அவசரமாக வேகம் குறைந்த காரை முடுக்க, முன்னேறிய கார், சமிக்ஞைக் கம்பத்தைத் தாண்டியவுடனேயே, நட்டநடு சந்திப்பில், இழுத்து முன்னேற முடியாது திணறி, தன் இயக்கம் அடங்கத் தொடங்கியது.

இதனால் நின்றுப் போன போக்குவரத்தால் வாகனங்களின் ஒலியெழுப்பிகள் கோபங்கொண்டு அலறின.

வந்த கோபத்தையெல்லாம் வாய்க்குள்ளேயே போட்டு மென்று, அமைதியாகவே ஜான் சொன்னார் : ''ஒரு நாள்... ஒரே ஒரு நாள்...! கை நரம்புகள் பிசகி ஓட்ட முடியாததால் உன்னை ஓட்டச் சொன்னேன். பயனைப் பார்த்தாயா...? உன்னைப் போன்ற மோசமான ஓட்டுனரை உலகில் பொறுக்கியெடுத்தாலும் பார்க்க முடியாது கெர்டா.''

''ஓ, ஜான். இந்த சமிக்ஞை விளக்குகள் என்னை ஒவ்வொரு முறையும் குழப்புகின்றன. எப்போது பச்சையிலிருந்து மாறித் தொலையும் என விளங்குவதேயில்லை. ஒவ்வொரு முறையும் சரியாய் நிறுத்தக் கோட்டின் அருகே வந்ததும் மாறித் தொலைப்பது என் விதி.''

திரும்பி கெர்டாவின் சஞ்சலமற்ற அதிருப்தி முகத்தைப் பார்த்தார் ஜான். 'இப்படியா எல்லாவற்றுக்கும் கெர்டா கவலைப்பட வேண்டும்!' என்று நினைத்தவர், இப்படிப்பட்ட ஒரு நிலையிலேயே வாழ்க்கையை நொடிக்கு நொடி ஓட்டுவது எத்தனை விபரீதம்! கற்பனை மிகும் கலைஞனாக ஜான் இல்லாததால், அவரால், கெர்டா போன்றோரின் நிலைமையைப் படம் பிடித்துப் பார்க்க முடியவில்லை.

அப்படி இப்படி எஞ்சினை இயக்கி, ஒரு வழியாய் காரைக் கிளப்பி நகர்ந்ததும், தான் உடும்பாய் பிடித்துக் கொண்டிருந்த சம்பாஷணைக்

குள் மீண்டும் புகுந்துக் கொண்ட கெர்டா, ''ஒரு மருத்துவரின் வாழ்க்கை என்பது எத்தனை உன்னதமானது என குழந்தைகளுக்குப் பல முறை விளக்கி, சிறந்த அபிப்ராயத்தை ஏற்படுத்தியுள்ளேன்'' என்றார். தொடர்ந்தார்: ''மருத்துவர் தொழில் முழுக்க முழுக்க தியாகத்தால் ஆனது என்றும், நோயாளிக்கு நோயின் உபாதை தரும் சொல்லொணா அவஸ்தையையும் அதன் வலியையும் உள்ளுக் கிழுத்துக் கொண்டு சுணங்காமல் ஆறுதல் கூற வேண்டிய அர்ப்பணிப்பையும், இவ்வாறு சீக்காளிகளுக்கு உதவிக் கொண்டே இருக்க வேண்டும் எனும் தர்ம தாகம் நிறைந்து 24 மணி நேரமும் விழித்திருக்க வேண்டிய கட்டாயத்தையும் நன்றாகவே பதித்து விட்டேன். ஜான்...! நோயாளிகளுக்காக உங்கள் சக்தி அனைத்தையும் தாரை வார்த்து, முழு நேரத்தையும் ஒதுக்கி, சுகங்களையெல்லாம் விட்டுக் கொடுத்து நீங்கள் ஒரு தியாகியாய் உழைப்பதைக் கண்டு நான் மிகப் பெருமை அடைகின்றேன்.''

இங்கு இடைமறித்தார் ஜான். ''பெரும் தியாகமாயெல்லாம் கருதாமல், ஒரு சந்தோஷம் தரும் தொழிலாய் தான் நான் மருத்துவராய் இருக்கிறேன் என்பதே உனக்குப் புலப்படவில்லையா கெர்டா...! நீ குறிப்பிடுவது போல நான் உணர்வுபூர்வமாக என் மருத்துவத் தொழிலைத் கருதவேயில்லை. ஓர் ஈடுபாடு. அவ்வளவு தான். இதை மீறி ஒன்றும் கிடையாது.''

இப்படிச் சொன்னாலும், 'ம்ம், கெர்டாவின் மண்டைக்குள் இக்கருத்தினைக் கொண்டு செல்லவே முடியாது' என்றும் எண்ணிக் கொண்டார் ஜான். 'திருமதி க்ரேப்ட்ரீ'யிடம் நான் நடத்தும் மருத்துவம் மற்றும் நான் பிரத்யேகமாய் போய் பணி செய்யும் மார்க்ரெட் அரசு மருத்துவமனை இதையெல்லாம் பற்றி இப்போது நினைவுபடுத்தினால், நிச்சயமாய், நான் ஏதோ ஏழைகளுக்கு உதவ வேண்டும் எனும் மிக உயர் அர்ப்பணிப்பில் தான், ஒரு தேவ தூதனாய் இங்கெல்லாம் போய் சிகிச்சை அளிக்கிறேன் என பூரித்துப் போய் பேசுவாள்.' ஆனால் நிஜம் அதுவல்லவே....!

இப்படிப்பட்டவரிடம் போய் 'நான் புற்று நோய்க்கு மிக முக்கியமான தீர்வைத் தேடி ஆராய்ச்சி செய்துக் கொண்டிருக்கிறேன்' என்ற உண்மையை மட்டும் ஜான் சொல்லி வைத்தாரென்றால், 'ஆஹாஹா... நீங்கள் தேவ தூதனல்ல...! தேவனே' என்று கற்பூரம் சுற்றி விடுவார் கெர்டா! இதுவாவதும் பரவாயில்லை. ரிட்ஜ் வே நோய் தரவல்ல விபரீத விளைவுகள் குறித்து தான் கொண்டுள்ள விசேஷ

ஈடுபாடு பற்றியோ, விளைவு வரை ஏன், வெறும் ரிட்ஜ்வே நோய் பற்றியோ கூட, விவரமாய் விளக்கினாலும் இவளுக்குப் புரியப் போவதில்லை என்றெண்ணிக் கொண்ட ஜானுக்கு, திடுமென்று, இச்சிந்தனையை ஒட்டிப் பின்வரும் எண்ணம் பிரகாசமாயிற்று:

டெரன்ஸ், சிறு பிள்ளையாயிருந்தாலும், அவன் மூளையின் செயல்பாட்டுக்கும் ஆர்வத்துக்கும், அவன் ரிட்ஜ் வே நோய் பற்றி அறிந்துக் கொள்வதில் ஈடுபாடு காட்டலாம் எனப்பட்டது. 'மதிய உணவின் போது, நான் நோயாளிகளைப் பற்றி சலித்துக் கொள்ள, அதனை நான் விளையாட்டுத்தனமாய் சொல்வதாய் கெர்டா அறிவிக்க, அச்சமயம் அப்பா விளையாட்டாய் சொல்லவில்லை என பொடியன் சொன்ன போது, மதிப்புக் கூட்டி அவன் என்னைப் பார்த்த பார்வையில் ஆர்வமும் மிகுந்திருந்தே... அதுவே சாட்சி. அது எனக்குப் பிடித்திருந்தது' என ஆழமாய் நினைத்துக் கொண்டார் ஜான்.

அம்மோனியாவை உருவாக்குகிறேன் பேர்வழி என்று காபி தயாரிக்கும் இயந்திரத்தை நாசப்படுத்தி வாங்கி கட்டிக் கொண்டதிலிருந்து ருசியில்லாமல் தான் வீட்டிலிருந்தான் டெரன்ஸ். அம்மோனியா...? கோமாளி. எதற்கு இப்போது அவனுக்கு அம்மோனியா தயாரிக்க வேண்டும்...?!

இச்சிந்தனையிலிருந்த ஜானின் அமைதி, கெர்டாவுக்கு சகாயமாய் அமைந்தது. பக்கத்தில் அமர்பவர் நடத்தும் உரையாடல் இல்லாத வரைக்கும், தடையின்றி செவ்வனே வாகனத்தை ஓட்டி விடுவார் கெர்டா. இவ்வாறு ஜான் ஆழ்ந்து சிந்திப்பதில் இன்னோர் அனுகூலமும் உண்டென்று எண்ணி மகிழ்ந்தது கெர்டாவின் மனசு; இச்சமயங்களில் பக்கத்தில் என்ன நடந்தாலும் உணரயியலாத ஜானிடமிருந்து, கறார்-புறாரென்று, தப்புத்தப்பாய் கியர் மாற்றி ஓட்டும் கெர்டா, தப்பித்து விடலாம்!

கெர்டா தானாய் காரில் போகும் போதெல்லாம் சரியாய் அமைந்து விடும் இந்த கியர் மாற்றும் திருவிழா, ஜானுடன் பயணிக்கும் போது மட்டும், தவறாமல் காலை வாரி விட்டு விடுகின்றது... இல்லை யில்லை... கையை வாரி விட்டு விடுகின்றது. 'அவரிருப்பதினால் தவறிழைக்காமல் ஓட்டி விட வேண்டும்' எனும் சபதம் விளைவிக்கும் அதிர்வே இடையூறாய் அமைந்து, கை விரல்களனைத்தையும் நடுநடுங்க வைத்து, சரியான முடுக்கத்திற்கு பதில் அதிகமாகவோ இல்லை போதாத அளவுக்கோ முடுக்கி விட்டு,

வாகனத்தை ஓட மாட்டேன் என முரண்டு பிடிக்கும் அளவுக்குக் கொண்டு போய் நிறுத்தி விடுகிறார் கெர்டா.

''அப்படியில்லை கெர்டா. இப்போது போயா இரண்டாவது கியர் மாற்றுவாய். கியர் மாற்றாதே. உள்ளிழு. ம்'' - சில வருடங்களுக்கு முன்னால் இவருடன் கூட பயணித்த ரீட்டா கெஞ்சாத குறையாய் சொல்லிக் கொடுத்திருக்கிறார். எப்படி என செய்தும் காட்டினார். ''புரிகிறதா. கியரை அமுக்கி அழுத்தியெல்லாம் ஒன்றும் செய்ய வேண்டாம் கெர்டா. கையை அதன் மேல் வைத்ததுமே அது செல்ல வேண்டிய பாதை கைகளில் புரிந்து விடும். வெறுமனே அதன் மீது கைகளைத் தட்டையாக வைத்திரு. போதும். ஒரு சிறு அழுத்தம். அவ்வளவு தான். அதுவே தானாக நழுவி விடுகின்றது. இதற்கு ஏன் இவ்வளவுப் பிரயத்தனப்படுகிறாய்...! எந்தத் திசை நோக்கியும் அழுத்தாதே. உணர். கியர் எப்படி வழுக்கிப் போக விழைகிறது என உணர். அவ்வளவுதான்.''

ஆனால் கியர் விழைவதையெல்லாம், எந்தத் தருணத்திலும் தன் கைகளில் உணர்ந்ததேயில்லை கெர்டா..! 'நான் எந்தப் பக்கம் அழுத்தித் தள்ளுகிறேனோ அந்தத் திசையில் கியர் போய் விட வேண்டும்!' என்பது கெர்டா கட்சி. அப்போது கறார்- புறாரென் றெல்லாம் எந்த ஓசையும் எழுப்பி தர்ம சங்கடமாக்கி விடக் கூடாது என்பது, கார் தயாரிப்பாளரிடமிருந்து கெர்டா எதிர்பார்ப்பது!

தன் கார் ஓட்டும் படலத்தின் மலரும் நினைவுகளின் முடிவாய், இப்போது எதிர்பட்ட சிறு குன்றேற்றத்தில் காரை லாகவமாய் செலுத்திக் கொண்டிருந்த கெர்டா, இந்தக் கார் பிரயாணம் ஒன்றும் படு மோசமாய் அமைந்து விடவில்லை என திருப்தி கொண்டார். ஜான் இன்னும் தன் சிந்தனா லோகத்திலேயே இருந்தபடியால், காரை தவறாகக் கையாண்டு ஆங்காங்கே கெர்டா ஏற்படுத்திய ஓசைகள், அவர் கருத்தைத் தொட்டிருக்கவில்லை. ஆனால், இப்பொழுது கார் குன்றின் ஏற்றத்தில் ஏற வேண்டுமே எனும் உள்ளெண்ணத்தால் மூன்றாவது கியருக்குள் செலுத்தியதும், அது பேசாமல் முன்னேறி பாதையைக் கடப்பதற்கு பதில், கெர்டாவை சோதிக்கும் இலக்கோடு தளர்ந்து, குடித்தவன் போல தள்ளாடத் துவங்கியது. தன் சிந்தனையை இருந்த இடத்தில் அப்படியே விட்டு விட்டு நிகழ்காலத்தில் விழுந்தார் ஜான். வெலவெலத்துப் போய் கேட்டார் : ''வந்த கியரிலேயே ஓட்டி சமதளத்தை அடையும் முன், ஏன்டீ இப்படி ஏறிக் கொண்டிருக்கும் போது கியரை மாற்றுகிறாய்? கார் ஒத்துழைக்குமா? அடக் கடவுளே!''

கொர்டாவின் தாடைகள், பயத்தால், திறக்க வராமல் இறுகிப் போயின. சமதளம் அருகில் தான் தெரிகின்றது. அவ்விடத்தை சீக்கிரமாய் அடைய வேண்டும் என்று நிர்ப்பந்தமொன்றும் இல்லை. தேவையற்று எதையோ செய்து அகப்பட்டுக் கொண்டாயிற்று. இப்படி அப்படி ஆடி உறுமி சமதளம் அடைந்து சீரானது கார்.

எங்கும் வசந்தக்காலத் தளிர் இளம் மரங்கள். ''நரகத்து நகர வாழ்க்கையிலிருந்து இப்படி தப்பிப்பது - அற்புதம். அபூர்வம்'' - வியந்தார் ஜான். ''இயற்கை இப்படி வஞ்சகமில்லாமல் தாராளமாய் விரிந்துக் கிடக்கின்றது - கவலை எல்லாம் அற்றுப் போய் நாம் ஏகாந்தமாய் வாழ...! ஆனால் கொர்டா...! சிறைக்குள் அடைபட்டது போல நாம் வீட்டுக்கள் கிடந்து, இந்நேரம் காபி குடித்துக் கொண்டு இருப்போம்...! அதுவும் எப்படி, குளிருக்காக அத்தனை கதவு களையும் ஜன்னல்களையும் அடைத்து, ஒரு கராக்கிரகம் போல வீட்டை ஆக்கிக் கொண்டு... இருட்டுக்கு ஒரு விளக்கையும் பகலிலேயே எரித்துக் கொண்டு... ச்சே...!''

ஜானின் நினைப்பு இப்படிப்பட்ட ஆதங்கத்திலிருக்கிறது என்றால், கொர்டாவின் நினைப்பும் ஆதங்கத்தில் தானிருந்தது, ஆனால், முழுக்க முழுக்க மாறுபட்டக் கோணத்தில். அவர் நினைவில், இந்நேரத்து வரவேற்பறை - ஏறத்தாழ இருண்டே தோன்றும் வரவேற்பறை - கைக்கெட்டாமல் கண்முன் விரிந்து இம்சிக்கும் கானல் நீராய் தோன்றி, இப்போது மட்டும் நான் அங்கு இருந்தால்... என அலாதியாய் ஏங்க வைத்தது. இருந்தாலும் ''அப்பப்பா...! இந்நகரம் தான் எத்தனை அழகு'' என்று சொன்னார், ஜானுக்காக.

குன்றின் மீது ஏறி, சமதளம் அடைந்த, சில நொடிகளின் இறுதியில், ஹாலோ விரிந்தது. இனி தப்பிப்பில்லை. உணர்ந்தார் கொர்டா. எப்படியாவது இந்தச் சந்திப்பு எனும் அச்சுறுத்தலிலிருந்து, ஏதோ ஒரு சக்தி வந்து திடுமென உதவ, தப்பித்து விடலாம் என கொர்டா பட்டுக் கொண்டிருந்த நப்பாசையும் கரைந்தது. அதோ, எல்லோரும் இருக்கின்றனர். இனி வேறு வழியில்லை.

பய மேகம் மனத்தினை மூடினாலும், காரை வளைத்து ஓடு பாதையில் செலுத்தி ஹாலோவுக்குள் நுழைத்த மாத்திரத்தில், மாடியின் பால்கனியின் சுவரில் அமர்ந்திருந்த ஹென்ரீட்டா, கொர்டாவுக்குள் சிறு தெம்பினை உதிக்கச் செய்தாள். உடன் மிக்டே' வும் ஒல்லியான புது மனிதனும் இருப்பதாய் கணக்கெடுத்துக்

கொண்டார் கெர்டா. சில சமயங்களில், இவர்களின் நடுவில் சிக்கிக் கொள்ளும் கெர்டாவின் சுயநிலை கவலைக்கிடமாக போகும்போது காப்பாற்ற கை கொடுக்கும் ஹென்ரீட்டாவைப் புகலிடமாய் கொள்ளலாம் எனும் நம்பிக்கை துளிர்த்தது கெர்டாவுக்கு.

ஹென்ரீட்டாவைக் கண்ட மாத்திரத்தில் சந்தோஷமும் அதையும் மீறி உவகையும் அடைந்தார் ஜான். குன்றின் முடிவில் உயர்ந்து நின்று வசந்தக்கால வாசனையை ரசித்துத் திரும்பியவுடன் ரீட்டாவின் தரிசனம் கிடைத்ததில், இத்தனை தூரப் பிரயாணம் இனிதே முடிந்ததாய் திருப்தி வந்தது ஜானுக்கு.

லண்டன் நகர ஆடம்பர ஜிகுஜிகு உடைகளை விட ஆடம்பரமற்று அழகாய் ரீட்டா அணிந்திருந்த பச்சை கோட்டும் அதே நிற பாவாடையும், ஜானின் கருத்தைக் கவர்ந்திழுக்கும் வண்ணம் சிறப்புற இருந்தன. அவளுக்கே உரித்தான பிரத்யேக நீண்டக் கொக்குக் கால்களுக்கு பெரிய 'சாக்ஸ்' கொடுத்திருக்க, அவற்றுள் பளபளத்தன, புதிதாய் நகச்சாயம் பூசப்பட்டிருந்த தளிர் விரல்கள்.

இத்தனை பேர் சுற்றியிருப்பினும், ஜானும் ரீட்டாவும், இருவருக்கும் மட்டும் அர்த்தமாகும்படி அன்னியோன்னிய சிரிப்பினைப் பகிர்ந்துக் கொண்டனர் - ஒருவர் இருப்பால் மற்றவர் மிக நிம்மதி காணும் தொனியில்....! ரீட்டா இல்லாத இந்தச் சந்திப்பு பயனேதுமற்ற வெறும் வெற்றிடம் என்ற புரிதலில், 'ரீட்டா இருக்கிறாள்' எனும் உண்மையை அழமாய் ரசித்தார் ஜான். அந்தப் பூரணத்துவத்தில், அவருடன் ஏதும் பேசவில்லை - பேசத் தோன்றவில்லை...!

திருமதி ஹென்றி ஆங்கட்டேல் இல்லத்திலிருந்து வெளிப்பட்டு இருவரையும் வரவேற்றார். தன் வீட்டுக்கு வரும் எந்த விருந்தாளிக்கும் போலல்லாமல், லூசியின் மனச்சாட்சி, கெர்டாவின் மீது அதீதமாய் அன்பைப் பொழிந்தது. ''வா, வா கெர்டா. மனம் முழுதும் சந்தோஷமாயுள்ளது உன்னைப் பார்க்கும்போது...! எத்தனை காலம் கடந்து விட்டது உன்னைப் பார்த்து....! உன்னையும் தான் ஜான்.''

இப்படிப்பட்ட சுருக்கமான வரவேற்புரையின் திட்டமே, கெர்டாதான் அதிகமாய் எதிர்பார்க்கப்பட்டிருந்த விருந்தாளி என்றும், ஜான், முக்கியத் தேவையில்லாது கெர்டாவுடன் வந்தவராவார் என்றும் உணர்த்தத்தான். ஆனால், வெற்றிலை பாக்கு வைத்து லூசி தரும் இவ்வகை வரவேற்பிலெல்லாம் நாட்டமும் பழக்கமும்

இல்லாத கெர்டா நெளிந்து உள்வாங்கி காட்டிய சங்கோஜத்தாலும் அசௌகரியத்தாலும், லூசியின் இத்திட்டம், தன் இலக்கில் பரிதாபாரமாய் தோற்றுப் போனது.

சட்டென இத்திட்டத்தை விட்டு விட்டு, ''எட்வர்டைத் தெரியுமா...? எட்வர்ட் ஆங்கட்டேல்...?'' என எட்வர்டைக் காட்டியபடி ஜானைக் கேட்டார் லூசி.

இல்லை என தலையசைத்த ஜான், எட்வர்டைப் பார்த்தபடி, ''இவரை சந்தித்ததாய் நினைவில்லை'' என்றார்.

மிதமாய் பிரகாசித்துக் கொண்டிருந்த மதிய சூரிய ஒளி, ஜானின் குதித்தெழும் கோரை முடிக் கற்றைகளையும் அவரின் நளினமிகு அழகிய விழிகளின் நீல நிறத்தையும், இன்னும் பிரகாசித்துக் காட்டின. குறைவான உயரத்தில் பறந்து விளையாடும் விமானத்தில் சறுக்கிப் பாய்ந்து சாதித்து இறங்கிய தோரணையில் வெற்றியும் மிதப்பும் கொண்டவராய் நின்றிருந்தார் எட்வர்ட். கதகதப்பான கவர்ச்சியும் கிறக்கமும் எதிரொலித்து கேட்போர் காதுகளை வசீகரித்த அவர் குரலின் ஆண்மையும், ஒல்லியான அவர் உடற்கட்டிலிருந்து வெளியேறி அனைவரையும் இழுத்துக் கொண்டிருந்தக் காந்த ஈர்ப்பும், அவ்விடத்தின் நாயகனாய் அவரையே முன் நிறுத்தின.

கெர்டாவை நெருங்கி நின்ற ஹென்ரீட்டா, ஹாலோவின் முக்கியப் பகுதியாய் இங்குள்ள காய்கறித் தோட்டத்தைப் போய் பார்த்தே ஆக வேண்டும் என அறிவுறுத்தினார். ''இது மட்டுமல்ல. பாறைகளைக் கொண்டு வடிவமைத்துள்ள தோட்டம் ஒன்றும் உள்ளது கெர்டா. அதை நமக்குக் காட்ட முடிவாயிருக்கிறார் லூசி'' என்று பேச்சை கொண்டு சென்றார் ரீட்டா. இருவரும் மெதுவாய் நடக்க ஆரம்பித்திருந்தனர். ''ஆனால் எனக்கென்னவோ செழிப்பாயும் அமைதியாயும் உள்ள காய்கறித் தோட்டம் தான் மிகப் பிடித்தம். வெள்ளரிக் கிளையில் அமர்ந்துக் கொள்ளலாம். பல காய்-கறிக் கொடிகள் பின்னிப் பிணைந்து அடர்த்தியான காட்டின் சூழலை ஏற்படுத்தியுள்ள குளிர்க் கூண்டுக்குள் நுழைந்து, யாரும் வராத அங்கு, இயற்கை இன்பத்தை அனுபவிக்கலாம். அங்கு ஏதாவது கொறிக்கக் கூட கிடைக்கும்.''

ரீட்டா சொன்னது மாதிரியே சில முதிர்ந்த பட்டாணிகள் கொடிகளில் கிடைத்தன. அவற்றை ரீட்டா சாப்பிட்டார். கெர்டா விலக்கி விட்டார். வழக்கத்தை விட இம்முறை அதிகமாய்

பயமுறுத்திய ஊசியிடமிருந்து விலகி வந்து விட்டதில் நிம்மதியடைந்திருந்த கெர்டா, மெதுவாய் ரீட்டாவுடன் பேசத் துவங்கினார். உரையாடலில் கெர்டாவை நோக்கி ரீட்டா கேட்ட கேள்விகளையெல்லாம் பார்க்கும் போது, அவையனைத்தும், கெர்டாவின் சக்திக்குள் அடங்கி அவர் பதிலளிக்கும் மட்டத்திலேயே அமைக்கப்பட்டதாய் இருந்தன. பத்து நிமிடங்கள் போல் கடந்தபிறகு, தன் இறுக்கமெல்லாம் நன்றாகவே தளர்ந்து விட்டதாய் மேம்பட்டு உணர்ந்த கெர்டா, நாம் நினைத்திருந்த மாதிரி அப்படி ஒன்றும் உயிர் வாங்கும் அளவு இந்த இரு நாட்களும் இருந்து விடாது என சற்றே அமைதி கொண்டார்.

பாப்பா ஸெனா நடன வகுப்புக்கு செல்லத் துவங்கியுள்ளதாகவும், அதற்காக புதுப்புது பாவாடைகள் விதவிதமாய் தைத்திருப்பதாயும், அந்த ஒவ்வொன்றையும் வெகு விளாவாரியாய் விவரித்தபடி நடந்துக் கொண்டிருந்தார் கெர்டா. வழியில் தென்பட்ட ஒரு தோல் பொருட்கள் விற்கும் கடையைப் பார்த்த ரீட்டா, கெர்டா ஆர்வமாய் பதிலளித்து விளக்கும்படி அமையுமாறு ''இது போன்ற ஒரு கைப்பையை நாமே தைத்துக் கொள்ள முடியாதா?'' என்று கேட்டார்! கெர்டா, இக்கேள்விக்கான பதிலை, வெகு ஈடுபாட்டோடு விளக்க ஆரம்பித்து, நிறுத்தாது பேசிய வண்ணமிருந்தார்.

இவரை, கெர்டாவை, குதூகலமாய் வைத்திருப்பதில் எந்தவொரு கஷ்டமும் இல்லை என விளங்கிக் கொண்டார் ரீட்டா. அப்படி சந்தோஷமாய் கெர்டா மாறும் போது தான், அவருக்குள் எத்தனை அழகான மாபெரும் மாற்றம் குடிகொள்கின்றது...!

'அங்குமிங்கும் போய் தனக்குத் தெரிந்தவற்றைப் பேசி, இந்த சிறு வட்ட இயக்கத்துக்குள் சந்தோஷம் காண விழைகிறாள், பாவம், இப்பேதை' என எண்ணிக் கொண்டார் ரீட்டா.

காய்கறித் தோட்டத்துக்குள் நுழைந்த இருவரும் அங்கிருந்த வெள்ளரி மரத்தின் முதிர்ந்த கிளையொன்றில் அமர்ந்து, கனத்தால் வளைந்த அக்கிளையில், மேலும் கீழுமாய் சிறு ஊஞ்சலாடினர். இவ்விடத்தில் மட்டும் சூரியன் ஊடுருவி வீச, குளிரான வசந்தக் காலம் போலல்லாது, சூரியன் காயும் கோடை காலமாய் விளங்கியது தோட்டம்.

திடுமென ஓர் அமைதி நிறைந்தது. கெர்டா முகத்தில் சற்றுமுன் பூரணமாய் நிறைந்திருந்த கலக்கமேயற்ற சாந்தம் வீழ்ந்துப் போனது. அவர் தோள்கள் தளர்ந்தன. பக்கவாட்டில் திரும்பி கெர்டாவைப்

பார்த்தார் ரீட்டா. தான் செதுக்கிய பக்தை. கவலையே உருவான பக்தை. எதற்கு பதில் பேச பிடிப்பற்ற நிலைக்குள் மீண்டும் அகப்பட்டுக் கொண்டார்...?

''இந்த அளவுக்கு வெறுப்பிருக்கும் பட்சத்தில்...'', எனத் தொடங்கிக் கேட்டே விட்டார் ரீட்டா : ''எதற்காக வந்தீர்கள் கெர்டா...?''

இந்த கேள்விக்கான பதிலைப் பரக்கப் பரக்கச் சொன்னார் கெர்டா: ''ஓ...! இப்படி ஏன் நினைக்கிறீர்கள்...? இப்படி நினைக்க ஒரு காரணமுமில்லையே...?!''

''இப்படி பரபரத்து பதிலளிப்பதனால் மட்டும் உண்மை புலப்படாதா என்ன...?''

நிறுத்தாமல் தொடர்ந்தார் கெர்டா : ''இயந்திரமயமான லண்டனை விட்டு நழுவி, இது போன்ற கிராம மண் வாசம் தவழும் இடங்களில் களிப்பது எத்தனை கொண்டாட்டமான விஷயம் தெரியுமா..? நான் இதை விரும்புகிறேன்...! லூசியும் என்னிடம் கனிவாகத் தான் உள்ளார்.''

''லூசி...? கனிவு...? நகைச்சுவை செய்யாதீர்கள் கெர்டா...! இம்முறை அவர் கனிவாக ஒன்றும் தென்படவில்லை.''

இதற்கு கெர்டா சன்னமாய் அதிர்ந்தார். ''அப்படித் தோன்ற வில்லை ரீட்டா. என்னிடம் அவரெப்போதும் அன்பாய்த்தான் இருக்கிறார்.

''லூசியிடம் நற்பண்புகள் இருக்கின்றன. அவரால் மேன்மையாக நடந்துக் கொள்ளவும் முடியும். யாரும் இதை மறுக்க முடியாது'' என லூசி குறித்த கெர்டாவின் அபிப்பிராயத்தை ஆமோதித்த ரீட்டா தொடர்ந்தார் : ''ஆயினும் அவர் ஒரு வகையான இரக்கமற்ற மனிதர் தான். இதுவும் உண்மை. அவர் ஒரு சராசரி மனிதனாய் இல்லாததே - அதாவது, சமுதாயத்தில் ஒரு சாதாரண மனிதன், வாடிக்கையாய் நடந்துக் கொள்ள வழக்கமாய் எப்படி நினைப்பான், எப்படி நடந்துக் கொள்வான் எனும் அறிவு இல்லாததே - லூசியின் கருணையற்ற இன்னொரு பக்கத்தின் காரணமென நினைக்கிறேன்.''

அப்படி ஓர் அனுபவம் லூசியிடம் கெர்டாவுக்கு நேராததால், ரீட்டாவின் விமர்சனத்தை இவரால் படம்பிடிக்க முடியவில்லை.

''இங்கிருப்பதையே வெறுத்துக் கொண்டு நீங்கள் வந்துள்ளீர்கள் கெர்டா. உங்களுக்கு இந்தப் பிரயாணத்தில் ஒரு துளிக் கூட ஈடுபாடு

கிடையாது என்பது நீங்கள் அறிந்தது தான்...! இங்கு வருவதில் இப்படி ஒரு முடிவும் ஒவ்வாமையும் மனதிலிருக்கும் போது ஏன் தான் வர வேண்டும்...?''

''புரிந்துக் கொள் ரீட்டா'' என்றார் கெர்டா. ''ஜானுக்குப் பிடித்திருக்கிறது.''

''எது...?''

''நானிங்கு வருவது.''

''இருக்கட்டும். ஜானுக்குப் பிடிக்கட்டும். உங்களுக்கு, இதோ, இந்த அளவுக்குப் பிடிக்கவேயில்லை என விளக்கி, அவரை மட்டும் அனுப்பியிருக்கலாமே.''

''ம்ம். இது அவருக்குப் பிடிக்காது'' என்றவர், சற்று குரல் தாழ்த்திச் சொன்னார்: ''பிடிக்கவே பிடிக்காது.'' தொடர்ந்தார்: ''நானில்லாமல் அவர் அனுபவிக்க மாட்டார். அந்த அளவுக்கு அவர் சுயநலமற்றவர். நானும் அந்த இயந்திர யுக லண்டன் விட்டு, இது போன்ற அமைதியான சூழலுக்கு வந்து மனமிளகுவதில் தான் அவரும் நாட்டம் கொண்டுள்ளார்.''

''ஒப்புக் கொள்கிறேன். பாராட்ட வேண்டிய குறிக்கோள்தான். அதற்கு இந்தப் பரந்து விரிந்த லண்டனில், வேறு ஒதுக்கப் புறமா கிடைக்கவில்லை உங்களுக்கு? ஆங்கட்டெல் இல்லமான ஹாலோ தான் கிடைத்தா...?''

''நான் வராமல் அங்கேயே இருந்து, உங்களுக்கு அவமரியாதை உண்டு பண்ண எனக்கு விருப்பமில்லை ரீட்டா.''

''என் அருமை கெர்டா...!'' - பிரமித்துப் போய்க் கேட்டார் ரீட்டா: ''வித்தியாசமாயிருக்கிறீர்கள். நீங்கள் ஏன் எங்களை அந்த அளவுக்கு விரும்பி முக்கியத்துவம் தர வேண்டும்? ஆங்கட்டெல் குடும்பத்தை அப்படியொன்றும் கொண்டாடத்தக்க குடும்பமாய் நான் என்றுமே கருதியதில்லை, தெரியுமா...! இதெல்லாம் சும்மா ஒரு கூத்து தான். நாங்கள் எல்லாரும் ஒன்றாய் கூடி கொக்கரித்து எங்களுக்கு மட்டும் விளங்கவல்ல அசாதாரண மொழியில் கூத்தடிப்போம். இதை வெளியாள் எவனாவது பார்த்தால், உலகிலேயே சகிக்காத கூத்து இது தான் என்று எங்களைக் கொன்று போட்டாலும் நான் ஆச்சரியப்பட மாட்டேன். கெர்டா...! கிருஸ்துமஸ் புது வருடம் போல், இக்கூத்தும், எங்களுக்கு வருடம் ஒரு விசேஷ பண்டிகையாகி விட்டது.''

இப்படி முடித்துக் கொண்ட ரீட்டா, ''கிளம்பலாம் கண்ணே. இது சிற்றுண்டி நேரம்'' என கெர்டாவின் தோள்களில் வாஞ்சையாய் கை வளையமிட்டுக் கொண்டவாறு நடக்கலானார்.

★ ★ ★ ★

இருவரும் வனப்பாய் வடிவமைக்கப்பட்டிருந்த காய்கறித் தோட்டத்தை விட்டு வெளியேறியதும், வெடிச் சத்தங்களைக் கேட்டனர். வியப்பாய் பார்த்த கெர்டாவுக்கு, ''யாரோ ஆங்கட்டெல் வீட்டில் படுகொலை செய்ய ஆரம்பித்து விட்டது போல வெடிக்கும் குண்டு ஓசை'' எனக் குறிப்பிட்டார் ரீட்டா. ஆனால் காரணம் வேறு!

ஹென்றியும் எட்வர்டும் சிலபல தெரிந்த மற்றும் தெரியாத துப்பாக்கிகளைக் கையில் வைத்துக் கொண்டு, அவை குறித்து விவாதித்தபடி, குண்டுகளை உள்ளே போட்டு எப்படிச் சுடுவது என்றும் ஆராய்ந்து, சுட்டு, தெளிவுபடுத்திக் கொண்டிருந்தனர். ஹென்றியின் மிகப் பிடித்த பொழுது போக்கு, துப்பாக்கிகள். வெறித்தனமாய் முயன்று தினுசு தினுசாய் துப்பாக்கிகள் கைப்பற்றி குவித்தும் வைத்துள்ளார். அவ்வப்போது எட்வர்ட் போல் ஆள் கிடைத்து விட்டால் போதும்.... அவற்றை எப்படி இயக்குவது எனும் ஆராய்ச்சியிலிறங்கி விடுவார்.

ஹென்றி பல துப்பாக்கிகளையும், சில இலக்குப் பலகைகளையும் கொண்டு வந்திருந்தார். இலக்குப் பலகைகளை சிறிது தொலைவில் நட்டு வைத்து விட்டு இருவருமாய் சுட்டுத் தள்ளிக் கொண்டிருந்தனர்.

அரண்மனை போன்ற ஹாலோவிலிருந்து வெடிச்சத்தம் கேட்டு வெளியே வந்த ஆட்கள், கொஞ்சம் கொஞ்சமாய் சேர ஆரம்பிக்க, அந்தப் பெரிய மைதானமே களை கட்டியது.

''வா ஹென்ரீட்டா. எதிரே ஒரு கள்வன் அகப்பட்டதாய் நினைத்து முயற்சி செய்கிறாயா...!''

இப்படிக் கேட்ட ஹென்றியிடமிருந்து துப்பாக்கியை வாங்கிக் கொண்டார் ரீட்டா.

''அப்படிப் பிடி. ஆங்... ஆங்... அப்படித்தான். சரி. அந்த இலக்குப் பலகையினைக் குறி வை. ஆயிற்றா...? கைகளை அழுத்தானில் பதி. அழுத்தி விடாதே தாயே...! பதி! இனி அழுத்து.''

டமார்!

''கள்வனைத் தப்ப விட்டு விட்டாய்!'' என்ற ஹென்றி, ''நீ முயற்சி செய் கெர்டா'' என்றார்.

பதுங்கினார் கெர்டா. ''நா...நா...நான்... என்னால் முடியும் என்று... ... ... முடியுமா?''

''அட வாம்மா திருமதி ஜான்...! வெகு வெகு சுலபம்.''

அச்சத்தால் புருவம் பின்ன பின்வாங்கி, கண்களை முடிந்த மட்டில் இருக்கி மூடி துப்பாக்கியை வெடித்தார் கெர்டா. ரீட்டாவின் விரிந்த இலக்கை விட இன்னும் விரிந்துப் போய், அந்தக் குண்டு எங்கேயோ விழுந்தது.

இந்த அமர்களத்தைப் பார்த்து உள்ளிருந்து ஆர்வமாய் வந்து சேர்ந்த மிக்டே, ''ஏய்...! எனக்கொரு குண்டு...!'' என பாய்ந்தார். ஓரிரு குண்டுகளைச் செலவழித்த பிறகு, ''ஓஓ...! வெளியிலிருந்து பார்த்து கணிப்பது போல அத்தனை சுலபமில்லை போலிருக்கிறதே...!'' என்று தன் குண்டு சுடும் அனுபவத்தை வர்ணித்தவர், ''இருந்தாலும் தமாஷான நல்ல வேடிக்கை தான்'' என்றார்.

இப்போது லூசி வீட்டுக்குள்ளிருந்து வெளிப்பிட்டார். சற்றுத் தள்ளியிருந்த மைதானத்தில் குடும்பமே நிற்பது கண்டு படியிறங்கி நெருங்கினார். அவருக்குப் பின்னால், கை நகம் முழுவதும் ஆதாம் ஆப்பிள் வடிவம் கொண்டிருந்த ஒல்லியான - சிடுசிடுப்பான நிலையிலிருந்த இளைஞன் ஒருவனும் வந்தான்.

''இது தான் டேவிட்'' என அறிவித்தார் லூசி. ஹென்றி, டேவிடை வரவேற்றுக் கொண்டிருக்க, மிக்டே'வின் கையிலிருந்து துப்பாக்கியை எடுத்துக் கொண்ட லூசி, சில குண்டுகளை அதற்குள் சரியாய் பொருத்திப் பூட்டி, எதிரேயிருந்த இலக்குப் பலகையின் மையப் பகுதிக்கு வெகு அருகில் சுட்டு, மூன்றுத் துளைகளை ஏற்படுத்தினார்.

''அற்புதம் லூசி'' என பரவசமானார் மிக்டே. ''துப்பாக்கிச் சுடுவது, உன் திறமைகளுள் ஒன்று என எனக்குத் தெரியவே தெரியாதடீ...!'' எனவும் வியந்தார்.

இப்போது இடைபுகுந்த ஹென்றி, ''லூசி...'' என நகைச்சுவை ததும்பத் துவங்கி, ''எப்போதும் அவள் ஆண்களை சுட்டே கொல்பவள்...!'' என பரிகசித்தார்.

இதற்கு அனைவரும் புன்னகைக்க, ''ஆங்..'' என்று ஏதோ நினைவிற் தட்டியவராய் தொடர்ந்தார் ஹென்றி : ''இதை நான்

கிண்டலாகச் சொல்லவில்லை. ஒரு முறை, கடற்கரையில், காலம் கழிந்து, இரவில் வெகு நேரம் நாங்களிருவரும் உலவிக் கொண்டிருந்த ஒருநாள்! திடுமென முளைத்த முரட்டுத் திருடர் கூட்டம் ஒன்று, எங்கள் மீது பாய்ந்தது. நினைவிருக்கிறதா லூசி. நான் அவர்களில் ஒருவனோடு கட்டியுருண்டு தொண்டை தண்ணீர் வற்ற போராடிக் கொண்டிருந்தேன்.''

''ஓ...'' வியந்த மிக்டே, ''அப்போது லூசியின் கதி என்னவாயிற்று?'' என்று கேட்டார்.

''இருட்டுக்குள் தோராயமாக இந்தப் பூசல் நடந்துக் கொண்டிருந்த திக்கு நோக்கி இரு முறை சுட்டாள். அவள் துப்பாக்கிக் கொண்டு வந்திருந்தது கூட எனக்குத் தெரியாது. ஒரு திருடனின் காலையும் இன்னொருவனின் தோள் பட்டையையும் சீவிச் சென்றன குண்டுகள். மயிரிழையில் உயிர் பிழைத்தேன். என் வாழ்க்கையில் நான் அனுபவித்திராத உயிர்ப் பயம் அந்தக் கணத்தில் நிகழ்ந்தது. நானும் அந்தத் திருடர்களோடு தான் உருண்டு புரண்டு போராடிக் கொண்டிருந்தேன். குண்டு எப்படியோ என்னைத் துளைக்காமல் விட்டு விட்டது, என நினைக்கும் போதெல்லாம் நடுங்குவேன்.''

லூசி சாதாரணமாய் அவரைப் பார்த்து சிரித்துக் கொண்டிருந்தார். ''இக்கட்டான நிலைகளில் ஆபத்தான சில முடிவுகளை எடுத்துத் தான் தீர வேண்டும்'' என்றார் சர்வ சாதாரணமாய். ''அத்தருணத்தில் போய் பரிசீலனை செய்தெல்லாம் காலந்தாழ்த்தாமல் உடனடியாய் அம்முடிவினை நிறைவேற்றி விட வேண்டும்.''

''பாராட்ட வேண்டிய மனோநிலைதான் டியர்'' என்ற ஹென்றி, சொன்னார்: ''ஆனாலும், அந்தச் சம்பவத்தை நினைக்கும் போதெல்லாம், அன்பு லூசி, என்னையே பணயம் வைத்துத் தான் நீ அந்த முடிவை எடுத்துள்ளாய் எனும் எண்ணம் தலைதூக்கி சிறிதாய், இருந்தாலும் ஆழமாய், எனக்குத் துன்பமேற்படுவதுண்டு!''

## 8

மாலை சிற்றுண்டி முடிந்தது. ''ஒரு சிறு நடை சென்று வரலாம். வா'' என்று ரீட்டாவை அழைத்தார் ஜான். கெர்டாவை பாறைகள் நிறைந்து அமைக்கப்பட்டுள்ள தோட்டத்திற்கு, இது உகந்த பருவகாலமாய் இல்லா விட்டாலும், அழைத்து சென்றே தீர வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டிருந்தார் லூசி.

எட்வர்டுடன் நடந்தது போலில்லை, ஜானுடன் செல்வது என நினைத்துக் கொண்டார் ரீட்டா. எட்வர்டுடனான நடை வெறும் அசட்டையான சிறு நடை. ஜானுடன் நடப்பதில் மூச்சு நின்றுப் போனது. சிறிது தூரத்திலிருந்த குன்று ஒன்றின் உச்சியை அடைந்து நின்ற போது நாக்குத் தள்ளிப் போய்க் கொண்டிருந்த ரீட்டா பிராண வாயுவின்றி சொன்னார்: ''இது ஒன்றும் மாரத்தான் போட்டியில்லை, ஜான்!''

வேகத்தைக் குறைத்துக் கொண்டு களுக்'கென்று சிரித்த ஜான், ''உன் கால்கள் சிதறிப் போகும் வேகத்தில் நான் பறக்கிறேனா...?'' எனக் கேட்டார்.

''என்னாலும் அப்படி முடியும்! ஆனால் அதற்கு என்ன தேவையிருக்கிறது எனத்தான் புரியவில்லை. குறித்த நேரத்துக்குள் ஏதோ ரயிலைப் பிடிக்க என்று நாம் நடக்கவில்லை. ஏன் இப்படி வெறி பிடித்தாற் போல் சக்தி கொண்டு அலைகிறீர்கள்...? உங்கள் கட்டுக்குள்ளிருந்து நீங்களாகவே வழுக்கி விடுகிறீர்களா..?''

''... ... ...''

''நீங்கள், நீங்களாக இல்லை. ஜானுக்குள் இருக்கும் வேறொரு ஜான், ஜான் அறியாமலேயே, ஜானை கட்டுப்பாடிழக்கச் செய்கிறான்.''

உறைந்துப் போய் நின்றார் ஜான். ''ஏனிப்படி சொல்கிறாய்?''

ஹென்ரீட்டா ஜானை ஆவலாய் பார்த்தார். ''இப்படிச் சொன்னதில் எதையும் நான் பிரத்யேகமாய் முக்கியப்படுத்திக் குறிப்பிடவில்லை. ஆனால்... ஆனால் ஜான்! மிக வேண்டிய எதையோ இழந்த ஒருவன், தான் வேண்டவே வேண்டாத

வாழ்க்கையில் வழுக்கி விழுந்து விட்ட துடிப்பு தான், உங்கள் அவரசத்துக்கு உதாரணம் கூற சிறப்பான காரணமாய் அமைகின்றது. அப்படியா? நீங்கள் இழந்தது எதை? ம்?''

ஜான் திரும்பி நடந்தார். இப்போது மெதுவாய்.

''உண்மையாய் சொல்ல வேண்டுமென்றால்'', என்ற ஜான் மிக வருத்தமும் சுய இரக்கமும் கொண்டு சொன்னார் : ''நான் மிக அயர்ந்து, மிகக் களைத்து, மிகத் தொய்ந்து, அதனால் எதையும் செய்ய இயலாமல் ஓர் அவசரத்திலும் எரிச்சலிலும் விழுந்து, சோர்ந்து போயிருக்கிறேன் ரீட்டா. ரொம்ப சோர்ந்து போயிருக்கிறேன். உடம்பாலும் மனத்தாலும்.''

சொன்னக் குரலில் தெறித்த பலஹீனத்தையும் அக்கறையின்மை யையும் ரீட்டா கேட்டார். அவரை இன்னும் கிளறிப் பார்க்க ரீட்டாவின் மனம் இணங்கவில்லை.

''க்ரேப்ட்ரீ பரிசோதனை எப்படிப் போய்க் கொண்டிருக்கின்றது?'' என்று கேட்டார்.

''அபிப்பிராயம் அறிய இயலாத ஆரம்ப நிலை இது ரீட்டா. இருந்தாலும், ஆதாரம் மட்டும் கிடைத்து விட்டால் நிரூபிக்கவல்ல பல முடிவுகள், ஆராய்ச்சியில் ஆங்காங்கே கிடைத்து, தொங்கிக் கொண்டிருக்கின்றன என்றே உணர்கிறேன்.''

''ஓ...! ரிட்ஜ் வே நோய்க்கு விடிவு காலம் பிறந்து விட்டது என எடுத்துக் கொள்ளலாமா, ஜான். இனி அந்நோயால் யாரும் இறக்க மாட்டார்களா...?''

''மருந்துக்குத் தான் நான் போராடி வருகிறேன். முழு தீர்வு எனில், அது தற்செயலாய் தான் நடக்கயியலும்.''

எத்தனை விந்தையானவர்கள் மருத்துவர்கள் என எண்ணிக் கொண்டார் ரீட்டா. தற்செயலாக....! இத்தனை மெனக்கெட்டு நிகழும் ஆய்வின் மீதே நம்பிக்கையற்றுள்ளதால் விளையும் தற்காப்பு வசனம்...!

ஜான் தொடர்ந்தார்: ''அறிவியல்பூர்வமாக இந்த ஆய்வு, விவாதங்களுக்கு உதவும் பல முடிவுகளை அள்ளித் தந்துள்ளது.''

ஆழமான சுவாசத்தை வெளியேற்றிய ஜான், மருத்துவம் குறித்த பேச்சுக்கு முடிவு கட்டும் வகையில், ''இது போன்ற இடங்களுக்கு அவ்வப்போது வந்து செல்வது மிக அவசியம்'' என பேச்சை திசை திருப்பினார். ''சுகாதாரமான காற்றினை நுரையீரலுக்குப் பாய்ச்சி -

மனம் நிறைந்த உன் போன்றோரை மீண்டும் அன்னியோன்யமாய் ஒரு முறை பார்த்துப் பேசி'' என்றவர், இப்போதெல்லாம் அவர் முகத்தில் அரிதாகி விட்ட அவருடைய கவர்ச்சி மிகு சிரிப்பினை உதிர்த்து, ''கெர்டாவின் சூழலுக்கும் இந்த உல்லாசப் பயணம் பேருதவி செய்யும்'' என்றார்.

''கெர்டா இங்கு ஹாலோவுக்கு வருவதில் நிறைந்த ஆனந்தம் காண்கிறாள்.''

''ஆமாம். சொல் ரீட்டா. நான் எட்வர்ட் ஆங்கட்டெல்'லை இதற்கு முன் பார்த்திருக்கிறேனா...?''

''இரு முறை பார்த்திருக்கிறீர்கள்'' என்றார் ரீட்டா, இது கூடவா நினைவில்லை எனும் தொனியில், வெகு வறட்சியாக.

''நினைவேயில்லை. குறிக்கோளற்றுக் கருத்துத் தெளிவில்லாமல் இருக்கும் வகையாய் தோன்றுகிறார் அவர்.''

''தவறு ஜான். எட்வர்ட் அருமையானவர். அவர் மீது எனக்கு எப்போதுமே அலாதி பிரியம் உண்டு.''

''சரி சரி. எட்வர்ட் மீது ஏன் நாம் நேரத்தை வீணாக்க வேண்டும்! இவர்கள் ஒருவரையும் இப்பொழுது நாம் நினைக்க வேண்டாம்.''

ஹென்ரீட்டா ஒலி குறைத்துச் சொன்னார் : ''ஜான்...! சில சமயங்களில் உங்களைக் கருதி நான் மிக பயப்படுகிறேன் ஜான்...!''

''எனக்காக பயப்படுகிறாயா...? என்ன பேசுகிறாய்..?'' - ஆச்சரியம் மிகுந்த முக ஜாடையில் ரீட்டாவைப் பார்த்தார் ஜான்.

''நீங்கள் உங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதில் மிக அலட்சியமாயிருக்கிறீர்கள் ஜான். மிக அலட்சியமாய். என்னவெல்லாம் நம்மைச் சுற்றி நடக்கின்றன என்பதை அறிந்துக் கொள்ளாமல் - அறியவும் விரும்பாமல் - குருட்டுத் தனமாய்...!''

''நானா...? நானா, குருட்டுத்தனமாய்...?''

''நிச்சயமாய்..! நீங்களே தான். உங்களுக்கும் தெரியாது - எடுத்துச் சொன்னாலும் உங்களுக்குப் புரியாது...! நீங்கள் ஒரு வினோதமான உணர்ச்சியற்ற ஆசாமியாகி விட்டீர்கள் ஜான். மற்றவர்கள் உங்களைப் பற்றி என்ன உணர்கிறார்கள் - என்ன நினைக்கிறார்கள் - என்ன பேசுகிறார்கள் - இவற்றில் எதுவுமே உங்களுக்குத் தெரியாது. தெரியவே தெரியாது. வேறு எவரும் உங்களைப் போல பிரக்ஞையற்று இப்படி இருக்கவே மாட்டார்கள் ஜான். உங்களின் இந்நிலை தான் என்னை அச்சுறுத்துகின்றது.''

''நீ எடை போட்டிருப்பதற்கு எதிர்ப்பதமாய் தான் நானிருக்கிறேன் ரீட்டா. எனக்கும் என்னை சுற்றி நடப்பவை தெரியும்.''

''நீங்கள் என்ன செய்கிறீர்களோ அது மட்டும் உங்களுக்குத் தெரியும். ஆமாம். ஒப்புக் கொள்கிறேன். நீங்கள் ஒரு கை விளக்கு மாதிரி ஜான். தான் காட்டப்படும் ஒரு பொருளின் மீது மட்டும் போய் குவியும் அதன் ஒளிக்கற்றைப் போல, உங்கள் ஈடுபாடு எங்குள்ளதோ அதைப் பற்றி மட்டுமே சிந்தித்தும் அதிலேயே சஞ்சரித்தும் வாழ்கிறீர்கள். அதைத் தவிர மற்ற எல்லாமும் உங்களுக்கு இருட்டு...!''

''ஹென்ரீட்டா, என் அருமையே, என்ன இதெல்லாம்?''

''இக்குணம் அபாயமானது ஜான். எல்லோரும் உங்களை நேசிப்பதாக நீங்களாகவே நினைக்கிறீர்கள். உங்களுக்கு அவர்கள் சகாயமானவர்கள் என கற்பனை செய்துக் கொள்கிறீர்கள். ஓர் எடுத்துக்காட்டாய் சொல்கிறேன். இப்படித்தான் லூசியை நீங்கள் பாவனை செய்துள்ளீர்கள்.''

''லூசிக்கு என்னைப் பிடிக்காது...?'' என ஆச்சரியமாய் கேட்டார். ''அவர் மீது பிரியமும் அன்பும் மிகக் கொண்டவன் நான். அந்த ஜோடியை, மிக உன்னதமான ஜோடியாய் என் மனதில் நிலைநிறுத்திப் பூஜிக்கிறேன்.''

''அதனால் அவரும் உங்களை ஆதரவாய் நினைத்துள்ளார் என நீங்களாகவே ஏற்றுக் கொண்டு விட்டீர்கள். எனக்கு இதில் சந்தேகமே. இது போலத்தான் நீங்கள் எல்லோரையும் - கெர்டா, எட்வர்ட், மிட்கே, ஹென்றி - என எல்லோரையும் நம்புகிறீர்கள். அதுவும் சாதாரண நம்பிக்கையா வைத்துள்ளீர்கள்...! ஊஃப்ப்ப்! பைத்தியக்கார நம்பிக்கை...!'' என்ற ரீட்டா அழுத்தமாய் அவர் மனதில் பதிய வேண்டும் என்று கேட்டார்: ''அவர்கள் உங்களைப் பற்றி என்ன எடை போட்டு நினைக்கிறார்கள் என்பது உங்களுக்கெப்படி தெரியும் ஜான்?''

''ஹென்ரீட்டா...? அவள்...? என்னருமை ஹென்ரீட்டா என்னைப் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதையாவது நான் சரியாக கணித்துள்ளேனா...?'' - சட்டென அவர் கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டார். ''உன் பற்றிய என் கணிப்பாவது சரிதானே...?''

தன் கைகளை உருவி எடுத்துக் கொண்டார் ரீட்டார். ''யாரையும் நீங்கள் முழுவதுமாக இந்தப் பூமியில் நம்ப முடியாது ஜான்.''

உயிரிழந்தது ஜானின் முகம். ''இப்படிப் பேசாதே ரீட்டா. உன் வார்த்தைகளை நான் ஏற்கவே மாட்டேன். உன்னைப் பற்றிய என் கணிப்பில் நான் தவறே கிடையாது ரீட்டா'' என்ற ஜானின் முகம் இயலாமையால் ஆதரவற்று மாறியது. சில நிமிடங்கள் பேசாது, விவரமும் புரியாது அடங்கினார்.

''என்ன ஜான்...?''

''இன்று காலையில் நான் எனக்கு நானே என்ன சொல்லிக் கொண்டிருந்தேன் தெரியுமா ரீட்டா...?'' என்று ஆரம்பித்த ஜான், இவ்விஷயத்தை ரீட்டாவிடம் சொல்லியே தீர வேண்டும் - அதற்கு இதுவே உகந்த நேரம் என அறிந்து சொன்னார் : ''ரொம்ப அபத்தமானது அது. பரிகாசம் செய்வாய் கேட்டால்....! 'வீட்டுக்குப் போக வேண்டும்.' இதைத்தான் சொல்லிக் கொண்டேயிருந்தேன். திருப்பித் திருப்பி. இதனால் நான் என்ன உணர்ந்தேன், உணர்த்தினேன் என்று எனக்குக் கிஞ்சித்தும் தெரியாது. ஆனால் சொன்னேன். சொன்னேன்.''

சிறு சிந்தனையூடே ரீட்டா ஆரவாரமின்றி சொன்னார் : ''ஏதோ ஒரு நினைவு, நீங்கள் வீடாய் கருதும் ஒரு நிகழ்வு, உங்கள் கருத்துக்குள் பதிவாகியிருக்க வேண்டும். அதாவது உங்களையே நீங்கள் சரணடைந்து கொடுத்த ஓரிடம். அல்லது ஒரு மனது. அல்லது ஒருவர் வீடு. அது தானே நம் மனம் நாடும் வீடாக இருக்க முடியும்!''

''இல்லை. நிச்சயமாய் அப்படி ஒன்றும் இல்லை'' - கூராய் மறுத்த ஜான், அபயம் தேடிக் கேட்டார் : ''பிறகேன் இப்படி....?''

★ ★ ★ ★

அன்றைய இரவு உணவின்போது, ஹென்ரீட்டா, டேவிடுக்கு அடுத்து அமரும்படி அமைந்தது. சாப்பாட்டு மேஜையின் எதிர் மூலையிலிருந்து பரிமாறிக் கொண்டிருந்த லூசியின், நுண்மையான உணர்வுகளைப் பிரதிபலித்து விளக்கவல்ல புருவ வளைவுகள், விசாரணை தோரணையைப் பிரதிபலித்தவாறு இருந்தன.

கெர்டா அருகிலமர்ந்திருந்த ஹென்றி, சங்கோஜமில்லாமல் கெர்டா உணவருந்த வேண்டி முயன்று, அதில் நன்றாகவே முன்னேறிக் கொண்டிருந்தார். இங்குமங்குமாய் தாவித் தாவி மேயும் லூசியின் கருத்தோடு எட்டடி எடுத்து வைத்துப் பாய்ந்தும் இணைய இயலாமல் பிரமித்துப் போயிருந்தார் ஜான். எப்போதுமிருப்பதை விட

இன்னும் ஆழ்ந்த சிந்தனையிலிருந்து இங்கு நடப்பவற்றை மறந்தாற் போலிருந்த எட்வர்டுடன், அவரருகில் அமர்ந்திருந்த மிக்டே, தொடர்பற்ற ஒரு விதத் தடுமாற்றத்துடனேயே தான் பேச முடிந்தது. கடுகடுவென எரியும் தணலாய் கனன்றுக் கொண்டிருந்த டேவிட், தட்டிலிருந்த ரொட்டியை உண்ணாமல் பொடிப்பொடியாக்கிக் கொண்டிருந்தான்.

கொஞ்சம் கூட விருப்பமில்லாத மனத்துடன் தான் டேவிட் 'ஹாலோ'வுக்கு வந்துள்ளான். அதனால் இதுவரை ஹென்றியையோ லூசியையோ போய் சந்திக்கவேயில்லை. இவ்விருவுறவையும் தாட்ணியமின்றி நிராகரிக்கவும் தயாராய்த்தானிருந்தான் அவன். இவ்வுறவுகளிலும், அவனது மனதின் அமைப்புக்குப் பிடித்தமே யில்லை. இதுவரை டேவிட் அறிந்தேயிராத எட்வர்ட்டை, மிக அலட்சியமாய் தனக்குள் எள்ளி நகையாடிக் கொண்டு ஒதுக்கினான். கூரிய விமர்சனக் கண்களோடு எஞ்சிய விருந்தாளிகளையும் அளந்தான் டேவிட். நிந்திக்கும் நோக்கிலான விமர்சனம். உறவுகள் என்பதே மிக அஞ்சத்தக்க அமைப்பு என்று தனக்குள் நிர்மாணித்துக் கொண்ட டேவிட், இத்தகைய ஒவ்வாமையால், உறவுகளோடு வலியப் போய் தேவையற்ற வம்பு பேச வேண்டும் எனும் எதிர்பார்ப்பினையே வெறுத்தான். சோற்றுக்குதவாத முடிவுகள். டேவிட் முடிவுகள்.

மிக்டேவையும் ஹென்ரீட்டாவையும், மூளையற்றவர்கள் என பெருக்கித் தள்ளினான். ஹார்லி தெருவில் கொட்டகையிட்டிருக்கும் நூற்றுக்கணக்கான மருத்துவ ஜீவிகளில், இந்த ஜானும் ஒன்று என்று எரிச்சலடைந்தான். கெர்டா, டேவிட்'டின் கட்டத்துக்குள்ளேயே வரவில்லை...!

இப்படிப்பட்ட எண்ணத்தினூடே கழுத்தைத் திருகித் திருகி எல்லோரையும் ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்தவன் எண்ணத்தில், இவ்விதமாய் தான் எடை போட்டு முடித்திருப்பதை இந்த மனிதர்களும் அறிந்தே தானிருக்க வேண்டும் என அனலாய் தோன்றியது. இந்தக் கூட்டமே ஒதுக்கி வைக்கப்பட வேண்டிய கூட்டம். மெழுகித் தள்ள வேண்டியக் கூட்டம்.

இந்த முடிவினை மூன்று நான்கு முறை தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டபோது, டேவிடுக்கு விடுதலையாய் பட்டது.

விளைந்த இவ்விடுதலை உணர்வால், தனக்குள் இருந்த அக்கினி உக்கிரம் தணியாதிருந்தாலும் ஆசுவாசமடைய முடிந்தது. அதனால் இவன் கைகளுக்குள் அகப்பட்டுச் சிதைந்துக் கொண்டிருந்த ரொட்டித் துண்டு பிழைத்தது.

இந்நிலையில், டேவிடைச் சுட்டிக்காட்டி லூசியின் புருவ வில்கள் காண்பித்த ஜாடைக்கு ஹென்ரீட்டாவால் உடனடியாய் ஒன்றும் செய்ய முடியவில்லை. கேட்கும் எதற்கும் வெட்டு ஒன்று துண்டு ரெண்டு என மறுமொழி பேசும் டேவிட்'டின் போக்கு, எதிராளியைக் கிள்ளுக்கீரையாக்கி இகழும் உச்சத்திலிருந்தது. எனவே அவனைப் பேச வைக்க என்று எப்படி ஆரம்பித்தாலும், அது மூக்குடை தராமல் அமைய வேண்டும் என யோசித்துக் கொண்டிருந்தாள் ரீட்டா. முடிவில், நாக்கைக் கட்டி வாயைத் திறக்காமலே இவ்வளவு நேரமும் அழிச்சாட்டியம் செய்துக் கொண்டிருக்கும் டேவிட்'டின் மௌனத்தைக் கலைக்க, ஒரு முறை தான் அடையாளம் கண்டு வைத்திருந்த வழி முறையை நினைவில் கொண்டு வந்த ரீட்டா, அதை செயல்படுத்தத் துணிந்தார்.

பிரபல இசையமைப்பாளர் ஒருவரின் பெயரை - டேவிட் அதிகமாய் ரசிக்கும் அந்த இசையமைப்பாளரின் பெயரை - வேண்டுமென்றே பிடிவாதமாய் மிகத் தவறாக உச்சரித்து விட்டு, தன் வேலையைத் தொடர்ந்தார் ரீட்டா. டேவிட்'டுக்கு இருக்கும் இசை மீதான அபரிமித ஆர்வத்துக்கு, தான், அவனின் ப்ரீதியான இசை வல்லுநரின் பெயரினைத் தவறாக உச்சரித்தால், வாயைத் திறந்துக் கதறத்தான் செய்வான் என்று பொழுதுபோக்காய் ரீட்டா தீட்டிய திட்டம், அவரே விநோதிக்கும்படி அற்புதமாய் செயலாகியது.

ஒரு பக்கமாய் சாய்ந்து உடலை நீட்டிக் கொண்டு ஒருவித அவலட்சணப் போக்கில் தன் முதுகெலும்பை முடிந்த மட்டும் வளைத்து சுழித்து அமர்ந்திருந்த டேவிட், விருட்டென்று நிமிர்ந்து மிகச் சரியாய் ஆகி, தட்டில் நோண்டிக் கொண்டிருந்த ரொட்டித் துண்டினை அப்படியே விட்டுவிட்டு பேச ஆரம்பித்தான். ''இதிலிருந்து...'', என உயர் ஸ்தாயியில், துல்லியமாக, ரீட்டாவின் மீது கோபக் குறியாய் பார்வையைப் பதித்து எகிறிய டேவிட், ''...இசை என்பதன் மிகக் குறைந்த அடிப்படை அறிவு கூட இல்லாத வீண் நீங்கள் என்பது தெளிவாகிறது'' என்றான். இதில் தொடங்கி இரவு

உணவு முடியும் வரை, மிகத் தெளிவான உச்சரிப்பில், ரீட்டாவைக் கடித்துக் குதறும் உணர்வு தெறிக்கும்படி, வீரியமாய் டேவிட் கத்திக் கொண்டிருக்க, ஹென்ரீட்டா, ஆணையிடப்பட்ட சேவகன் ஒடுங்கி சாதுவாய் கவனிப்பது போல தன்னை ஆக்கிக் கொண்டார்.

கத்துவான் என எதிர்பார்த்திருந்தாலும், இப்படிக் கத்துவான் என எதிர்பார்த்திராத லூசி, எப்படியோ, கொஞ்சமாய் டேவிட'டைப் பேச வைத்த ரீட்டாவுக்கு, டேபிளின் விளிம்பு வழி சகாயமான ஓர் அருள் பார்வையை வீசி நன்றிக் கூற, மிக்டே, நடப்பதில் ஒட்டாமல் கடுகடுவெனவிருந்தார்.

''நீ தான் எங்கள் ஆபத்பாந்தவன் ரீட்டா. எத்தனை புத்திசாலி நீ...!'' - சாப்பிட்டு வரவேற்பறை நோக்கி நகரும் போது ரீட்டாவின் தோளைச் சுற்றிக் கரவளையமிட்டு வந்த லூசி, புகழ்ந்துச் சொன்னது இது.

எல்லோரும் சாப்பிட்டு வந்ததும் சீட்டுக் கச்சேரி துவங்கியது. இரு குழுக்களாகப் பிரிந்துக் கொண்டனர். ஹென்ரீட்டா கெர்டாவுடன் இணைந்து ஜோடி அமைத்து, ஜான் மேலும் எட்வர்ட் இணைக்கு எதிராக ஆட்டத்தைத் துவங்கினார். கெர்டாவை லூசியிடமிருந்து பிரித்து வைக்க நினைத்திருந்தார் ரீட்டா; முடிந்தால் ஜானிட மிருந்தும்...! ஆனால் ரீட்டாவின் இந்த முயற்சிக்கு தீவிரமாய் ஜான் எதிர்ப்புக் காட்ட, இயலாமல் போனது. எட்வர்ட் முன்னேற்பாடாக மிக்டேவை விலக்கி விட்டார்.

இவ்வளவு செய்தும் சூழ்நிலை அனுசரணையாய் இல்லை என்றே பட்டது ரீட்டாவுக்கு. இந்த அசௌகரியம் எப்பொழுது ஆரம்பமானது என விளங்கவில்லை. என்னாவானாலும், விளையாட்டு ஒரு முடிவுக்கு வரும் கட்டத்தில் கெர்டா தான் ஜெயிக்க வேண்டும் என முனைப்பாய் முயன்றார் ரீட்டா. சீட்டு விளையாட்டில் அப்படி யொன்றும் மோசமான ஆட்டக்காரி அல்ல கெர்டா. அதுவும் ஜான் எதிரே அமர்ந்திராவிட்டால், சராசரிக்கும் மேலே ஆட வல்லவர் தான். ஆனால் ஜான் மட்டும் எதிரே அமர்ந்திருந்து விட்டால், நிலைமையே தலைகீழ்! நல்ல திறமையிருந்தும், நடுநடுக்கத்தோடு ஆடி, தன் கைகளில் அடுக்கப்பட்டுள்ள சீட்டுகளுக்குள்ளேயே சுலபமாக ஒளிந்துள்ள வெற்றியின் அறிகுறி அறியாது, முக்கியக் கட்டத்தில் தவறாக முடிவெடுத்து கோட்டை விடும் ஆட்டக்காரி! ஜான் அதீத

நம்பிக்கையோடு விளையாடும் நல்ல ஆட்டக்காரர். எட்வர்டைப் பற்றி சொல்லவே வேண்டாம் - மிகச் சிறப்பான சீட்டுக் கட்டு ராசா...!

இரவுத் தேய்ந்து மறைந்து வெகுநேரமாகியும் சீட்டுக் கட்டின் குலுக்கல்கள் மட்டும் வளர்ந்தபடியே இருந்தன. இரு பக்கத்திலும், புள்ளிக் கணக்கு கூடிக் கொண்டேதானிருந்தன. இரு அணிகளுக் குள்ளும் பிடிப்பும் வேகமும் வளர்ந்த வண்ணமிருந்தன.

கெர்டாவைப் பொறுத்தவரை, அவளைக் குஷிப்படுத்த என எதிர்பாராது அமைந்துள்ள ஒரு விளையாட்டு. ஈடுபாடாய் ஆடினார். சந்தோஷம் பொங்க புது ஊக்கத்தோடு காணப்பட்டார். இக்கட்டான முடிவினை எடுக்க வேண்டிய கட்டங்களில் ரீட்டா தோள் தந்து உதவியதில் மேலும் உவகையடைந்தார்.

கெர்டாவின் தன்னம்பிக்கையை ஒதுக்கியே வைத்துப் பார்க்கும் தன் குரூர குணத்தினை அடக்க இயலாத ஜான், அவ்வப்போது, தேவையற்று வெகுண்டெழுந்து, ''என்ன காரணமுமின்றி எதற்கடீ அந்தச் சீட்டினை எறிந்தாய்...?'' போன்ற வேண்டாத வார்த்தைகளை, செய்யக் கூடாததைக் கெர்டா செய்து விட்டது போல் கிண்டல் கலந்த ஆச்சரிய தொனியில் வீசும்போது, ''முட்டாளாய் பேசாதே ஜான். கெர்டா என் கட்சி. உங்களுக்கென்ன? அவள் அந்த சீட்டினைப் போட்டது வெகு சரி. ஒன்று தெரியுமா...? விளையாட்டின் இக்கட்டான இந்நேரத்தில் செய்யக் கூடிய ஒரே புத்திசாலித்தனமான நகர்த்தல், கெர்டா செய்தது தான்'' போன்ற துரிதமான மற்றும் தீவிரமான ரீட்டாவின் எதிர்வாதங்கள் ஜானை அடக்கியே வைத்தன.

விளையாட்டு முடிந்தபோது கூட்டிக் கழித்துப் பார்த்த புள்ளிகள், ரீட்டா-கெர்டாவைப் பின்னுக்குத் தள்ளி விட்டிருந்தன.

மகிழ்ச்சி பொங்கும் குரலில் ஜான் சொன்னார் : ''சரியான தீர்ப்பு.''

அவர் சொன்ன விதத்தின் அர்த்தம் விளங்கியது. ரீட்டா நிமிர்ந்து கத்தியாய் பார்த்தார். ஜானின் கண்களை நேருக்கு நேராய் சந்தித்துத் துளைத்து, பின் தோற்றுப் போன பக்கமிருப்பதால் அப்படியே விழிகளை விலக்கிக் கொண்டார். எழுந்து ஜன்னலோரம் போய் நின்றவரைத் தொடர்ந்த ஜான், ''எதிராளியின் சீட்டை மறைமுகமாய் பார்த்துப் பார்த்து விளையாடும் வழக்கமெல்லாம் உனக்கு உண்டு, அல்லவா...?'' என்று நாடகப் பாணியில் கேட்டார். குத்த வேண்டும் என்றே பேசிய தொனி.

வழக்கம்போல் அதிராத குரலில், "நான் கொஞ்சம் வெளிப்படை யானவள் ஜான். விளையாட்டில் எப்படியாவது ஜெயிக்க வேண்டும் என எண்ணுவது என் குறி!"

"நீ கெர்டா ஜெயிக்க வேண்டும் என தீவிரமாயிருந்தாய். அடுத்தவருக்கு எப்படியாவது மகிழ்ச்சியைத் தந்து விட வேண்டும் எனும் உன் தாகத்திற்காக, இப்படியெல்லாம் வஞ்சனை செய்து வெல்ல முயற்சித்தது உனக்குத் தவறாய் படவில்லை...! இதற்கு நீ சூட்டிக் கொள்ளும் பட்டம் வெளிப்படையானவள்!"

"எவ்வளவுக் கொடூரமாய் வர்ணிக்கிறாய்."

"ஆனாலும் உண்மை தானே. நீ செய்வதை என் பத்தினியும் வரவேற்றாள்."

'ஆக, ஜான் கவனித்திருக்கிறார்...' என கிரகித்துக் கொண்டாள் ரீட்டா. இந்த எண்ணம் அவரைக் கவலையடைய வைத்தது. தவறாக நினைத்திருப்பாரோ என்றும் எண்ணினாள். சீட்டு விளையாட்டுகளில் தலைமை தாங்குமளவு நுணுக்கங்கள் அறியப்பெற்றுள்ள எட்வர்ட் போன்ற மகா திறமைசாலிகளுடன் விளையாடும் போது, தோல்வியை ஒப்புக் கொண்டு கடையை மூடுவதை விட வேறு சிறந்த வழி எந்த எதிராளிக்கும் தோன்றாது.

"எட்வர்ட்..." - ஒரு முறை சொல்லிக் கொண்டாள் ரீட்டா. சீட்டினைக் கீழிருந்து எடுப்பதிலும் போடுவதிலும் அத்தனை கைத்திறமைக் காட்டி, ரீட்டா வெல்லுமாறு அமையாது பார்த்துக் கொண்ட எட்வர்டின் திறமையை நினைந்ததால், எட்வர்ட்டின் பெயரை ஒரு முறை உச்சரித்து பிரமிப்படைந்தாள். 'சீட்டு விளையாட்டில் இந்த அளவு ஆழமாய் ஊறி, இவ்விளையாட்டில் பிரசித்தி பெற்ற ஆங்கில மனிதர்களுக்கே உரிய அவ்வளவு திறமையையும் வாரிக் கொண்டு வாழ்கிறார் எட்வர்ட்,' என்று முடிவு செய்து நினைத்துக் கொண்டார் ரீட்டா.

ஏனோ திடீரென்று முடுக்கப் பெற்றவராய், இப்படி ஆளாளுக்கு திசைக்கொருவராய் நிற்கும் இந்த அளவளாவுதலை ஏற்பாடு செய்திருக்கத்தான் வேண்டுமா என்று உணர்ந்தார் ரீட்டா. ஏதோ ஓர் எச்சரிக்கையும் அவருள் எழுந்தது. லூசியின் ஏற்பாடான இந்தக் கொண்டாட்டம், இம்முறை, துளியும் பிடிக்கவில்லை ரீட்டாவுக்கு. இது ஏன் தான், எந்தக் காரணத்துக்குத் தான் உண்டானதோ என

விரக்தியாய் பிடிப்பின்றி கேட்டுக் கொள்ளும் போது, அதற்கு பதில் போல சற்றும் எதிர்பாராமல் ஒரு நிகழ்வு நடந்தேறியது.

ஹாலோவின் வரவேற்பறையில் இருந்த விசாலமான ஜன்னல்கள், பிரெஞ்சு வழக்கத்தினாலான ஜன்னல்களாக அமைக்கப்பட்டிருந்தன. அவை கதவு போன்றவை; இடையிடையே கம்பிகள் எதுவும் இருக்காது. ஜன்னல்களின் கதவினை மூடிவிட்டால் வழி இருக்காதே ஒழிய அவை திறந்திருந்தால் அவற்றின் வழியே தாராளமாய் ஓர் ஆள், கதவின் வழியே வந்து போவது போல நுழையலாம். இப்போது, அதன் வழியே, யாரும் எதிர்பார்த்திராத தருணத்தில், ஏதோ நாடகத்தில் நடப்பது போல, கனவா நனவா என புரிந்துக் கொள்ளயியலா வண்ணம், வெரோனிக்கா, காற்றோட்டமாயிருக் கட்டுமே என திறந்து வைத்திருந்த ஒரு ஜன்னல் வழியே நுழைந்து, தொப்பென்று உள்ளே குதித்து வந்தார்.

சற்று ஆக்ரோஷமான சிரிப்புடன் மிக்க கவர்ச்சி கொண்டு, ஹாலோவின் விசாலமான வரவேற்பறைக்குள் குதித்தவரை, அனைவரும் திகைத்துப் போய் பார்த்தபடியே இருந்தாலும், தான் பேசப் போவதை அனைவரும் உற்றுக் கவனிக்க வேண்டும் என்பதற்காக சில நொடிகள் தாமதித்துப் பின், ''உங்களுக்கு முன் இப்படி ஒரு வெடியாய் நான் வந்து இறங்கியதற்கு, நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். நான் இங்கருகிலுள்ள சுற்றுலா குடிலில் தங்கி இவ்வாரக் கடைசியைக் கழிக்க வந்திருக்கிறேன். உங்கள் பக்கத்து வீட்டுக்காரி...! அங்கிருந்து வந்துள்ள பூகம்பம் தான், நான்!'' என்றார்.

இதை ஒரு நகைச்சுவை துணுக்காய் சொல்லி சிரித்தாள் வெரோனிக்கா.

''ஒருவர் கிடையாது. அந்தப் பாழாய்ப் போன குடிலின் பக்கத்தில், ஒருவர் கிடையாது. சனி மாலையை நான் தேர்ந்தெடுத்திருக்கக் கூடாது. முட்டாள். இப்போது என்ன செய்வது? வேறு வழியே இல்லை என புரிந்ததும், சுற்றுவட்டாரத்தில், சில மைல்களுக் குள்ளிருக்கும் ஒரே அடுத்த வீட்டுக்காரர் நீங்கள் தான் என்பதால், ஓடோடி வந்துள்ளேன்.''

இவ்வளவு சொல்லியும் யாரும் ஒரு வார்த்தைப் பேசவில்லை. இளமை ததும்பி வழிய பார்ப்போரின் மூச்சை நிறுத்திப் பார்க்கும் கவர்ச்சியில் மிளிர்ந்துக் கொண்டிருந்தார், வெரோனிக்கா. ஆபாசக் கவர்ச்சியாய் - அதிரடிக் கவர்ச்சியாய் இல்லாமல், கை தேர்ந்த

ஒப்பனை தந்த உயர்ரகக் கவர்ச்சியிலிருந்தார் அவர். கலகலத்து வளைந்தாடும் குதித்தெழும் அடர் கேசம் - உதட்டுச் சாயத்தால் முதன்மைபடுத்தப்பட்டு, நதித் தளத்தின் வளைவாய் சுழிந்தாடிக் கொண்டிருக்கும் தேன் அதரங்கள் - மேல் தொடை வரை மட்டுமே மூடியிருந்த இறுக்க உடை - கீழே மெலிதான துணியினால் இறுக்கப் பட்டிருந்த காலுறை - என எல்லாமும், ஜன்னலின் வழி குதித்து வந்து நிற்பது வான் தேவதையா என எண்ண வைத்தன.

கவர்ச்சியும், உதட்டுச் சுழிப்பில் வசப்பட்டு பிதுங்கும் சிரிப்பும் ஒருசேர, ஓர் ஆள் விட்டு மறு ஆள் என பார்த்துக் கொண்டார் வெரோனிக்கா.

''நான் புகை பிடிப்பேன்'' என்ற வெரோனிக்கா, ''ஒரு புகை போக்கி போல'' என உவமை தர அனைவரின் இறுகிய முகங்களிலும் புன்னகை விளைந்தது. ''இப்போது பார்த்து என் வத்திப் பெட்டி காணவில்லை. அதில்லாமல் என் வாழ்க்கையே இல்லை'' என்றவர், ''இது தவிர நாளை காலை சமைத்தாக வேண்டும். அடுப்பைப் பற்ற வைக்க வத்திப் பெட்டி வேண்டும்'' என தொடர்ந்தார்.

இப்போது லூசி, தயவு செய்ய விரும்பும் போக்கில், ''அதனா லென்ன...!'' என ஆறுதல் வார்த்தை கூறி, 'நாங்கள் உதவுகிறோம்' எனச் சொல்ல முன் வர, அவசர அவசரமாக அவரைக் கையமர்த்தி அடக்கிய வெரோன்கிக்கா, கூர்மையாய் கவனித்த திசை நோக்கி ஏறத்தாழ அனைவரும் திரும்பினர்.

அவர், ஜானைப் பார்த்துக் கொண்டிருந்தார். பூரண மலைப்பும், நம்ப முடியாத ஆச்சரியமும், எதிர்பார்த்திராத பூரிப்பும், வெரோனிக்கா முகம் முழுதும் பரவி நிலைத்தன. தலையை விதவிதமாய் அசைத்து, கனவில்லையே எனும் தடுமாற்றத்தை ஜீரணித்துக் கொண்டிருந்தார். சில நொடிகள் நழுவின. ஜானை நோக்கி அடிகள் வைத்து, கைகளிரண்டையும் அவரை அள்ளிக் கொள்ளும் பரவசத்தில் நீட்டியபடி, நடக்கலானார்.

''ஆமாம். நிச்சயம் தான். நிஜம் தான். ஜான் தான். ஜான் கிறிஸ்டோ. பிரமாத அதிசயமாய் இல்லை ஜான்...! வருடக்கணக்கில் உன்னை நான் பார்க்கவில்லை. ஆனால், திடுமென, இங்கு சந்திக்கிறேன்.''

இப்போது அவரை நெருங்கியிருந்த வெரோனிக்கா, நீட்டியிருந்த தன் கைகளுக்குள் ஜானின் கைகளைப் பிடித்திழுத்து பொத்திக் கொண்டார். அவள் உள்ளங்கைகளில் கதகதப்பிருந்தது. முகத்தில்

உற்சாகமும் பேரவாவும் மிதந்தன. தான் அடக்கி வைத்திருந்த அவர் கைகளைப் பிரித்து விடாமல் லூசி பக்கம் திரும்பிய வெரோனிக்கா, ''என் வாழ்க்கையில் கிடைக்கற்கரிய மாபெரும் ஆச்சரியப் பரிசு இது! ஜான்! என் பழைய நண்பன்! ஆத்மார்த்த நண்பன்! இவ்வளவு ஏன்...! நான் காதலித்த முதல் ஆண் மகன், ஜான் தான்! ஜானை அவ்வளவு காதலித்திருக்கிறேன்'' என்றவர், ஜானை நோக்கி குரல் தழுதழுக்கச் சொன்னார் : ''உன் மேல் இன்று வரை நான் பைத்தியமாய்தான் இருக்கிறேன் ஜான்.''

தன் முதல் காதலையும் காதலனையும் மீண்டும் கிடைக்கப் பெற்ற பெண்ணொருத்தி, அடக்க முடியாமல் அடையும் ஆனந்தத்தையும், நாணத்தையும், என்ன செய்வதென்று விளங்காத பரபரப்பையும் காட்டினாள், வெரோனிக்கா.

வெரோனிக்கா மீது கனிவு கொள்ளத் துவங்கியிருந்த ஹென்றி, அவரை நோக்கி நாகரீகமான அணுகுமுறை மிளிர வந்தார். 'இவளுக்கு ஏதேனும் குடிக்கத் தர வேண்டும்' என எண்ணிய ஹென்றி, ''மிக்டே...! அந்த மணியைக் கொஞ்சம் அடியேன்'' என்று கூற, அழைப்பு மணி அடிக்கப்பட்டது.

கட்ஜன் வந்ததும் லூசி கேட்டார் : ''ஓரிரு வத்திப் பெட்டிகள் வேண்டும். இருக்கின்றனவா...?''

''இன்று தான் ஒரு டஸன் போல வந்தன மேடம்.''

''எனில் அரை டஸன் போலக் கொண்டு வா.''

''அய்யய்யோ. அவ்வளவு எதற்கு? ஒன்று போதும் மேடம் லூசி.''

சிரித்தபடி மறுத்தார் வெரோனிக்கா. அவளுக்கு வரவழைக்கப் பட்ட சாறைக் குடித்தபடி அனைவரையும் பார்த்து புன்முறுவிக் கொண்டிருந்தார் அவர்.

ஜான், வெரோனிக்காவிடம் பேச ஆரம்பித்தார்: ''இது என் மனைவி கெர்டா.''

''ஓ... உங்களைச் சந்தித்ததில் தான் எத்தனை மகிழ்ச்சி'' - என்று கெர்டாவின் பயந்தாங்கொள்ளி கண்களின் மீது வார்த்தைகளை அள்ளி விட்டார் வெரோனிக்கா.

கட்ஜன் ஆறு வத்திப் பெட்டிகளை, ஒரு தாளில் சுற்றிக் கொண்டு வந்துக் கொடுத்தான்.

கண்களால் அதனை வெரோனிக்காவுக்குக் கொடுக்கும்படி லூசி ஆணையிட, கட்ஜன், அந்தப் பெட்டிகளை வெரோனிக்காவிடம் கொண்டு போய் தந்தார்.

''ஓ...! இவ்வளவு ஏன்...! ரொம்ப நன்றி திருமதி லூசி.''

லூசியின் கண்களில் பெருமிதம் ததும்பும் ராஜ களை தோன்றி மறைந்தது.

ஹென்றி கேட்டார்: ''இந்தக் குடில்களில் தங்குவது எப்படி உள்ளது...?''

''பொங்கி வரும் ஆர்வத்தோடு கொண்டாடுகிறேன். பூஜிப்பது போல மரியாதை தருகிறேன். இங்கிருக்கும் ஒவ்வொரு நொடியும் அற்புத கணங்கள். லண்டனருகிலேயே இருப்பினும், அதன் சாயலே எட்டாத, எத்தனை ஏகாந்த அமைதி தவழும் தனிமை...!''

குடித்தக் கோப்பையைக் கீழே வைத்து விட்டு, சரிந்த மேலோடையை கழுத்து வரை இழுத்து விட்டுக் கொண்டு, அனைவரையும் பார்த்துக் காந்தமாய் சிரித்தாள். ''உங்களெல்லோருக்கும் மிக்க நன்றி. எவ்வளவு கனிவோடு நடந்துக் கொண்டீர்கள்'' என்ற வெரோனிக்காவின் வார்த்தைகள் லூசிக்கும் ஹென்றிக்குமிடையே கொடுக்கப்பட்டன. ''நான் இந்த வெகுமதியை எடுத்துச் செல்கிறேன்'' என வத்திப் பெட்டிகளை எடுத்துக் கொண்ட வெரோனிக்கா, ''ஜான்...'' எனத் திரும்பி, அவர் மீது நட்பாய் சிரிப்பினைத் தூவிச் சொன்னார் : ''நீ என்னை பத்திரமாகக் கொண்டு போய் என்னிடத்தில் விட்டு விடு. இருட்டுக் கட்டியிருக்கிறது. வந்து விட்டேன். போக பயமாயிருக்கிறது. உன்னைக் கடைசியில் நான் பார்த்தது முதல் இன்று வரை நீ என்னவெல்லாம் செய்துக் கொண்டிருந்தாய் எனக் கேட்க அவ்வளவு ஆவலாய் காத்திருக்கிறேன். எனவே உனக்காக நான் மீண்டும் வருவேன். எத்தனை வருடங்கள் கழித்து சந்தித்துள்ளோம். பதினைந்து வருடங்களிருக்காது...? ஓ! இப்படி நினைத்தாலே எனக்கு வயதாகி விட்டது போலத் தோன்றுகிறது.''

ஜன்னல் நோக்கி நகர்ந்து விடைபெற, ஜான் அவரைத் தொடர்ந்து சென்றார். எல்லோரையும் பார்த்து கண்சிமிட்டி கவர்ச்சி சிரிப்புச் சிரித்து விலகினார் வெரோனிக்கா.

''இப்படி முட்டாள் தனமாக உங்களனைவரையும் தொந்தரவு செய்ததற்கு மிக மிக வருந்துகிறேன். மன்னித்து விடுங்கள். நன்றி திருமதி லூசி'' என்றபடி வெரோனிக்கா ஜானோடு வெளியேறினார்.

இருவரும் இருட்டில் கரையும் வரைப் பார்த்திருந்து விட்டு உள்ளே சென்றார் ஹென்றி. ''வெதுவெதுப்பாகக் குளிரும் அற்புதக் குளிர்''

என்றார் லூசியிடம். வாயகலக் கொட்டாவி விட்டு, ''தூங்கக் கிளம்ப வேண்டும் டியர்'' என்று சொன்ன லூசி, ''இன்றிரவு வெரோனிக்கா கொடுத்த முக பாவங்கள் மிக விமரிசையாயிருந்தன. அவரின் ஒரு திரைப்படத்தை உடனே பார்க்க வேண்டும்'' என்ற ஆர்வமாய் குறிப்பிட்டார்.

மாடிக்குச் சென்றனர். அங்கிருந்த மிக்டே குட்நைட் சொல்லி விட்டு, ''மிகச் சிறப்பான நடிப்புப் பங்களிப்பு இல்லை...?'' எனக் கேட்டார்.

''உனக்கு அப்படித் தோன்றவில்லையா மிக்டே....?'' என்று பதில் கேள்வி தொடுத்தார் லூசி.

''தோன்றியதால் தானே கேட்கிறேன்...! லூசி...! அவள், தன் குடிலுக்குள்ளேயே வத்திப் பெட்டியெல்லாம் வைத்திருப்பாள் என்று தான் நீ நினைக்கிறாய். சரிதானே?''

''ரொம்பச் சரி. ஒன்றல்ல. பல வைத்திருக்க வேண்டும். இருந்தாலும் இல்லை என வருவோருக்கு நாம் வைத்துக் கொண்டே இல்லை என்பதா...? என்னமாய் நடித்து விட்டாள் அவள்...!''

கதவுகளும் ஜன்னல்களும் மூடப்பட்டன. நல்லிரவுக்கான குட் நைட் வாழ்த்துரைகள் பகிர்ந்துக் கொள்ளப்படுவது முணுமுணுப்பாய் எங்கும் பரவின. ''இந்த ஜன்னலை மட்டும் தாளிடாமல் விட்டு வைக்கிறேன் - ஜான் திரும்ப'' என்ற ஹென்றியும் தன் அறைக்குள் நுழைந்துக் கொண்டு கதவை மூடிக் கொண்டார்.

ஹென்ரீட்டா கெர்டாவிடம் சொன்னார் : ''நடிகர்களே கோமாளிகள் தான் போல. புகழின் ஆதிக்கத்தால், பொது இடமொன்றில் நுழைவதையும் வெளியேறுவதையும் கூட, அதிசய நிகழ்வாய்தான் செய்கிறார்கள்.'' பிறகு, நீண்ட சோம்பலென்றை விடுவித்தபடி, ''நின்றபடியே தூங்கி விடுவேன் போல. அப்படித் தூக்கம் மூட்டிக் கொண்டு வருகிறது'' என்றும் சொன்னார்.

★ ★ ★ ★

வெரோனிக்கா, இருந்த செடி கொடிகளுக்கு இடையில் துரிதமாக நடந்து முன்னேறிக் கொண்டிருந்தார்.

மண்டிக் கிடந்த செடிகளின் முடிவில் விரிந்த மைதானத்தில் சிறப்பான நீச்சல் குளமொன்றிருந்தது. அக்குளத்தில் சில சாய்வு படுக்கைகள் கொண்ட ஒரு திறந்த வெளி தாழ்வாரமொன்றுமிருந்தது.

அங்கு அமர்ந்து தான் சூரியன் இதமாய் காயும் விடுமுறை நாட்களில் ஹென்றி குடும்பத்தினர் குளிரை விரட்டி சூரியக் கதகதப்பை அனுபவிப்பார்கள்.

அந்நாற்காலிகளுக்கருகே சிலையாய் சிறிது நின்ற வெரோனிக்கா, பின் திரும்பி ஜானைப் பார்த்து அர்த்தமாய் சிரித்தார். இலைகள் மிதந்துக் கொண்டிருந்த அந்த நீச்சல் குளத்தின் தண்ணீரைத் தடவிப் பார்த்து விட்டு ஜானிடம் கேட்டார் : ''என்னவிருந்தாலும் மத்திய தரைக் கடலுக்கு ஈடாகுமா...? என்ன ஜான்..?''

கடந்தக் காலத்தை நாசூக்காக கிளறுகிறாள். *நீலக் கடல்... மலர்களின் சுகந்த வாசம்... குளிர் தணிக்கும் சூரியன்... பதினைந்து வருடங்களுக்கு முன்னால்! நடந்தது! முடிந்தது!*

வெரோனிக்காவிடமிருந்து பதினைந்து வருடங்களாய் பார்க்கக் கூட இல்லாமல் பிரிந்தே வாழ்ந்திருந்தாலும் அவள் தன் உள்ளுக்குள் வாழ்ந்துக் கொண்டு தானிருந்திருக்கிறாள் என்றே உணர்ந்தார் ஜான். *ஸான் மிகைல்... நீலக் கடலின் பேரிரைச்சல்... மலர்களின் சுகந்த வாசம்... பச்சை பசேல் நிறம் கொண்டு எங்கும் இலைகளாய் நெடுநெடுவென வளர்ந்திருக்கும் அடர் மரங்கள்... குளிர் தணிக்கும் சூரியன்.... காதல் மற்றும் இது தரும் வலி... வெரோனிக்கா... வெரோனிக்கா... வெரோனிக்கா...* இந்தக் கூவல், தினசரி வாழ்க்கையிலிருந்து எங்கோ தள்ளப்பட்டிருந்தாலும், (மனக்) கண்ணுக்குப் புலப்படாதவாறு எங்கோ மறைத்துப் புதைக்கப்பட்டிருந்தாலும், மறக்கப்படவில்லை; மரணமடைய வில்லை!

கடந்தக் காலத்தின் இந்த அனைத்து வாசங்களும் ஒன்றில் தான் குவிந்தன - அது வெரோனிக்கா. ஆபத்தானவள் என்றாலும் துணிந்து சண்டைகள் போட்டாவது வெரோனிக்காவின் வாளிப்பான இளமையின் வேண்டுதலால் பூரிப்படைந்திருந்த ஜான் - அன்றைய 24 வயது காதல் இளைஞன்! விண்விண்ணென்று இளமை தெறித்துத் துணை தேடிய இளைஞன்! ஒரு கட்டத்தில் அன்று பயந்து ஓடினார். இம்முறை ஓடப் போவதில்லை.



மரக்காடுகளையடுத்து அழகாய் வடிவமைக்கப் பட்டிருந்த பச்சை தோட்டத்துக்குள் ஜான் வந்து சேர்ந்தார். நிலா காய்ந்துக் கொண்டிருக்க, அவ்வொளி யில், வெகுளியாய் ஒளிர்ந்துக் கொண்டிருந்தது, திரைச்சீலைகள் போர்த்தி உறங்கிக் கொண்டிருந்த ஹாலோ. தன் கையிலிருந்த கைக்கடியாரத்தைப் பார்த்தார். மணி, அதிகாலை மூன்று.

தூக்கம் கலைந்ததால் அசதிப் பெருமூச்சினை வெளியிட்ட ஜான் முகத்தில், கவலைப் படர்ந்த எதிர்பார்ப்பு இருந்தது. இப்போதைய ஜான் - கண்மண் தெரியாது ஸ்பரிஸங்களுக்கு ஏங்கிக் காதலில் விழுந்துக் கிடக்கும் விடலைக் காதலன் அல்ல; துளிக்கூட கிடையாது. இந்த ஜான் - வாழ்வின் விவரமறிந்துள்ள ஜான். வாழ்க்கையின் நிதர்சனமறிந்து, அதனால் கற்றுக் கொண்ட நெளிவு சுளிவுகளும் அறியப் பெற்றுள்ள சராசரி மனிதன். மூளையில் குழப்பமில்லை. தெளிவாயும் நடுநிலைமையோடும் இயங்கும் நிலையடைந்த நாற்பது வயது முதிர்ந்தவர்!

பல அனுபவங்களை மனதில் போட்டுக் குழம்பிக் கொண்டே, ஜான், ஒரு முட்டாளாய் - அதுவும் வடிகட்டின முட்டாளாய்தான் வாழ்ந்திருக்கிறார். இது அவருக்கே கூடத் தெரியும்; ஆனால் இதற்காக ஜான் வருந்தவில்லை. அது கடந்து போன ஒன்று. ஆனால் இப்பொழுது, இந்தக் கணத்தில், தன்னைத் தானறிந்து, தன்னையே வென்றும் நிற்கும் மனிதாராகியுள்ளார். காரணம் - பாரமிறங்கியது தான். பற்பல வருடங்களாய் - வெரோனிக்கா, ரீட்டா, கெர்டா - எனப் பல குணாதிசயங்கள் கொண்ட பெண்களின் உறவுகள் ஏற்படுத்திய அதிர்வுகளால், ஏதோ இழுக்கவே முடியாத பாறாங்கல் ஒன்றினைக் கால்களில் கட்டி இழுப்பது போன்ற வாழ்க்கையைத் தான் நடத்தியுள்ளார். இப்போது அந்தக் கல் கரைந்தே விட்டது. விடுதலை. சுதந்திரம்.

ஹேர்லி சாலையில் பல ஜாம்பவான் மருத்துவர்களுக்கு நடுவில் தானும் ஒரு மைல்கல்லாய் வாழ்ந்துக் கொண்டிருக்கும் ஜான் கிறிஸ்டோ எனும் சிறந்த வைத்தியருக்கு - இனி தன் வாழ்க்கையில்

வெரோனிக்கா என்பவள், அவள் என்னதான் சிறப்பும் வசதியும் புகழும் மிகுந்தவளாயினும், ஒன்றுமே கிடையாது என்பது விளங்கிப் போயிற்று. வெரோனிக்காவுடனான காதல் வாழ்வின் உச்சக்கட்ட நாட்களில் இடம்பெற்றப் போராட்டம், மனதிலிருந்து அழியாமல் இன்னும் உயிர்ப்புடன் இருந்து வருவதாலும் - அவருடன் வாழ்ந்துக் களித்த நாட்கள் ஜானுக்குள் ஏற்படுத்தியிருந்த வலி மற்றும் ரணங்களின் எரிச்சலாலும் - அடித்துப் பிடித்து ஒடி வந்து எப்படியோ காலங்களைக் கழித்து விட்டிருந்தாலும், வெரோனிக்காவின் உருவம், நிழலுருவம், ஜான் மனதை விட்டு முழுவதும் அகலாமல்- அழியாமல், விடை எதிர்பார்த்து வாழ்ந்துக் கொண்டு தானிருந்தது. இன்று கனவு போல வந்து இறங்கினார் வெரோனிக்கா. கடந்தக் காலத்தைப் போட்டு உடைத்தும் விட்டார். ஜான் தடுக்கவில்லை. இத்தனை நாட்களாய் ஜான் செய்யாததை-இனியும் செய்யத் துணியாததை, வெரோனிக்கா சுலபமாய் அறிவித்துக் கொண்டிருக் கிறார். ஜான் கால்களில் கட்டப்பட்டிருந்த பாறாங்கல் அவிழ்க்கப் படுகிறது. மனமுவந்து ஏற்றுக் கொண்டார். எனவே, இன்று, அந்த நிழலுருவம் மடிந்து விட்டது. பதினைந்து வருட சிறைவாசம் முடிந்து, இந்த விடிகாலை மூன்று மணிக்குப் பிறந்துள்ளார்.

வெரோனிக்காவுடன் கடந்த மூன்று மணி நேரமாய் இருக்கிறார். சுழற்றியடிக்கும் புயலாய் உள்ளே நுழைந்து, ஹாலோ வட்டத்தி லிருந்து ஜானை மட்டும் கிடைப்பறகரிய பரிசுப் பொருளாய் பெயர்த்தெடுத்துக் கொண்டு வந்து விட்டார் வெரோனிக்கா. இத்தனை நேரமாகியும் வராததால், தங்களிருவருக்குமிருந்தக் கடந்தக் கால உறவினை வைத்து, அங்கிருப்பவர்கள் என்னவெல்லாம் கற்பனை செய்துக் கொண்டிருப்பார்களோ என் அதிர்ந்துப் போனார் ஜான்.

'ஒரு பேச்சுக்கு...! கெர்டா என்ன நினைப்பாள்..?' - வயிறு கலங்க கற்பனை செய்து பார்த்தார் ஜான்.

'ஹென்ரீட்டா...?'

ஹென்ரீட்டாவைப் பற்றி அதிகம் கருதவில்லை ஜான். எடுத்துச் சொன்னால் அவள் புரிந்துக் கொள்ளலாம் என எண்ணினார். கெர்டாவுக்கு விளக்கிப் புரிய வைப்பதென்பது நடக்க இயலாத ஒன்று....!

ஆனால், எதற்காகவும், இவர்கள் இருவரையும் இழக்க ஜான் விரும்பவில்லை - நிச்சயமாய், ஸ்திரமாய்...!

மருத்துவராதலால், பல அபாய கட்டங்களைத் துணிச்சலாக சந்தித்து வாழ்வதே ஜானின் வாழ்க்கையாயிருந்து வருகின்றது. நோயாளிகளுடன், அவர்களுக்கு வழங்கும் சிகிச்சைகளுடன், அறுவை சிகிச்சை போன்ற இக்கட்டுகளுடன், முதலீட்டாளர்களின் ஸ்திரத் தன்மையற்ற நிலையுடன் - என ஜான் தன் தினசரி வாழ்க்கையில் பல ஆபத்துக்களை சந்திப்பவர் தான். ஆனால் இது போல - பாதுகாப்பற்ற இது போன்ற உறவுகளின் பின்னலில் சிக்கிய ஆபத்தை எதிர்கொண்டதில்லை.

ஒரு வேளை கெர்டா கற்பனை செய்து... தன் மேல் சந்தேகம் கொண்டு... இந்த மூன்று மனிநேரத்துக்குள் அதை வளர விட்டு...

இவ்வாறு மனம் எண்ணியதுமே, அப்படிப்பட்டவளா அவள் என தன்னைக் கேட்டுக் கொண்டார் ஜான். 'எனக்கு எத்தனை தூரம் கெர்டாவின் மனநிலை பற்றித் தெரியும்...? வழக்கமாய், அது வெள்ளை என கறுப்பை நான் சுட்டிக் காட்டினால் ஆமாமாம் என கன்னத்தில் போட்டுக் கொள்ளும் வகை கெர்டா. இருக்கலாம். ஆனால் இதுபோன்ற விஷயங்களின் மீது அவள் நோட்டம் எப்படியிருக்கும்...?'

இவ்வாறு ஊடுருவி எண்ணிக் கொண்டிருந்த ஜான், 'நெடுநெடுவென வளர்ந்து மதமதப்பாய் நடந்து வெளியேறிய வெரோனிக்காவின் அடியொற்றி நானும் வெளியேறிய போது, நான் என்ன மாதிரியானப் பொருளாய் அவர்களுக்குத் தெரிந்திருக்கக் கூடும்...? என்னையறியாமல் நான் என் முகத்தில் காட்டியிருந்த உணர்வு தான் என்ன...? அழைக்கும் பெண்ணின் பின்னால் காமம் ஏற விறைத்துக் கவிழ்ந்த விடலையின் படப்படப்பு வியர்வைத் திவலைகள், என் முகத்திலிருந்திருக்குமா...? அல்லது அத்தியாவசிய மாய் ஒரு மனுஷன் பண்ண வேண்டிய கடமையின் பிரதிபலிப்பு மட்டுமே இருந்திருக்குமா...?' என்றெல்லாம் கேட்டுக் கொண்டார்.

விடைகள், ஜானுக்குத் தெரியவில்லை.

ஒன்று மட்டும் ஜானுக்கு பயத்தைக் கிளப்பியது. தன் குடும்பத்தின், மற்றும் தன் வாழ்க்கையின் தெளிவான இயக்கத்தின் மீதும், அடுக்கி வைத்தாற் போல் குலையாதிருக்கும் இவற்றின் கட்டுக்கோப்பின் மீதும், பாதுகாப்பின் மீதும், கலவர பயம் தொற்றிக் கொண்டது. நிகழும் எல்லாவற்றின் மீதும் கோபங்கொண்டு, நிலைமையை இன்னும் மோசமடையச் செய்து, இவற்றால்

பிறத்தியாரின் வாயை அடைத்து வாழும் குளிர் காயும் வாழ்க்கையை நடத்துவதில் தான், தான் பைத்தியமாய்-வெறியாயிருந்திருப்பதை இப்போது அடையாளம் கண்டு கொண்டார் ஜான். இப்படி வாழ்வதில் ஒரு உடும்புப் பிடியாய் இருந்ததைப் பிரகடனப்படுத்தி விட்டதால், வெரோனிக்காவுடனான வாழ்க்கையிலும், தன் அடிப்படைக் குணமான இந்த குணத்தோடு ஒரு பைத்தியக் காரனாய் வாழ்ந்திருக்கலாம், என பிரித்தாராய்ந்து நம்பி விடுவார்களோ...?!

★ ★ ★ ★

திரும்பும் போது, எல்லோரும் அவரவர் அறைகளில் ஆழ்ந்த நித்திரையிலிருந்தனர். வரவேற்பறையின் ஒரேயொரு பிரெஞ்சு ஜன்னல் மட்டும் பாதி நிறைந்த நிலையிலிருந்தது, ஜான் திரும்பி உள்ளே வர! உள்ளே நுழையுமுன், நிலவின் நீல ஒளியில் ஒரு வித அன்னியத்தனம் மிகும் அமைதியில் வெகுளியாய் - ரொம்ப ரொம்ப வெகுளியாய் பதுங்கிப் போய் உறங்கிக் கொண்டிருந்த ஹாலோவை உற்றுப் பார்த்துக் கொண்டார். சுற்றி வர, வனாந்திரம். சிறு பயம் அவரை ஆட்கொண்டுச் சென்றது.

ஜன்னல் வழியே உள்ளே நுழைய எத்தனித்தபோது, ஓர் ஓசையை (அல்லது கற்பனை...?), கதவை அவரசமாய் மூடும் ஓர் ஓசையைக் கேட்டார் ஜான்.

துரிதமானார். சிட்டுக் குருவி போல துரிதமாய் அங்குமிங்கும் தலையைத் திருப்பித் திருப்பி ஆராய்ந்தார். யாராவது தொடர்ந்து நீச்சல் குளம் வந்திருப்பரோ...?

தலையை நிமிர்த்தி அனைத்து ஜன்னல்களையும் ஊடுருவினார். அதோ, அந்த அறையின் திரைச்சீலை, வெளியே பார்க்க என்று யாராவது இழுத்து விலக்கி, பிறகு சட்டென விட்டு விட்டதால் தான், திடுமென அதிகமாய் அசைகின்றதா...? காற்று கூட பலமாயில்லை. அது ஹென்ரீட்டடாவின் அறை.

ஹென்ரீட்டாவா சந்தேகம் கொண்டு விழித்திருப்பாள்...? 'ஓ, கூடவே கூடாது' - ஜானின் மனம் கதறி திடுமென திகில் கொண்டு மூர்ச்சையானது. 'என்னால் ஹென்ரீட்டாவை இழக்கவே முடியாது.'

கீழே கடந்த சில கூழாங்கற்களை ரீட்டா ஜன்னலில் வீசியெறிந்து, அவரை எழுப்பி, 'கண்மணி... உன்னை எக்காரணம் கொண்டும் யாருக்காகவும் இழக்கவே மாட்டேன்' என சத்தியம் செய்து அழ

வேண்டும் போலிருந்தது ஜானுக்கு. 'வா உயிரே, வா...! வெளியே வா. என்னுடன் கலந்து, உனக்கு மிகப் பிடித்தமான மரங்களிடையே நழுவி நழுவி இருவரும் நடந்து, குன்றின் உச்சியைத் தொட்டு நிற்போம். அப்போது, அங்கு, மனப் பாரமெல்லாம் கரைந்து இருக்கும் என்னுள், நான் உண்மையாகக் கண்டறிந்துள்ள என்னை உன் முன் விரிக்கிறேன்... அந்த ஜானை எடுத்துக் கொள், ஏந்திக் கொள்...! அந்தப் புது ஜானைப் பற்றி சொல்கிறேன், கேள்!'

புது ரத்தம் ஊறுவது போல தான் பிறந்துள்ளதாய் உணர்ந்துக் கொண்டிருக்கும் ஜான், ரீட்டாவிடம், பின்வருமாறு சொல்லத் துடித்தார்: 'நான் புதிதாய் வாழ்க்கையைத் துவங்குகிறேன். இன்றிலிருந்து எனக்குப் புதிதாய் ஒரு வாழ்வு துவங்கியுள்ளது. என்னை ஆனந்தமான வாழ்வை வாழ விடாமல் முடமாக்கி, எழுந்திருக்கும் போதெல்லாம் இடறி இடறி விழ வைத்த அத்தனை மனப் பாரமும் கரைந்து விட்டன. நான் நானாக இல்லையா என நீ கேட்டு என் முகத்திற்கு நேராகவே என்னை விமர்சனம் செய்தது அப்பட்டமான நிஜம், என் கண்ணே...! அப்படித்தான் நான் வருடக்கணக்காய் இருந்திருக்கிறேன். வெரோனிக்காவிடமிருந்து பிரிந்து வந்து வேறு வாழ்க்கையில் சந்தர்ப்ப வசமாய் வாழ்ந்து வந்தாலும், அவளிடமிருந்து பிரிந்தது சரியா, தவறா... பலமா, பலஹீனமா போன்ற சந்தேகக் கேள்விகளே, என் நிலை இழந்து நான் தவித்தற்கான பிரதான காரணம். இந்த பூர்வ எண்ணத்தின் முழுமையான ஆக்கிரமிப்பால் நான் பயந்தே வாழ்ந்திருக்கிறேன். என்னைக் கண்டே பயந்து, வாழ்க்கையைக் கண்டு பயந்து, உன்னைக் கண்டு பயந்து, பார்ப்பவை எல்லாவற்றிற்காகவும் பயந்து...!

'அவளை எழுப்பத்தான் வேண்டும். மனம் பூரணமாய் லேசாகியுள்ளது. இதை அவளுடன் பகிர்ந்துக் கொண்டே தீர வேண்டும். அவளை எழுப்பி, அதிகாலை புலரத் துவங்கவுள்ள இப்போது, அவளுடன் கூட மரக் காட்டுக்குள் நடந்து, குன்றின் மீதேறி கைகளோடு கைகள் பின்னப் பிணைந்து நின்று, உலக விளம்பிலிருந்து புத்தம் புதிதாய் கிளம்பும் சூரியனை வாங்கிக் கொண்டு புது வாழ்க்கையைத் துவங்க வேண்டும்' - உளமார ஏங்கினார் ஜான்.

கூடவே, 'நீ ஒரு முட்டாள்' என தன்னைத் தானே வைதும் கொண்டார். நடுங்கியது அவருக்கு. நினைவின் ஆதிக்கத்தால் செப்டம்பர் மாத கடுங்குளிரில் உடம்பு வெடவெடத்துக் கொண்டி

ருப்பதைக் கூட அவர் கவனித்திருக்கவில்லை. 'உனக்கென்ன பேய் பிசாசு பிடித்து விட்டதா...?' - கேட்டுக் கொண்டார். 'ஓரிரவு முழுக்க, நீ புத்தியிருந்தும் அது அற்றவனாய் நடந்துக் கொண்டாகி விட்டது. யாரும் கவனிக்காத இந்நிலையில் இப்படியே விட்டு விட்டா யென்றால் மகா அதிர்ஷ்டசாலி. இல்லை, இத்தனை நேரம் போட்டுக் குழப்பிக் கொண்டது போல் ஏதேனும் செய்துக் கொண்டிருந்தா யென்றால்... ... ...'

மண்டையை உலுக்கிக் கொண்டார். புரிந்தது. 'ஓரிரவு முழுக்க ஒரு பெண் விட்டு ஒரு பெண்ணாய் இரவைக் கழித்து விட்டு காலையில் பாலும் கையுமாய் போய் நின்றால், கெர்டா என்ன நினைப்பாள்...! கலகலவென தன்னுடன் பழகும் லூசியும் தான் என்ன நினைப்பாள்...!'

எவ்வளவு விரைவாய் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில், சிதையும் மனம் கொண்ட கெர்டாவைக் கவனிக்க வேண்டும். உள்ளே போவது தான் உசிதம்...!

இந்த முடிவோடு, குழம்புவதை விட்டுவிட்டு உள்ளே போகலாம் என காலடி எடுத்தவரின் அலைபாயும் மனம், 'ஒரு வேளை தொடர்ந்து வந்தது கெர்டாவாயிருந்திருந்தால்...!' என கணக்கிட்டு பீதி அடைந்தது. யாராவது தொடர்ந்தனரா என்பதே ஊர்ஜிதமாக நிலையில், ஒருவர் மாற்றி ஒருவர், இவரைத் தேடி, இரவில் பேயாய் அலைந்ததாய் நினைந்து, குளிர் நடுக்கத்தையும் மீறி நடுங்கிக் கொண்டிருந்தார் ஜான்...!

'இவ்வளவு கீழ்த்தரமாய் தொடர்ந்து வந்தெல்லாம் துப்பறிய மாட்டார்கள்' என்று அவராகவே முடிவு கட்டிக் கொண்டார் ஜான். ஒரு மருத்துவராய் - மரியாதைக்குரிய, உணர்ச்சி வயப்படக் கூடிய, விரைவில் சமாதானம் செய்ய முடியாத, மிக உண்மையான - ஆகிய இக்கலவையால் ஆக்கப்பட்ட நபர்கள், மாறாது செய்து வந்தவை என்னென்ன என ஜானுக்கு அத்துப்படியாய் தெரியும். கதவிடுக்கில் நின்றுக் கொண்டு ஒட்டுக் கேட்பார்கள்; அடுத்தவருக்கு வரும் கடிதாசினைப் பிரித்து படிப்பர்; பின்னாலேயே சென்று துப்பறிவர்! இந்தத் தகாத நடவடிக்கையையெல்லாம், ரொம்பவும் மெச்சிக் கொண்டு செய்யாத இவர்கள், மனிதக் கற்பனையினாலான கவலைக்கு முன்னால், வேறு வழியில்லை என இலக்கில்லாது தள்ளப்படும் மனித இரைகள்.

'பாவப்பட்ட ஜென்மங்கள்' - நினைத்துக் கொண்டார் ஜான். 'மன உளைச்சலாலேயே அவதியும் துன்பமும் அனுபவித்து வரும் பாவப்பட்ட ஜென்மங்கள். ஒரு மருத்துவர் எனும் அளவில், மன உளைச்சல் எனும் உபாதை தரும் சொல்லொணா வீரியமறிந்தவர் தான் ஜான். கெர்டா கொண்டுள்ளது மன பலஹீனம் என்பது அவர் கணக்கு.

'கெர்டாவுக்கு மட்டும் இவ்வளவு நேரம் கழித்து நான் வருவது தெரிந்திருந்தால்... ... ...' - இப்படி நினைக்கும் போதே ஓங்கி ஒன்று மண்டையில் போட்டுக் கொண்டார் ஜான். முட்டாள் - என்று தன்னைத் தானே அழைத்துக் கொண்டார். 'கெர்டா தூங்கப் போய் நாலு மணிநேரமாகின்றது. இதற்குள் எட்டுத் தூக்கம் போட்டிருப்பாள் அவள். மேலும், நீ இப்போது ஆஹா ஓஹோ என கற்பனை செய்வது போலெல்லாம் அறியாதவள் அவள். போய் பேசாமல் கமுக்கமாய் அவளருகில் படுப்பாயா...! அதை விட்டு விட்டு...!'

ஒரு வழியாய் மேலும் தாமதிக்காது பிரெஞ்சு ஜன்னல் வழியாக உள்ளே குதித்துச் சென்றார் ஜான். ஒரு விளக்கைப் போட்டு, ஜன்னலை மூடி, வழிக்கு வெளிச்சம் வைத்துக் கொண்டு படியேறி, படுக்கையறை அடைந்தார்.

ஒரு நொடி அறை வாசலிலேயே நின்றார். கதவுப் பிடியில் கை வைத்துத் திருகினார். கதவு திறக்க விருட்டென உள்ளே சென்று ஓசை வராது சாத்தினார்.

அமைதி. இருட்டு. கெர்டாவின் மூச்சு சப்தம் சீராய் கேட்டுக் கொண்டிருந்தது. காலடி ஓசை சன்னமாய் கேட்டதிலேயே திரும்பிப் பார்த்துக் கொண்ட கெர்டா, இலக்கில்லாது குழறிக் கேட்டாள்: ''ஜானா அது...?''

''ம்.''

''நேரம் ரொம்ப ஆகி விடவில்லையே, கண்ணா...! என்ன நேரம்..?''

விடை தெரிந்தும், மிக லகுவாய் சொன்னார் : ''எனக்குத் தெரியவில்லை'' சொல்லிவிட்டுப் பேச்சின் திசையை மாற்றினார் : ''மன்னித்து விடு. உன்னை எழுப்பி விட்டேன். வெரோனிக்காவுடன் போனது மட்டுமல்லாமல் குடிக்க வேண்டி ஆகி விட்டது.''

ஏதோ தனக்குப்பிடிக்காததை செய்தது போலவும் மிகவும் தூக்கம் வந்து விட்டது போலவும் குரலை வைத்துக் கொண்டார் ஜான்.

''ஓ...!'', அதே குழறலிலேயே கெர்டா சொன்னாள்: ''பாவம் நீங்கள். சரி. குட் நைட்.''

தூங்கி விட்டாள்.

எதிலும் குழப்பமேற்படவில்லை...! வழக்கம் போல் இம்முறையும் அதிர்ஷ்டவசம் தான்! 'வழக்கம் போல்' என்ற பதம் ஜானை நிறுத்திற்று. ஆமாம். ஒவ்வொரு முறையும் செய்யும் - சொல்லும் பொய்க் காரியங்களில் எல்லாம் நம்ப வைத்து வென்று வருவது ஜான் தானே!

குழந்தை ஸெனாவின் ஆருட வார்த்தைகள் நினைவிலாடின. **'இதோ... தலையிலுள்ள இந்தச் சீட்டு உன்னை அதிகாரம் பண்ணும்...'** என்று குழந்தை சொல்ல, ஜான் **'அது வெரோனிக்கா'** என எண்ணிக் கொண்டது ஞாபகத்துக்கு வந்தது.

ஆமாம். ஜானை ஆட்டி வைக்கும் பலத்தை வெரோனிக்கா கொண்டு இயங்கித் தான் வந்தாள். உண்மை தான். ஆனால் அது நடந்து முடிந்த உண்மை. 'ஆனால் இனிமேல் இல்லை கண்ணே...' என தப்பித்து விட்ட திருப்தியில் குழந்தையை எண்ணிக் கொண்டார் ஜான். 'இனி நான் உனக்கே உனக்குத் தான்.'

## 10

மறுநாள் ஜான் கீழேயிறங்கி வரும்போது காலை மணி பத்து. தோட்டத்திலிருந்த சிறு குடிலில் காலைச் சிற்றுண்டி தயாராகி யிருந்தது. கெர்டாவுக்கான காலை உணவு, படுக்கையறைக்கே அனுப்பப்பட்டிருந்தது. சாப்பிட்டிருந்தார். இருந்தாலும், தான் கீழே வந்தால் ஏதாவது தொந்தரவு தர நேரிடும் என்று கருதியே தனக்கு மட்டும் தனியாக உணவினை மேலே அனுப்பிவிட்டதாக கற்பனை செய்துக் கொண்டு சஞ்சலமடைந்திருந்தார் கெர்டா.

சிற்றுண்டியை மேலே கெர்டாவுக்கு மட்டும் அனுப்பியதை அறிவீலித்தனமாய் எண்ணிய ஜான், ஹாலோ போன்ற பணக்கார வீடுகளில் பல வேலையாட்கள் பணிவிடைக்கு காணப்பட்டாலும், கெர்டா போன்றோருக்கு ஏதேனும் சிறு வேலையாவது தந்து அவர்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்துத் தொலையலாம் என முனகிக் கொண்டார்.

இன்று காலை கண் விழித்ததிலிருந்து கெர்டாவின் மீது மிகக் கருணை கொண்டு உள்ளார் ஜான். எப்போதும் மனத்தை அரித்து நரம்பதிர வைத்து, சதாசர்வகாலமும் எரிச்சலூட்டும் கோபத்திலேயே ஜானை வைத்திருந்த கடந்த கால ரகசியம் உடைந்துக் கரைந்துப் போனதால் ஏற்பட்டுள்ள அமைதி; அது கற்றுத் தந்துள்ள பாடம் - மனைவியின் மீது கருணை.

ஹென்றியும் எட்வர்டும் துப்பாக்கிகளோடு பொழுதைக் கழிக்கக் கிளம்பியிருந்தனர். இதை, பூந்தொட்டியைத் தூக்கிச் செடிகளுக்கு நீருற்றிக் கொண்டுத் தோட்ட வேலையில் மும்முரமாயிருந்த லூசி தான் சொன்னாள். வேறு ஒருவரும் கண்களில் படாததால், ஜானுக்கு மிகப் பிடித்த லூசியோடு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார், கட்ஜன், ஒரு கடுதாசியைக் கொண்டு வந்து கைகளில் திணிக்கும் வரை.

''இப்பொழுது தான் வந்தது சார்.''

புருவங்கள் உயர அதை வாங்கிப் பார்த்தார்.

வெரோனிக்கா!

லூசியிடம் விடைபெற்றுத் தனியாய் போய் பிரித்து உள்ளிருந்த ஒற்றைத் தாளை உருவி படித்தார் :

**"தயவுசெய்து காலையில் என் இடத்துக்கு வரவும். உன்னை நான் பார்த்தே ஆக வேண்டும் - வெரோனிக்கா."**

'வழக்கம் போன்ற திமிர் - கர்வம்' என நினைத்துக் கொண்டார். போகக் கூடாது என நல்ல மனம் சொன்னாலும் 'ம்ம்... போய், அவளுடனான உறவினை மீண்டும் வளர விடாமல் முழுதுமாக அறுத்தெறிந்து விட்டு வருவதே சிறந்தது' எனவும் தோன்றியது. உடனே போயாக வேண்டும் எனக் கிளம்பினார்.

தான் இப்போது நின்றுக் கொண்டிருந்த அறையிலிருந்து நீச்சல் குளம் வழியாக வெரோனிக்காவின் குடிலுக்கு இட்டுச் செல்லும் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு கிளம்பினார். நீச்சல் குளம், பாதைகளின் கரு மாதிரி அமைந்திருந்தது. இங்கிருந்து நாலாபுறமும் - மரங்களடர்ந்திருந்த குன்றுப் பகுதிக்கு, பூச் செடிகள் அழகழகாய் வளர்க்கப்பட்டிருந்த தோட்டப்பகுதிக்கு, பெரிய மைதானம் விரிந்திருந்த பண்ணைப் பகுதிக்கு - என எல்லாப் புறங்களுக்கும், வழிகள், கதிர்வீச்சாய் விரிந்துச் சென்றன.

சில நிமிடங்கள் கடந்ததும் வெரோனிக்கா தங்கியிருந்த 'புறாக் கூடு' என எழுதப்பட்டிருந்த குடில் எதிர்வந்தது.

ஜன்னலிலேயே காத்திருந்தார் வெரோனிக்கா. மரங்களாலேயே அமைக்கப்பட்டிருந்த புறாக் கூட்டின் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து, ''உள்ளே வா ஜான். வெளியே வேண்டாம். இன்று காலையிலேயே அதிகக் கூதலடிக்கின்றது'' என்று அழைத்தார்.

குளிருக்கு அடக்கமாக சிறு நெருப்பு மூட்டப்பட்டிருந்தது, வரவேற்பறையில். மெத்மெத்தென அகலமான சோபாக்களு மிருந்தன.

மதிப்பிடும் கூர்மையில் வெரோனிக்காவைப் பார்த்துக் கொண்டிருந்த ஜானின் கருத்துக்கு, சிறு பெண்ணாய் ஞாபகமிருக்கும் வெரோனிக்காவாய் அல்லாது, அந்த நடிகையிடம் தெளிவான வித்தியாசங்களைக் காண முடிந்தது. இவ்வித்தியாசங்கள் நேற்றைய இருட்டில் கண்களில் படாமல் போனவை...!

சிறு பெண்ணாய் அப்போதிருந்ததை விட, இப்போது மிக அழகாய் தோன்றுவது தான், பிரதான வித்தியாசமாய் பளிச்சிட்டது. இன்னும் ஆழமாக தன் அழகை அறிந்து விட்டிருந்த வெரோனிக்கா, அதன் மீது அதிக கவனங்கள் செலுத்தி, நாளுக்கு நாள் மெருகேற்றி

யிருந்தார். காபி நிறத்திலிருந்த கூந்தலை வெள்ளி முலாம் பூசப்பட்ட நிறத்திற்கு மாற்றியிருந்தார்; அது, அவரின் மேனி வண்ணத்துக்கு மிகச் சிறப்பாய் பொருந்தி, அவரழகைப் பிரமாதமாய் மையப்படுத்திக் காட்டியது. அவரின் முக பாவத்தை, எதிரிலிருப்போருக்கு புள்ளியாய் விளக்கிக் காட்ட ஏதுவாயும் கவர்ச்சி கூட்டும் விதமாயும், புருவ வில்லை, வெகு நேர்த்தியாக வளைத்து சுழித்து பிரமிப்பூட்டி யிருந்தார்.

வெரோனிக்காவின் அழகும் கவர்ச்சியும் இளமையும் ஈர்ப்பும் அசாதாரணமானவை. பல்கலைக்கழகப் பட்டமும் இலக்கியப் புலமையும் பெற்றுத் திகழ்ந்ததால், வெரோனிக்கா, 'கற்றறிந்த நடிகை' என மக்களால் போற்றப்படும் கூற்றும் தோன்றி ஜானைப் பெருமைக் கொள்ள வைத்தன.

இவ்வளவு பெருமைகளிருந்தும், கடந்தக் கால அனுபவமான, 'அடக்கயியலா திமிரும் தலைக்கனமும் கொண்டுத் திரியும் ஆபத்தான பிறவி' எனும் நிதர்சனம் முகத்திலறைய அமைதியானார் ஜான். தான் நினைத்தை மட்டும் - மட்டுமே - சாதித்துக் கொள்ளும் அடங்காப்பிடாரி குணம் தான் அவர் சொத்து என்பதையும், அதி அற்புத சதை வளைவுகள் கொண்டு ஆடவர் அனைவரையும் அடித்து நொறுக்கிக் காலடியில் போட்டு மிதிக்க வல்ல வெரோனிக்காவின் உடம்புக்குப் பின்னால், ஈவிரக்கமற்ற இரும்பு மனுஷி உறங்காமல் விழித்திருப்பதையும் அதிர அதிர உணர்ந்துக் கொண்டார் ஜான்.

''உங்களை வரச் சொன்னதே...'' என ஆரம்பித்த வெரோனிக்கா, கர்வம் தலை தூக்கி நிற்க, ''நாம் பேச வேண்டும் என்பதற்காக'' எனக் கொஞ்சம் ஆக்ரோஷமாய் சொன்னார். ''நாம் பேச வேண்டும்! நாம் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் பற்றிப் பேச வேண்டும்! நம் எதிர்காலத்திற்கான முன்னேற்பாடுகள், அவற்றிற்கான நடவடிக்கைகள் பற்றிப் பேச வேண்டும்!''

ஜான் ஒரு சிகரெட் எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார். பிறகு அதிராமல் கொள்ளாமல் சொன்னார் : ''நமக்கு எதிர்காலமா...? நமக்கென எதிர்காலம் ஏதாவது இருக்கின்றதா...?''

''என்ன பேசுகிறாய் ஜான்...?'' என உடனடியாய் ஜானைக் குறிவைத்துப் பார்த்துக் கேட்டார் வெரோனிக்கா. ''ஆமாம். உனக்கும் எனக்கும் மட்டுமென, நமக்கே நமக்கான பிரகாசமான எதிர்காலம் இருக்கிறது, இருக்கிறது! பதினைந்து வருடங்களை வீணாக்கி விட்டோம் ஜான். இனி ஒரு நாளைக் கூட வீணாக்க நியாயமில்லை.''

அங்கிருந்த சோபா ஒன்றில் வசதியாய் உடல் பரப்பி அமர்ந்துக் கொண்ட ஜான் ''மன்னித்து விடு வெரோனிக்கா'' என்று ஒரே வார்த்தையில் விலக்கி விட்டார் - விளக்கி விட்டார். ''நீ, நேற்று நம் சந்திப்பை ஒட்டி நடந்த அனைத்தையும் தவறாகப் பதிவு செய்துக் கொண்டுள்ளாய். நான் - உன்னை மீண்டும் பார்த்ததில் மிகப் பரவசமும் ஆனந்தமும் அடைந்தேன். சத்தியமாய். ஆனால் உன் வாழ்வும் என் வாழ்வும் எவ்விடத்திலும் சந்தித்துக் கொள்ள இயலாத இணை கோடுகள். விரிந்தே செல்லும் இணை கோடுகள்.''

''நிறுத்து'' - வெகுண்டார் வெரோன்னிக்கா. ''முட்டாள் பேச்சு! நான் உன்னைக் காதலிக்கிறேன். நீயும் என்னைக் காதலிக்கிறாய். எப்பொழுதும் ஒருவரை ஒருவர் எண்ணி மருகிக் காதலித்துக் கொண்டேதானிருக்கிறோம். இதோ, இந்நொடியில் கூட அப்படித்தான். பிரிய வேண்டும் என அதீத பிடிவாதம் பிடித்துத் தான் நீ என்னைப் பிரிந்தாய். போகட்டும். அது கடந்த காலம். இனி நம் வாழ்க்கைகள் முட்டி மோதிக் கொள்ள வேண்டாம். அமெரிக்கா வுக்குத் திரும்பிப் போக எனக்கு விருப்பமில்லை. இப்பொழுது செய்துக் கொண்டிருக்கும் படத்துக்கு அடுத்து ஒரு படம் கை வசமுள்ளது. அற்புதக் கதை. ஆங்கிலத் திரையுலகம் இது வரைக் கண்டிராத வெற்றியை எனக்கு அள்ளித் தரவல்ல பாத்திரம்.''

ஜான் ஏற்றுக் கொள்ளும் தொனியில், ''நிச்சயம் வெற்றி அடைவாய்'' என்றார்.

''நீ உன் மருத்துவத் தொழிலை செய்துக் கொண்டேயிரு. என்னால் எந்தத் தொந்தரவும் வராது'' - தயாள கருணை பொதித்துப் பேசினார். ''நீ பிரபல மருத்துவ ஸ்தானத்தை அடைந்து விட்டா யாமே...! பேசிக் கொள்கிறார்கள்!''

''என்னருமை வெரோனிக்கா! நான் திருமணமானவன்! எனக்குக் குழந்தைகளும் உள்ளன!''

''நானும் திருமணமானவள் தான்'' என்றார் வெரோனிக்கா. ''ஆனால் இதையெல்லாம் சுலபமாக மாற்றிக் கொள்ளலாம். நல்ல வக்கீல், சிரமமேற்படாது முடித்துக் கொடுத்து விடுவார்.''

சொல்லிவிட்டு, ஜானைப் பார்த்து, அவர் கூசும்படி அகலமாய் சிரித்தார் வெரோனிக்கா. ''எனக்குத் திருமணமென்றால் அது உன்னுடன் தான் என்றே வாழ்ந்துள்ளேன் ஜான். மற்றதெல்லாம் - என் திருமணங்கள் உட்பட - எல்லாமும் சும்மா. உன் மீது இவ்விதமாய் அளப்பறிய காமம் கொண்டு ஏன் அலைகிறேன் என எனக்கே

விளங்கவில்லை ஜான். ஆனால் இது தான் உண்மை. நீ வேண்டும். உன்னை விட மாட்டேன்.''

''மன்னித்து விடு வெரோனிக்கா. எந்த வக்கீலும் தேவையில்லை. உன் வாழ்வும் என் வாழ்வும் இணைந்து செய்யப் போவது ஒன்றுமில்லை.''

''நேற்று இரவு மீண்டும் சந்தித்தப் பிறகுமா...?''

''நீ முதிர்ச்சியற்றக் குழந்தையில்லை, வெரோனிக்கா. உனக்கு சில -கணவர்கள் இருந்திருக்கிறார்கள். பல காதலர்கள். இந்நிலையில் நேற்றிரவு சந்திப்பு புதிதாய் என்ன காட்டி விடப் போகின்றது! ஒன்றுமில்லை. உனக்கே கூட அது தெரியும்.''

''ஜான்..'' - அடைந்தே தீர்ந்து விட வேண்டும் எனும் வேகத்தில் தான் இன்னும் இருந்தார் வெரோனிக்கா. ''நான் வந்து குதித்த தருணத்தில், லூசி வீட்டில், உன் முக பாவத்தைப் பார்த்திருந்தா யென்றால் உனக்குப் புரிந்திருக்கும். மறுபடியும் ஸான் மிகைல்'லில் கலந்து விட்ட திருப்தி - அதை மட்டுமே எதிர்பார்த்திருந்த நீ, எதிர்பாராது அதை அடைந்து விட்டப் புளகாங்கிதம் - என்னமாய் பிரகாசித்தது தெரியுமா..?!''

''தெரியும். உன்னைக் கண்ட அக்கணத்தில், நான், ஹாலோ'வில் இல்லை... ஸான் மிகைல்'லில் தானிருந்தேன். அப்படி இன்புற்றேன். இருந்தாலும் நிகழ்காலத்தைப் புரிந்துக் கொள்ள முயற்சி செய் வெரோனிக்கா. நீ கடந்த காலத்திற்கு, என் இருபத்து நான்கு வயது விடலைப் பருவத்திற்கு, நேற்று என்னை அழைத்துப் போய் கிளுகிளுப்பூட்டினாய். ஆனால் இன்று வேறு! இப்போது நான் இடைப்பட்ட பதினைந்து வருடத்தில் அனுபவம் பல கற்றுத் தெளிந்துள்ள நாற்பது வயது முதியவன்! இந்த ஜான் வேறு. நீ அறியாதவன். ஒரு வேலை நீ அறிந்துக் கொண்டால் கூட, நீயே வெறுத்து ஒதுக்கக் கூடியவன்.''

''என்னை விட உன் பிள்ளைகளும் பெண்டாட்டியும் முக்கியமாகி விட்டார்கள்...?''

''உனக்குப் பிடிக்காமலிருக்கலாம். ஆனால் என் நிலை அது தான்.''

''பேசாதே ஜான். நீ என்னைக் காதலிக்கிறாய். மனப்பூர்வமாய். உண்டா இல்லையா...?'' - உஷ்ணமானார் வெரோனிக்கா.

''மன்னித்து விடு வெரோனிக்கா.''

இதைக் கேட்டதும் உடைந்த வெரோனிக்கா, சந்தேகம் எழுந்து ஆடக் கேட்டார் : ''நீ என்னைக் காதலிக்கவில்லை...?''

''விஷயத்தை சரியாய் புரிந்துக் கொள் வெரோனிக்கா. அன்றும் இப்படித்தான் புரிந்துக் கொள்ளாமல் கதறினாய். நீ, அதி அற்புத சுந்தரி. அழகிகளுக்கெல்லாம் அழகி. அதை, அதை மட்டும் பருகிக் களிக்கப் பழகினேன். அவ்வளவுதான். காதல் வேறு. வாழ்க்கை வேறு.''

அதிர்ந்தே போனார் வெரோனிக்கா. அச்சடித்த வார்ப்பு பொம்மையாய் ஆனார். அசைவில்லை. ஆடாது அசையாது நிமிடங்கள் கரைய வெரோனிக்கா அமர்ந்திருந்தது, ஜானை சங்கடப்படுத்திற்று. வாய் திறந்துப் பேச ஆரம்பித்த போது, ஜான் சுருண்டு போகுமளவுக்கு விஷமாய் வீச ஆரம்பித்தார்.

''யாரந்தப் பெண்...?''

''பெண்...? என்ன சொல்கிறாய்...?''

''சுவரோரத்திலிருந்த பீரோ பக்கத்தில் நின்றிருந்தாளே... அவள் யார்...?''

ஹென்ரீட்டா! பிசாசு போல இப்போது ஏன் ஹென்ரீட்டாவைப் பிடித்துக் கொள்ள வேண்டும்? உரத்த குரலில் சொன்னார்: ''யாரைப் பற்றிக் குறிப்பிடுகிறாய்..? மிக்டே...?''

''மிக்டே...? சதுர முகத்தோடு கன்னங்கறுக்க நின்றிருந்தப் பெண் தானே...? வாயை மூடு. அவளைப் பற்றி நான் ஏன் குறிப்பிட வேண்டும்...? உன் மனைவியையும் குறிப்பிடவில்லை. பீரோவின் அருகே ஒன்றுமறியாத சாத்தானாய் நின்றிருந்தாளே, அவளைத்தான் சொல்கிறேன்...! அவளால் தான் நீ என்னை ஒதுக்கிக் கீழே தள்ளுகிறாய். அவள் வலையில் சிக்குண்டு இருப்பதால் தான் என்னைத் தட்டிக் கழிக்கப் பார்க்கிறாய். பெண்டாட்டி, பிள்ளைக் குட்டி என்றெல்லாம் யோக்கியமான குடும்பஸ்தன் போல அறம் பேசித் தப்பப் பார்க்காதே...! எல்லாவற்றிற்கும் அவள் தான் காரணம்...!'' - சொன்னவர், தன் இருக்கையிலிருந்து எழுந்து ஜானை நெருங்கினார்.

''இங்கிலாந்துக்கு, பதினெட்டு மாதங்களுக்கு முன்பு நான் திரும்பிய தினத்திலிருந்து, உன்னையே எண்ணி உருகி, உன்னையே தேடித் தேடி நான் மருகுவதை, நீ அறியவில்லையா, ஜான். இந்த ஒப்பேறாத இடத்தைத் தேர்ந்தெடுத்து நான் வந்து ஏன் தங்கியிருக்கிறேன் என உனக்கு விளங்கவேயில்லையா..? நீ

அவ்வப்போது லூசி குடும்பத்தோடு கொட்டமடிக்க இங்கு வருகிறாய் என நான் அறிந்துக் கொண்டதால் தான் ஜான்...!''

''ஓஹோ. அப்படியானால், நேற்றைய இரவு நாடகம், நீ முற்கெனவே ஒத்திகைப் பார்த்தது தானா வெரோனிக்கா...?

''நீ எனக்கு மட்டும் சொந்தமானவன் ஜான். எப்போதும்.''

''நான் யாருக்கும் சொந்தமில்லை வெரோனிக்கா. யாருமே யாருக்கும் சொந்தம் கிடையாது. எந்த உடலையும் - எந்த ஆன்மாவையும், யாரும் சொந்தம் கொண்டாடவே முடியாது எனும் வேதாந்தத்தை, இத்தனை வருட வாழ்க்கை அனுபவத்திலிருந்து, இப்போது கூடவா நீ உணரவில்லை...? நான் உன்னை விரும்பினேன். விடலை வயதில். காதல் என்று கூட சொல்லலாம். அப்போது கெஞ்சினேன். என் வாழ்க்கையைப் பகிர்ந்துக் கொள்ள ஓடி வா என்று...! உண்டா இல்லையா...? ஆனால் நீ மறுத்து விட்டாய்.''

''என் பணியும், வாழ்க்கை முறையும், உன் பணியை விட முக்கியமானதாய் இருந்தன. யார் வேண்டுமானாலும் மருத்துவராகி விடலாம் ஜான்.''

பொறுமையைக் கொஞ்சம் தவற விட்டார் ஜான். ''உன் துறையில் நீ ஜ்வலிப்பதாய் நினைப்பா வெரோனிக்கா...?''

''பிரதான நட்சத்திரமாய் ஆகவில்லை எனக் குத்தி காட்டுகிறா யில்லை...? பார்...! பார்த்துக் கொண்டேயிரு...! நானும் முதல் கதாநாயகி அந்தஸ்துக்கு உயருவேன்...! வளர்வேன்...!''

உப்பு சப்பற்றப் பார்வையை அவர் மீது வீசிய ஜான், ''உன்னால் முடியாது என்பது உனக்கே தெரியாது வெரோனிக்கா. திறமையில் வற்றியிருக்கிறாய். வேண்டுபவற்றையெல்லாம் பிடுங்கிப் பறித்தே வளர்ந்தவள் நீ. தர்ம சிந்தனையோ அற வழியோ நீ அறியாதவை. இவை தான் நீ'' என்றார்.

வெரோனிக்கா எழுந்தார். ''நிறுத்து'' என்று அதிகாரமிட்டு விட்டுச் சொன்னார் : ''பதினைந்து வருடங்களுக்கு முன்னால் என்னைத் தலைக்குப்புறத் தள்ளி விட்டு ஓடி வந்தாய். இன்று மீண்டும் என்னைத் தலைக்குப்புறத் தள்ளி சிதைத்து விட்டாய். ஜான். இவ்விரண்டுக்கும் உன்னை பதில் சொல்ல வைப்பேன். வருந்த வைப்பேன். ஓய மாட்டேன்.''

ஜான் உடனே எழுந்து கதவு வரை சென்றார். ''உன்னைக் காயப்படுத்தியிருந்தால் மன்னித்து விடு வெரோனிக்கா. நீ அழகின் சிகரம். கண்ணே... அதனால் உன்னை வயதுப் பருவத்தில் அப்படி

நேசித்திருக்கிறேன்'' என்றவர் கேட்டார்: ''அந்த அளவிலேயே விட்டு விடலாமா...?''

''நீ கிளம்பலாம் ஜான். அந்த அளவிலேயே விட்டு விட முடியாது. உனக்கு வேண்டுமானால் விட்டு விடப் பிடிக்கலாம். எனக்கு அப்படியில்லை. சந்திப்போம். மீண்டும் மீண்டும். ஆனால் இப்பொழுது, உலகில் வேறெதையும் காட்டிலும் உன்னை முழுக்க வெறுக்கிறேன் ஜான். போய் விடு. உன் முகத்தில் உமிழ்ந்து வெறுக்கிறேன். கண்ணில் படாதே.''

தோள்களைக் குலுக்கிக் கொண்டு வேறு வழியில்லையெனில் பரவாயில்லை எனும் தொனியில் கிளம்பி வெளியேறினார் ஜான்.

அடர்ந்திருந்த மரங்களின் கூட்டத்தில் மெதுவாய் நடந்தார். நீச்சல் குளம் அடைந்ததும், மேற்கொண்டு நடக்காமல், அங்கிருந்த ஓர் இருக்கையில் அமர்ந்தார். வெரோனிக்காவிடம் இப்படி நடந்துக் கொண்டதற்காக அவர் வருந்தவில்லை. வெரோனிக்கா, தேவையற்ற ஒரு சிறு படைப்பு என, காதலேதுமின்றி நினைத்தார். ஓரிரு தடவையல்ல; பழகிய அத்தனை தடவையும் அருவெறுப்பாகவே தான் நடந்துக் கொண்டுள்ள வெரோனிக்காவுடனான உறவில், தான் செய்த அதி புத்திசாலித்தனம், அவரிடமிருந்து, மிகச் சரியான நேரத்தில் கழட்டிக் கொண்டது தான் என எண்ணி நெஞ்சு முழுக்க அமைதி கண்டார் ஜான். அவ்வாறு விலகாமல் வெரோனிக்காவுடன் சேர்ந்தே போயிருந்தாரென்றால், ஜானுக்கு என்ன தான் நேர்ந்திருக்கும் என்பது, மனித சக்தியெல்லாம் கடந்த கடவுளுக்கே வெளிச்சம்!

இப்போது, கடந்த கால சுவட்டின் வலிகளே இல்லாத புத்தம் புது வாழ்க்கையைத் துவங்கப் போவதில், தனக்குள் ஏற்பட்டுள்ள உவகையிலும் கிளர்ச்சியிலும் திளைத்துக் கொண்டிருந்தார் ஜான்.

'பாவம் கெர்டா' - நினைத்துக் கொண்டார் ஜான். 'குழந்தைகள்...! நான் என்றாலே அதிர்வு என்று வெறுக்குமளவு நடந்துக் கொண்டு விட்டேன்!' - தனக்குள் கழிவிரக்கம் கொண்டு, கசிந்தார்.

இனி குடும்பத்தில் எல்லோருடனும் ஜான் மிகக் கனிவாக நடந்துக் கொள்வார்!

மேலும், மெல்ல மெல்ல, ஹென்ரீட்டாவின் முதுகு சவாரியையும், ஜான் குறைத்துக் கொள்ளலாம். அவ்வளவு சுலபமாய் யாரும் ரீட்டாவின் முதுகில் ஏறி சவாரி செய்து விட முடியாது என்பது

நிஜமானாலும், வலுவுக்குப் போய் அடிக்கடி ஜானாய் செய்து வந்த முதுகுச் சவாரிக் குறையும்! ரீட்டா வாழ்க்கையில் புயல் சுழன்றடித்துள்ள காலங்களெல்லாம் உண்டு. கலங்கியதில்லை. எதிர்த்து, யோகம் தெரிந்தவன் செய்யும் த்யான அமைதியுடன் சமாளித்தவர் ரீட்டா.

'ஹென்ரீட்டாவிடம் போய் முதல் காரியமாய் இப்போது நடந்த அத்தனையையும் கொட்டித் தீர்க்க வேண்டும்' என எண்ணிக் கொண்டார்.

அப்போது, எதிர்பாராமல், சிறிதாய், மிக அருகில் எழுந்த ஓர் ஓசையால் உலுக்கப்பட்டு நிமிர்ந்தார் ஜான். சற்று தொலைவில் உயர உயர வளர்ந்திருந்த மரக் காட்டுக்குள்ளிருந்து ஓயாது குண்டு வெடிக்கும் ஓசையும், அதில் அகப்பட்டு சிதைந்தெறியப்பட்ட மரச் சில்லுகளின் கிழித்தெறியப்படும் ஓசையும், இந்த அதிரடியால் பயந்து ஓலமிட்டு இப்படியும் அப்படியுமாய் பறந்த பறவைகளின் இறக்கைப் படபடப்பு ஏற்படுத்திய ஓசையும், அப்போதெல்லாம் உதிரும் காய்ந்த சறுகுகள் ஏற்படுத்திய மெலிதான ஓசையும், ஆகிய அனைத்து ஓசைகளின் கலவையும் இத்தனை நேரமும் இடம்பெற்றுக் கொண்டிருந்தாலும், தன் அமைதி குலைக்கப்படாமல் தானிருந்தது என துணுக்குற்றார் ஜான். இப்பொழுது எழுந்த ஓசை நிச்சயமாய் வேறு. குறிபார்த்து, காலந்தாழ்ந்துவிடக் கூடாது எனும் ஒழுங்குடன் அழுத்தப்பட்டு அமுங்கிய 'க்ளிக்' என்ற சப்தம். எதையோ (துப்பாக்கி?) தயார்நிலையில் ஊர்ஜிதப்படுத்திவிட்ட ஓசை.

ஜான் உடனடியாய் துரிதமானார். சூட்சுமமாய் நடந்தேறும் கடும் ஆபத்தான நிலையை, தன் அனைத்துப் புலன்களும் உணர்ந்தெழ, அவசரமானார். 'எத்தனை நேரமாய் நான் இங்கு உட்கார்ந்திருக் கிறேன்...? அரை மணி நேரம்...? ஒரு மணி நேரம்...? இல்லை அதற்கு மேல்..? இப்படியா சுய பிரக்ஞையற்றுக் கிடப்பது..?' என எண்ணிக் கொண்ட ஜானுக்கு சுற்றுவட்டாரத் தனிமையும் மிக அருகில் எழுந்த திகில் நிறைந்த ஓசையும் நடுநடுங்க வைத்தன.

ஜானை யாரோ பின் தொடர்ந்து கவனித்து வந்துள்ளனர். யாரோ அது.... யாரோ....

அப்படியானால் அந்த 'க்ளிக்' ஒலி எழும்பியது... எழும்பியது... நிச்சயமாய் ஒரு... ஒரு... ஒரு துப்பா...

சட்டென நொடியின் பின்ன நேரத்தைக் கூட வீணாக்காது, எதிர்ப்புக் காட்டும் அவசர மனிதனாய், அதி அதி வேகமாய், ஓசை வந்த திசையைத் தோராயமாய் கணக்கிட்டுத் திரும்பினார் ஜான். ஆனால் அந்த மின்னல் வேகம் கூட குறைவாய் போயிற்று. ஆச்சரியத்திலும் அதிர்ச்சியிலும் அவர் கண்கள் விரிந்துக் கொண்டே போயின. 'அதைக்' கண்ட மாத்திரத்தில் கதறிக் கத்திக் கடும் சப்தமெழுப்ப அவருக்கு அவகாசம் தரப்படவில்லை.

ஒரு சுற்று குண்டு வெடிப்பு நிகழ்ந்தது. நடந்த அபாயத்தைக் கொஞ்சமும் மறுக்காது உள்வாங்கி, வெடிப்பினைத் தாங்காது சில சுற்றுக்கள் சுழன்று, விகாரமாய் செயலிழந்து, நீச்சல் குளத்தின் விளிம்பில், அசௌகரியமான ஒரு கோணத்தில் சரிந்தார் ஜான்.

கருஞ்சிவப்பு நிறத்தில் ரத்தம் கசியத் துவங்கி, அவரின் இடப்புறத்தின் வழியே மெதுவாய் வெளியேறி, நீச்சல் குளத்தின் கான்கிரீட் விளிம்பு வரை நழுவி நின்றது; பிறகு, அங்கிருந்து, சிகப்புச் சொட்டுக்களாய் குளத்தின் நீல நிற நீருங்கள் விழுந்து கரையத் தொடங்கியது.

## 11

துப்பறியும் வல்லுநர் ஹெர்குல் பொய்ரெட், தன் பளபளக்கும் ஷூ'வில் ஒட்டிக் கொண்டிருந்த சிறு தூசியைத் தட்டி விட்டுக் கொண்டு நேர்த்தி செய்தார். கன்னங்கரேலென்று தகதகத்தது ஷூ. வூரசி அழைத் திருக்கும் விருந்துக்கென மிக கவனமாக தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தார் ஹெர்குல். இது நல்லபடியாய் சித்தி பெற்றுள்ளதில் அவருக்கு திருப்தி.

இங்கிலாந்திலேயே பிறந்து வளர்ந்திரா விட்டாலும், இங்கிலீஷ் காரர்கள் உடைகளுக்குத் தரும் மரியாதையையும், விழா விருந்துகளில் அவற்றிற்கென விதிக்கப்பட்ட உடைகள் உடுத்தாமல் சென்றால் அவமரியாதையாய் கருதுவர் என்றும் இவர் அறிந்திருந்தார். எனவே நகரத்துக்கு உகந்த நாகரீக உடையணிந்து தயாராகியிருந்தார்.

நகர வாழ்க்கை தனக்குப் பிடிக்காமலே உள்ளது என்பதை, ஆணித்தரமாய் ஏற்றுக் கொண்டுள்ளார் ஹெர்குல். இவரின் பல நெருங்கிய நண்பர்கள் மேன்மையாய் குறிப்பிட்டுப் புரிய வைத்த 'வார இறுதிக் குடில்கள்' ஹெர்குலுக்குப் படித்துப் போயிற்று. நகரச் சந்தடியிலிருந்து ஒதுங்கி வந்து, அமைதியாய் தன் தனிப்பட்ட நேரத்தை ருசிக்க உதவும் வாடகைக் குடில்களில் மன நிறைவோடு வார இறுதியைக் கழிக்க முழு மனதோடு இணங்கி, ரெஸ்ட் ஹெவன் (ஓய்வின் சொர்க்கம்) எனும் குடிலை நிரந்தரமாக எடுத்துக் கொண்டார். சுற்றிவர மேடும் சறுக்கலும் கொண்டு வடிவமைக்கப் பட்ட தோட்ட அழகு சேர, ஒரு சிறு சதுர வீடாய் இருந்தது ரெஸ்ட் ஹெவன். இருந்தாலும், தன்னை உலகத்திடமிருந்து ஓரிரு நாட்கள் பிரித்து அமைதியை அள்ளித் தரும் ஒரு தனிமை வீட்டைத் தான் மிகப் பொருட்படுத்தினாரே தவிர, தோட்டம் துறவையெல்லாம் அல்ல. எனவே அழகுப் பெட்டகமாய் விளங்கும் தோட்டமும் மரங்களும் ஹெர்குல்'லைக் கவரவேயில்லை. சொல்லப் போனால், காய்ந்த சருகுகளைக் கொட்டிக் குப்பையைப் பெருக்கவல்ல மரங்களின் மீது இவருக்கு என்றுமே நாட்டமிருந்ததில்லை. இதையும், திடீரெனத் தோன்றி அச்சுறுத்தும் குரங்குக் கூட்டத்தையும்

பொறுத்துத் தாங்கிக் கொண்டார் - அடுத்த ஒரு வாரத்திற்கு தான் இயங்க எரிபொருளாய், இத்தனிமை தருகின்ற மன சாந்தி கருதி...!

இந்த ரெஸ்ட் ஹெவனில் ஹெர்குல்'லுக்கு மிகப் பிடித்தது, வரிசை வரிசையாக சீராக அமைத்து, இவ்வீட்டின் தோட்டக்காரன் விக்டர் பராமரித்து வரும் சிறு காய்கறித் தோட்டம் தான்! இது மட்டு மல்லாது தங்கும் விருந்தாளியின் வயிராற, முழு அர்ப்பணிப்போடு விக்டரின் மனைவி தரும் தளிர் விருந்தோம்பலும், துப்பறியும் நிபுணருக்கு மிக திருப்தி தரும்!

வெளியே வந்து தடுப்புச் சுவர் கதவினைத் திறந்து தெருவிறங்கி நின்ற ஹெர்குல், இடவலம் பார்த்து, பளபளக்கும் தன் ஷூ வின் சுத்தத்தில் கண் பதித்தெடுத்து, சாம்பல் நிற தொப்பியை சரி செய்தார். அருகிலிருந்த புறாக் கூடு என அழைக்கப்படும் குடிலைக் கண்டு சிறு அதிர்வு கொண்டார். புறாக் கூடும் ரெஸ்ட் ஹெவனும் இரு கட்டிடப் பெரும் புள்ளிகளின் சொத்துக்கள். ஆனால் இவ்விரு குடில்களின் நிலமும் இப்பொழுது அரசாங்கத்தால் கையகப்படுத்தப்பட்டு விட்டன. நகரோரத்து அழகினைக் காப்பதற்காக இந்த நடவடிக்கை என்கிறது அரசுத் தரப்பு. இரு குடில்களும் இங்கிலாந்தின் இரு கலாச்சார சின்னங்களாய் அருகருகே அமைந்திருப்பது தான் காரணம். புறாக் கூடு குடிலும் கூட ஒரு சிறு பெட்டித் தான், ஆயினும் வெளியே பூசப்பட்டுள்ள பூச்சு வேலைகள் அனைத்தும் நவநாகரீக வளர்ச்சியை எடுத்துக்காட்ட, ரெஸ்ட் ஹெவனோ எந்த நகாசு வேலையும் செய்துக் கொள்ளாமல், அப்படியே பழைமையை எடுத்துக் காட்டிக் கொண்டு நிற்கின்றது! இங்கிலாந்தின் இருவேறு முகங்கள், அருகருகில்...! அரசு விடுமா!

இச்சிந்தனையோடு, ஹாலோவை எப்பாதையில் போய் அடைவது என்று தனக்குத்தானே விவாதித்துக் கொண்டிருந்தார் ஹெர்குல். தெருவின் கொஞ்சத் தொலைவில், பிரதானச் சாலை யிலிருந்து பிரிந்து, சின்னதாய் செல்லும் ஒரு பாதை, ஹாலோவுக்கு இட்டுச் செல்லும் என்று இவருக்குத் தெரியும். அது ஒரு குறுக்குப் பாதை. அதன் வழி சென்றால் அரை மைலுக்கு மேல் மிச்சமாகும். இருக்கலாம். ஆனால் ஹாலோவின் பின் கதவுக்குத் தான் அவ்வழி இட்டுச் செல்லும். எனவே, சிறந்த நடத்தையை மட்டுமே கடைபிடிக்க வேண்டும் என்பதில் பிடிவாதமான ஹெர்குல், கொஞ்சம் நீண்டாலும் பரவாயில்லை; சுற்றுப் பாதையையே தேர்ந்தெடுத்து, ஹாலோ'வுக்குள், முறைப்படி முன் வழி மூலமாகவே

தான் நுழைய வேண்டும் என பின்வருமாறு நினைத்துக் முடிவெடுத்துக் கொண்டார் : 'லூசி வீட்டுக்கு நிகழும் முதல் சந்திப்பு இது. அதுவும் விருந்துக்கான அழைப்பின் பேரில் நிகழும் சந்திப்பு. இப்போது போய் ஏதோ அழையா விருந்தாளி போல் புறக்கடை பக்கமாய் செல்வது அநாகரீகம்!'

பாக்தாதில் லூசியைச் சந்தித்தபோது மனமொப்பி, தான் பதிவு செய்து வைத்திருந்த 'தனித்துவம் மிக்க அசலான மனுஷி' என்ற லூசி மீதான கணிப்பை ஒரு முறை ஞாபகப்படுத்திக் கொண்டு நடக்க ஆரம்பித்தார்.

ஹாலோ'வை நடந்து அடைய என ஹெர்குல் கணித்து வைத்திருந்த கெடு அவ்வளவு துல்லியமாயிருந்தது. முன் வாசலை அடைந்து அழைப்பு மணியை அடித்த போது மணி, ஒன்று ஆக ஒரு நிமிடம்...! சொல்லப்பட்டிருந்த சரியான நேரத்தில் ஹாலோவை வந்தடைந்து விட்டதில் சந்தோஷமாயிருந்தாலும், தளர்ச்சியாய் உணர்ந்தார். ஹெர்குல்'லுக்கு அதிகம் நடந்து பழக்கமில்லை.

ஆஜானுபாகுவான கட்ஜன் தான் கதவினைத் திறந்தான். திறந்த கட்ஜன் கொடுத்த வரவேற்பு துப்பறியும் வல்லுநர் எதிர்பார்த்த அளவுக்கு அமையவில்லை. ''முதலாளியம்மா, நீச்சல் குளத்திலுள்ள பார்வையாளர் அறையில் இருக்கிறார். இந்த வழியாய் போக வேண்டும். வர முடியுமா...?''

குடில்களுக்கு வந்து விட்டால் வெட்ட வெளியில் போய் வெகு நேரம் உட்கார்ந்து அரட்டையடிக்கும் இங்கிலீஷ் மக்களின் ஆசை, ஹெர்குல்'லை எரிச்சலூட்டியது. கோடையின் கொளுத்தும் வெயிலுக்கு வேண்டுமானால் இந்த அபிலாஷை பொருந்தும். பாதுகாப்பாய் உள்ளேயே இருக்க வேண்டிய வெடவெடக்கும் இந்த செப்டம்பர் மாதக் குளிரிலுமா...?! இன்றைய தினம் வசந்தக் காலத்துக்கே உரிய கடுங்குளிராயில்லாமல் வெதுவெதுப்பா யிருந்தாலும், நிச்சயம், இக்காலகட்டத்தில் நரம்பையெல்லாம் மரக்க வைக்க வல்ல தண்மை, மிகுதியாய் தானுள்ளது. இப்போது போய்,வெட்டவெளியில் உட்கார்ந்து விருந்து கொண்டாடத் தான் முடியுமா..? ஆனால் கட்ஜன் - பிரெஞ்சு ஜன்னல் வழியே வெளியேறி, சிறு பாறை மிகுந்திருந்த குன்றின் வழியாகவும் மர அடர்த்தியின் வழியாகவும் கடந்து ஹெர்குல்'லை அழைத்துப் போவதில் ஒரு வித அவசரத்திலிருந்தான்.

விருந்தாளிகளை மதியம் ஒரு மணிக்கு வரச் சொல்லி விருந்துத் தருவது லூசியின் வாடிக்கை. குளிரற்ற தினங்களில் நீச்சல் குளத்தைச் சுற்றி சாப்பாட்டு மேஜைகளெல்லாம் போட்டு, அலங்கரித்து விருந்தளிப்பதில் அவருக்கு அலாதி ப்ரியம். விருந்து மதியம் ஒன்றரை மணிக்கு என ஏற்பாடு. காலந்தாழ்த்தி வருவோர் கூட, மதிய உணவுக்கு ஒன்றரை தாண்டி வர மாட்டார்கள் என்ற கணிப்பிலான ஏற்பாடு! அப்போதுதான், லூசியின் திறமையான சமையற்காரன், நீண்ட நேரமெடுத்துக் கொண்டு விதவிதமான பண்டங்களைச் செய்து, தயாரித்த அத்தனை சுவைமிகு பதார்த்தங்களையும் மேஜை முழுதும் நிரப்பி விட்டு, பரிமாறத் தயாராய், எவ்வித தடுமாற்றமும் இன்றி நிற்க முடியும்.

ஆனால், இப்போது, ஹெர்குல் பொய்ரெட்'டுக்காக ஏற்படாகி யிருந்த விருந்து, திட்டமிட்டபடி அமைந்து, பாராட்டி மெச்சும்படியாய் முடியாமல் போய் விட்டது! ஜான் சுடப்பட்டதால்!

கட்ஜனின் உயரமான உருவம் அனாயாசமாய் செல்லும் வேகத்துக்கு ஈடுகொடுக்க தன் காலடிகளின் வேகம் கூட்டப்பட வேண்டும் என உணர்ந்து விரைந்தார் ஹெர்குல்.

அப்போது தான், தனக்கு வெகு அருகிலிருந்து சிறு அழுகை சப்தத்தைக் கேட்டார் ஹெர்குல். அவரின் ரம்மியமான மனோ நிலையை அது உலுக்கியது. நடக்கவுள்ள விருந்துக்குப் பேதம் விளைவிப்பது போல், ஒரு விதத்தில் பொருந்தாமல் ஒலித்தது. இப்படி ஒரு சூழலை அவர் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆனால் அழுகை ஓசையே தான் என தெளிவான போது, என்ன உணர்வினைப் பிரதிபலித்து அழுகை நீளுகிறது என பிரித்துப் பார்க்க முயன்று தோற்றார் அவர். பயத்தாலா? ஆச்சரியத்தாலா? பிடிவாதத்தாலா? கொடூர நிகழ்வினாலா? காயமேற்பட்டதலா? இவ்விதமாய் ஆராய்ந்து யோசித்துக் கூர்ந்து கவனித்த போது, வளர்ந்துக் கொண்டிருந்த அழுகை சப்தம், மிக ஸ்திரமாய், எதிர்பாராது நிகழ்ந்து விட்ட ஏதோ ஒன்றைத் தான் தெரிவிக்கிறது என புரிந்துக் கொண்டார்.

கட்ஜன் மரக் காட்டுக்குள்ளிலிருந்து வெளிப்பட்டு நுழைந்த இடம் - நீச்சல் குளம். நுழைவில் நிதானித்து, ஒரு பக்கமாய் விலகி, பொய்ரெட் முன்னேற வழி தந்த கட்ஜன், தொண்டையைச் செருமிக் கொண்டு முணுமுணுப்பாய் சொன்னான்: ''திருமிகு ஹெர்குல்... அதோ என் எஜமானி.'' இவ்வாறு முதுகு வளைந்து மிக மரியாதையாய் சுட்டிக் காட்டியவனின் இறுக்கம், சட்டென தளர்ந்தது.

மேலும் வளைந்து நிற்க இயலாமல், மூச்சுக்குத் திண்டாடுவது போல மூச்சிரைத்தான். முதலாளியின் முன் விறைப்பாய் நிமிர்ந்தே நிற்க வேண்டிய அலுவலக விதி நழுவ, தளர்ந்து ஒடிந்துப் போனான். பயந்து நடுங்கியிருக்கிறான், அவன்.

கட்ஜன் விட்ட வழி மூலம், அவரும் ஓரிரு அடிகள் எடுத்து வைத்து விழுந்த இடம், பெரிய மைதானத்தின் பின்னணியில் விரிந்திருந்த நீச்சல் குளம் அமைந்திருந்த இடம். விரிந்திருந்த வெளியைப் பார்த்த உடனேயே, நொடி தாமதமின்றி, துப்பறியும் நிபுணர் இறுகிப் போய் உறைந்தார் – 'என்னது இது' என்று புரியாத குழப்பத்தால்... கிலேசத்தால்...!

'இது அதிகம் - மிக அதிகம். அதிகப்பிரசங்கித் தனம். ஹென்றி-லூசி குடும்பம் இவ்வளவு கீழிறங்கி நடந்துக் கொள்ளும் என கனவிலும் நினைத்ததில்லை. நடக்கப் பிடிக்காத நான், அழைத்தார்களே என்று சுற்றி நடந்து வந்ததன் பலன், வந்ததிலிருந்து தொடர்ந்து இங்கு இடம்பெறும் அதிருப்தி தரும் நிகழ்வுகள் தான். இப்போது இது....! நகைச்சுவை எனும் பெயரில் நடைபெறும் அவலம்' - எரிச்சலாகிப் போனார் ஹெர்குல்.

வரும்போது இருந்த உற்சாகமிழந்துப் போனார். இவருக்கு மரணம் என்ன ஒரு வினோதமா...! பிரமிக்க வைக்கிறோம் பேர்வழி என மரணத்தையே ஒரு நாடகமாய் இதோ நடத்திக் காட்டுகின்றனர்.

தன் வருகைக்காக அரங்கேற்றப் போவதாய் சொல்லியிருந்த கொலை நாடகம், மிகத் தரம் வாய்ந்த செயற்கைக் கொலையாக இருக்கும் என எதிர்பார்த்திருந்தார் ஹெர்குல். ஆனால் இங்கிருப்பதோ சுத்தமாய் ஹெர்குல் பாராட்டயியலாத காட்சி. குளத்திற்கருகே ஓர் உடல். அதன் கை கால்கள் மிக கவனமாக விரிக்கப்பட்டு, அதனால் வெகு செயற்கையாய் ஏற்படுத்தப் பட்டிருந்த கொலைத் தோற்றம். இதில் மெதுமெதுவாய் குளத்திற்குள் சொட்டும் சிகப்பு பெயிண்ட் வேறு. ரத்தமாம்...! எத்தனை அற்புதமான அழகன் அவன். சுண்டி இழுக்கும் சிகப்பு நிறமும், வாளிப்பும், கருகரு முடியும் மிகுந்த ஆணழகன். அவனைப் போய் கொலையுண்டவனாகப் படுக்க வைத்து...! அருகில் ஒருத்தி... குள்ளமாய், மத்திய வயதில்...! அவள் யார்? கொலைகாரி போல...! அதனால் தான் பாவம் கையில் நீண்ட துப்பாக்கியைக் கொடுத்து நிற்கச் செய்துள்ளார்கள்...! ஆனாலும் அவள் முகம் முழுக்க அப்பியுள்ள, நிராதரவான வெறுமை - வெகு நிஜம்.

இவ்விதம் சலித்துக் கொண்ட ஹெர்குல் கண்களில், ஹெர்குல்'லுக்கு என நடத்தப்படுகிற இந்நாடகக் காட்சிக்கு பலம் சேர்த்துக் கொண்டிருந்த இன்னும் சில நடிகர்களும் கண்களில் அகப்பட்டனர்...! குளத்தின் அடுத்த கரையருகே நல்ல நெட்டையான பெண், ப்ரவுள் நிறத்துக்குப் போய் பழுத்திருந்த மர இலைகளுக்குப் பொருத்தமாய் ப்ரவுன் நிற கூந்தல் கொண்டு, பரபரக்கப் பார்த்தபடி நின்றிருந்தாள்; கையில் பூக்கூடை கொண்டு நிறைய மலர்களைப் பறித்து வைத்திருந்தாள். இன்னொரு மூலையில் நெடுநெடுவென வளர்ந்திருந்த ஓர் ஆடவன், வேட்டை உடையணிந்து, கையில் துப்பாக்கி சுமந்தபடி நின்றிருந்தான். அவனுக்கு வெகு அருகில் கூடை நிறைய கோழி முட்டைகளோடு நின்றிருந்தார், ஹெர்குல்'லை விருந்துக்கு அழைத்திருந்த லூசி.

உடனேயே, இவருக்கு, பல பாதைகள் ஓடி வந்து நீச்சல் குளத்தில் குவிவதும், இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாதை வழி வந்து இங்கு குவிந்துள்ளனர் என்பதும் ஊர்ஜிதமாயிற்று.

மிக மிக செயற்கைத் தனம் மிகுந்த நாடகம். காட்சி தத்ரூபமாக இருக்க வேண்டும் என எண்ணி, கணக்கிட்டுக் கொண்டு, இங்கு மங்கும் ஹாலோவின் அங்கத்தினர்கள் நின்றுக் கொண்டிருக்கிறார்கள் என எண்ணிய ஹெர்குல்'லுக்கு சிரிப்புத் தான் வந்தது. இதை ஏற்பாடு செய்ததற்கு பதில் வெறுமனே இருந்திருக்கலாம் என நினைந்துக் கொண்ட அவர், இந்தக் கூத்தில் என்னை என்ன செய்ய வேண்டும் என எதிர்பார்க்கிறார்கள் என்று புதிர் போட்டுக் கொண்டார்! இந்தக் 'கொலையை' உணர்ந்து விட்டதாய் நடிக்க வேண்டுமா! அல்லது, 'ஆஹா... அழகான ஏற்பாடு' என லூசியைப் பாராட்டி, அவரிடமே, தனக்கான பாத்திரம் என்ன எனக் கேட்டு விட வேண்டுமா!

ஒட்டு மொத்தத்தில் இந்த ஏற்பாடு முழுக்க முட்டாள் தனமாய் பட்டது ஹெர்குல்'லுக்கு. பாவம் அந்த அழகனை, 'போதுமப்பா, நீ இந்தக் கடுங்குளிரில் வெறும் தரையில் வெடவெடக்கப் படுத்திருப்பது' எனச் சொல்லி எழுப்ப வேண்டும் என எண்ணிக் கொண்டார்.

இந்நிலையில் தான் லூசி மெதுவாய் கீழே கிடந்த உடலை நோக்கி நகர்ந்தார். அதிர்ந்துள்ள கட்ஜனின் ஹ்ருதயம் இன்னும் மூச்சு விட அலறிக் கொண்டிருக்கும் பின்னணியில், ஹெர்குல்'லும், எத்தனை நேரம் தான் ஒரே இடத்தில் நிற்பது என நினைந்து, லூசியைத்

தொடர்ந்தார். கட்ஜன் இருந்த நடுக்கத்தைப் பார்த்த ஹெர்குல்லுக்கு 'கட்ஜன், இந்த நாடகமே அறியாதவன் போல' எனத் தோன்றியது. மறு கரையிலிருந்த மற்ற இருவரும் வந்து இவர்கள் கூட இணைந்துக் கொண்டனர். அருகருகில் வந்து விட்ட அனைவரும் குனிந்து, விகாரமாய் கை கால்களைப் பரப்பி, ஒழுங்கீனமாய் சிதறி விழுந்து, குளத்தின் ஒட்டில் கிடந்த உடலை, அதிசயமாய் பார்த்தனர்.

அப்போது தான், தெளிவாக இல்லாத எதையோ திடீரென திரை முழுக்கக் காட்டிப் புரிய வைக்கும் சினிமாக் காட்சி போல, இந்தச் செயற்கைத் தனமான நாடகக் காட்சியில் செயற்கையல்லாத வாஸ்தவம் - நிஜம் ஒருங்கியிருப்பதை, தன் உடல் முழுக்க பயங்கரமான அதிர்ச்சியாய் பரவ உணர்ந்தார் ஹெர்குல்.

தான் குனிந்துப் பார்த்துக் கொண்டிருக்கும் உடல், இறந்துப் போய்விட்ட உடலாயில்லா விட்டாலும், இறந்துக் கொண்டிருக்கும் உடல், மரணத்தின் வாயில் மீளாமல் புகுந்து, மூச்சை நிறுத்த அல்லாடிக் கொண்டிருக்கும் பரிதாபகரமான உடல் என்பது விஸ்வரூபமெடுத்து விளங்கிற்று ஹெர்குல்லுக்கு.

உடல் விழ்ந்துக் கிடந்த கான்கிரீட் தளத்தின் ஒட்டிலிருந்து ஒழுகி குளத்துக்குள் சொட்டத் துவங்கியிருந்த திரவம், சிவப்பு பெயிண்ட் அல்ல. அது ரத்தம். மனித ரத்தம். இந்த மனிதன் சுட்டு வீழ்த்தப்பட்டிருக்கிறான். இப்போது. சில நிமிடங்களுக்கு முன்னால்.

சட்டென நிமிர்ந்து அருகில் நீள் துப்பாக்கியைச் சுமந்தபடி நின்றுக் கொண்டிருந்த பெண்ணை, ஈட்டியைத் தூக்கி எறிவது போல திடீர்ப் பாய்ச்சலாய்ப் பார்த்தார். 'அவள் முகம் உணர்வற்று இருந்தது. வெறும் வெறுமை தான். எவ்வித உணர்வும் அற்ற நிலைக் குத்திய முகம். 'மூளை அழிந்து விட்ட தினுசில் கண்ணகல ஜடமாய் நின்றுக் கொண்டிருந்தாள் அவள்' என பதிந்துக் கொண்டார் ஹெர்குல். சுட்டு வீழ்த்தி விட்ட நிலையில் அவள், தன் உணர்வுகளெல்லாம் - உணர்ச்சிகளெல்லாம் - மிக முக்கியமாய் வெறி எல்லாம் வடிந்துப் போய் இவ்விதமாய் அமைதியாகி விட்டாளோ எனக் கூட வியந்தார் அவர். தன் தீவிர இலக்கும் வெறியும் நிறைவேறி விட்ட நிலையில், அவளுள்ளிருந்த எல்லாம் வெளியேறி வெறும் நத்தை ஓடாய் நிற்கின்றாளோ....?! அதனால் தான் அவள் முகத்தில் எந்த உணர்வுமற்ற பூரணத்துவம் நிலை கொண்டு விட்டதோ...?!

இந்நினைவில், மீண்டும் குனிந்து, துடித்துக் கொண்டிருந்த உடலிடம் முட்டிக்காலிட்டு அமர்ந்தார் ஹெர்குல். ஏறத்தாழ

முழுவதுமாய் இறந்து விட்ட அவன் கண்களிரண்டும் மட்டும் திறந்திருந்தன. அவ்விழிகள் ஏதோ ஒன்றினை விவரித்துக் கொண்டிருந்தன. பொய்ரெட்'டால் அப்படி எதைத் தான் அவ்விழிகள் மன்றாடி தெரிவிக்கின்றன என்று, என்ன முயன்றும் அறிய முடியாவிட்டாலும், அவை தீவிரமாய் எதையோ அறிந்து அதைச் சொல்லத்தான் போராடித் துடிக்கின்றன என்பதை மட்டும் விளக்கிக் கொள்ள முடிந்தது.

ஒரே நொடியில் நின்றிருந்த அனைவரையும் ஒரு முறை நிமிர்ந்துப் பார்த்து விட்டு, குனிந்து, கீழே கிடந்த உடலையும் பார்த்த ஹெர்குல்'லுக்கு, இங்கு ஒரே ஒரு ஜீவன்-ஒரே ஓர் உடல் மட்டுமே நிஜ உயிர்ப்போடு இருப்பதாய் பட்டது. அது - மரணத்தின் ஆழத்துக்குள் சென்றுக் கொண்டேயிருக்கும் இந்த உடல் தான்! ஏனைய அனைத்து உடல்களும் உறைந்துப் போய் உயிர்ப்பின்றி நிற்பதாய் பட்டது அவருக்கு!

ஆம்...! தன் பழுத்த அனுபவத்தில், உயிர்ப்புக்கும், ஜீவனுக்கும், இதோ, மரித்துக் கொண்டிருக்கும் இவ்வுடலின் கண்கள் கொடுக்கும் விவரிப்பினைப் போல் வேறொரு பதிப்பினை தான் இது வரை எதிர் கொண்டதேயில்லை என பரபரத்தார் ஹெர்குல். இங்கிருக்கும் அனைவரும் வெறும் நிழலாய் நாடகத்தில் பங்கேற்ற மங்கலான தோற்றங்கள். கதாபாத்திரங்கள். ஆனால் இவன் - ஜீவாதாரம் பிரத்யட்சமாய் பொங்கும் நிஜ ஆன்மா!

இந்த ஆன்மா, தன் பிரகாசித்துக் கொண்டே விரியும் கண்களில் விளக்குவது தான் எதை...? ஓ, கடவுளே...!

இந்த இக்கட்டில், தன்னுடைய கடைசி மூச்சுக் காற்று இழுத்துத் துடிக்கும் நிலையில், ஜான் கிறிஸ்டோ, தன் வாயைத் திறந்து, பேசினார். அவர் குரல் தீர்க்கமாய், அவசரமாய், ஆர்வமாய் கூறியது: "ஹென்ரீட்டா."

உடன் அவர் விரிந்தக் கண்கள் சொருகி மூடிக் கொள்ள, தலை, வாழைத் தண்டாய் நெகிழ்ந்து, கான்கிரீட் தரையில் மோதி வீழ்ந்தது.

ஹெர்குல் பொய்ரெட் சற்றே வருத்தமாய் எழுந்து, இயந்திரத்தனமாய் தன் முழுக்கால் சட்டையின் கால்முட்டிப் பகுதியில் பதிந்திருந்த மண் அழுக்கினைத் தட்டியபடி சொன்னார்:

"இறந்து விட்டார்."

★ ★ ★ ★

நடந்து முடிந்த சம்பவம் அலை அலையாய் விரிந்து பூதக் கண்ணாடி கொண்டு பார்ப்பது போல பெரிதாகி நின்றது. ஒவ்வொரு வரும் கருத்துக் கூற விழைந்தனர். மிக அற்பமான சாமானியக் கருத்துக்கள். ஹெர்குல், நிலைமையை முழு உணர்வோடு உள் வாங்கிக் கொண்டு,தன் காதுகளையும் கண்களையும் மிகப் பெரிதாக்கியபடி, விழும் வார்த்தைகளைப் பதிவு செய்யத் துவங்கினார். வேறெந்த சலனமும் அற்ற - கூர்மையான பதிவு!

லூசியின் கைகள் தான் பிடித்திருந்த கூடையின் பிடியிலிருந்துத் தளர்ந்து தள்ளாடுவதைக் கவனித்தார். ஒரு நிலையில் நழுவியே விட்டக் கூடையை விரைந்து பிடித்துக் கொண்டான் கட்ஜன். சொன்னான்: ''என்னிடம் கொடுத்து விடுங்கள்.''

இயந்திரத்தனமாய் ''நன்றி கட்ஜன்'' என்றார் லூசி. உடனே, கொஞ்சம் தயங்கித் தாமதித்து, ''கெர்டா.. ... ....'' என்று இழுத்து அழைத்தார்.

கையில் நீள் துப்பாக்கியோடு நின்றிருந்த அந்தப் பெண், இந்த அழைப்பால், முதல் முறையாக, பூமிக்குள் நுழைந்தார். அக்கணமே, மத்திடைப்பட்டத் தயிர் போல சுழன்றுப் போனார். கடும் அதிர்ச்சியிலும் கிலியிலும் முங்கித் தள்ளாடியக் குரலில் சொன்னார்: ''ஜான் இறந்து விட்டார்.'' நிலைகுத்தியக் கண்கள். செய்வதறியா உடல். ஸ்தம்பித்துள்ள உடலியக்கம். சொன்னார்: ''ஜான் இறந்து விட்டார்.''

உடனடி வேகத்தில், மிகுந்த உரிமையோடு, அந்த உயரமான இளம் பெண் அவரை நெருங்கி ''அதை என்னிடம் கொடுத்து விடு கெர்டா'' என்று துரிதமாய் சொன்னார்.

ஹெர்குல் இடைபுகுத்து நிறுத்துவதற்கு முன், அதே துரிதகதியில், கெர்டா கிறிஸ்டோ'வின் கையிலிருந்து துப்பாக்கியை அவரிடமிருந்து விடுவித்துத் தான் பெற்றுக் கொண்டு விட்டார், உயரமான அந்த இளம் பெண்.

கவனித்த ஹெர்குல் வேகமாய் இருவரையும் நெருங்கினார். ''நீங்கள் இப்படி செய்திருக்கவே கூடாது மேடம்'' என்றார், கோபமாய், எரிச்சலாய்.

கனமான துப்பாக்கியை அப்பொழுது தான் வாங்கிக் கொண்ட இளம் பெண், விருந்தாளியின் ஆக்ரோஷமான திடீர் கோபக் குரலைத் தாளாது நடுநடுங்க ஆரம்பித்தார். அந்த நடுக்கத்தில் கைகளில் முழுவதுமாக அமர்ந்திராத துப்பாக்கி, விரல்களிடையே நழுவிப்

போயிற்று. குளத்தின் விளிம்பருகே நின்றுக் கொண்டிருந்தபடியால், நழுவிய துப்பாக்கி, தரையின் விளிம்பில் பட்டு எகிறி, 'ப்ளக்' என்ற அழகான சப்தத்தோடு குளத்து நீரைக் கிழித்துக் கொண்டு உள்ளே இறங்கிற்று.

அலறியபடி வாய் திறந்த அப்பெண், ''ஓ..'' என்று செய்வதறி யாது அலறினார். நீரிலிருந்து கண்கள் அகற்றி, ''எவ்வளவு பெரிய முட்டாள் காரியம் செய்து விட்டேன்'' என்று கையும் ஓடாமல் காலும் ஓடாமல் படபடத்தபடி ஹெர்குல்லை, மிக மன்னிப்பு வேண்டிப் பார்த்தார். ''மன்னித்து விடுங்கள். மன்னித்து விடுங்கள்.''

அக்கணத்தில் பொய்ரெட் ஒன்றும் பேசவில்லை. தெளிவற்றுத் துடித்துக் கொண்டிருந்த அவளின் இரு விழிகளை மட்டும் வைத்த கண் எடுக்காமல் ஆழமாய் பார்த்தார். நிலைநிறுத்திப் பார்த்தார். இப்படி செய்து விட்ட அந்த நெட்டைப் பெண் மீது மின்னலென வலுவான சந்தேகம் உள்ளுக்குள் தோன்றி மறைய, இப்படி தனக்கு ஐயம் விளைவது என்ன அநியாயமா என மட்டும் ஊகித்து வைத்துக் கொண்டார் ஹெர்குல்.

அதிராது கட்டளையாய் சொன்னார் : ''இங்கிருக்கும் எதையும் கையாளாமல் இருப்பதே சிறந்தது. போலீஸ் வந்து பார்த்து குறித்துக் கொள்ள ஏதுவாக, உள்ளது உள்ளபடி எல்லாவற்றையும் விட்டு வைக்க வேண்டியது அவசியம்.''

இதைக் கேட்டதும் ஒரு சிறு கலக்கம், விசனம், அங்கு நிலவியது. ''போலீஸ்... எல்லாம்... இங்கே... வர... வேண்டுமா...?'' - இணக்கமில்லாமல் தயங்கித் தயங்கி முணுமுணுத்தார் லூசி.

அமைதியான, இனிமையான குரலில், நாசூக்காக லூசியின் கருத்தை விலக்கித் தள்ளினார், வேட்டை உடையிலிருந்த இளைஞன்: ''வேறு வழியில்லை லூசி. போலீஸ் வருவது தவிர்க்க இயலாதது. நடந்திருப்பது கொலை.''

குளத்தருகே நிலவியிருந்த அமைதி மற்றும் சம்பவ உணர்தலைக் கிழித்துக் கொண்டு - நம்பிக்கை மிகும் காலடி ஓசைகளும், சுறுசுறுப்பான குரல்களும், நடந்துள்ள சம்பவத்துக்கு ஒவ்வாத வகையிலான ஆனந்த உரையாடல்களும் - அருகிலிருந்து கிளம்பி நெருங்கிக் கொண்டிருந்தன.

ஹென்றியும் மிக்டேயும், களிப்புடன் பேசிக் கொண்டும் அதற்காக வெடிச் சிரிப்புச் சிரித்துக் கொண்டும், வீட்டிலிருந்து குளத்திற்கு வழிந்த வழியின் வழியே வந்து நின்றனர்.

குளத்தைச் சுற்றி அனைவரும் பேயறைந்தாற் போல் நின்றுக் கொண்டிருப்பதைக் கவனித்த ஹென்றி, நடந்து வந்த வேகத்தைக் குறைத்துக் கொண்டு, அப்படியே சற்று நின்று, பின் ஆச்சரியத்தில் திகைத்துப் போய்க் கேட்டார் : ''என்ன விஷயம்...? என்ன சமாசாரம்...?''

உடனடியாய் ''கெர்டா வந்து...'' என்று ஆரம்பித்த லூசி, பின் தாமதியாது தான் சொல்ல வந்ததைத் திருத்திக் கொண்டு ''அதாவது, ஜான் வந்து....'' என ஆரம்பிக்க -

கெர்டா பீதியில் அடிக்கப்பட்ட தன் குரலெடுத்துச் சொன்னார்: ''ஜான் சுடப்பட்டுள்ளார். அவர் இறந்து விட்டார்.''

சொன்ன அவளிடமிருந்து அனைவரும் சில அங்குலங்கள் விலகி, கவலை தோய்ந்து தர்மசங்கடமாய் பார்க்க, லூசி மட்டும், ''அருமை கெர்டா...'' என்று அவரை நெருங்கி, ''நீ இங்கிருந்தது போதும். இப்பொழுது இங்கிருந்து உள்ளே போய் விடுவது தான் சரி. போய் படுத்துக் கொள்'' என்றார். தொடர்ந்தார் : ''எல்லோருமே உள்ளே போய் விடுவதே சரியென எனக்குப் படுகின்றது. ஹென்றியும் ஹெர்குல்'லும் இங்கு தங்கி, போலீஸ் வருகைக்காகக் காத்திருக்கட்டும்.''

''அது தான் மிகச் சரி என எனக்கும் தோன்றுகிறது'' என்ற ஹென்றி, கட்ஜன் பக்கம் திரும்பிச் சொன்னார் : ''காவல் நிலையத்துக்கு உடனே தொலைபேசி செய் கட்ஜன். இங்கு நடந்திருப்பதை மட்டும் சுருக்கமாகச் சொல். போலீஸ் வந்ததும் நேராக இங்கே அழைத்து வந்து விடு.''

கட்ஜன் எஜமானின் ஆணையை ஏற்றுக் கொண்டதாய் முதுகு வளைத்து உணர்த்தி, ''அப்படியே'' என்றான். அவன் தாடைக் கொஞ்சமாய் வெளுத்துப் போயிருந்தது; ஆயினும் சிறப்பான வேலையாளாக, எஜமான் இட்ட ஆணையை நிறைவேற்ற தயாரானான்.

நெட்டைப் பெண் சொன்னார் : ''வா கெர்டா.'' கெர்டாவின் கரங்களுக்குள் தன் கரம் புகுத்தி, அவர் உணர்வுகளுக்கு எதிர்ப்பு தராது, கெர்டா வழியிலேயே சென்று, அவரை இக்காட்சியிலிருந்து பிரித்தெடுத்து ஹாலோ நோக்கி அழைத்துப் போனார். ஏதோ கனவு கண்டு கொண்டிருப்பவரை அழைத்துப் போவதைப் போலிருந்தது, கெர்டா, தன் இயக்கமற்று அந்த நெட்டைப் பெண்ணின் இயக்கத்தில் நடந்து செல்வதைப் பார்க்கும் போது. சுய நினைவற்ற நடை.

இவர்களுக்கு வழி விட்டு நகர்ந்து நின்ற கட்ஜன், பிறகு கையிலிருந்த முட்டை கூடையோடு இருவரின் பின்னாலும் சென்றான்.

தன் மனைவியின் பக்கம் கூர்மையாய் திரும்பினார் ஹென்றி. ''இதெல்லாம் என்ன லூசி? என்ன தான் நடந்தது?''

கைகளிரண்டையும் நீட்டி, விரல்களை விரித்து 'இல்லை' என்பது போல ஆட்டிக் காட்டி, என்னத்தை சொல்ல என்பது போன்ற பாவனையை உதிர்த்தார் திருமதி ஹென்றி. மிகச் சரியாய் அமைந்த இந்த உணர்வுப் பங்களிப்பை ஆமோதித்தார் ஹெர்குல்.

''எனக்கொன்றும் தெரியவில்லையே ஹென்றி. கோழிகளோடு இருந்தேன், முட்டை திரட்ட. வெகு அருகில் துப்பாக்கிச் சத்தம் கேட்டது. அது குறித்து அப்போது நான் விபரீதமாய் எதையும் கற்பனை செய்யவில்லை'' என்ற லூசி, எல்லோரையும் சுட்டிக் காட்டி, ''யார் கேட்டிருந்தாலும் எந்த விபரீதமும் தோன்றியிருக்காது'' என்றார். தொடர்ந்தார் : ''காலையிலிருந்தே நீங்களும் உங்கள் கூட்டமும் தான் வேட்டுப் போட்டுத் தள்ளுகிறீர்களே! அதன் ஓசை தான் என்றே இருந்து விட்டேன். பிறகு அங்கிருந்துக் கிளம்பிக் குளத்துப் பக்கம் வந்தேன். ஜான் கீழே விழுந்துக் கிடந்தார். அங்கேயே கெர்டாவும் இருந்தாள் - தன் கைகளில் துப்பாக்கி ஒன்றை சுமந்துக் கொண்டு! அதோ அந்தப் பக்கத்திலிருந்து, ஹென்ரீட்டாவும் எட்வர்டும் ஏறக்குறைய அதே நேரத்தில் வந்து விட்டனர்.''

அவர், குளத்திலிருந்து சற்றே மேடான பகுதியில் மண்டிக் கிடந்த மரக் காட்டிலிருந்து, குளத்திற்கு வந்த இரு சிறு பாதைகளைச் சுட்டிக்காட்டினார்.

தன் தொண்டையைச் செருமிக் கொண்ட ஹெர்குல், ''யாரிந்த ஜானும் கெர்டாவும்...?'' என்று இவ்வழக்கில் தன் துப்பறியும் அத்தியாயத்தின் முதல் கேள்வியை விரித்துப் போட்டார், ''நான் தெரிந்துக் கொள்ளலாம் என்றால்...'' என்ற மன்னிப்பு தொனியான குறிப்போடு!

''ஓ நிச்சயமாக. நீங்கள் தெரிந்துக் கொள்ளலாமலா...'' என்று ஹெர்குல்'லின் கேள்வியை விரைவாக அங்கீகரித்த லூசி, ''பார்த்தீர்களா...! இது போன்ற கொலை நிகழ்ந்து விட்ட துர் சமயத்தில், உங்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதையே மறந்து விட்டோம்'' என்றார். சொன்னார் : ''ஜான் என்பவர் ஜான் கிறிஸ்டோ. டாக்டர் ஜான் கிறிஸ்டோ. கெர்டா கிறிஸ்டோ, அவர் மனைவி.''

''திருமதி கிறிஸ்டோவுடன் உள்ளே சென்ற அந்த நெட்டையான பெண்... அவள்...?''

''என் உறவு. ஹென்ரீட்டா செவர்னெக்.''

இப்பெயரைச் சொன்னதும் ஹெர்குல்'லின் இடப்புறம் நின்றிருந்த ஆடவனிடமிருந்து ஒரு சிறு உற்சாகமற்ற சலனம் எழுந்தது.

இதை கவனித்து வைத்த ஹெர்குல், ''ஹென்ரீட்டா செவர்னெக்'' என்று ஒரு முறை சொல்லிக் கொண்டு, இதோ, இந்த ஆடவனுக்கு வேண்டுமானால் ஹென்ரீட்டா பெயரை லூசி குறிப்பிடுவது எந்தக் காரணத்தாலோ பிடிக்காமலிருக்கலாம்; ஆனால் நான் தெரிந்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாயிற்றே என எண்ணிக் கொண்டார்.

*(ஹென்ரீட்டா...! இறந்துக் கொண்டிருந்த மனிதன் சொன்னது! மிக வினோதமான தொனியில் சொல்லிச் சென்றுள்ளார் ஜான்! ஏதோ ஒன்றினை... ஏதோ ஒரு சம்பவத்தை... ஏதோ ஒரு நிகழ்வினை... அழுத்தமாகக் குறித்த தொனி! என்ன அது...? பரவாயில்லை. இப்போது உடனே தெரியா விட்டால் பரவாயில்லை. ஹெர்குல்'லுக்கு நிச்சயம் தெரிய வரத்தான் போகின்றது!)*

லூசி தொடர்ந்து அறிமுகப் பணியைத் தொடர்ந்தார். ''இது என் இன்னொரு உறவு'' என்று ஹெர்குல்'லின் இடப்புறம் நின்றுக் கொண்டிருந்த எட்வர்டைச் சுட்டிக் காட்டி, ''பெயர் எட்வர்ட் ஆங்கெட்டல்'' என்றார். ஹென்றி அருகிலிருந்தவளைக் குறிப்பிட்டு, ''இவள் என் சகோதர உறவு ஹெர்குல். மிக்டே'' என்றார்.

அத்தனை அறிமுகங்களையும் இன்முகத்தோடும், சின்னதாய் தலையைக் குனிந்து வணக்கம் தெரிவித்தும் ஏற்றுக் கொண்டார் ஹெர்குல்.

அறிமுகங்கள் முடிந்ததும், ''லூசி'' என்று ஆரம்பித்த ஹென்றி, ''என் ஆலோசனைப்படி, நீங்களெல்லோரும் வீட்டுக்குள் சென்று விடுங்கள். நான் இங்கு ஹெர்குல்'லோடு கொஞ்சம் பேசி விட்டு வருகிறேன்'' என்றார்.

''கெர்டா படுத்துக் கொண்டிருப்பாள் என்றே நினைக்கிறேன். அவளைப் படுக்கச் சொல்லி அறிவுறுத்தியது சரிதானா? என்ன தான் சொல்வது என்று எனக்கு அப்போது விளங்கவே இல்லை. இதில் முன்னனுபவம் இல்லை என சொல்ல வருகிறேன்! தன் கணவனை

அப்போது தான் கொன்றுத் தணிந்திருக்கும் ஒரு பெண்ணிடம் போய் என்ன சொல்வது!''

தன் கேள்விக்கு நல்ல ஆதாரபூர்வ பதிலொன்று கிடைக்கும் என்று அவர்களை ஆவலாய் பார்த்தார் லூசி.

பிறகு வீட்டுக்கு இட்டுச் சென்ற பாதையில் இறங்கி ஹாலோ நோக்கிச் சென்றார். மிக்டே தொடர்ந்தார்; பின்னால் எட்வர்ட் நடந்தார்.

பொய்ரெட், விருந்துக்கு வலிய வந்து அழைத்துவருடன் விடப் பட்டார்! என்ன பேசுவது என்ற இலக்கின்றி தொண்டையை மட்டும் சில முறை இருமிக் காட்டிக் கொண்டார் ஹென்றி. வேறு வழியின்றி, ''கிறிஸ்டோ...'' என ஆரம்பித்த ஹென்றி, ''மிக புத்திசாலி. மிக. பிரபலமாகி விட்ட மருத்துவர்.''

கேட்ட பொய்ரெட்'டின் கண்கள் மீண்டுமொரு முறை மாண்டுக் கிடந்த மனிதனின் மீது பதிந்து நின்றன. இப்பொழுது கூட, உயிரோடு இங்கு அலைந்துக் கொண்டிருக்கும் அத்தனை பேரையும் விட, ஜான் மட்டுமே முழு உயிர்ப்புடன் இருப்பதாய் ஸ்திரமாய் தோன்றிற்று துப்பறியும் நிபுணருக்கு. இந்தப் பதிப்பு தனக்குள் ஏன் விளைந்து நிலைபெற்று விட்டது என்று ஆழ சிந்தித்தார். சொல்ல முயன்ற ரகசியத்தை சொல்லாமலேயே அவர் மாண்டு விட்டதால் ஹெர்குல்'லுக்குள் மூளும் அவரசம் இது....!

ஹென்றியின் வர்ணனைக்கு ''எனில், இப்படி ஒரு சோகம், மிக துர்திர்ஷ்டவசமானது'' என பதிலளித்தார்.

''இந்த மாதிரியான வழக்கெல்லாம், கமிஷனரான என்னை விட, உங்களுக்குத் தான் மிகத் தீனி போட வல்லது! இது வரை, எந்தக் கொலை சம்பவத்துக்கும், இந்த அளவு மிக மிக நெருக்கமாய், ஒரு சாட்சியாய் நான் நின்றதேயில்லை'' என்ற ஹென்றி, ''திருமிகு ஹெர்குல்... இதுவரை நான் செய்ததெல்லாம் சட்டப்படி சரியென்றே கருதுகிறேன்!'' என்றார்.

''எல்லாம் வெகு சரி'' என்றார் பொய்ரெட். ''போலீஸை அழைத்துள்ளீர்கள். அவர்கள் வந்து வழக்கினைக் கையகப்படுத்தும் வரை, உடலையும் சாட்சிகளையும் யாரும் குறுக்கிட்டு அழித்து விடாமல் பாதுகாப்பதைத் தவிர, நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை.''

'சாட்சியை அழித்து விடாமல்...' என்று தான் சொன்ன கடைசி வார்த்தைகள் உறைத்ததும், அவர் கண்கள், தன்னிச்சையாக,

குளத்திற்கு அடியில், கான்கிரீட் தளத்தில், அசைந்தாடும் குளத்து நீரின் கலங்கலால் வளைந்து நெளிந்து தெரியும் துப்பாக்கியில் போய் நின்றன.

ஹெர்குல் தாவிப் போய் காப்பாற்றும் முன், முக்கியமான சாட்சி, அவர் கண்களின் முன்னாலேயே சிதைக்கப்பட்டு விட்டதை இப்போது உணர்ந்தார் ஹெர்குல். உடனேயே, 'இல்லை. சாட்சி சிதைக்கப்படவில்லை, நடந்தது ஒரு விபத்து' என்றும் ஐயமின்றி நினைத்துக் கொண்டார்.

ஹென்றி ''இங்கு நிற்கத் தான் வேண்டுமா...?'' என்று விருப்பமின்றி கேட்டார். அவருக்குக் குளிரிற்று. அதனால் இப்படிக் கேட்டார். ''குளிர் ஜாஸ்தி. பார்வையாளர்கள் அறைக்குள் போய் காத்திருந்தால் பரவாயில்லை என எனக்குத் தோன்றகிறது.''

ஏறக்குறைய வெடவெடக்கும் நிலைக்குப் போயிருந்த ஹெர்குல்'லும், இந்த யோசனையை இசைந்து ஏற்றுக் கொண்டார். குளத்தின் அருகிலேயே, ஹாலோவுக்கு எதிர்புறத்தில் இருந்தது, நீந்துவோரைப் பார்த்துக் களிக்க என்றிருந்த பார்வையாளர்கள் அறை - பெவிலியன். அங்கிருந்து, மாண்டு கிடக்கும் மனித உடலும், வீடும், வீட்டிலிருந்து போலீஸ் இங்கு வரக் கூடிய பாதையும் என எல்லாமும் துல்லியமாய் தெரிந்தன.

பெவிலியன், மிக உயர்வாய் வசதி செய்யப்பட்டிருந்தது. மாபெரும் மெத்தைகள் தைக்கப்பட்டிருந்த பெரிய நாற்காலிகள், அகண்ட சோபாக்கள், ஏராளமான ஜமக்காளங்கள், கம்பளிப் போர்வைகள் எல்லாமிருந்தன. அழகான ஒரு வெள்ளை மேஜையில் அகலமான தட்டும், கண்ணாடிக் குவளைகளும், மதுபானம் நிறைந்த கண்ணாடிப் பாத்திரமும் இருந்தன.

''உங்களுக்குக் கொஞ்சம் அருந்த பானம் கொடுக்கலாம் என எண்ணினாலும்...'' எனக் குறிப்பிட்ட ஹென்றி, ''போலீஸ் வரும் வரை நான் எதையும் தொடாமலிருப்பதே சரி என நினைக்கிறேன். அவர்களுக்குத் துப்புக் கொடுக்கும் ஏதாவது இங்கு இப்போது இருக்கலாம். அதை ஏன் நான் கலைத்து விட்டதாக ஆக வேண்டும்! கொஞ்சம் பொறுப்போம். கட்ஜன் இன்னும் எந்தப் பதார்த்தத்தையும் கொண்டு வரவில்லை. உங்கள் வரவுக்காகக் காத்திருக்க வேண்டும்.''

கதவருகே இருந்த இரு நாற்காலியில், பாதை தெரியுமாறு தங்களை அமைத்துக் கொண்டு, இருவரும் எச்சரிக்கையாக உட்கார்ந்துக் கொண்டனர்.

ஒரு தடை அவர்களுக்குள் படிந்து நின்றது. இது போன்ற சந்தர்ப்பங்கள், மிகச் சிறிய விஷயங்களைக் கூட பேச விடாது போர்த்தி விடுகின்றன!

ஏதாவது அசாதாரணமாய் கண்களில் அகப்படுகின்றதா எனும் இலக்கோடு பார்வையாளர்கள் அறையையும் அதன் சுற்றுவட்டாரத் தையும் நோட்டமிட்டார் ஹெர்குல். கவனம் வைக்காது பொறுப் பின்றி தூக்கியெறியப்பட்ட நிலையில், வெள்ளி போன்ற விலை யுயர்ந்த உலோகமான ப்ளாட்டினம் பொருத்தி செய்யப்பட்டிருந்த பெண்களுக்கான ஒரு மேலாடை, அங்கிருந்த நாற்காலியின் சாயும் பகுதியில் வீசப்பட்டுக் கிடந்தது. உடுத்தும் உடைகளுக்கு மேல், ஆடம்பரம் கூட்டிக் காட்ட அணியப்படும், தோள்களிலிருந்து தொங்கும் தளர்த்தியான கையில்லாத மேல் ஆடை அது. இம்மேலாடையின் இரு தோள் பகுதிகளிலும் குதிரை முகம் அல்லது நரி முகம் போன்றவை, ப்ளாட்டினம் போன்ற விலையுயர்ந்த உலோகத்தால் பதிக்கப்பட்டு, ராஜ தோரணையை ஏற்படுத்துமாறு நெய்யப்பட்டிருக்கும்.

'இது யாருடையதாயிருக்கலாம்?' என சிறு ஆவல் பொங்கும் ஆச்சரிய யோசனைக்குள் புகுந்தார் துப்பறியும் நிபுணர். மேலாடை பிரதானமாய் எதிரொலித்த ஆடம்பரமும் வீண் டம்பமும், இங்கு வந்தது முதல் ஹெர்குல் பார்த்துப் பேசியிருந்த யாருடனும் பொருந்தி நிற்பதாய் அவருக்குப்படவில்லை. அலட்சியமாய் வீசப்பட்டிருந்தால், ஒரு வேளை இவ்வீட்டு சொந்தக்காரியுடையதாய் - லூசியுடையதாய் - இருக்குமோ என எண்ணிப்பார்த்தாலும், அவர் தோள்களுக்கு சற்றும் உகந்ததாயிராத இவ்வகையினை, லூசி, வழக்கப்படுத்திக் கொண்டிருக்க மாட்டார் என்றே முடிவு காட்டினார்.

காரணம் தெரியவில்லை; இது ஒரு முக்கியத் தடயமாய் மனதின் அடியில் இறங்கியது, ஹெர்குல்'லுக்கு. இம்மேலாடை, ஒருவரின் செல்வ மிகுதியை தம்பட்டம் கொட்டி சுய விளம்பரப்படுத்துவதாய் தோன்றியது அவருக்கு. இக்குணாதிசயம், இது வரை பார்த்த பாத்திரங்கள் யாரிலும் இல்லை என்ற முடிவோடு ஹென்றி பக்கம் திரும்பினார் ஹெர்குல்.

''நாம் கொஞ்சம் புகை பிடிக்கலாம் என எண்ணுகிறேன். வெளியே குளிர். உள்ளே படபடப்பு'' என்றார் ஹென்றி.

நீட்டிய பெட்டியிலிருந்து சிகரெட்டை எடுப்பதற்கு முன், மூக்கை உறிஞ்சி உறிஞ்சி, மோப்பம் பிடிப்பது போல் நுகர்ந்தார் ஹெர்குல்.

பிரெஞ்சு நறுமணம். விலையுயர்ந்த வாசனைத் திரவியத்திலிருந்து மட்டுமே பரவத் தகுந்த பிரெஞ்சு நறுமணம்.

மிகக் கொஞ்சமாகத்தான் அந்த நறுமணம் வியாபித்திருந்தது. ஆனால், வாசம் சந்தேகத்துக்கிடமின்றி இங்கு இருக்கின்றது. இப்பொழுது ஹலோவில் இருக்கும் யாரிடமும், தான் வந்ததிலிருந்து நுகர்ந்திராத வாசனைத் திரவிய நறுமணம் இது என்பது, அவர் மூளைக்கு வெகு நிச்சயமாய் புரிந்தது.

இந்தப் பதிவோடு, தன் வாயிலிருந்த சிகரெட்டுக்கு நெருப்பு நீட்டிய ஹென்றியின் கைக்கு வாகாய் முன் வந்து குனிந்தவரின் கண்களில், ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டிருந்த வத்திப் பெட்டிகள் - ஆறு வத்திப் பெட்டிகள் - அங்கிருந்த சோபா ஒன்றின் அருகிலிருந்த மேஜை மீது தென்பட்டன.

துணுக்குற்றார்.

இக்காட்சி, விந்தையான, விநோதமான, இந்தப் பெவிலியனுக்குத் தேவையில்லாத ஓர் அம்சமாய் ஹெர்குல்லை அறைந்தது.

## 12

''மணி இரண்டரை'' என்றார் லூசி.

மிக்டே மற்றும் எட்வர்டுடன் வரவேற்பறையிலிருந்தார் லூசி. மூடியிருந்த ஹென்றியின் பிரத்யேக அறைக்குள்ளிருந்து முணுமுணுப்புக் குரல்கள் வந்த வண்ணமிருந்தன. ஹெர்குல் பொய்ரெட், ஹென்றி மற்றும் இன்ஸ்பெக்டர் கிரேஞ்ஜ் ஆகியோர் அவ்வறையின் உள்ளேயிருந்தனர்.

லூசி வருத்தமாய் பெருமூச்செறிந்தார். ''மதிய உணவுக்கு ஏதாவது செய்தாக வேண்டும் என்று யாராவது யோசிக்க வேண்டும். என்ன சொல்கிறாய் மிக்டே...'' என மிக்டேவைப் பார்த்துக் கேட்டார் லூசி.

''ஏதோ இங்கு துயரமாய் ஏதும் நடக்காதது மாதிரி, விருந்து மேஜையை சுற்றிலும் அமர்ந்து சாப்பிடச் சொல்வது, இரக்கமற்ற செயலாய் தான் இருக்கும். ஆனால், வேறு வழியில்லை'' என்ற லூசி இப்போது அங்கிருந்த எல்லோருக்கும் சொல்வது போல் பொதுவாய் தொடர்ந்தார்: ''பொய்ரெட்'டை மதிய விருந்துக்கு அழைத்திருப்பது நாம் தான். எனவே அதற்காக வந்துள்ள அவர் நல்லப் பசியில் தானிருக்க வேண்டும். பரிதாபமாக இறந்துள்ள ஜான் இழப்பு நம்மை பாதித்துள்ளது போல அவரை பாதித்திருக்க நியாயமில்லை. இந்த நிலையில் எனக்கும் சாப்பிட விருப்பமில்லையானாலும், காலையில் சீக்கிரமே எழுந்து துப்பாக்கிகளோடு விளையாட சென்று இப்போது தான் வந்துள்ள ஹென்றியும் எட்வர்டும் நிச்சயமாய் குலைப் பட்டினியாகத் தானிருப்பார்கள். இதையும் பார்க்க வேண்டும்.''

இப்போது, ''என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்'' என்று கரிசனையாய் பதில் சொன்னார் எட்வர்ட்.

''நீ எப்போதும் விவேகமுள்ளவன் எட்வர்ட்'' என்ற லூசி, ''டேவிட் வேறு இருக்கிறானே'' என்று தொடர்ந்தார் : ''நேற்று இரவு சாப்பாட்டை, அவன் வெட்டிய வெட்டைப் பார்த்து வாய் திறந்துப் போனேன்! சிந்தித்துக் கொண்டே இருக்கும் படி பிறந்து விட்ட அறிவு ஜீவிகளுக்குப் பசி இருந்துக் கொண்டே தானிருக்கின்றது.''

இப்படிச் சொல்லி முடிக்கும் போது திடீரென நினைவு வந்தவராய், ''அது சரி. டேவிட் எங்கே...? காணவேயில்லையே...!'' என்று கேட்டார்.

''இங்கு நடந்த அத்தனையையும் அறிந்த பிறகு அவனறைக்குப் போய் விட்டான்'' என்றார் மிக்டே.

''சாமர்த்தியமான செயல்'' என்ற லூசி, ''நடந்துள்ள சம்பவம், அழகான அவன் மனதை, அவலட்சணமாக்கியிருக்கிறது. பேசாமல் தனித்திருப்பதே சரி என்று பொருத்தமான முடிவெடுத்து விட்டான். கொலை என்பது மனத்தின் தெளிவைக் கலக்கித்தான் விட்டு விடுகின்றது. குண பேதம் ஏற்பட்டதும், எஜமானன் முதல் வேலைக்காரன் வரை அனைவரது சராசரி வேலைகளும் பாதிக்கப்படுகின்றன'' என்றார். தொடர்ந்தார்: ''நல்ல வேளையாக வாத்து சமைக்கப்பட்டுள்ளது. குளிர்ந்துப் போனாலும் அது நன்றாகயிருக்கும்'' என்றவர், ''கெர்டாவுக்கு என்ன தருவது என்பது பற்றி சிந்தித்தீர்களா...?'' என்று கேட்டார். ''சூப்...? ம்...?''

'இவளிருக்கிறாளே....' என மனதுக்குள் புகைந்துத் தள்ளிய மிக்டே, 'இந்த லூசியிருக்கிறாளே. பாதகியேத்தான். இந்த நேரத்தில் போயா சாப்பாட்டினைப் பற்றி இப்படி, விளாவாரியாகப் பேசித் தள்ளுவது...! மனுஷத் தன்மை அற்ற படைப்பு!' என்று சாடிய சில நொடிகளுக்குள்ளேயே, 'இல்லையில்லை...! அதீத மனிதத் தன்மை மிளிர்வதால் தான், நாள் முழுதும் சாப்பிடாமல் இங்கு பட்டினிக் கிடக்கும் அனைவரும் லூசிக்குள் ஒரு வித அதிர்ச்சியைத் தந்துள்ளார்கள்' எனவும் உணர்ந்துக் கொண்டார்.

நிஜத்தின் உணர்தல்.

மரணம் நிகழ்ந்துள்ள வீட்டில் சாப்பாட்டைப் பற்றியும் ஒருவர் சிந்தித்துக் தானே தீர வேண்டும்....! இப்போது ஜீரணிக்கயியலாத ஒரு நிஜத்தையும் உணர்ந்தார் மிக்டே. வாழ்வின் அத்தனை விக்கினங்களும், ஆச்சரியமாயும் அத்தியாவசியமாயும் மனிதன் கருதும் இது போன்ற அற்பமான அஸ்திவாரமற்ற ஆசைகளையும் தேவைகளையும் சுற்றித் தானே பின்னப்பட்டுள்ளன எனும் அப்பழுக்கற்ற உண்மையே அது! இது தான் மாயை எனில், பிறகெங்கே தேவைகளை ஒதுக்குவது...? ஒரு வேளை, ஒரே ஒரு வேளையாவது தேவையை, உதாரணத்துக்குப் பசியை, ஒதுக்கி வைக்கத்தான் முடிகிறதா...?! பொதுவாய் மக்கள் சிந்திக்கக் கூட அஞ்சும் வாழ்வியலுக்கு, லூசி, சம்பூரணமாய் ஒரு வியாக்கியனமே எழுதி விட்டார். ஆமாம்...! இப்போது, சாப்பிட ஏதாவது கிடைக்குமா என்று எண்ணத் தான் செய்கிறோம்...! பசி! வேலைக்காரன் கவலையால் முடங்கி உட்காராமல் சமைத்திருக்க வேண்டுமே என்று

வேறு விசனப்படுகிறோம்...! தனக்கே கூட வயிற்றைப் பசிக் கிள்ளுகிறது என்று பிரித்துணர்ந்தார் மிக்டே. பசி, கூடவே வருத்தம்-துயரம்...! நூதனமான கதம்பம்....! ஞானம் புரியும் தருணம்...!

நேற்று வரை, சாதாரணக் குடும்பப் பெண்மணி என்றும், அப்பிராணி என்றும், 'ஒன்றும் தெரியாத கெர்டா' என்றும் சுட்டிக்காட்டப்பட்டு, ஆனால் இன்று, ஒரு கொலை செய்திருக்கலாம் என உத்தேசிக்கப்பட்டு சற்று நேரத்தில் சிறைக்குள் அடைக்கப்பட வுள்ள ஒரு பரிதாபகரமான பெண்ணிடம் எப்படி நடந்துக் கொள்வது என்ற கலக்கத்தில், அறை முழுதும், ஒரு சகிக்கயியலா கவலை, எங்கெங்கிலும் நிறைந்திருந்தது.

'இது போன்ற மாபெரும் இக்கட்டு, தவறாக வாழும் வேறு யாருக்காவது நடக்கலாம். கெர்டாவுக்குப் போய் நடக்கலாமா...?' என்று வாடிய மிக்டே, எதிரே அமர்ந்திருந்த எட்வர்டின் மீது பார்வையைப் பதித்தார். எட்வர்டின் மேல் மிக்டேவுக்குள் இருந்த குறையாத அன்பு, 'அய்யய்யோ...' என்று பதறி, 'இது போன்ற துன்பங்கள் எதுவும் எட்வர்ட் போன்ற அஹிம்சா வாதிகளுக்கு நிகழ்ந்து விடவே கூடாது' என தன்னிச்சையாக பயந்துக் கொண்டது. 'எட்வர்ட் இது போன்ற எந்த அபாயத்திலும் சந்தேகத்துக்கிடமாகி விடக் கூடாது' என்று காரணமின்றி அலறிக் கொண்ட மிக்டே, அமைதியான, சலனப்படாத, கருணையான, நியாயம் மிக்க எட்வர்டின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதில், இப்போது சாந்தம் கண்டாள்.

உள்ளே நுழைந்த கட்ஜன், ரகசியம் கலந்த மரியாதையோடு லூசியிடம் குனிந்து, லூசியைத் தவிர பிறருக்குக் கேட்காதபடி ''தளிர் காய்கறிகள் அடைக்கப்பட்ட ரொட்டிகள் சிலவும் காபியும் தயார் செய்து சாப்பாட்டு மேஜையில் வைத்திருக்கிறேன்'' என்றான்.

''ஓ... நன்றி, நன்றி, கட்ஜன்'' என்று மனமார சொல்லியே விட்டார் லூசி.

''உண்மையாய் சொல்கிறேன்'', என்று வெளியேறிய கட்ஜனைப் பார்த்தபடி பிரமித்து சொன்ன லூசி, ''கட்ஜன் அற்புதமானவன். அவனன்றி என்னால் ஒன்றுமே முடியாது என்பது உண்மை. எதை எப்போது செய்ய வேண்டும் எனும் சாதுர்யம் மிக்கவன். வீடுள்ள இப்போதைய நிலையில், வயிறு நிறைய, காய்கள் அடைக்கப்பட்ட

செமத்தியான இரு ரொட்டிகள் போதும். இதில் இரக்கமற்ற செயல் எதுவும் தென்படவும் செய்யாது. என்ன நான் சொல்வது....!''

''லூசி....! எனக்கு வேண்டாம்'' - மிக்டே சட்டேன தன் கன்னங்களில் வெதுவெதுப்பாய் கண்ணீர் துளிகள் வழிந்தோடுவதை உணர்ந்தார். ஆச்சரியத்துப் போன லூசி, ''அழாதே, அழாதே. பாவமடீ நீ. உனக்கு இது அதிகம்'' என்று முறைப்பாய் சொல்லிக் கொண்டார், நடந்துள்ள சம்பத்தை நொந்தபடி.

எட்வர்ட், அறையின் குறுக்கே நடந்து எதிரேயிருந்த மிக்டேவின் பக்கமாய் வந்தமர்ந்தார். மிக்டேவைச் சுற்றி தன் கையைப் போட்டுக் கொண்டவர், ''கவலைப்படாதே மிக்டே. தைரியம் கொள்'' என்றார். அருகிலிருந்த எட்வர்ட் தோள்களில் முழுவதுமாக தன் முகத்தைப் புதைத்துக் கொண்ட மிக்டே, துக்கம் முட்டத் தேம்பி அழுதபடி இருந்தார். ஏய்ன்ஸ்விக்'கில் வசித்து வந்த போது, தான் மிக விரும்பி வளர்த்து வந்த ஒரு கொழு கொழு முயல் ஈஸ்டர் நாளும் அதுவுமாய் இறந்து போது, அன்பும் ஆதரவும் மிக எட்வர்ட் அளித்த ஆறுதல், மிக்டேவுக்கு இப்போது நினைவு வந்தது.

''அதிர்ந்துள்ளாய். இவளுக்குக் கொஞ்சம் பிராண்டி கலந்துத் தரட்டுமா லூசி?'' என்றார் எட்வர்ட்.

''சாப்பாட்டு மேஜையின் வலப்புற அலமாரியில் உள்ளது. நீ போய்-''

நிறுத்தினார் லூசி. ஹென்ரீட்டா இவர்களிருந்த வரவேற் பறைக்குள் வந்து நின்றார்.

சட்டென்று விலகி நிமிர்ந்து உட்கார்ந்த மிக்டே, அருகிலிருந்த எட்வர்டும் சட்டென்று இறுகி சிலையாகி விட்டதை உணர்ந்தார்.

ஹென்ரீட்டா என்ன நினைத்திருப்பாள் என்ற கேள்வி காலதாமதமின்றி எழுந்தது மிக்டேவுக்குள். இங்கு அப்படி விக்கித்துப் போய் பார்க்கும்படி ஒன்றும் நடந்துவிடவுமில்லை. இருந்தாலும் சிறு குற்ற உணர்வு. காதல் உண்டாக்கித் தரும் குற்ற பயம்.

அறையிலிருந்தவர்களுக்குள் ஏதேனும் யுத்தம் நடக்கிறதா என்று நோட்டம் விட்ட ரீட்டா, ஒரு வித துரித வேகத்துடன், எண்ணமும் கண்களும் தீர்க்கமாய் விழித்திருக்க வந்திருந்தார்.

''ஏன் இங்கு நீ இன்னும் வரவில்லை என எண்ணிக் கொண்டே யிருந்தேன் ரீட்டா. வந்த போலீஸ் கூட்டம், உள்ளே ஹென்றியுடனும் பொய்ரெட்டுடனும் உள்ளனர். கெர்டாவுக்கு என்ன தந்தாய்? பிராண்டி? அல்லது டீ, ஆஸ்பரின்?''

''அவருக்கு பிராண்டியும் கொஞ்சம் சுடு தண்ணீரும் கொடுத்தேன்.''

''மிகச் சரி'' என அங்கீகரித்துச் சொன்னார் லூசி. ''முதலுதவி பற்றிச் சொல்லும் போது, திடீர் அதிர்ச்சிக்கு சுடு தண்ணீர் தான் உகந்தது என்றே சொல்லுகிறார்கள். பிராண்டி அவ்வளவு சுகமில்லை என்கிறார்கள். அது ஏதேனும் ஒவ்வாமையை உண்டு பண்ணலாம் என்கிறார்கள். அப்படியெல்லாம் தெரியவில்லை. நான் சிறு பிள்ளையாய் ஏய்ன்ஸ்விக்'கில் இருந்த போது அதிர்ச்சியினால் அரண்டு போனால் குணமாக உடனடியாய் பிராண்டி தான் தந்தார்கள்'' என்ற லூசி, ''ஆனாலும் உண்மையில்... நான் என்ன நினைக்கிறே னென்றால்...'' என்று இழுத்து, ''கெர்டாவைப் பொறுத்தவரை திடீர் அதிர்ச்சியெல்லாம் ஒன்றும் இருக்காது என்கிறேன் நான்'' என்றார். ''சுடச்சுட அப்போது தான் தன் கணவனைச் சுட்டுக் கொன்ற ஒரு பெண்ணின் உணர்வு நிலை எப்படியிருக்கும்? இது பற்றி ஆழமாய் ஒருத்தர் கற்பனை செய்து அறிய முடியாது ஆயினும் நிச்சயமாய் திடீர் அதிர்ச்சியாயிருக்காது என்பது திண்ணம். இல்லையா? அதாவது 'எதிர்பாராத' அதிர்ச்சி ஏற்படும்படியான திடீர் ஆச்சரியமோ அதிர்வோ ஏற்பட முகாந்திரம் இல்லாத போது எங்கிருந்து அதிர்ச்சி, என சொல்ல வருகிறேன்.''

இறுகிய ஹென்ரீட்டாவின் குரல், செய்வதறியாது அமைதியா யிருந்த சூழலைக்கு கிழித்து எழுந்தது. அவர் கேட்டார் : ''எல்லோரும், 'கெர்டா தான் ஜானைக் கொன்றாள்' என ஏன் இந்த அளவு தீர்மானமாய் இருக்கிறீர்கள்...?''

அங்கு காற்றே கண நேரம் நின்றுப் போனது! அறையின் சூழலையே இக் கேள்வி மாற்றிப் போடுவதாய் உணர்ந்தார் மிக்டே. எல்லோருக்குள்ளும் குழப்பமும், இறுக்கமும் விலகி, ஒரு கவனமான விழிப்பு உதித்தது.

லூசி, எவ்வித கருத்துப் பிறழ்ச்சியுமின்றி சூன்யமாய் - வெறுமையாய் கேட்டார் : ''அவளே சாட்சியுடன் நின்றுக் கொண்டிருந்தாளே! இதில், நீ, வேறு என்ன ஆலோசிக்க விழைகிறாய் ரீட்டா...?''

''கெர்டா எதேச்சையாய் நீச்சல் குளத்தின் பக்கமாய் நடக்கப் போக,அங்கு ஜான் விழுந்துக் கிடப்பதையும் அருகில் துப்பாக்கி இருப்பதையும் பார்த்து, தன்னையறியாது அந்தத் துப்பாக்கியைக்

கையிலெடுத்துக் கொண்டு நிமிரும் போது, நாம் சரியாய் அங்கு நுழைந்திருக்கலாமில்லையா...?''

மறுபடியும் அறைக் காற்று நின்றுக் கிளம்பியது! அனைவரின் கருத்துக் கோணங்களும் எச்சரிக்கப்பட்டன!

''இப்படித் தான் கெர்டா சொல்கிறாளா...?''

''ஆமாம்.''

இது வெறும் சம்மதிப்பாய் அமையவில்லை. இந்த ஒப்புக் கொள்ளலுக்குப் பின்னால் வல்லமையான விசை இருந்தது. அது வெளிப்பட்டு சீறும் குண்டாய் பாய்ந்தது.

இப்பதிலுக்கு தன் புருவத்தை உயர்த்திக் காட்டிய லூசி, இத்தளத்தினை விட்டு சாப்பாட்டுத் தளத்திற்கு மாறித் தாவி, சம்பந்தமின்றி சொன்னார்: ''சாப்பாட்டு அறையில் சில ரொட்டி வகைகளும் காபியும் எடுத்து வைத்துள்ளான் கட்ஜன். ஆறி விடப் போகின்றது.''

இப்படிச் சொன்ன போது அருகிலிருந்த அறையிலிருந்து கெர்டா வெளிப்பட, வருத்தமும் பரிதாபமும் பிரதிபலிக்க மூச்சினை சிறு ஓசையோடு உள்ளிக்கிழுத்துக் காட்டினார் லூசி.

படபடப்பாயிருந்தார் கெர்டா. துணைத் தேடும் அவசரத்தோடு, ''எ... எனக்கு... ரொம்ப நேரம் படு...படுத்திருக்க முடியவில்லை. நா.. நான்... ரொம்ப அமைதியற்று, உயர்பட்ச அதிர்விலிருக்கிறேன்'' என்று சுற்றும் முற்றும் பார்த்தார்.

அவரருகில் ஓடிப் போய் நின்றுக் கொண்ட லூசி, ''நாங்கள் எல்லோரும் இருக்கிறோம். கவலைப்படாதே'' எனப் பரபரத்து விட்டு, ''முதலில் நீ உட்கார வேண்டும் கெர்டா. நிற்கவே நிற்காதே. உடனடியாய் உட்கார வேண்டும்'' என்று அலறினார்.

மிக்டேவை சோபாவிலிருந்து எழுப்பி விட்டு, அங்கு கெர்டாவை நல்ல வசதியாயும் தாராளமாயும் உட்காரச் செய்து, பின்னால் முதுகுக்குப் பெரிய தலையணை ஒன்றை அண்டை கொடுத்து வசதி செய்தார் லூசி. அவர் காதருகில், அழுத்தம் கொடுத்துச் சொன்னார்: ''பாவம் கண்ணே நீ. போனது போகட்டும். அமைதியாயிரு.''

எட்வர்ட் எழுந்துப் போய் ஜன்னலருகே நின்றுக் கொண்டு, வெளியே பார்க்கத் தொடங்கினார்.

கலைந்துப் போய் முகமெங்கும் பரவியும் ஒட்டியுமிருந்த கூந்தல் இழைகளைப் பின்னுக்குத் தள்ளி விட்டுக் கொண்டார் கெர்டா.

கவலையும் பயத் திகலும் படர்ந்துத் தெறிக்கும் குரலில் கொஞ்சமாய் நிலைகுத்திப் பேசினார் : ''நா... நான்... இதோ இப்பொழுது தான்.. உணரவே ஆரம்பிக்கிறேன். உங்களுக்குத் தெரியுமா...! என்னால்.. எ.. எ... என்னால் உணரவே முடியிவல்லை! நம்பவே முடியவில்லை! கனவாய்த் தான் தோன்றுகிறது! ஜா.. ஜா.. ஜான்..'' இப்போது கெர்டாவின் தொண்டை துக்கம் எனும் கரிய மேகத்தால் சூழப்பட்டது. ''ஜா... ஜான்.. இறந்து விட்டார் என்பது எனக்கு நிஜமாகவே தோன்றவில்லை! ஜான் போய் விட்டார் '' - சொல்லும் போதே சின்னதாய் நடுங்கினார். ''யார் அவரைக் கொன்றிருக்க முடியும்..? யார் தான் அவரைக் கொல்லத் துணிந்திருக்க முடியும்...?''

நீள் மூச்சிளை உள்ளிக்கிழுத்துக் கொண்டு, ஆதரவாய் கெர்டாவின் பக்கம் லூசி திரும்ப, ஹென்றியின் அறைக் கதவு, 'களக்' என்ற தாழ்ப்பாள் பிடியின் திறக்கும் ஓசையைத் தொடர்ந்து திறக்கப்பட்டது. அவரும், அவரைத் தொடர்ந்து திடகாத்திரமாய் உடல் வளர்க்கப்பட்டு கழுத்து வரை நீண்டுத் தொங்கும் அடர்த்தியான மீசை வைத்திருந்த இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜூம் வெளி வந்தனர்.

''இது தான் என் மனைவி இன்ஸ்பெக்டர்.''

வணங்கி ஏற்றுக் கொண்ட க்ரேஞ்ஜ் சொன்னார் : ''திருமதி ஜானுடன் சில வார்த்தைகள் பேச முடியுமா என சிந்தித்திருந்தேன், திருமதி ஹென்றி!''

உடனடியாய், சோபாவில் அமர்ந்திருந்த உருவத்தை லூசி சுட்டிக் காட்ட சற்றே உடைந்துப் போனார் க்ரேஞ்ஜ். கேட்டார் : ''திருமதி ஜான்?''

கெர்டா ஈடுபாடாய் பதில் தந்தார் : ''ஆமாம். நான் தான் திருமதி ஜான். கெர்டா ஜான் கிறிஸ்டோ.''

''உங்கள் வெந்துயரில் இப்போது போய் ஆயுதம் பாய்ச்ச நான் விரும்பவில்லை. ஆனாலும் திருமதி ஜான், உங்களிடம் ஒரு சில அத்தியாவசிய அவசரக் கேள்விகளை மட்டும் இப்போதைக்குக் கேட்க விரும்புகிறேன்.''

அப்படியே நிறுத்திக் காத்திருந்தார்.

சரி என தலையசைத்தார் கெர்டா.

''உங்கள் வழக்கறிஞரைப் பக்கத்தில் வைத்துக் கொள்ளலாம். உரிமை உண்டு. அப்படியெனில் அவர் வரும் வரைக் காத்திருக் கிறேன்.''

இடை புகுந்த ஹென்றி, ''அது சட்ட நுணுக்கமான புத்திசாலித் தனமும் கூட கெர்டா'' என விளங்க வைத்தார்.

''வக்கீல்? வக்கீல் எதற்கு? ஜானின் மரணம் குறித்து ஒரு வக்கீல் என்னத்தைத் தெரிந்துக் கொள்ள வேண்டும்?''

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் இறுமிக் கொண்டார். ஹென்றி பேசுவதற்காக வாய் திறந்திருப்பார். ஆனால் இருவரையும் ஹென்ரீட்டா முந்திக் கொண்டார்! ''இன்று காலையில் என்ன நடந்தது என்று மட்டும் இன்ஸ்பெக்டர் தெரிந்துக் கொள்ள விரும்புகிறார், கெர்டா.''

கெர்டா இன்ஸ்பெக்டரைத் திரும்பிப் பார்த்தார். தேடல் மிகுந்தக் குரலில் ''உண்மையே அற்ற கெட்டக் கனவாய் தான் தோன்றுகிறது'' என்றவர், ''இன்ஸ்பெக்டர்...'' என்று பரிதவிப்பு மிக அழைத்தார். ''எ... என... எனக்கு அழவே முடியவில்லையே இன்ஸ்பெக்டர். கதறவோ விம்மவோ முடியாமல் நெஞ்சு முழுக்க சோகம் அப்புகிறது. இன்.. இன்.. இன்ஸ்பெக்டர்...! எனக்கு உலகில் எதுவுமே தெரியாதது போல ஆகிவிட்டது.''

க்ரேஞ்ஜ் மிக்கப் பரிவுடன், மிகவும் குரலைத் தாழ்த்தி, ''இதன் பெயர் தான் பேரதிர்ச்சி, திருமதி ஜான்'' என்றார்.

''ஆமாம். ஆமாம். நிச்சயமாய். எனக்கு அப்படித்தான் அர்த்தமாகின்றது. ஆனால் இவை எல்லாமே எதிர்பாராமல் சடுதியில் நடந்தேறி விட்டன இன்ஸ்பெக்டர். அப்பொழுது தான் நான் வீட்டிலிருந்து வெளியே வந்தேன். அப்படியே குளத்திற்கு இட்டுச் செல்லும் பாதையில் மெதுவாய் காலாற நடந்து நீச்சல் குளத்தினை அடைந்தேன்.''

''அப்போது மணி என்ன, திருமதி ஜான்?''

''ஒரு மணிக்கு சற்று முன்! சரியாகச் சொல்ல வேண்டுமென்றால், ஒன்றடிக்க இரண்டு நிமிடங்களிருந்தன. ஒரு மணிக்கு விருந்து என்று ஏற்பாடாகியிருந்ததால், மணி என்ன என்று, அதோ.... அந்தக் கடிகாரத்தைப் பார்த்து விட்டுப் புறப்பட்டேன். அதனால் தான் நொடி சுத்தமாகச் சொல்லுகிறேன்''. தான் அமர்ந்திருந்த நிலையை சற்று மாற்றிக் கொண்டு தொடர்ந்தார்: ''நீச்சல் குளமடைந்தேன். ஜான் வீழ்த்தப்பட்டவரைப் போல கை கால் விரிந்துக் கிடந்தார். ரத்தம், கான்கிரீட் தரையில் வழிந்துக் கொண்டிருந்தது.''

''ஏதேனும் குண்டு சத்தத்தை அப்போது கேட்டீர்களா, திருமதி ஜான்? அதாவது, குளத்துக்கு வெகு அருகில் வெடித்ததைப் போன்ற அருகாமை ஓசையோடு?''

''ஆமாம்! இல்லை! தெ... தெரியவில்லையே இன்ஸ்பெக்டர்!'' - நடுங்கினார் கெர்டா.

அமைதியாயிருந்தார் இன்ஸ்பெக்டர்.

பின் அவரே தொடர்ந்தார்: ''ஹென்றியும் எட்வர்டும் துப்பாக்கிகளோடு சுடச் சென்றுள்ளனர் என்பது மட்டும் எனக்கு நினைவுக்குள் வந்தது. நா.. நான்.. வீழ்ந்துக் கிடந்த ஜா... ஜானை, பா.. பார்த்தபடி.... பார்த்தபடி...''

''சொல்லுங்கள் திருமதி ஜான்!''

''ஜான். வழியும் ரத்தம். என்னிலை தவறி விக்கித்துப் போய் விட்டேன். அப்போது தான் அவரருகிலேயே துப்பாக்கி ஒன்றுக் கிடப்பதைக் கவனித்தேன்.''

''ம்!''

''அந்தக் துப்பாக்கியை எடுத்துக் கொண்டேன்.''

''ஏன்?''

''என்ன...? புரியவில்லை...!''

''அந்தத் துப்பாக்கியை-ஏன் நீங்கள் எடுத்தீர்கள், திருமதி ஜான்?''

''எ.. என... எனக்குத் தெரியவில்லையே!''

''அதை நீங்கள் தொட்டிருக்கவே கூடாது, தெரியுமா...?''

''எடுத்திருக்கக் கூடாதா...?'' எனக் கேட்ட கெர்டாவின் முகம், தெளிவிழந்து, வெற்றிடமானது. ''ஆனால் நான் எடுத்தேன்! என் கைகளில் பிடித்திருந்தேன்.''

குனிந்து, தூக்கிப் பிடித்தது போல காட்டிய தன் இருகைகளையும் இலக்கின்றி கலவரமாய் பார்த்துக் கொண்டார், அவற்றில் ஒரு துப்பாக்கி இருக்கும் பாவனையில்!

உடனே நிமிர்ந்து இன்ஸ்பெக்டரைப் பார்த்தார். அவர் குரல் சட்டென கூர்மையாகி ஆனால் இன்னும் வேதனைக் கூடி இருந்தது. ''யார் ஜானைக் கொன்றிருப்பார்கள்...?'' இக்கேள்விக்கு பதில் கிடைக்காமல் போய் விடுமோ என்பது போன்ற எண்ணத்தில் கூடிய கவலை முட்டப் பேசினார் : ''யார் தான் ஜானைக் கொல்லத் துணிந்திருப்பார்? யாரும்... யாரும் துணிந்திருக்க மாட்டார்கள். இது நிச்சயம்.''

இன்ஸ்பெக்டர் கண்ணகல ஆச்சரியமாய் பார்த்துக் கொண்டே யிருந்தார்; மூளையில் பதிவு செய்துக் கொண்டேயுமிருந்தார்.

''ஜான், ஆண்களின் ரத்தினம். மிக்க கனிவும் சுயநலமற்ற சேவை மனமும் நிரம்பப் பெற்றவர். மற்றவர்களுக்காக தன்னால் இயன்ற அத்தனையையும் செய்தார். குடும்பத்தைத் தியாகம் செய்து. எல்லோரும் அவரை விரும்பினர், இன்ஸ்பெக்டர். திறமையில் அவர் ஓர் அற்புத டாக்டர். மனிதாபிமானத்தில் அவர் ஓர் அரிய டாக்டர். நிகழ்ந்துள்ள துயரம் ஒரு விபத்தாய் தான் நிகழ்ந்திருக்க வேண்டும். விபத்து தான். விபத்தே தான்.''

அறையின் வெறுமையை நோக்கிக் கைகளை நீட்டி சொன்ன கெர்டாவின் குரல் இப்போது கொஞ்சம் உயர்ந்து அமுங்கியது.

''யாரை வேண்டுமானாலும் விசாரியுங்கள் இன்ஸ்பெக்டர். ஜானைக் கொன்று அடங்க ஒருவர் கூட.... ஒரே ஒருவர் கூட, கனவிலும் எண்ணியிருக்க மாட்டார்கள். என்ன சொல்லுகிறீர்கள்?'' சுற்றியிருந்தவர்களைப் பார்த்து நிராதரவாய் கேட்டார் கெர்டா.

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் தன் குறிப்புப் புத்தகத்தை மூடிக் கொண்டார். ''நன்றி திருமதி ஜான்'' என்று உணர்ச்சிவயப்படாத குரலில் சொன்னார். ''இப்போதைக்கு இது போதும்.''

ஹெர்குல் பெய்ரெட்'டும், இன்ஸ்பெக்டர் க்ரெஞ்ஜூம் சேர்ந்து மரக்காடுகளினிடையே நடந்து நீச்சல் குளத்தினை அடைந்தனர். கொஞ்ச நேரத்திற்கு முன்னால், ஜான் கிறிஸ்டோ என்று சமுதாயத்தால் மிகவும் அங்கீகரிக்கப்பட்டிருந்த ஓர் உயர் உயிர், இப்போது வெறும் உடலாய் கிடந்தது. அது, போலீஸ் மருத்துவரால் படமெடுக்கப்பட்டு, அளக்கப்பட்டு, குறித்துக் கொள்ளப்பட்டு, பரீட்சிக்கப்பட்டு பின் கடைசியாக பிரேதப் பரிசோதனைக்காக அப்புறப்படுத்தப்பட்டு விட்டது. நீச்சல் குளம், என்னிடம் மட்டும் விசாரணையில்லையா என்பதை உள்ளடக்கி வெகுளித்தனமாய் ஆடிக் கொண்டிருப்பதாய் கற்பனை செய்தார் ஹெர்குல்! பொருந்தியதாய் பட்டது அவருக்கு! இன்று நடந்துள்ள அத்தனையும், மேலும் இங்குள்ள அத்தனை பேரும், எந்த துப்பும் தராமல் அன்னியமாய், நீர்த்துப் போயிருப்பதை உணர்ந்தார் ஹெர்குல் - ஜான் தவிர! ஜான் மட்டும் தான் நீர்த்துப் போகாமல், திடமாய், உண்மையறிந்தவராய்,அதைச் சொல்லத் துடித்தவராய் இருந்தார். ஆம்... இருந்தார். 'இருக்கிறார்' இல்லை! கவிதைத் தன்மையாய்

நினைத்துக் கொண்டார் ஹெர்குல். நீச்சல் குளம், அதற்கான தேவையும் சிறப்பும் முதன்மையும் கொண்ட குட்டையாய் சிலாகிக்க இயலாமல், ஜான் கிறிஸ்டோ என்பவரின் வீழ்த்தப்பட்ட உடல் கிடந்த இடமாகவும், அவ்வுடலிலிருந்து வழிந்த அவர் உயிர் ரத்தம், கசிந்து, குளத்துக்குள் இறங்கி, அதன் நீல நீரைச் சிகப்பாக்கிய இடமாகவும் பிரபலமாக ஆரம்பித்திருந்தது.

'ரொம்ப செயற்கையாய் உள்ளது' - இவ்வழக்கில் தனக்குள் ஒளிர்ந்த இந்த முதல் குறிப்பினை, கவனமாய் கிரகித்துக் கொண்டார் ஹெர்குல். ஆம்... இங்கு அரங்கேறியுள்ள இக்கொலையில் செயற்கைத்தனம் - போலித்தனம் மண்டிப் கிடக்கிறது. எப்படி யென்றால், யாரோ வந்து... அல்லது ஏதோ வந்து... ஒளிந்திருந்தது...

தனக்குள் பளிச்சிட்ட இக்குறிப்புக்கு, அவருக்குள் தோன்றிய ஓர் அர்த்தத்தை அலசிப் பார்த்துக் கொள்வதற்குள், நீச்சலுடையில் மூங்கி எழுந்திருந்த ஓர் ஆசாமி இன்ஸ்பெக்டரை நெருங்கி வந்தான். ஹெர்குல்'லின் சீரான சிந்தனை தடைபட்டுப் போயிற்று.

''இது தான் அந்தத் துப்பாக்கி சார்'' என்றான்.

க்ரேஞ்ஜ், சொட்டிக் கொண்டிருந்த துப்பாக்கியை வெகு எச்சரிக்கையாய் வாங்கிக் கொண்டார்.

''கை ரேகைப் பதிவுக்கான சாத்தியக் கூறுகளே இல்லை'' என்று குறிப்பிட்ட அவர், ''ஆனால், தற்செயலாக, கைரேகைகள் இவ்வழக்குக்கு உதவப் போவதுமில்லை. நீங்கள் வந்து சேர்ந்தபோது, திருமதி ஜான், அந்த துப்பாக்கியைக் கையாண்டு விட்டார். அப்படித்தானே திருமிகு ஹெர்குல்...?''

''ஆமாம்.''

''இப்பொழுது, இது என்ன வகை துப்பாக்கி? எங்கிருந்து வந்தது? யாருடையது? போன்ற வினாக்கள் தான், அடுத்து நாம் விடை காண வேண்டியவை'' என்று அடுத்த கட்டத்துக்குத் தாமதியாது தாவினார் க்ரேஞ்ஜ். ''திரு ஹென்றி இதற்கு நமக்கு உதவுவார் என்பது என் கணிப்பு. அவர், பல துப்பாக்கிகளை சேகரித்து வைக்கும் பழக்க முள்ளவர் என அறிகிறேன்.''

இவ்வாறு திட்டத்தைச் சொல்லி முடித்தவர், சில நொடிகள் செலவழித்து, ஆழமாய் நீச்சல் குளத்தினை உள் வாங்கிக் கொண்டார். குளத்திலிருந்துக் கண்களை அகற்றாமல் சொன்னார்: ''இங்கிருந்துக் கிளம்புமுன், மறுபடியும் ஒரு முறை கொலைக்

காட்சியைத் தெளிவாக்கிக் கொள்வோம். அதோ அங்கிருந்து வரும் பாதை, பண்ணையிலிருந்து வருகிறது. அங்குதான் கோழி ஆடு எல்லாம் உள்ளன. அங்கிருந்து தான் முட்டைக் கூடையோடு லூசி வருகிறார். மற்ற இருவரும் - திரு எட்வர்டும், செல்வி ஹென்ரீட்டா வும் - அங்குள்ள மரக் காட்டுக்குள்ளிருந்து வருகின்றனர். ஆனால் தனித்தனியாக. திரு எட்வர்ட் இடப்புறமிருந்தும், செல்வி ஹென்ரீட்டா மரக்காட்டின் வலப்புற வழியாக - இப்பாதை ஹாலோவைத் தாண்டியிருக்கும் பூந்தோட்டத்துக்கும் நீளும் பாதையாகும் - இதன் வழியாகவும் வந்து சேர்கின்றனர். இவர்களிரு வரும், நீங்கள் வரும் போது குளத்தின் எதிர்புறத்தில் நின்றிருந்தனர். இல்லையா ஹெர்குல்...?''

''ஆமாம்.''

''நன்று. இதோ தெரிகிறதே... பார்வையாளர் அறைக்குப் பின்னால் ஒரு பாதை... இது 'பாட்டர்' சந்துக்குச் செல்கிறது. வாருங்கள். இவ்வழியில் கொஞ்சம் சென்று வருவோம்.''

நடக்கும் போது, ஆர்வமோ அதிர்வோ இன்றி, கிடைத்த தகவல் தந்த அறிவின் படி, ஒருதலைபட்சமற்று, ''இது போன்ற வழக்குகளே எனக்குப் பிடிப்பதில்லை'' என்று பேச ஆரம்பித்தார் க்ரேஞ்ஜ். ''இதே சாயலிலான வழக்கு ஒன்று சென்ற வருடம் வந்தது. ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி. பிரத்யேக முத்திரையோடு பல சாதனைகள் புரிந்தவர். அமைதியான, பழைமையைக் கடைபிடிக்கும், அறுபத்தைந்து வயது, அம்சமான மனைவி. தலையெல்லாம் நரைத்து விட்டிருந்தாலும், அப்பெண்மணியின் அலைஅலையான கூந்தலைப் போல நான் வேறொருவரிடம் பார்த்ததே இல்லை. கூந்தலழகி! தோட்டப் பிரியை. இவள் வளர்த்திருந்த விதவிதமான பூச்செடிகள், அவர்களிருந்த பகுதியின் தனி முத்திரை. ஒரு நாள். தன் கணவரின் அறை வரை செல்கிறார். அவரின் துப்பாக்கியை எடுக்கிறார். குண்டு இருக்கிறதா என்று பரிசோதித்து விட்டு, அதை எடுத்துக் கொண்டு தோட்டம் வருகிறார். அங்கிருந்த கணவனை சுட்டுக் கொல்கிறார்!''

இன்ஸ்பெக்டர் சொன்ன கேலித் தொனியில் இருவரும் புன்முறுவிக் கொண்டனர். தொடர்ந்தார் க்ரேஞ்ஜ் : ''வழக்குக்குப் பின்னால் ஏகப்பட்ட விஷயங்கள் விஸ்வரூபமெடுத்துக் காரண காரியங்களைக் கொட்டின. சளைக்காமல் தோண்ட வேண்டும்! ஏதோ நாடோடிக் கதைகள் போல கட்டுக் கதைகளை அவிழ்த்து விட்டு

நம்மை முட்டாளாக்கிய வண்ணமிருப்பார்கள். அந்த வழக்கில் அது தான் நடந்தது. எத்தனை வகையான கற்பனைக் கதைகள்!''

இதற்கு, ''நாம் அவையனைத்தையும் ஏற்றுக் கொள்வது போல ஆமோதித்தபடி, ஆனால் விசாரணைக் குறிப்புகளை மட்டும் மனதில் பதிந்துக் கொண்டு முன்னேறுவோம். நமக்கு எது நிஜம் எது இல்லை என்றா தெரியாமலிருக்கும்!'' என்ற ஹெர்குல்'லின் அழகான வர்ணனையைப் பெருமையாய் ஏற்றுக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

''க்ரேஞ்ஜ்...! அப்படியானால், திருமதி ஜான் தான் கொலை செய்துள்ளார் என்றே தீர்மானித்து விட்டீர்களா...?''

ஹெர்குல்லை மிக ஆச்சரியமாகப் பார்த்த இன்ஸ்பெக்டர், ''திருமிகு ஹெர்குல்...! நீங்கள் அப்படி நினைக்கவில்லை...?'' என்று கேட்டார்.

இதற்கு பொய்ரெட் நிதானமாய் சொன்னார் : ''திருமதி ஜான் சொன்னது மாதிரியே எல்லாம் நடந்து முடிந்திருக்கலாம்.''

கெர்டாவிடமிருந்து விடை பெறுமுன் அவர் சொன்ன, 'விபத்து தான். விபத்தே தான்' என்ற வார்த்தைகள் இன்ஸ்பெக்டரின் காதுகளில் ஒலித்தன. ''ம்...! இருக்கலாம். ஆனால் இது உப்பு சப்பற்று உள்ளது. அவர்களெல்லோரும் கூட திருமதி ஜான் தான் கொன்றிருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். ஏன்...? நாமறியாத எதையோ அவர்கள் அறிந்திருக்கிறார்கள்.''

இப்படிச் சொல்லிவிட்டு தன்னுடன் வந்துக் கொண்டிருக்கும் துப்பறியும் நிபுணரைப் பார்த்தார் இன்ஸ்பெக்டர், ஆவலாய். பிறகு சொன்னார்: ''திருமிகு ஹெர்குல்! நீங்கள் கூட, திருமதி ஜான் தான் கொலை செய்திருக்க வேண்டும் என்று, ஒரே ஒரு நொடி நினைத்தீர்கள், ஸ்தலத்திற்கு வந்து நின்று அந்தக் களேபரக் காட்சியைக் கண்டவுடன்...! உண்டா இல்லையா...!''

பொய்ரெட் நின்றார். கண்களை மூடிக் கொண்டார். பாதை வழியே நடந்து வந்து.... கட்ஜன் கதவு திறக்க... கெர்டா கிறிஸ்டோ அவரது கணவரின் உடலருகே கைகளில் துப்பாக்கியைத் தாங்கியபடி நின்றிருக்க... அவர் முகம் முழுக்க முழுக்க வெறுமை மட்டும் படர்ந்திருக்க....! ஆமாம். க்ரேஞ்ஜ் சொல்வது போல ஹெர்குல்'லும், கெர்டா தான் கொலை செய்து விட்டு அங்கு நின்றுக் கொண்டிருப்ப தாய் நினைத்தார்! கூடவே, கெர்டா நின்றுக் கொண்டிருந்த அந்த நிலைதான், அவரை சந்தேகிக்க நிர்ப்பந்தித்து, இப்படியாய் முடிவெடுக்க வைத்ததாயும் அறிந்து வைத்துக் கொண்டார்!

'ஆனால், இதனை, அப்படியே எடுத்துக் கொள்ளவும் முடியாதே. அங்கு, எனக்காக, ஒரு நாடகமன்றோ - வஞ்சிக்கப்பட்ட ஒருவன் குறித்த கற்பனை நாடகமுன்றோ - அரங்கேறியிருந்தது'

மிகுந்த மதிப்புக் கொடுத்து இதனை எண்ணத்தில் நிறுத்திக் கொண்டார் ஹெர்குல்.

கெர்டா கிறிஸ்டோ, அப்போது, தன் கணவனையே சுட்டுக் கொன்று விட்ட ஒரு பெண்ணின் மனோ நிலையிலா தோன்றினார்? இதைத்தான் இன்ஸ்பெக்டர் குறியாய் அறிந்துக் கொள்ள கேட்கிறார். ஹெர்குல்' லுக்கும் இது புரிந்தது.

வன்முறையின் முகத்திரையை முறியடித்துக் கிழித்தெறியும் தன் வெகு நீண்ட கால அனுபவத்தில் ஒரு முறை கூட, தன்னுடைய கணவனைக் கொன்று விட்டு நிற்கும் ஒரு பெண்ணை உடனடியாக முகத்துக்கு முகம் பார்த்து ஆராய்ந்து பதிந்துக் கொள்ளக் கூடிய சந்தர்ப்பமே அமைந்தில்லை எனும் உண்மையை, ஓர் ஆச்சரிய அதிர்வாய் அறிந்தார் ஹெர்குல். அந்தச் சூழ்நிலையில், ஒரு பெண், எந்த மாதிரியான உணர்வுப் போராட்டத்தில், கொந்தளிப்பில் அல்லது முடிவில் இருப்பாள்? கம்பீரமான வெற்றிக் களிப்பு? பயப்பட்டு? திருப்திப் பூரிப்பில்? குழப்பத்தில்? நம்பிக்கையற்று? வெறுமையாய்?

இதிலேதேனும் ஒன்றாய் இருக்கலாம் என எண்ணிக் கொண்டார்.

இத்தனை சிந்தனையிலிருந்த ஹெர்குல், பேசிக் கொண்டே இருந்த இன்ஸ்பெக்டரின் உரையாடலை விட்டு விட்டார். இன்ஸ்பெக்டர் முடித்த பின்வரும் கடைசி வாக்கியத்தை மட்டும் தான் அவரால் பிடிக்க முடிந்தது!

''... ... ... இவ்வழக்குக்குப் பின்னால் புதைந்துக் கிடக்கும் உண்மைகள் அத்தனையும் வெளிவர வேண்டும்; வழக்கமாய், இவற்றில் பலவற்றை, வேலைக்காரர்களிடமிருந்து, சமயோஜிதமாய் பேசி வாங்கி விடலாம்.''

ஹெர்குல் கேட்டார் : ''திருமதி ஜான் லண்டன் புறப்படு கிறாரா....?''

''ஆமாம். லண்டனில் அவருடைய சிறு குழந்தைகள் இருக்கின்றன. விட்டு விடத்தான் வேண்டும். ஆயினும் அவருடைய நடவடிக்கைகளை, அவருக்குத் தெரிந்து விடாது கண்காணித்தே ஆக வேண்டும். இது அவசியம். அவசரம். ஏதோ இவ்வழக்கிலிருந்து அவர் தள்ளியே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். அதிக உலக ஞானமற்ற பேதை போல எனக்குத் தோன்றுகிறது.''

பொய்ரெட் வியந்தார். 'இருக்கலாம். கெர்டாவுக்கு, போலீஸ் வந்து ஏன் விசாரிக்கிறது - போலீஸ், நேரடியாக இவ்வழக்கோடு பாத்யதை உள்ள அவரைப் பற்றி என்ன நினைக்கக் கூடும் - ஆங்கட்டேல் குடும்பத்தினர் என்ன நினைப்பார்கள் அல்லது என்ன நினைக்கிறார்கள் - போன்றவையெல்லாம் பகுத்தாராயும் அறிவு இருக்கிறதா என்றே வியந்தார். க்ரேஞ்ஜ் கணக்கிட்டது போல, இப்படி எதுவும் நினைத்துப் பார்க்காத ஒரு முட்டாள் பெண் போலத் தான் அவர் தெரிகிறார். நடந்த சம்பவத்தை மிக மெதுவாய் உள்வாங்கிக் கொண்டு, அதன் விளைவுகள் எதுவும் அறியாது மந்தமாய் ஆகி, தன் கணவனின் மரணத்தால் நெஞ்சுடைந்து சிதறிப் போன பெண்ணாய் தான் தெரிந்தார்.

இப்போது 'பாட்டர்' சந்தின் எல்லைக்குள் நுழைந்திருந்தனர்.

பொய்ரெட், இங்கிருந்து அவர் குடிலுக்குப் போகும் வழியருகே நின்றார். க்ரேஞ்ஜ் சொன்னார்: ''இது தான் உங்கள் தனிமைக் குடிலா? அடக்கமான அழகான குடில். சரி திருமிகு பெய்ரெட். தற்போதைக்குக் கிளம்புகிறேன். உங்கள் ஒத்துழைப்புக்கு நன்றி. உங்களைக் கூடிய விரைவில் நானே வந்து சந்திக்கிறேன். இவ்வழக்கினை எப்படிக் கொண்டு செல்வது என விவாதிப்போம்.''

க்ரேஞ்ஜின் கண்கள், இச்சந்தினை ஒட்டியிருந்த குடில்களை மேய்ந்தன. ''உங்கள் பக்கத்து ஜாகையில் யாரிருக்கிறார்கள்...? யாரோ ஒரு நடிகை வந்து தங்குவதாக சொல்கிறார்களே! அப்படியா?''

''வெரோனிக்கா என்றொரு நடிகை வந்து வார இறுதியில் தங்கிச் செல்வதாய் கேள்விப் பட்டேன்.''

''ஓ... 'புறாக் கூடு'. ஆமாம், இந்தப் பெயரைத் தான் குறிப்பிட்டார்கள்! ஒரு படம் பார்த்தேன். சற்று அதிகப்பிரசங்கித் தனமான நடிப்பாய் தோன்றியது'' என்ற இன்ஸ்பெக்டர், ''இனி பொறுப்பதற்கில்லை திரு ஹெர்குல். நிலையத்திற்கு விரைய வேண்டும். ரொம்ப நேரமாகி விட்டது, நான் வந்து.''

★ ★ ★ ★

''இதை அடையாளம் காண முடிகிறதா, ஹென்றி..?''

துப்பாக்கியை ஹென்றியின் முன்னாலிருந்த மேஜையில் கிடத்தி விட்டு, இப்படிக் கேட்ட இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ், அவரிடமிருந்து சாதகமான ஒரு பதிலை எதிர்நோக்கி பார்த்தார்.

''இதை நான் எடுத்துப் பார்க்கலாமா'' - இவ்வாறு கேட்ட ஹென்றியின் கை, துப்பாக்கியைத் தொடலாமா வேண்டாமா என்ற தயக்கத்தில் இருந்தது.

க்ரேஞ்ஜ் சம்மதாய் தலையசைத்தார். ''குளத்திலேயே வெகு நேரம் முங்கிக் கிடத்திருக்கின்றது. அதன் மீது இருந்திருக்கக் கூடிய அத்தனை விரல் தடயங்களும் நிச்சயம் அழிந்துப் போயிருக்கும். ஹென்ரீட்டா, இதனைக் கையிலிருந்து குளத்துக்குள் நழுவ விட்டு விட்டார். இதனால், தடய அறிகுறிகள் இல்லாமல், இவ்வழக்கின் தீர்வுக்கு, எல்லோரும் பரிகசிக்கும்படி என்னமாய் அல்லாடப் போகிறோம் பாருங்கள்.''

''நிஜம் தான். இருந்தாலும், நம் அனைவருக்கும், அது ஒரு மாபெரும் நடுக்கம் ஏற்படுத்திய தருணமல்லவா. அதிலும் இந்தப் பெண்கள் ஏகமாய் குழம்பிப் பதைபதைத்துப் போய், இப்படிக் கையிலிருப்பவற்றையெல்லாம் சிந்தி விடுகிறார்கள்.''

இதற்கு ஒப்புக் கொள்ளும் விதமாய் இன்ஸ்பெக்டர் தலையசைத்து விட்டுச் சொன்னார்: ''ஹென்ரீட்டா எதற்கும் அதிராத, எதிலும் பற்றுமில்லாத, எது நடந்தாலும் சாந்தமாய் அணுகுபவராய், மொத்தத்தில் எந்நிலையையும் எதிர்கொள்ள வல்ல திறமையான பெண்ணாய் இருக்கிறார்.''

இந்த வார்த்தைகளில் குறிப்பாக அழுத்தம் ஏதும் தென்படா விட்டலும், உள்ளர்த்தம் பொதிந்து சொல்லப்பட்டதாய் தோன்றியது ஹென்றிக்கு.

க்ரேஞ்ஜ் தொடர்ந்தார் :

''சொல்லுங்கள். அடையாளம் தெரிகிறதா...?''

கிடந்தத் துப்பிக்கியைக் கையிலெடுத்துப் பரிசோதித்தார் ஹென்றி. அதன் எண்ணைக் குறித்துக் கொண்டு, தோல் உறையிட்டுப் பாதுகாக்கப்பட்டிருந்த கையேட்டினை எடுத்துப் புரட்டி, அதிலிருந்து துப்பாக்கி எண்கள் பட்டியலோடு ஒப்பிட்டுப் பார்த்தார். பிறகு புத்தகத்தை மூடிவிட்டு ''ஆமாம் இன்ஸ்பெக்டர். நான் சேகரித்து வைத்துள்ள துப்பாக்கிகளுள் ஒன்று தான் இது.'' என்றார் ஆர்வமாய்.

''கடைசியாக இதை எப்பொழுது பார்த்தீர்கள்?''

''நேற்று மத்தியானம். தோட்டத்தில் ஓர் இலக்குப் பலகையை வைத்து, எல்லோரும் கூடி, யார் குறி பார்த்து அதன் மையத்தை சரியாகச் சுடுகிறார்கள், என சுட்டுப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

பொழுதுபோக்காகத் தான். அப்போது உபயோகித்த துப்பாக்கிகளுள் இதுவும் ஒன்று.''

''அவ்வேளையில் இந்தத் துப்பாக்கியை உபயோகித்து சுட்டது யார்?''

''எல்லோருமே குறைந்தது ஒரு முறையாவது இதனால் சுட்டார்கள் என்பது என் நினைப்பு.''

''திருமதி ஜானையும் சேர்த்து...?''

''திருமதி ஜானையும் சேர்த்து...!''

''இந்தத் துப்பாக்கிச் சூடு சம்பவம் முடிந்த பிறகு என்ன செய்தீர்கள்..?''

''அனைத்துத் துப்பாக்கிகளையும் கொண்டு வந்து உள்ளே பாதுகாப்பாய் வைத்து விட்டேன். இதோ இங்கே.''

அருகிலிருந்த பெரிய அலமாரியின் கதவுகளைத் திறந்துக் காட்டினார். அதில் பாதிக்கு மேல் துப்பாக்கிகள்.

''அப்பப்பா...! ஒரு பெரிய சேகரிப்பே வைத்துள்ளீர்கள், ஹென்றி.''

''பல வருட சேகரிப்பு இன்ஸ்பெக்டர். என் ஆத்மார்த்த பொழுதுபோக்கு இது.''

'ஹாலோவின்' தீவுகளின் முன்னாள் ஆளுநராகவும், கமிஷனராகவும் பணியாற்றி ஓய்வு பெற்று, இன்னும் துளியும் தொய்யாத மனோநிலையிலிருக்கும் ஹென்றியின் மீது ஆராயும் கூர்மையான கண்களைப் பதித்துப் பார்த்தார் க்ரேஞ்ஜ். அழகும் கூடவே மேன்மையும் கௌரவமும் மிளிரும் முக வெட்டு. தானாகவே வலிய வந்துப் பணியாற்றும் குணம் கொண்ட 'கருமமே கண்ணாயினார்' ரகம். கான்ஸ்டபிளாய் பிழைப்பைத் தொடங்கி கவர்னர் வரை உயர்ந்து விட்ட அவரை அண்ணாந்துப் பார்த்தபடி, இந்தச் சிந்தனையால், வந்த வேலை அப்படியே முடங்குவதை உணர்ந்துக் கேட்டார்: ''திரு. ஹென்றி...! துப்பாக்கியைக் கொண்டு வந்து மறுபடியும் நீங்கள் பத்திரப்படுத்திய போது அதில் குண்டு இல்லை, இல்லையா...?''

''நிச்சயமாக. குண்டோடு உள்ளே வைக்கும் வழக்கமே எனக்குத் கிடையாது.''

''குண்டு, மருந்து போன்ற துப்பாக்கிக்கு வேண்டிய உபகரணங்களை எங்கு வைப்பீர்கள்.''

''இங்கே. இந்த இடத்தில்'' என்ற ஹென்றி, ஒரு சாவியை எடுத்து தன் மேஜையின் கீழிருந்த ஒரு தட்டினைத் திறந்துக் காட்டினார். அங்கு துப்பாக்கிக்கு வேண்டிய உபகரணங்கள் நிறைய இருந்தன.

'இவ்வளவு சுலபமா....?' என வியந்து எண்ணிக் கொண்டார் இன்ஸ்பெக்டர். கெர்டா, இவையெல்லாம் எங்கு வைக்கப்படு கின்றன என கண்காணித்து இருக்கிறார். எவ்வித கஷ்டமுமின்றி, நேராக இங்கே வந்து, மூச்சுக் காட்டாமல் தானாகவே வேண்டு பவற்றை எடுத்துக் கொள்ள வேண்டியது தான். 'சந்தேகம், பொறாமை போன்ற அவநம்பிக்கை குணங்கள் தான், பெண்களின் கண்களை மறைத்து இயக்கி, அவர்களை எப்படிப்பட்ட அவதூறுகளுக்கு ஆளாக்கி விடுகின்றன' - எண்ணிக் கொண்டார் க்ரேஞ்ஜ். நம்பிக்கையின்மையும் பொறாமையும் தான் கெர்டாவை கட்டுப்பாடிழக்கச் செய்துள்ளன என பத்து சதவிகிதம் நம்பினார். இவரின் இந்த நம்பிக்கை எத்தனை தூரம் நம்பகமானது என்பது, இங்கு கொலை நடந்த ஸ்தலத்தில் மேற்கொள்ள வேண்டிய அனைத்து நடவடிக்கைகளையும் முடித்து விட்டு கெர்டாவின் இருப்பிடமான ஹேர்லி சாலை சென்று துப்புத் துலக்கத் துவங்கினால் தான் புலரும். ஆனால் மிகக் கவனமாக, ஒவ்வோர் அடியாக, சரியான வரிசையில், அதிர்வின்றி அணுக வேண்டும்.

இந்நினைவோடு எழுந்து சொன்னார்:

''நன்றி திரு ஹென்றி. விசாரணைகள் முடிந்ததும் முடிவுகளைத் தெரியப்படுத்துகிறேன்.''

## 13

இரவு உணவுக்கு குளிரூட்டப்பட்டிருந்த வாத்தினை சாப்பிட்டு முடித்தனர். அதன் பிறகு பாலும் முட்டையும் அடித்து செய்யப்பட்டக் கலவையில் மிட்டாய் தூவிய திரவம் பரிமாறப்பட்டது. சமையல்காரி செய்துள்ள சமயோஜித ஏற்பாடாய் இதனை அறிவித்தார் லூசி. துன்பம் நிறைந்த தர்மசங்கடமான உணர்வுகளைப் பிரதிபலிக்க அதிக வழிவகையுள்ள கலை - சமையற் கலை என்றும் சொன்னார். ''அவளுக்கு, இதோ இந்த இனிப்புக் கலவையின் மீது நமக்கு அதிக இஷ்டமில்லை என்பது தெரியும். நன்கு பழகிய ஒரு நண்பனின் மரணம் தொண்டையை அடைத்துக் கொண்டிருக்கும் போது வயிறு புடைக்க சாப்பிடுவது முரட்டுத்தனமானது; மடத்தனமானது. ஆனால் வாயில் போட்டதும் வழுக்கிக் கொண்டு ஓட வல்ல இது போன்ற இனிப்பு களால், பசியும் உடனடியாய் அடங்கும்; நெஞ்சடைத்து நிற்கும் இத்தருணத்தில் விழுங்குவதும் சுலபமாகிப் போகும்'' என்று விளக்கிய லூசி, பின்வரும் மேலும் ஒரு விளக்கத்தைக் தந்து முடித்தார்: ''கடைசியில், இனிப்பினைக் கொஞ்சம் போல சாப்பிடாமல் அப்படியே தட்டிலேயே விட்டு வைப்பது, மரண வீட்டில் செய்ய வேண்டிய இலக்கணம் வேறு.''

சாப்பாட்டு விளக்கம் முடித்த வாயோடு, சட்டென தளம் மாறி, நீண்ட பெருமூச்சினூடே, கொர்டாவை லண்டனுக்குச் செல்ல அனுமதித்து சரியான முடிவினை எடுத்துள்ளனர் என சிறு விமர்சனமும் தந்தார் லூசி. சொன்னார் : ''அவளோடு கூட ஹென்றியும் பக்கபலமாய் சென்று வர முடிவெடுத்திருப்பதும் மிகச் சரி.''

ஆமாம். காரைத் தான் செலுத்தி கொர்டாவை அவரது ஹேர்லி சாலை வீட்டில் விட்டு வரப் போவதாய் முடிவெடுத்துள்ளார் ஹென்றி.

''எனினும் விசாரணைகளுக்காக இங்கு வந்து செல்வாள்'' என்று இனிப்புக் கலவையை அருந்தியபடித் தொடர்ந்தார் லூசி : ''நடந்துள்ள உண்மையைக் குழந்தைகளிடமிருந்து எத்தனை நாள்தான் மூடி மறைக்க முடியும்? கொர்டா மட்டும் தனிமையிலிருப்பதோ அல்லது செய்தித்தாள்களின் தலைப்புச் செய்திகளோ, குழந்தைகளுக்குத்

தெரியப்படுத்தி விடாதா என்ன? அப்போது கெர்டாவே விளக்க நேரிட்டால், சொல்லும் போது என்னமாய் துடித்துப் போவாள்? அதற்குத்தான் துணையாய் நின்று உதவ ஹென்றி செல்கிறார். கெர்டாவும் கூடிய சீக்கிரத்தில் சீரான நிலை அடைந்து விடுவாள். தன் உறவுகளுக்கு - குறிப்பாய் அவளது சகோதரிகளுக்குச் சொல்லி அனுப்புவாள். அவள் வீட்டுக்கு அருகிலேயே அவளது நாலைந்து சகோதரிகள் உள்ளனர். எல்லோருக்கும் அறுபத்தைந்து வயதிருக்கும்'' என்றவர், ஹார்லி தெருவை ஒட்டிய சில பகுதிகளைக் குறிப்பிட்டு அங்கு தான் கெர்டாவின் சகோதரிகள் வசிக்கலாம் என சொன்னார்.

''எத்தனை விஷயங்களை அறிந்து வைத்திருக்கிறாய்! அதை அந்தந்த சமயங்களில் எப்படித் தூவித் தூவிப் பேசுகிறாய்!'' என்று வியந்தார் மிக்டே.

இப்போது தன் கோப்பையிலிருந்த இனிப்பின் கடைசி பகுதியைப் பார்த்தார் லூசி. அதை சாப்பிடாமல், துக்கம் அனுஷ்டிக்கும் அறிவிப்பு போல், அப்படியே பாத்திரத்தில் விட்டு விட்டார். ஆனால் இது போன்ற நொறுக்குத் தீனிகளை மட்டுமே விரும்பும் டேவிட், முழுக்க முழுக்கக் காலியாகி விட்ட தன் கோப்பையைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டான்.

''நாம் எல்லோரும் இன்று கொஞ்சம் சீக்கிரமாகவே படுக்கச் சென்று விட வேண்டும் என நினைக்கிறேன்'' என்றபடி எழுந்தார் லூசி. ''என்னவெல்லாமோ நடந்து முடிந்து விட்டன, இல்லையா...? செய்தித்தாளிகளில் இது போன்ற சம்பவங்களைப் படிக்கும் போதெல்லாம், அக்குடும்பத்தினர் எந்த அளவு அதிர்ந்து களைத்து நொறுங்கிப் போயிருப்பர் என்றெல்லாம் நாம் உணர்வதேயில்லை. இப்போது நமக்கென்று வரும்போது புரிகின்றது. ஏதோ ஒரு பதினைந்து காத தூரம் நடந்து வந்ததைப் போலிருக்கின்றது எனக்கு, தெரியுமா! இத்தனைக்கும் நான் ஒன்றும் செய்யவில்லை. பேசாது உட்கார்ந்துக் கொண்டுதானிருந்தேன். புத்தகமேதும் படிக்காமல், செய்தித்தாளைக் கூடப் புரட்டாமல்...! புரட்டி விட்டால் தான் இரக்கமற்றவர் என முத்திரைக் குத்தி விடுவார்களே...! இருந்தாலும் களைப்பு. மாலை செய்தித்தாள்களிலேயே ஜானின் கொலை செய்தி அரங்கேறி விடும் போல!''

லூசி இவ்விதமாய் பேசி முடிக்கும்போது, எப்பொழுதும் போலில்லாமல், துக்கத்தை உணர்த்தும் விதமாய் சற்றே மெதுவாய்

நடந்து வந்து காபி கோப்பைகள் அடங்கிய பெரிய தட்டு ஒன்றினை வைத்தான் கட்ஜன்.

''ஓ, கட்ஜன்...'' என்று, அவனைப் பார்த்ததும் தான் நினைவு வந்தவராய் துரிதமான லூசி, ''அந்த முட்டைகள்...! இன்று பார்த்து நிறைய இட்டிருந்தன. அவை என்னாயிற்று? வழக்கம்போல அவற்றின் ஓடுகளில் இன்றைய தேதியை எழுத எண்ணியிருந்தேன். சமையல்காரியைச் செய்யச் சொல்கிறாயா...?'' என்றார்.

''அந்த வேலை முழுதும் திருப்திகரமாக முடிந்து விட்டது, மேடம்'' என்றான் கட்ஜன் தொழில் தர்மத்தோடு. ''நானே முன்னிருந்து முடித்து விட்டேன்''

''நன்றி... நன்றி கட்ஜன்.''

கட்ஜன் சென்றதும் மெலிதாய், அதே சமயம் வெகு திருப்தியாய் லூசி சொன்னார்: ''எத்தனை முறை வேண்டுமானாலும் சொல்வேன். கட்ஜன் - அற்புதமானவன். என் நல்ல ராசி... எல்லா பணியாட்களுமே அதி மேதாவிகள். அவர்கள் வேலையெல்லாம் இந்தப் போலீஸ் கூட்டத்தால் தடைபடுகின்றன. ஆமாம். போலீஸைக் கண்டாலே இவர்கள் நடுங்குகிறார்கள். படிப்பற்றவர்கள். போலீஸ் என்றாலே பயம் என்று தான் அவர்களுக்கு அர்த்தம்...! அது சரி...! இன்னும் யாராவது மிஞ்சியுள்ளார்களா...?''

''யார்...? போலீஸா...?'' - இது மிக்டே.

''ஆமாம். யாராவது ஒரு போலீஸை, வரவேற்பறையிலேயே காவலுக்கு விட்டு விட்டுச் செல்வார்களே...! அப்படி யாராவது...! இல்லையென்றால், சுற்றுவட்டாரத்தில் மண்டிக் கிடக்கும் ஒரு புதருக்குள்ளிருந்து நோட்டமிட்டுக் கொண்டிருப்பார்...!''

''எதற்காக லூசி....'' என்று ஆரம்பித்த மிக்டே, சற்று சலிப்போடு, போதுமே நீ பேசிப் பேசித் தள்ளியது எனும் தொனியில் கேட்டார்: ''போலீஸ் புதர் மறைவிலிருந்து நம் வீட்டை நோட்டமிட வேண்டும்...? அப்படியெல்லாம் ஒரு தேவையே இல்லை.''

''காரணமெல்லாம் தெரியாது. ஆனால் நிச்சயமாய் நம் வீட்டின் மீது கண் வைத்திருப்பார்கள் என்பது மட்டும் திண்ணம். எத்தனை கதைகளில் படித்திருக்கிறேன்...! பிறகு, பொசுக்கென்று ஓரிரு நாட்களிலேயே, இரவில், மீண்டும் ஒருவன் கொல்லப்படுவான்.''

''அய்யோ...'' என காதுகளைப் பொத்திக் கொண்ட மிக்டே, கோபக் கதறலாய், ''போதுமே...! நிறுத்த மாட்டாய்..?'' என்றார்.

மிக்டே'வைப் பொறுப்போடு பார்த்த லூசி, ''மன்னித்து விடு சகோதரி, நான் ஒரு முட்டாள். ஏற்கெனவே அழுதுப் புலம்பிக் கொண்டிருக்கும் உன்னிடம் போய், அடுத்த கொலை, அது இது என்று...! சரி சரி, விட்டுவிடு. யாரும் கொலை செய்யப்பட மாட்டார்கள். சரியா...! பயப்படாதே. அது தான் கெர்டா இங்கிருந்து கிளம்பி விட்டாளே...! இனி ஆபத்தில்லை... ... ...'' என்று இழுத்து, ''ஓ... ஹென்ரீட்டா... வா வா! அப்படிப் பார்க்காதே. நான், கெர்டாதான் கொலை காரி எனும் கோணத்தில் இப்படிச் சொல்லவில்லை'' என முடித்தார்.

ஹென்ரீட்டா பதிலேதும் பேசவில்லை. நேற்று எல்லோரும் குதூகலமாய் சீட்டு விளையாடி, இன்னும் அள்ளக் கூடப் படாமல் சீட்டுக்கள் சிதறிக் கிடக்கும் வட்ட மேஜையின் அருகே, அதனை வெறித்துப் பார்த்தபடி நின்றிருந்தார். பிறகு, ''கவனிக்கவில்லை லூசி. என்ன சொன்னீர்கள்...?'' என்று, தானே முன்வந்துக் கேட்டார் ரீட்டா.

''இன்னும் இங்கு யாராவது போலீஸ் மிச்சமிருக்கிறார்களா என கேட்டுக் கொண்டிருந்தேன்.''

''சமைத்து சாப்பிட்டு முடித்தப் பண்டங்களின் மிச்சம் போலா...!'' என கிண்டல் தூக்கச் சொன்னவர், ''அப்படி ஒருவரும் இல்லை'' என்றார். ''நாம் சொன்ன அத்தனையையும் அவர்களது போலீஸ் பாஷையில் பதிவு செய்ய, அவர்களெல்லோரும் காவல் நிலையம் சென்றாயிற்று.''

''ஓஹோ...! நீ இப்போது எதனை இப்படித் தீவிரமாய் சிந்தித்துக் கொண்டு நிற்கிறாய் ரீட்டா..?''

''எதையுமில்லை.''

இப்படிச் சொல்லி விட்டு ஜன்னலோரமாய் இருந்த ஒரு பீரோவின் அருகில் நகர்ந்து நின்றுக் கொண்ட ரீட்டா, ''இன்றிரவு வெரோனிக்கா என்ன செய்துக் கொண்டிருப்பாள் என நினைக்கிறீர்கள்?'' எனக் கேட்டாள்.

திகைப்பூட்டிய அச்சம் லூசியின் முகமெங்கும் படர்ந்துப் பரவ, ''ரீட்டா...! உனக்கு அவள் மீண்டும் இங்கு வரத்தான் போகிறாள் எனத் தோன்றவில்லை...? இந்நேரம் சேதி அவளையும் எட்டியிருக்கும்...!'' என்றார். சிறு படபடப்பு அவரைத் தொற்றிக் கொண்டது.

''ஆமாம்'' என்றார் ரீட்டா அர்த்தம் பொதிந்த சிந்தனையோடு. ''தெரிந்திருக்கும்.''

''அப்படியானால்'' என்று வேகமான லூசி, ''காரீ குடும்பத்துக்கு நான் உடனடியாய் தொலைபேசி செய்து, நாளை மதிய உணவுக்கு வர வேண்டாம் என சொல்ல வேண்டும். விஷயம் தான் பரவ ஆரம்பித்தாயிற்றே. இத்தருணத்தில் ஏதோ ஒன்றுமே நடவாதது போல், அவர்களுக்கு விருந்து வைப்பது சரியாகாது'' என்றார்.

இந்த வேலைக்காக அறையை விட்டு வேகமாய் வெளியேறினார் லூசி.

இந்த உறவுகளையும் நடந்துள்ள களேபரத்தையும் வெறுப்பதாக வாய்விட்டே முணுமுணுத்துக் கொண்ட டேவிட், ஹாலோவின் நூலகத்துக்குப் போய், ஏதேனும் அகராதியில் மூழ்குவதே மேல் என்றபடி நகர்ந்தான். நூலகம், அவனைப் பொறுத்தவரை, அவனுக்குப் பாதுகாப்பான இடம்.

ஹென்ரீட்டா எழுந்தார். கம்பித் தடுப்புகள் ஏதுமற்று வெறும் மூடும் கதவுகள் மட்டுமே உடைய ஒரு பிரெஞ் ஜன்னலை அடைந்து, அதனைத் திறந்து, ஒரு நொடி அந்நிலையில் நின்றபடி அகண்டு விரிந்த வெளிப்புறத்தைப் பார்த்து, பின் அதன் வழியே வெளியேறினார். பேச்சேதுமின்றி, எதனையோ கூர்ந்து யோசித்தபடி ரீட்டா ஏனிப்படி வெளியேறுகிறாள் எனும் காரணம் அறியாது, சிறு தயக்கத்திற்குப் பிறகு, பரவாயில்லை எனும் முடிவோடு, ரீட்டாவைத் தொடர்ந்து எட்வர்டும் வெளியேறினார்.

★ ★ ★ ★

**வா**னத்தை அண்ணாந்து, ஆழ்ந்து பார்த்த நிலையிலிருந்த ரீட்டா சொன்னார் : ''நேற்று போல இன்றிரவு கதகதப்போடு இல்லை. இல்லையா...?''

தனக்கே உரியக் காந்தக் குரலில் எட்வர்ட் பதில் தந்தார் : ''ஆமாம். இந்த இரவு குத்தும் குளிராயிருக்கின்றது.''

இப்பொழுது மெதுவாக வீடு நோக்கி திரும்பி நின்றுக் கொண்ட ரீட்டா, தனக்குள் அப்படியே அதனை இறக்கிக் கொள்ளும் குறிக்கோளுடன் ஹாலோவினைப் பார்த்தார். அவர் கண்கள், வீட்டுச் சுவற்றினைச் சுற்றிலும் வரிசையாய் அமைக்கப்பட்டிருந்த பிரெஞ்சு ஜன்னல்களை மேய்ந்த வண்ணமிருந்தன. ஒரு நிமிடம் கழிந்திருக்கும். பார்க்கும் தன் கோணத்தை மாற்றிக் கொண்டு,

பக்கவாட்டில் வியாபித்திருந்த மரக்காட்டுக்குள் எதையோ தன் பார்வையால் ஊடுருவினார். ரீட்டா மண்டைக்குள் நடந்துக் கொண்டிருக்கும் சுய ஆலோசனைக்கான குறிப்பேதும் எட்வர்டுக்குப் பிடிபடவில்லை.

திறந்திருந்த ஜன்னலை நோக்கி நகர்ந்துக் கொண்ட எட்வர்ட், ''உள்ளே போய் விடலாமே'' என்றார். ''கடும் குளிர். நடுங்குகின்றது.''

மறுத்துத் தலையசைத்தார் ரீட்டா. ''நான் ஒரு சிறுநடை சென்று வருகிறேன். நீச்சல் குளம் வரை.''

''எ..எ...எ..என்னது..?'' என்று இப்போது விரைவாய் ரீட்டாவின் வெகு அருகில் வந்த எட்வர்ட், ''என்னம்மா ரீட்டா இது...?'' என்று தடுக்க நினைத்தார். ஆனால் 'ரீட்டா அடங்க மாட்டாள்' என உடனே புரிந்துக் கொண்டு, ''சரி. அப்படியென்றால் நானும் கூட வருவேன்'' என்றார்.

நீட்டிய வாழைத்தண்டைக் கூர் கத்தியால் வெட்டி சாய்ப்பது போல, ''வேண்டாம். தேவையில்லை'' என்று கத்தி வீச்சாய் தடுத்தார் ரீட்டா. ''இறந்த என் உயிரோடு நான் தனியாக இருக்க வேண்டும். தயவு செய்து நீங்கள் கிளம்பலாம்.''

''டியர்....! நான் ஒன்றுமே சொல்லவில்லையே. ஏன் வெட்டி வெட்டிப் பேசுகிறாய். நா... நா... நானும் எந்த அளவுக்கு வருந்துகிறேன் என்று தெரியுமா...?''

''வருத்தம்...? யாருக்கு...? உங்களுக்கு...? அதுவும் ஜான் இறந்ததற்காக...?'' - அதே கத்தி வீச்சின் வீரியம் ரீட்டாவின் குரலிலிருந்தது.

''உன் மனோநிலைக்காக வருந்துகிறேன் என்று சொன்னேன் ரீட்டா. நீ எந்த அளவுக்கு அடிக்கப்பட்டு அதிர்ச்சியில் இருக்கிறாய் என்று எனக்கு நன்கு புரிகின்றது.''

''அதிர்ச்சி...? எனக்கு அதிர்ச்சி என்று யார் வந்து உங்களிடம் சொன்னது...! நான் பாறை எட்வர்ட்'' - இதைச் சொல்லும் போதே ஒரு பாறையாய் இறுகிக் கொண்டே போனார் ரீட்டா. ''கடும் பாறை. அதிர்வுகளையும் அதிர்ச்சிகளையும் தாங்கவல்ல பாறை. ஜான் வீழ்த்தப்பட்டு, அந்தக் கதியில் விழுந்துக் கிடந்த போது நீங்கள் என்ன உணர்ந்தீர்கள்...? சந்தோஷம். திருப்தி. சரிதானே...? நீங்கள் என்றுமே ஜான் கிறிஸ்டோ'வை விரும்பியவரல்லர். கருவிக் கொண்டே தானிருந்தீர்கள்.''

ரீட்டாவின் அமில வீச்சுக்கு எட்வர்டால் ஈடு தர முடியவில்லை. முணுமுணுத்தார் : ''அவருக்கும் எனக்கும் இடையே விரும்பிப் போற்றப் பொதுவாய் எதுவுமே இருந்ததில்லை.''

''அட அடா...! எத்தனை மேதாவித்தனமாய் விளக்குகிறீர்கள்...! அதுவும் ஒன்றும் தெரியாதது போல் மிளிரும் தன்னடக்கத்துடன்....!'' - ரீட்டாவின் பேச்சில் குத்தலுடன் அனலும் இப்போது சேர்ந்துக் கொண்டது. ''ஆனால் உண்மையில் பார்க்கப்போனால், ஒரே ஓர் அம்சம் மட்டும் அவரிடம் உங்களுக்குப் பொதுவாயிருந்தது'' - அழுத்தமாய் குறிப்பிட்டு, சற்று இடைவெளி தந்து, எட்வர்டைப் பரிதவிக்க விட்டுச் சொன்னார் : ''அது நான். ஆமாம் நான்... நானே தான். நீங்களிருவருமே என் மீது அபரிமித ஆசை வைத்திருந்தீர்கள். உண்டா இல்லையா? இந்த ஒன்று மட்டும் தான் உங்களிருவரையும் இணைக்காமலேயே வைத்திருந்தது.''

மேகங்களுக்குள் மறைந்துக் கிடந்த நிலா பூரணமாய் வெளிவர, அவ்வொளியில், தன்னை முறைத்துக் கொண்டிருந்த ரீட்டாவின் முகத்தினை சட்டென கண்ட எட்வர்ட் நடுநடுங்கிப் போனார். ஏயின்ஸ்விக்'கில் தன்னுடன் பழகிய ஹென்ரீட்டாவின்... அதோ அந்த நிலா போன்ற முகம் தான், கனவிலும் நினைவிலும் எட்வர்ட் ரசித்து சிலாகிப்பது. எட்வர்டுக்கு ரீட்டா எப்போதுமே கலகலத்து சிரித்துப் பழகும் யுவதி. துருதுருவென அடுத்த நடவடிக்கையை திட்டமிட்டுக் கொண்டே நடனமாடும் கரு நீல விழிகள் கொண்ட யுவதி. ஆனால் இப்போது எட்வர்ட் முன் நிற்கும் ரீட்டா எனும் யுவதியோ அறிமுகமற்றப் புதியவர்! நர்த்தனமாடாது, பகைமை கொண்டு, இவரையே குறிவைத்துப் பார்த்து உறைந்திருக்கும் விழிகள் கொண்ட, விரோதி!

அப்பார்வையை எதிர் கொள்ள இயலாது, மனப்பூர்வமாய் பேசினார் எட்வர்ட் : ''ஹென்ரீட்டா. என் காதலே. நம்பு. உன் இழப்பு மீது நான் காட்டும் ஆத்மார்த்த அனுதாபத்தை சந்தேகப்படாமல் நம்பு. உன் ஆழ்ந்த துக்கத்தில் நானும் பொய்யின்றி பங்குக் கொள்வதை உணர்ந்துக் கொள் ரீட்டா.''

''துக்கமா...?''

தனக்காக அன்றி, அவளைக் கருதியே இக்கேள்வி கேட்கப் பட்டதாய் எட்வர்டுக்கு விளங்க, இக்கேள்வியும் எட்வர்டை நடுங்கச் செய்தது.

தன் குரலின் அதிர்வு தணியாமல் ஆனால் சற்றே தாழ்ந்த ஒலியில் உக்கிரமாய் ரீட்டா தொடர்ந்தார் : ''எத்தனை சீக்கிரத்தில் நடந்தேறி விடுகின்றது...! எத்தனை சீக்கிரம் - ஒரு நொடிக்குள் - நொடியின் பின்ன நேரத்துக்குள், அது நடந்து முடிந்து விடுகின்றது. அது! அது! இந்த நொடியில் மூச்சிருக்கிறது! சுவாசிக்கிறோம்! அடுத்த நொடியில், அல்ல அல்ல... அடுத்த நொடிக்குள் - மரணம்! போய் விடுகின்றது! காலி! வெற்றிடம்! அது! அது! மரணம்! இங்கு, நாம், நாமெல்லோரும், பாலும் தயிரும் கலந்த இனிப்பினை, சாவு விழுந்த வீடு எனும் வாகான ஒரு காரணத்தை இட்டு நிரப்பி, வழித்து வழித்துத் தின்றபடி, 'உயிருள்ள ஜீவன்கள்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஜான் - நம்மை விட, இங்கிருக்கும் எல்லோரையும் விட, நிஜமாய், 'மனிதம்' எனும் ஸ்தானம் கொண்டு நிறைவாய் வாழ்ந்து வந்த ஜான் - உயிரற்ற ஜீவனாய் ஆகி விட்டார். சடலம்! இந்த வார்த்தையைத் திருப்பித் திருப்பி எனக்குள்ளே, எனக்கு நானே சொல்லிக் கொண்டே இருக்கிறேன். சடலம்! சடலம்! சடலம்! சடலம்! இது தான் திருப்தி தருகிறது. ஏன் தெரியுமா...? திரும்பத் திரும்பச் சொல்வதால், இச்சொல், எனக்கு அதிகமாய் பழகிப் போகின்றது. எனவே, அர்த்தமற்றுப் போகின்றது. அதிகம் பழகினாலே அர்த்தமில்லாமல் போய் விடுகின்றதல்லவா...! நானும் ஜானும் அத்தனை ஆழமாய் அதிகமாய் பழகினோம். இதோ அர்த்தமற்றுப் போய் விட்டது! காட்டுக்குள் ஓங்கி அறையப்படும் பெரிய மத்தளம் தரும் 'கும் கும்' இசை போல பழகி விடுகின்றது - சடலம்! சடலம்! சடலம்! சடலம்! உங்களுக்குக் கேட்கவில்லை...? மத்தள ஓசை! சடலம்! சடலம்! சடலம்! சடலம்!''

இது போன்றெல்லாம் பேசி அறியாதவராய், ''போதும் ரீட்டா நிறுத்து'' என்று சற்று பயந்துக் கதறினார் எட்வர்ட். ''உனக்குப் புண்ணியமாய் போகும். அந்த வார்த்தையை சொல்லாதே. நிறுத்து.''

சிறு ஆர்வம் பொங்கப் பார்த்தார் ரீட்டா. ''ஜானின் மரணம், ஓர் இசையாய் தான் எனக்குள் இருக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கவில்லை...? ம்...? வேறெப்படி எதிர்பார்த்தீர்கள்...?'' - இவ்வாறு எட்வர்டின் ஒவ்வொரு வார்த்தைக்கும் அடி கொடுத்த வண்ணமிருந்தார் ரீட்டா. ''இல்லை, சிறு கைக்குட்டையால் மூக்கில் வழியும் துக்க திரவத்தைத் துடைத்த வண்ணம், நீங்கள் என் கைபிடித்து ஆறுதல் சொல்ல, ஒரு மூலையில் ஒப்பாரி வைத்துக் கொண்டிருப்பேன் என நினைத்தீர்களா..? இல்லை, ஜானை

என்னிடமிருந்து பிரித்துச் சென்று விட்ட இயற்கையை நொந்து அதிர்ச்சிக்குள்ளாகி, பிறகு மெதுமெதுவாக மீண்டு, பவுடர் பூசி சிங்காரித்துக் கொள்வேன் என நினைத்தீர்களா...? இல்லை, என் துக்கத்தை இறக்கி வைக்கும் தோளாய் நீங்கள் தோள் தர, ஆஹா, எத்தனை உகந்தவன் நீ... என உங்களை சிலாகித்துக் கொண்டு உங்கள் மடியில் கிடப்பேன் என நினைத்தீர்களா...?''

எட்வர்ட் மயக்கம் போட்டு விடும் நிலையில் குறுகி நின்றுக் கொண்டிருந்தார்.

ரீட்டா தொடர்ந்த வண்ணமிருந்தார்: ''உகந்தவன்...! ஆமாம் எட்வர்ட். நான் சொல்லியதில் தவறில்லை. நீங்கள் உகந்தவர் தான். ஆனால், அதே அளவு, அதே அளவு.... எப்படிச் சொல்வது... ஆங்... அதே அளவு விவஸ்தையில்லாதவர்.''

கூட்டுக்குள் போகும் நத்தையாய் கூனிப் போனார். முகம் இறுகிற்று. உணர்வற்றக் குரலில், ''ஆமாம் ரீட்டா. எனக்கும் அது நன்றாகவே தெரியும். நான் விவஸ்தையற்றவன் தான்'' என்றார்.

''ஒப்புக் கொள்ளுங்கள்.''

''... ... ...''

''அனாதை பிணம் போல் ஜானின் உடல் அறைக்குள் வீசப்பட்டிருக்க, வேறு ஒருவர் துணையின்றி, அந்த உடலைச் சுற்றி நானும் கெர்டாவும் மட்டும் பேயறைந்தாற் போல் பாதுகாத்துக் கொண்டிருந்தோமே... அந்த வலி எப்படியாப்பட்டது என உங்களுக்குத் தெரியுமா...? நீங்கள் திருப்தியுடன் - டேவிட் தர்ம சங்கடத்துடன் - மிட்கே துயரத்துடன் - லூசி, 'செய்தித்தாள்களில் படித்த செய்தியெல்லாம் நிஜத்தில் நடந்தேறியுள்ளதே' எனும் துள்ளல் ஆச்சரியத்துடன்! ஆனால் நடந்திருப்பது எத்தனை பெரிய கொடூரம் என்று உணர்ந்து நம்முடனிருந்த இணைபிரியா ஜீவன் ஒன்று அநியாயமாய் சுட்டுக் கொல்லப்பட்டிருக்கும் பாதகத்தை ஒவ்வொரு செல்லிலும் உணர்ந்து எழத் தான் யாருமில்லை. இந்த அழகில் நாம் உயிருள்ளவர்கள். ஜான் உயிரற்றவர். சே. விவஸ்தையற்றக் கூட்டம்.''

எட்வர்ட் பதிலேதும் பேசவில்லை. ஓரிரு அடி பின் வாங்கி, நிலவொளியற்ற இருட்டாய் பார்த்து நின்றும் கொண்டார்.

இதனைக் கவனித்து ரீட்டா சொன்னார்: ''பார்த்தீர்களா...? இதுதான் நீங்கள்...! பயந்து, பின்வாங்கி, ஒளிந்து! இந்த இரவில்

எதுவுமே எனக்கு உயிருள்ளதாய் உண்மையாய் படவில்லை. ஆனால், ஜான்! ஆம், ஜான் மட்டுமே நிதர்சனம்.''

''என்னுடைய இந்த நிலைமை எனக்கும் தெரியும் ரீட்டா'' - மென்மையாய் ஒப்புக் கொண்டார் எட்வர்ட். இருட்டிலிருந்தபடியே. வெளிச்சத்துக்கு வராமல்.

சில நிமிடங்கள், பனிக் காற்றின் 'உஸ்ஸ்ஸ்' மட்டும் பேச, அமைதியாய் நழுவின.

சற்று ஆசுவாசமாகிப் பேசினார் ரீட்டா : ''மிகக் கடுமையாய் பேசி விட்டேன். ஆனால் எனக்கு வேறு வழியே கிடையாது எட்வர்ட். வாழ்க்கை முழுதும் பிறருக்காகவே வாழ்ந்துப் பழகி, உயிரோட்டமாய் திகழ்ந்த ஜான் மடிந்து விட்டார் எனும் போது, கோபமும் ஆத்திரமும் பீறிட்டு எழுகின்றன எட்வர்ட்.''

''இங்கு, அவ்வாறெல்லாம் பொது நலமற்று, நடைபிணமாய், நான்.''

''நான் அப்படி அர்த்தப்படுத்தி இதைச் சொல்லவில்லை எட்வர்ட். என் நிலையை உங்கள் முன் வைத்தேன்.''

''என்னைப் பற்றி அப்படி ஒரு கணிப்பு உனக்குள் இருக்கிறது ரீட்டா. விவஸ்தையற்றவனாய் என்னை நீ எடை போட்டதிலிருந்தே - சரியாக எடை போட்டதிலிருந்தே - அது புரிந்து விட்டது. தவறில்லை. உன் கணிப்பும் சரிதான்''.

இதற்கு ரீட்டா எதுவும் முக்கியத்துவம் தரவில்லை. சற்று நேரத்திற்கு முன் பேசிய ஓர் உரையாடலை, இப்போது கவனமாய் முன் வைத்தார்: ''நடந்திருப்பது எனக்குள் எவ்வித ஆழ்ந்த துக்கத்தையும் உண்டாக்கவில்லை. நான் அப்படிப்பட்டவளல்ல. தாங்குவேன். துயரங்களையெல்லாம் தாங்கியிருக்கிறேன். இருந்தாலும், ஜானின் இழப்பை நான் எனக்கு நேர்ந்த பேரிழப்பாய் தான் கருதுகிறேன். இந்நினைப்பு என் நெஞ்சைத் தைக்கின்றது.''

வாழ்க்கையைத் தான் எதிர் கொள்ளும் விதத்தினைப் புள்ளியிட்டக் கோலமாய் விளக்கிய ரீட்டாவின் திடகாத்திரமான மனத்தினை பிரமித்த எட்வர்ட், கூடவே, ''நான் நீச்சல் குளம் வரை சென்று வரப் போகிறேன். சென்று வர வேண்டும்'' என்று துரிதமான ரீட்டாவின் இயக்கத்தால் சற்று நடுங்கத் தான் செய்தார்.

இரவு. தனிமை. ஒருவரும் இல்லை. மதியம் தான் கொடூரம் நிகழ்ந்துள்ளது. இந்நிலைமையிலா... ... ...

எட்வர்ட் சிந்தித்தபடி பார்த்துக் கொண்டிருக்க, ரீட்டா, கும்மிருட்டில் கரைந்து, நீச்சல் குளத்திற்கு இட்டுச் செல்லும் மரக்காட்டுப் பாதையில் இறங்கி நடக்க ஆரம்பித்தார்.

செய்வதறியாது திரும்பி நடந்து, திறந்திருந்த ஜன்னலின் வழியே வரவேற்பறைக்குள் இறங்கினார் எட்வர்ட்.

★ ★ ★ ★

தான் எதிரேயிருப்பது கூட தெரியாத வண்ணம் தளர்ந்து உள்ளே நுழைந்த எட்வர்டை நிமிர்ந்துப் பார்த்தார் மிக்டே. ஒளியற்று, ஓங்கி அறைந்தாற் போலிருந்தது எட்வர்டின் முகம். வெளிறிப் போயு மிருந்தது. இவற்றால், மிக்டே வெளியேற்றிக் காட்டிய பெருமூச்சுக் கூட எட்வர்டின் செவிகளை எட்டவில்லை.

நிலைக்குத்திய விழிகளோடும், இயந்திரத்தனமாயும், தள்ளாடி நடந்து அங்கிருந்த ஏதோவொரு நாற்காலியில் தொப்பென்று தன்னைப் போட்டுக் கொண்டார் எட்வர்ட்.

இப்படி வெறுமனே பேசாமல் இருப்பது சரியல்ல எனும் உணர்தலின் பேரில், ''வெளியே கடும் குளிர்'' என்று மட்டும் பேசினார்.

''அப்படி குளிர்கிறதா எட்வர்ட்...? நாம்.. அ.. அ..தாவது நான்.. நெருப்பு மூட்டட்டுமா...?''

''என்ன...?''

அலமாரியிலிருந்து ஒரு வத்திப்பெட்டியை எடுத்துக் கொண்ட மிக்டே, அறையின் எதிர் சுவற்றின் கீழ்ப்பகுதியில் உருவாக்கப் பட்டிருந்த சிறு விறகு துளைக்கருகே மூட்டிப் போட்டு அமர்ந்து, உள்ளிருந்த விறகுக் கூட்டத்துக்கு நெருப்பு வைத்தார். அப்போது பக்கவாட்டில் திரும்பி எட்வர்டை ஆழமாக-ஆர்வமாக- கவனமாகப் பார்த்துக் கொண்டார். இதைக் கவனியாதிருந்தார் எட்வர்ட். 'எதைத்தான் அவர் முழுதுமாக கவனித்திருக்கிறார். அப்படி கவனிப்பவராயிருந்தால், என்னை... என் மனதை.. என் மனதை...' - நினைத்துக் கொண்டார் மிக்டே.

''இந்தக் குளிர் இரவுக்கு, நெருப்பு மூட்டும் கதகதப்பு இதமானது.''

இப்படிச் சொன்ன மிக்டே, பதிலேதுமின்றியே நீடித்த எட்வர்டின் மனநிலையால், 'ஏனிப்படி இறுகிக் கிடக்கிறார்' என எண்ணிக்

கொண்டார். 'வெளியே உறைநிலைக்கு இறுகி வரும் குளிரினாலா, இவரின் முகமும் மனமும் இப்படி இறுகி, வெடவெடத்துத் தெரிகின்றன? இருக்காது. காரணம் குளிரல்ல. ஹென்ரீட்டா. என்ன சொல்லி இப்படி ஆக்கியிருப்பாள்?'

கீழ்க்குரலில், கொஞ்சம் இதம் கலந்து, ''வாருங்கள் எட்வர்ட். உங்கள் நாற்காலியை இன்னும் என் பக்கம் நகர்த்திப் போட்டுக் கொண்டு வாருங்கள். ம். நெருப்பின் அருகில் வாருங்கள்'' - காந்தமாய் கூப்பிட்டார் மிக்டே. இப்படிக் கூப்பிட்டதில் மிக்டேவுக் குள் இளமை புரண்டது.

மிக்டே ஏதோ சொன்னார் என்றளவில் மட்டுமே காது பொருத்தியிருந்த எட்வர்ட், விளங்காமல் கேட்டார் : ''எ.. என்ன?''

''இங்கு நெருப்புக் குளிரை விரட்டுகின்றது. அருகில் அழைத் தேன்.'' - ஏதோ செவிடன் காதுகளுக்குப் பேசுவது போல, இப்போது சற்று உரக்கப் பேசினார் மிக்டே.

பதிலுக்கு மெலிதாய் சிரித்தார்.

மடை திறந்த நீராய் மிக்டேவுக்குள் பூரிப்புக் கூடியது. சற்று நேரமாய் பிடித்திருந்த மன இறுக்கம் தளர்ந்தது. என் எட்வர்ட்...! உண்மையான எட்வர்ட்...! ஏய்ன்ஸ்விக் எட்வர்ட்...!

மெலிதான புன்னகையூடே எட்வர்ட் சொன்னார் : ''என்னுடனா பேசினாய் மிக்டே...? ஆமாம். என்னுடன் தானிருக்க வேண்டும். நான் மட்டும் தானே இப்போது இங்குள்ளேன்! மன்னித்து விடு. கவனிக்க முடியாதபடி ஏதோ.. ஏதோ... ஒரு சிந்தனை.''

''முக்கியமாய் ஒன்றும் பேசி விடவில்லை, என்னருகில் அழைத்தேன். நெருப்பு மூட்டியதில் இங்கு குளிர் தெரியவில்லை.''

சுள்ளிகள், முறியும் ஓசை எழுப்பி, சுடச்சுட எரிய ஆரம்பித்தன. சில, மிகப் பிரகாசமான கொழுந்து நுனிகள் கொண்டு சுடர் விட்டன. அதனை சுவாரசியமாய் பார்த்தபடி, ''அழகிய தீ நாக்குகள். குளிரினால், ஆக்ரோஷமான இந்த நெருப்பு கூட நண்பனாய் படுகின்றது'' என்றார் எட்வர்ட்.

தனது நீண்ட, ஒல்லியான, இளமை நரம்புகள் தெறிக்கும் இரு கைகளையும், ஜ்வாலைக்கு வெகு அருகே நீட்டி, குளிரை விரட்டி, கூடவே மன இறுக்கத்தையும் விரட்டிக் கொண்டார் எட்வர்ட்.

''ஏய்ன்ஸ்விக் நினைவுக்கு வருகின்றது எட்வர்ட். இது போல குமுட்டிக் கட்டி, குளிரை விரட்ட நெருப்பு மூட்டி, நாமெல்லோரும் என்னமாய் கூத்தடித்துள்ளோம்!''

''இன்னும் உள்ளது. ஒரு வாளி சுள்ளி வாங்கி தினந்தோறும் குமுட்டிக்குள் கொட்டி எரித்துக் கொண்டுதானிருக்கிறேன். அங்கு இன்னும் குளிர் அதிகமல்லவா...!''

ஏய்ன்ஸ்விக்'கின் எட்வர்ட். கண்களைப் பாதி மூடிக் கொண்டு அந்த வசந்தக்காலத்து எட்வர்டை மீண்டும் மனதுள் வரைந்துப் பார்த்தார் மிக்டே. 'வீட்டின் மேற்குப் பகுதியில் விசாலமாய் அமைந்திருந்த நூலகத்தில் தான் எட்வர்டை அதிகம் பார்க்க இயலும்' - நினைத்துக் கொண்டார் மிக்டே. எட்வர்டும் அந்த நூலக அமைப்பும் இப்போது கூட மிக்டேவின் உயிர் மூச்சு. நூலகத்தின் ஜன்னல்கள் முழுவதையும் ஹோவென்று பரப்பி வளர்ந்திருந்த கொன்றை மரங்களின் கிளைகள் அடர்ந்திருந்ததையும், அதனால், அறை முழுதும் மதியப்பொழுதிலெல்லாம் கவிழ்ந்திருந்த பச்சை நிழலையும், ஏங்கிப் போய் நினைவு கூர்ந்துக் கொண்டார் மிக்டே. நூலக எதிர் சுவர் ஜன்னலைத் திறந்துப் போட்டால், கண்ணுக்கெட்டிய தூரம் வரை விரியும் பசும்புல் மைதானமும், அங்கு, மாபெரும் உயரத்தில் அமைக்கப்பட்டிருந்த கவர்ச்சிப் பெண்ணொருத்தியின் கலைச் சிலையும் தென்படும். நூலகம் தான் வீட்டின் கடைசி. இதனையும் தாண்டி கொல்லைப்புறம் வந்தடைந்தால், மதில் சுவருக்குப் பின் ஓயாமல் அடித்துக் கொண்டிருக்கும் அலை ஓசை. கடலலை ஓசை. நீலம் குறைந்து அதிகம் மண் நிறத்தில் இரைஞ்சிக் கொண்டிருக்கும் கடல்.

ஏய்ன்ஸ்விக்!

ஓ, ஏய்ன்ஸ்விக்...!

இதோ, இப்போது கூட, இந்த செப்டம்பர் மாதத்தில் அங்கு பூத்துக் குலுங்கித் கொண்டிருக்கும் கொன்றை மர மலர்களின் சுகந்தமான வாசம், மிக்டேவின் மூக்கில் வந்து அமர்ந்து செல்கின்றது. ஏக்க அதிர்வடைந்தார் மிக்டே. எட்வர்ட் கைப்பட்டு மோட்ச மடைந்த புத்தகத்தை, அவர் சென்ற பிறகு முகரும் போது வெளியாகும் மக்கிய வாடை! சுள்ளிக் கட்டைகள் போட்டு இங்கு நெருப்பு மூட்டியதில் விளையும் உயிர் தாக்கும் காதல் நினைவுகள்! காதல் மலரும் நினைவுகள்! காதல் தவிப்புகள்!

அப்போதெல்லாம், சாய்ந்துப் படிக்க வாகாக நூலகத்திலிருந்த சாய்வு நாற்காலியில் படுத்தாற் போலிருக்கும் எட்வர்டின் வாலிபக் கண்கள், ஆழமாய் படித்துக் கொண்டிருக்கும் புத்தகத்திலிருந்து

அவ்வப்போது விலகி, குளிரைத் தணிக்க சுவர் மூலையில் எரியும் குமுட்டி நெருப்பில் பதிந்துப் பதிந்துத் திரும்பும். சில நொடிகள்... புத்தகத்திலிருந்துக் கிளம்பி, ஏதோ ஓர் ஆத்மார்த்த நினைப்பில், நெருப்புக்கு நீளும் விழிகளின் பயணம். 'ஏதோ ஓர் அல்ல!' இது மிக்டேவுக்குப் தெரியும். ஏதோ ஓர் நினைப்பல்ல அது. ஹென்ரீட்டா!

பழைய நினைவுகள் உதிர்ந்துப் போகட்டும் எனும் தொனியில் தலையைக் குலுக்கிக் கொண்ட மிக்டே கேட்டார் : "ஹென்ரீட்டா எங்கே...?"

"நீச்சல் குளம் வரை சென்றுள்ளாள்."

"ஏன்..?" - பதிலில் ஏற்பட்ட கலவரத்தால் ஏறத்தாழ எழுந்தே விட்டார் மிக்டே; இவர் குரலிலிருந்த ஆழமும் பயமும், வாயடைத்திருந்த எட்வர்டை எழுப்பின.

"ஹென்ரீட்டா, ஜான் கிறிஸ்டோ மீது அதிக நாட்டமுடனிருந்தாள் என்பது உனக்கே கூட தெரியும் மிக்டே."

"அது சரி எட்வர்ட். பட்டும்படாமலும் யாவரும் அறிந்ததே. ஆனால் ஜான் சுடப்பட்ட இடத்துக்கு இந்தக் கும்மிருட்டில் போய் சுற்றிச் சுற்றி வர என்ன தேவை இருக்கிறது...? இது ஹென்ரீட்டாவே அல்ல எட்வர்ட். ஹென்ரீட்டாவின் குணமேயல்ல. இது போன்ற நாடகத் தனமெல்லாம் இல்லாதவள் ரீட்டா....!"

"மிக்டே..." என்றழைத்த எட்வர்ட் அவரை ஊடுருவிப் பார்த்தார். கேட்டார்: "இங்கு - நாம் ஒவ்வொருவரும் எப்படிப்பட்டவர்கள் என்பது மற்றவருக்குத் தெரியுமா மிக்டே...? சொல்...! உதாரணத் திற்கு, ஹென்ரீட்டா...? ஹென்ரீட்டா எப்படிப்பட்டவள்...? சொல்!" சுருண்டுப் போனார் மிக்டே. இருந்தாலும் இப்படி பதில் தந்தார்: "நீங்களும் நானும் ஹென்ரீட்டாவை நம் நினைவு தெரிந்த நாள் முதல் அறிந்துள்ளோம் எட்வர்ட்."

"அந்த ரீட்டா வேறு. இவள் மாறியவள். ஆம். ரீட்டா மாறி விட்டாள்."

"ஒப்புக் கொள்ளயியலவில்லை. ஒருவர் மாறவும் முடியுமா?"

"ரீட்டா மாறி விட்டாள்."

எட்வர்டை சிறு ஆவலாய் பார்த்த மிக்டே கேட்டார் : "நம்மெல்லோரையும் விடவா...? உங்களை, என்னை விடவா..?"

"நீ மடிந்து அமர்ந்து நெருப்பு மூட்டும் போது உன்னை சின்னதாய் பார்த்துக் கொண்டேன் மிக்டே. ஏய்ன்ஸ்விக் மிக்டே அல்ல இது....!

இது, நீ குறிப்பிடுவது போல மாறி விட்ட, உடலால் மாறி விட்ட மிக்டே....! ஆனால் நான் குறிப்பிடுவது குணத்தால்...., மனத்தால்...!'' - இப்படிச் சொல்லிவிட்டு, மிக்டேவின் சதுர சிறு முகத்தையும், கருநிற விழிகளையும், உறுதியான இதழ்களையும், தூரத்திலிருந்து பக்கத்துக்கு விரையும் சினிமா காட்சி போல உள்ளிக்கிழுத்துப் பார்த்தார்.

சற்று கூச்சம் தூக்க தலை குனிந்து சிரித்துக் கொண்டார் மிக்டே.

''டியர் மிக்டே....! அடிக்கடி உன்னை இனி நான் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் உன் மாற்றங்கள் என்னைத் தாக்காது.''

''புரிகிறது. என்ன செய்ய...? வேலை நிமித்தம் உள்ளதே...! இக்காலத்திலெல்லாம் அடிக்கடி தொடர்பு கொண்டு அளவளாவுவ தெல்லாம்.... ம்...!'' - பெருமூச்செறிந்தார் மிக்டே.

வாசலில் ஏதோ சப்தமெழுந்தது. எட்வர்ட் எழுந்துக் கொண்டு சொன்னார் : ''லூசி சொன்னது வெகு சரி. இன்று முழுதும் களைப்பு மிகுந்த சோர்வான நாளாகவே அமைந்து விட்டது. கொலையோடு ஏற்பட்ட முதல் அறிமுகம். அது தரும் மன அசதி. நான் உறங்கப் போகிறேன் மிக்டே. குட்நைட்.''

எட்வர்ட் அறையிலிருந்து நகரவும், வாசலில் ஓசையெழுந்ததற் கான காரணமான ரீட்டா, ஜன்னலைத் திறந்து உள்ளே நுழையவும் சரியாயிருந்தது.

ரீட்டா பக்கம் திரும்பிய மிக்டே, ''எட்வர்டை என்ன செய்தாய்...?'' என்றார், கொஞ்சம் காட்டமாய்.

''எட்வர்ட்...?'' - புரியாமல் கேட்டார் ரீட்டா. ''அவரை நான் என்ன செய்ய...?''

நின்றுக் கொண்டிருந்த ரீட்டாவின் நெற்றியில், நெடு நேரமாக எதையோ ஆழ சிந்தித்துக் கொண்டிருந்ததற்கான குழப்ப ரேகைகள் நிறைய இருந்தன.

''என்ன செய்தாய் என்று உனக்குத் தான் தெரியும். பிள்ளைப் பூச்சி என்பதால் மிரட்டியிருக்கிறாய். உள்ளே வரும்போது அப்படி வெளிறி இறுகிப் போயிருந்தார்.''

''ஓ..! எட்வர்ட் மீது இந்த அளவு அக்கறைப் பொங்கி வழிந்தால் ஒன்று செய் மிக்டே.''

''என்னது அது...? என்ன சொல்கிறாய்..?''

''அதோ... அந்த நாற்காலியை இழுத்துக் கூடத்தின் நடுவில் போட்டுக் கொள். அதன் மீது ஏறி நின்றுக் கொள். நானிருக்கிறேன் நானிருக்கிறேன் என்று எட்வர்டுக்கு ஆறுதல் சொல்லிக் கத்து. சரியா...! இது தான் ஒரே வழி. எட்வர்ட் போன்ற முதுகெலும்பு அற்றவர்களுக்கு.''

''பழிக்காதே ரீட்டா. எதைப் பற்றியும் மனதில் போட்டுக் கொள்ளாத அமைதி திலகம், எட்வர்ட். அசையா மனம். இது தான் அவர் பலம். ஆனால் உன்னை மட்டும் மனதில் அப்படி போட்டு வைத்துள்ளார். புரிந்துக் கொள்.''

''எனில் அவர் ஒரு முழு முட்டாள்'' - எட்வர்டின் மீதான இந்த வர்ணனையைச் சொன்ன நொடியிலேயே, மிக்டேவின் முகத்தை ஆழ ஊடுருவினார், ரீட்டா. ''நான் சலனமுற்றுள்ளேன். ஜான் மரணத்தால். இப்போது போய் தீண்டிப் பார்த்தாய். உன்னைப் புண்படுத்தி விட்டேன். மன்னித்து விடு. ஆனால் இன்றிரவு என்னுடன் வெளியே வந்த எட்வர்ட், நம் எட்வர்ட் அல்ல. மாறி விட்டார்.''

தூக்கிவாரிப் போட்டது மிக்டேவுக்கு. இருவருக்கும் என்னாயிற்று! ஒருவர் மாற்றி ஒருவர் மாறி விட்டதாய் தூஷித்துக் கொண்டு....! இதற்கா கூடினோம்...!

மிக்டேவின் சிந்தனையை உடைக்கும்படி ரீட்டா சொன்னார் : ''இன்று, இப்பொழுது, எட்வர்டை நான் வெறுத்தேன். அதனால் தான் ஆடிப்போய் வந்திருப்பார். 'ஆம். வெறுத்தேன். வெறுக்கிறேன்.''

''நீ எட்வர்டை வெறுக்கிறாய்...? இல்லை...? உன்னால் முடியாதது அது!''

''முடியும், முடியும், முடியும். என்னால் முடியும்.''

''என்ன முடியும்...? காரணம்...?''

''கா.. கா... காரணம்...? காரணமா...? நான் எதையெல்லாம் மறக்க வேண்டும் என நினைத்துத் துடிக்கிறேனோ, அவை அத்தனையையும் ஒன்று விடாமல் நினைவுபடுத்திக் கொண்டேயிருக்கிறார் அவர். அப்படி ஒவ்வொரு முறை நினைவுகூரும் போதும், அதற்குக் காரணமான அவர் மீது எனக்குப் பற்றிக் கொண்டு வருகின்றது.''

''எதையெல்லாம் மறக்க வேண்டும்...?''

''ம்.. ம்..'' - சொல்லலாமா, வேண்டாமா என்பது போல தாமதித்து நீண்ட நீண்ட மூச்சினை வெளியேற்றிய ரீட்டா, கடைசியாக, ''ஓர் உதாரணத்திற்கு... ஏய்ன்ஸ்விக்...!'' என்றார்.

''ஏய்ன்ஸ்விக்...? என்ன உளறுகிறாய்...? எவ்வளவு பெரிய பலமாய் உன்னை நினைத்திருந்தோம். பிதற்றித் தள்ளுகிறாயே. ஏய்ன்ஸ்விக்...? ஏய்ன்ஸ்விக்' கையா நீ மறக்க நினைக்கிறாய்...?''

என்ன மனுஷி நீ என்பது போல இருந்தது மிக்டேவின் பாவம்.

''ஆமாம், ஆமாம், ஆமாம். ஏய்ன்ஸ்விக்'கையே தான். அதைத் தான் நான் மறக்கத் துடிக்கிறேன். அங்கு நான் மிக சந்தோஷமா யிருந்தேன். மிக மிக! ஆ.. ஆ... ஆனால் இப்பொழுது, இன்று, இங்கு, அந்த அபரிமித சந்தோஷத் தருணங்களை என்னால் மீட்டிப் பார்க்கவே முடியவில்லை. என் நிலைமை புரியவில்லையா உனக்கு...? அது பசுமையான வசந்தம். புளாகாங்கிதம். அடுத்து என்ன நடக்கப் போகிறது என்ற கவலை அற்ற காலகட்டம். எதிர்காலத்தைப் பற்றி அதிராத சந்தோஷம் தானே, எக்காளத்தின் உச்சம். அது அப்படிப்பட்ட உச்சம். உண்டா இல்லையா...? நீயும் அதற்கு ஒரு சாட்சி தானே...! சொல்! ம்...! வாழ்க்கையில் எல்லாமே அற்புதமாயிருக்கும் என்று அடி மனத்தில் அழிக்கவே இயலா வண்ணம் சாசனம் எழுதிக் கொண்ட நாட்கள் அவை. எதிர்காலம் நிச்சயமாய் கும்மாளமாய்த்தானிருக்கும் என்று அழுத்தந்திருத்தமாய் நான் எழுதிக் கொண்டேன். அது தான் முட்டாள்தனம். சிலர் புத்திசாலிகள். இப்படியெல்லாம் ஸ்திரமாய் எதையும் மனதில் எழுதிக் கொள்ளும் அபாயத்திலிருந்து தப்பி விடுபவர்கள். ஆனால் நான் மாட்டிக் கொண்டவள்.''

இப்படி அதிர்ந்தபடி பேசிக் கொண்டிருந்த ரீட்டா, கத்தியெடுத்து வெட்டுவது போல, பின்வரும் வார்த்தைகளை வெட்டிப் போட்டார்: ''நான் ஏய்ன்ஸ்விக்'கிற்குப் போகவே மாட்டேன். மாட்டேனென்றால் மாட்டேன்.''

இனி பேச்சை வளர்ப்பதற்கில்லை எனும் அறிவுறுத்தலோடு ரீட்டாவை நெருங்கிய மிக்டே, மிக மெலிதாய், வலிக்காது சொன்னார்:

''அதையும் பார்ப்போம்.''

## 14

திங்கள் காலை, சற்று சீக்கிரமாகவே, ஏதோ பிலுபிலு வென உலுக்கப்பட்டு எழுப்பப்பட்ட அதிர்வில் எழுந்தார் மிக்டே. அரைத் தூக்க மயக்கம். கண்கள் - சுயக்கட்டுப்பாடற்று, தானாகவே, கதவருகே குறுக்கே கைகளைக் கட்டிக் கொண்டு லூசி நிற்கும் காட்சி தெரிகிறதா எனும் குழப்பத்தில், மூடித் திறந்துப் பார்த்தன. அவரில்லை. ஆனால், தான் இங்கு வந்து இறங்கிய மறுநாள் காலை, கதவை உடைப்பது போல திறந்து வந்து தூக்கம் கலைத்து எழுப்பி லூசி விவரித்துச் சொன்ன வார்த்தைகள் மட்டுமிருந்தன.

என்ன சொன்னார் அவர்...? 'வருபவர்கள் தான் தொந்தரவு தராமலிருக்க வேண்டும்...! பலவித குணாதிசயங்களிலன்றோ நபர்கள் இங்கு வரவுள்ளனர்...! இப்படி வித்தியாசமானவர்கள் கூடும் போது, சாதாரண நிலையை விட, பத்து மடங்கு மேசாமான சூழல் ஏற்பட்டு விடலாம்'. இப்படித் தானே சொன்னார். ஏதோ தகாத நிகழ்வு நடக்கப்போகிறது என நினைத்திருக்கிறார்... பயந்துமிருக்கிறார்!

அவருக்கே உரித்தான உள்ளுணர்வு அலறியிருக்குமா?

ஆமாம். இருக்கலாம். அவர் நினைத்தது போலவே தகாத பயங்கரமும் நிகழ்ந்து விட்டதே! கலையாத கருமேகமாய் மிக்டேவின் இதயத்திலும், தைரியத்தை நொறுக்கிப்போடும்படி அவர் ஆன்மாவிலும், திண்ணென்று அமர்ந்துள்ள பயங்கரம்! மிக்டே நினைக்க மறுக்கும், மறக்கத் துடிக்கும் கொடூரம்! இவ்விதமாய் தூக்கத்தில் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருக்கும் வண்ணமாய் மிக்டேவை நொறுக்கியிருக்கும் தீ நிகழ்வு!

நினைவில் வேறெதுமில்லாமல், கடும் அலையாய் அலைக்கழித்துக் கொண்டேயிருக்கும் ஒரே ஒரு கூர் வார்த்தை - கொலை!

'ஏன் நடந்தது...?' - குழப்பமாய் எண்ணித் துடித்துக் கொண்டார் மிக்டே. 'அது உண்மையில்லை. கொலை உண்மையில்லை. நான் கண்ட கனா. ஆழமான தூக்கத்தில் யாரோ கழுத்தை நெறிப்பது போல துடித்து மூச்சு முட்டி சிரமமாய் தப்பித்துப் பிழைத்து விழிப்போமே, அது போன்ற தீக்கனா. ஜான் கிறிஸ்டோ சுடப்பட்டது, கொல்லப்

பட்டது, நீச்சல் குளத்தினருகே கிழிந்த நாராய் கிடந்தது, எல்லாமே பொய். நீல நிற நீர், அது மெல்ல மெல்ல சிகப்பாய் மாறிய அவலம், எல்லாமே, அதி அற்புதமான துப்பறியும் நாவல் ஒன்றின் அட்டைப் படக் காட்சி. அவ்வளவே. அது, அட்டைப்பட அலங்காரத்துக்கு ஏற்ற அற்புதக் காட்சி தான் - ஆனால் நிஜமல்ல. நிஜமல்ல. நிஜமேயல்ல. இதெல்லாம் எங்களுக்கு நடக்காது. நாங்கள் மிக நல்லவர்கள். ஏய்ன்ஸ்விக்'கிலிருந்திருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்குமா...? எங்கள் மண்ணே எங்களைக் காத்திருக்காதா...?' - விரிந்துச் சென்ற அங்கலாய்ப்பால் நெஞ்சம் விம்மியது. கதறலாய் சொன்னார் : ''ஜாஆஆஆஆன்ன்ன்...!''

கருமேகம் அப்படியே நழுவி, வயிற்றில் வந்து அமர்ந்துக் கொண்டது. குமட்டுவது போலிருந்தது. எத்தனை தான் பொய் பொய் என டமாரமடித்துக் கொண்டாலும் அப்பழுக்கற்ற நிதர்சனமன்றோ ஜானின் இழப்பு எனும் புரிதலும் கூடவே உறைக்கும் போது பலஹீனமாய் உணர்ந்தார். அத்தனை செய்தித்தாள்களின் தலைப்புச் செய்தியாய் ஆகி விட்ட சர்வ நிஜமும் - மிக்டே, எட்வர்ட், லூசி, ஹென்றி, ஹென்ரீட்டா, டேவிட் என எல்லோரும் கலந்து கரைந்துள்ள சத்தியமும் ஆனது - ஜானின் கொலை.

படுக்கையிலிருந்து எழுந்து அமர்ந்துக் கொண்டார். நெஞ்சடைக்கும் குழப்பத்தோடே படுத்துக் கிடப்பதை விட அமர்ந்திருப்பது ஆசுவாசமாய் பட்டது மிக்டேவுக்கு. வீட்டிலுள்ள அனைவரையும் ஜானின் கொலையோடு சம்பந்தப்படுத்திப் பார்த்தது, அடாத கற்பனையாய் தோன்றியது. கெர்டாவே கொன்றிருக்கும் பட்சத்தில் இப்படி அனைவரையும் கூண்டில் ஏற்றிப் பார்ப்பது அநியாயம் தான்.

தலையை இடவலமாக நன்றாய் உலுக்கிக் கொண்டார். வெளியே எழுந்துப் போனால் கற்பனைக் குழப்பங்கள் தணியும். அதுவும் பிடிக்கவில்லை.

'அமைதியான, அசமஞ்சம் மிகுந்த, சற்றே பரிதாபமான கெர்டாவை, அதீத வன்முறையோடும், அதையும் மீறிய ஒரு கொலையோடுமா ஒப்பிட்டுப் பார்ப்பது.... கூடாது. துப்பாக்கி எடுத்து ஒரு ஜீவனை, அதுவும் மனித ஜீவனை, அதுவும் தன் கணவனையே சுட்டு வீழ்த்த, கெர்டாவால் நிச்சயமாய் இயலாது.'

இவ்விதமாய் மனம் ஓடிக் கொண்டிருக்கும் போதே, அந்த உள்ளுணர்வுக் குழப்பம், நிம்மதியற்ற அடி மனதின் கிலேசம், தலை தூக்கி, 'கூடவே கூடாது. ஒருவரைப் பற்றி ஒரு தலையாய் முடிவெடுத்

துக் கொள்ளவே கூடாது' என தலைவிரித்துக் கொக்கரித்தது. 'வேறு யார் தான் ஜானைச் சுட்டு வீழ்த்தியிருக்க முடியும்? கெர்டாதானே, வீழ்ந்துக் கிடந்த ஜானின் பிரேதத்துக்கருகில் துப்பாக்கியும் கையுமாக நின்றுக் கொண்டிருந்தது! அதுவும் ஹென்றியின் சேகரிப்பிலிருந்து திருடப்பட்ட துப்பாக்கி. ஜானைக் கொல்ல என்றே எடுக்கப்பட்ட துப்பாக்கி.

'இந்த அழகில், இறந்துக் கிடந்த ஜானைக் கண்டவுடன் தான், ஏனென்று காரணமெல்லாம் புரியாமல் அருகில் கிடந்த துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொண்டதாய் சொல்லியிருக்கிறார் கெர்டா. இப்படித்தான் சொல்ல முடியும்? வேறென்னத்தைச் சொல்வது? இது போல உப்பு சப்பற்ற எதையோத் தான் அவள் சொல்லியாக வேண்டும்.

'கெர்டா சொல்லும் இக்கதை நிச்சயம் சாத்தியமானது தான் என்று சொல்லிக் கொண்டு, அவரை மதில் சுவராய் காப்பாற்றி வருகிறாள் இந்த ஹென்ரீட்டா. அசாத்தியமான இன்ன பிற சாத்தியக் கூறுகளைப் பொருட்படுத்தாதுத் தள்ளியே வைத்திருக்கிறாள் ஹென்ரீட்டா.'

இந்த ரீதியில் மனதினை ஓட்டிக் கொண்டிருந்த மிக்டேவுக்கு, நேற்றிரவு, எப்போதுமில்லாத ஒரு புது தினுசில் அவலட்சணமாய் ரீட்டா நடந்துக் கொண்டது புரிந்தது. கூடவே, அந்த அவலட்சணம், கோபம், பரிதவிப்பு எல்லாம் ஜான் இறப்பு உண்டாக்கியிருக்கலாம் என்றும் தோன்றியது. 'பாவம். ஜானைப் பைத்தியமாக மனதில் பூட்டி வைத்திருந்தவள். பிரிவு தாளாமல் சீறுகிறாள். இருக்கட்டும். இன்னும் கொஞ்ச காலத்தில் இந்த சோகத்திலிருந்து மீண்டு விடுவாள். எந்த சோகம் தான் சாஸ்வதம், இல்லை, எந்த சந்தோஷம் தான் சாஸ்வதம். பிறகு எட்வர்டை மணந்துக் கொள்வாள். போகவே மாட்டேன் என்று சொன்ன ஏய்ன்ஸ்விக்'குக்குப் போய் கணவனுடன் குடித்தனம் துவங்குவாள். லாபம் எட்வர்டுக்கு; கடைசியில் முழு சந்தோஷம் காண்பவர் இவராய் தானிருக்கும்.'

படுக்கையினின்றும் எழுந்து எதிரிலிருந்த நாற்காலியில் போய் அமர்ந்துக் கொண்டார் மிக்டே. வெளி முழுவதும் பனிப் போர்வை மூடியிருந்ததால், மூடியிருந்த ஜன்னல் கண்ணாடியின் வெளிப் பக்கத்தில், நீர், தெளித்து விட்டது போல் ஒழுகிக் கொண்டிருந்தது.

நில் என்றாலும் கேளாமல் சிந்தனை தொடர்ந்த வண்ணம் தானிருந்தது. 'இது நடக்கத்தான் போகின்றது' - ரீட்டாவின் திருமணம் பற்றிய கற்பனை தொடர்ச்சி! 'கண்ணும் கருத்துமாய் எட்வர்டை

அணுஅணுவாய் நேசித்தவள் ரீட்டா. எப்பொழுதுமே. எதிர்க்கும் தன்மை கொண்ட ஜானின் ஆக்கிரமிப்புக் குணமும், ஆதிக்கம் செலுத்தியே பழகும் அவரின் ஆளுமையையும் தான், எட்வர்ட் மீதான ரீட்டாவின் காதலில் இடை புகுந்த ஒரு விபரீதம். இது - அமைதியும் மென்மையான போக்கும் மட்டுமே நிறைந்த எட்வர்டை, ஓர் ஒப்பீட்டால், ஜானுக்கு முன்னால், ஒன்றுமில்லாமல் நிறுத்தியது.'

ஹாலோவுக்கு ஜான் வந்து இறங்குவதற்கு முன்னால் எல்லோரும் உண்டு களித்த காலை சிற்றுண்டி ஆர்ப்பாட்டம், மிக்டேவின் நினைவுக்கு வந்தது. அங்கு எட்வர்ட், ஜானின் ஆதிக்கம் குலைக்காத எட்வர்ட், தன்னைத் தானே நிர்மாணித்துக் கொண்டு, அனைவரையும் தன் பக்கம் கவர்ந்தவராய் அமர்ந்திருந்ததும் நினைவிலாடிற்று. உள் பதுங்காத, தயங்காத, கூனிக் குறுகாத - எட்வர்ட். அப்போது ஆட்டிப் படைக்கும் ஏதோ நினைவால் எதற்கும் பதில் தராது, யாருடனும் பேசாது நெருப்பாயிருந்த டேவிட்'டுடன் உரையாடிக் கொண்டிருந்தார் அவர்.

''அடிக்கடி ஏய்ன்ஸ்விக் வா டேவிட். வீட்டிலிருப்பது போல நீ உணர எல்லா வசதிகளும் செய்துத் தந்து, அந்த ஊரைச் சுற்றிக் காட்டுகிறேன். ஏய்ன்ஸ்விக், ஒரு நந்தவனம், தெரியுமா...!''

ஒரு மண்ணும் வேண்டாம் என்று உணர்த்தும் பாணியில் குரலை வைத்துக் கொண்டு, வேண்டுமென்றே எட்வர்ட் பேசிய உரையாடலுக்குப் பதில் தராமல், ''ஒரு பங்களா என்று கட்டிப் போட்டு அதனை சுற்றி இப்படியா பொட்டல் காடாக விட்டு வைப்பது? இங்கெல்லாம் நிலத்தைப் பிரிக்க வேண்டும். நல்ல வழியில் உபயோகப்படுத்த வேண்டும்'' என்றான் டேவிட்.

''அது அவ்வளவு சுலபமில்லை என்பது என் கணிப்பு'' என்றார் எட்வர்ட். ''லண்டனில் எல்லோரும் போதுமென்ற மனத்துடன் வாழ்கிறார்கள்.''

''மடத்தனம்'' - விவரித்தான் டேவிட். ''போதுமென்ற மனமே வரக் கூடாது.''

''அப்படிப் போடு. இந்தத் தலைமுறை பசங்களுக்கு புதுசு புதுசாய் தான் எண்ணங்கள் ஓடுகின்றன'' என்றபடி உள்ளே நுழைந்தார் லூசி. ''உன்னுடன் தனியாய் உட்கார்ந்துப் பேச வேண்டும் டேவிட். நாங்கள், கிழங்கள், வாழ்க்கையைப் பற்றி ஒரு விதமாய் கணித்து வைத்திருக்க, உன்னைப் போன்ற விடலைகளின் எதிர்பார்ப்புகளனைத்தும் வேறு விதமாய் உள்ளன.''

இப்படிப் பேசின லூசி, தொடர்ந்து சிறு பிள்ளைகள் பற்றியும் அவர்கள் சத்துக்கு அளிக்கப்பட அறிமுகமாகியுள்ள மீன் எண்ணெய் மாத்திரைகள் பற்றியும், அவை தரும் நாற்றம் பற்றியும், அவள் குணாதிசயப்படி, சட்சட்டென்று தளம் மாறி மாறிப் பேசித் தள்ளிக் கொண்டிருந்தார்.

லூசியைக் கவனித்த மிக்டே, அவர் சராசரி வாழ்க்கைக்குள் நுழைந்து விட்டதாய் புரிந்துக் கொண்டார்.

அறையைக் கடந்து வெளியேறும் போது தென்பட்ட கட்ஜனும், படபடப்பு அற்று தன் வேலைகளை கவனித்துக் கொண்டிருந்ததி லிருந்து, அவனும் வழக்கம் போலாகி விட்டான் என புரிந்தது. ஆக ஹாலோ மீண்டு விட்டது. மாமூல் வாழ்க்கைக்குள் புகுந்து விட்டது. கெர்டா கிளம்பியதும், நடந்து முடிந்த அத்தனையும் வெறும் கெட்ட கனவு எனும் அளவில் மறக்கப்பட்டு விட்டது.

இப்படிப்பட்ட சூழலில், வாசலில் போடப்பட்டிருந்த அத்தனை சரளைக் கற்களையும் அரைத்துக் கொண்டு, ஒரு கார் வேகமாய் வந்து தாழ்வாரத்தில் நின்றது. ஹென்றி ஓட்டி வந்திருந்தார். கெர்டா வீட்டிலிருந்து வருகிறார்.

வந்தவரை, ''ஹாய் டியர்'' என்று எதிர் கொண்ட லூசி, ''எல்லாம் சுகமாய் முடிந்தனவா'' என்றார் ஆர்வமாய்.

''ஆமாம். ஜானின் காரியதரிசி இருந்தாள். தகுதியும் திறமையும் கொண்ட பெண்ணாய் தோன்றுகிறாள். கெர்டாவையும் வீட்டையும் கொஞ்ச நாட்கள் நிர்வகிப்பாள் போலுள்ளது. கெர்டாவின் சகோதரியும் இருந்தாள். தந்தி அடித்து காரியதரிசி தான் வரவழைத்திருக்கிறாள்.''

''நான் சொன்னேனில்லை? கெர்டாவுக்கு சகோதரி உண்டு. அவள் டன்பிரிட்ஜில் தானே வசிக்கிறாள்...?''

''பெக்ஸ்ஹல் என்று கேள்வி'' - என்ன பிசாசாய் விஷயங்களை சேகரித்திருக்கிறாள் என லூசியைப் புதிராய் பார்த்தார் ஹென்றி.

அப்போது கட்ஜன் வந்தான். ''வணக்கம் திரு ஹென்றி. இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் தொலைபேசி செய்திருந்தார். வரும் புதன்கிழமை காலை பதினோரு மணிக்கு, முதல் விசாரணை ஆரம்பமாகிறதாம்.''

ஹென்றி கவனமாய் ஏற்றுக் கொண்டார்.

''மிக்டே'' என்றழைத்த லூசி, ''நீ உடனடியாய் உன் கடைக்குத் தெரிவித்து விடுடீ'' என்றார். ''வியாழன் தான் நீ புறப்பட முடியும்.''

*தலை சுற்றியது மிக்டேவுக்கு. அந்த அல்ஃப்ரெஜ்ஜுக்கு, தான் ஒரு கொலை வழக்கில் எதிர்பாராது சிக்கிக் கொண்டதாயும் அதனால் வருவதற்கு நாலைந்து நாட்கள் பிடிக்கும் என்றும் எப்படி உணர்த்துவது? கதறுவாளே...!*

*இப்படிச் சொல்வது நம்பும்படியா இருக்கின்றது? இல்லையே! இக்காரணம், நம்பகத்தன்மையற்ற பச்சைப் பொய்யாயன்றோ இருக்கின்றது!*

*எந்த விஷயத்தையும் உள்ளது உள்ளபடி ஏற்றுக் கொள்ளாமல் சந்தேகமாகவே பார்க்கக் கூடிய மேடம் அல்ஃப்ரெஜ்'ஜுக்கு விஷயங்களை நம்பும் படி விளக்குவது என்றுமே தர்மசங்கட மாய்த்தான் இருந்திருக்கின்றது.*

*இத்தனையும் மனதில் ஓட தொலைபேசியின் செவிக்குழலை (ரிஸீவர்) எடுத்தார் மிக்டே.*

*எவ்வளவு தூரத்துக்கு விரும்பத்தகாததாய் இருக்கும் என கற்பனை செய்திருந்தாரோ, அந்த அளவுக்கு இருந்தது முதலாளியுடனான மிக்டேவின் உரையாடல்.*

*''என்ன, என்ன! மரணம்? கொலை? சரடு விடுகிறாயா மிக்டே? இங்கே ஆளில்லாமல் நான் என்னமாய் தவித்துக் கொண்டிருக்கிறேன் என உனக்குத் தெரியாது...? இந்த மன்னிப்பை நான் ஏற்றுக் கொள்வேன் என்றா நீ நினைக்கிறாய்..? அங்கு நீ கும்மாளம் அடித்துக் கொண்டிருக்கிறாய். ஆமாம். கூத்து! கூத்து! நண்பர்களுடன் ஊர் சுற்றப் போகிறேன் என நீ சொன்ன போதே நினைத்தேன்... அங்கு போய் பிறகு ரெண்டு நாட்கள் சேர்த்து விடுப்புக் கேட்பாய் என்று.''*

*அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்று குறுக்கே புகுந்து தீவிரமாய் விளக்கினார் மிக்டே. பலனில்லை.*

*''என்ன? போலீஸா? போலீஸில் மாட்டிக் கொண்டாயா? போச்சு! எல்லாம் போச்சு!'' ஏறத்தாழ அலறினார்.*

*பற்களை இறுக்கமாய் கட்டிக் கொண்டு, தானும் பதிலுக்குக் கத்தி விடாமல் பொறுமையாய் விளக்குவதிலேயே முனைப்பாயிருந்தார் மிக்டே. ஒன்று விடுப்புத் தர வேண்டும். இல்லை, கிடையாது என மறுத்து சம்பளத்தைப் பிடித்துக் கொள்ள வேண்டும். மரியாதையாய் செய்யத்தக்க இவ்விரண்டையும் விட்டுவிட்டு, அருவெறுக்கத்தக்க வகையில் மதிப்பற்று அலறி, ஒன்றுமில்லாத பிரச்சினையை என்னமாய் பூதாகாரமாக ஆக்குகிறாள். மட்டரகமான போலீஸ்*

பழக்காம். இழிவாகி விட்டதாம். எப்படியெல்லாம் இருக்கின்றன, மனிதப் பிறவிகள்!

அப்போது கதவைத் திறந்துக் கொண்டு உள்ளே நுழைந்த எட்வர்ட், மிக்டே யாரோடோ தொலைபேசியில் பேசிக் கொண்டிருக்கிறார் என்பதை அறிந்து, வந்த வழியே வெளியேற எத்தனிக்க, மிக்டே அவசர அவசரமாக அவரைத் தடுத்து நிறுத்தினார்.

''நில்லுங்கள் எட்வர்ட். போக வேண்டாம். தயவுகூர்ந்து, நீங்கள் இங்கிருக்க விரும்புகிறேன்.''

எட்வர்ட் அறையில் தன் கண் எல்லைக்குள் இருப்பது, தொலைபேசி வழியே வழிந்துக் கொண்டிருக்கும் விஷத்தை முறியடிக்கும் மருந்தாய், ஒரு பலமாய் இருந்தது மிக்டேவுக்கு.

செவிக்குழலின் வாய் பகுதியை மூடியிருந்த தன் கைகளை எடுத்து விட்டு, மறுமுனைக்குச் சொன்னார் : ''வந்து... இ..இம்...இம்முறை மன்னித்து விடுங்கள் மேடம். எல்லாம் என் தவறு. வந்திருக்கவே கூடாது. எதிர்பாராமல்... ... ...''

அந்தப் பக்கத்திலிருந்து வழிந்துக் கொண்டிருந்த அழகற்ற கரகரப்பான கோபக் குரல், மிக்டேவைக் பேசவா விட்டது! ''என்ன நண்பர்களை வைத்திருக்கிறாய் நீ? ஒரு கொலையை செய்து விட்டுப் போலீஸ் வந்து படமெடுக்கும்படியான நண்பர்களா உன் நண்பர்கள்? தூ...! இத்தனை நாட்களாய் உன்னைப் பற்றித் தெரியாமல் போயிற்றே...! ஒரு கும்பிடம்மா உனக்கு. உன்னை இனி நான் மீண்டும் வேலையில் அமர்த்துவதாக இல்லை. என் ஸ்தாபனத்தின் நற்பெயர், வாடிக்கையாளர்களிடையே தாழ்வதை நான் அனுமதிக்கவே முடியாது.''

மிக்டே அமுக்கமாய் பதில் தந்துக் கொண்டுதானிருந்தார். கடைசியில் விடுதலை அடைந்த தொனியில் செவிக்குழலை வைத்தார். வேலைக்கு உலை வந்து விடுமோ என வருத்தமாகவும், கேட்ட ஆத்திர வார்த்தைகளால் உலுக்கப்பட்டவராயும் ஆனார்.

''இது தான் நான் வேலை செய்யும் இடத்தின் லட்சணம்'' - எதிரேயிருந்த எட்வர்டுக்கு விளக்கினார். ''மரண விசாரணை உள்ளதாலும் போலீஸ் கெடுபிடி கூடுவதாலும் இந்த வியாழன் வரை அலுவலகத்துக்கு வர முடியாது என விடுப்புச் சொல்ல வேண்டியிருந்தது.''

''புரிந்துக் கொண்டார்களில்லையா? மரியாதையாகத்தானே பதில் தந்தார்கள்? என்ன தொழிற்சாலை அது? துணிக்கடை என்பாயே? அதுவா? அதை நடத்தும் பெண், பணியாற்ற உகந்த அன்பும் அனுதாபமும் கொண்டவள் தானே?''

''நீங்கள் குறிப்பிட்ட இந்த எந்த குணத்திலும் பொருத்த இயலாத ராட்சஷி அவள்! ரெண்டு துருப்பிடித்த இரும்புத் தகடுகளை உராய்ப்பது போன்ற குரல்! அவள் வயதுக்கு ஒவ்வாத அலங்காரம் வேறு!''

''ஓ...!'' என்றார் எட்வர்ட், மிக்டே சொன்னதைக் கேட்டு; அவர் முகத்தில் அப்போது தெரிந்த திகிலையும் கலக்கத் தத்தளிப்பையும் பார்த்து மிக்டேவுக்கு சிரிப்பு வந்தது.

பயந்த சுபாவம். கூடவே மிக்டே மீது அத்தனை கரிசனம்!

''கண்ணே. இப்படிப்பட்ட நரக சூழலா? எனில், இது போன்ற வேலையில் நீ நீடிக்கவே வேண்டாம். விட்டு விடு. வேலைக்குப் போகத்தான் வேண்டுமென்றால், அங்கிருக்கும் முதலாளி முதல் கடைநிலை தொழிலாளி வரை நட்புறவு பொங்கும் இடமாகப் பார்த்து, மனதுக்கு வலி தராத இடமாகத் தான் நீ தேர்ந்தெடுக்க வேண்டும். இப்படி ஒரு பிசாசிடம் போய் மாட்டிக் கொள்வதாவது!''

பேசிய எட்வர்டைப் பதிலேதும் அளிக்காது சில நொடிகள் பார்த்தபடியிருந்தார் மிக்டே.

எட்வர்டைப் போன்ற அணுகுமுறை உள்ளவருக்கு எப்படித்தான் விளக்குவது என நினைத்துக் கொண்டார் அவர். கூலிக்கு வேலை பார்க்கும் மக்களின் அடியும் இடியும் அறியாத இவரைப் போன்றோரிடம், பணியிடக் கஷ்டங்கள் பற்றிப் பேசியா புரியவைக்க முடியும்!

இந்நினைப்பு, அவருக்குள், திடுமென, கசப்பான பேரலைகளை உண்டுபண்ணியது. லூசி, ஹென்றி, ஹென்ரீட்டா - ஏன், இந்த எட்வர்ட் - ஆகிய அனைவரும், கடந்துத் தாண்ட இயலாத பிளவால், இவரிடமிருந்து தனிமைப்படுத்தப்பட்டுள்ளனர். பிளவு. சாவகாசமாக ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் கூட்டத்தையும், மறு வேளை உணவுக்கு உழைத்தால் தான் வழி எனும் கூட்டத்தையும் வகுந்துப் போடும் பிளவு.

இவர்களெல்லாம் - ஒரு வேலையைப் பெறுவது அவ்வளவு கடினமென்பதும், அப்படிப் பெற்று விட்டால் அது கை நழுவிப் போகாமல் பாதுகாத்துக் கொள்வது எத்தனை சிரமம் என்பதும் - அர்த்தமாகாதவர்கள். இத்தனை சொகுசான உறவுகள் கொண்டுள்ள மிக்டேவை அறியும் ஒருவர், நிச்சயமாய், இவர் வேலைக்குப் போக வேண்டிய தேவை என்ன இருக்கிறது என்றே கேட்பார்கள். இது வாஸ்தவமும் கூட. மிக்டே வசிக்க சிறு வீடும், வாழக் கொஞ்சம் பங்கும் தர விழைந்தவர் தான் ஹென்றி. எட்வர்டும் மனப்பூர்வமாய் கொஞ்சம் பண வசதி செய்து வைக்கத் துணிந்திருப்பார்.

ஆனால், ஏதோ ஒரு உள்ளுணர்வு, அடங்காமல் பிடிவாதமாய் முரண்டு பிடித்த ஓர் உந்துதல், இவரின் கொடை பணக்கார உறவுகள் மிக சுலபமாக முன் வந்து செய்ய விழைந்த இத்தகைய உதவிகளை ஒதுக்கியே விட்டது. எப்போதாவது இங்கு வர சந்தர்ப்பம் அமையும் போது வந்திருந்து, லூசியின் ஆடம்பர வாழ்க்கையைத் தானும் பகிர்ந்து அனுபவித்து, பிறகு மீண்டும் தன் வழியில் நுழைந்து பயணிப்பதையே, மிக்டே தீர்மானமாய் மேற்கொண்டார். வந்திருக்கும் போதெல்லாம் இலவசமாயும் மனப்பூர்வமாயும் கிட்டும் ஹாலோவின் சுகபோக வாழ்க்கையை மிக்டே அனுபவித்து மகிழ்கிறார்; களிக்கிறார்; கொண்டாடுகிறார். ஆயினும் இவர் ஆன்மா கொடுக்கும் ஸ்திரமான மறுப்புக் குரல்,இவ்வகை வாழ்க்கையை, நிரந்தரமாக, ஓர் அன்பளிப்பாக ஏற்றுக் கொள்வதை மட்டும் நிர்தாட்சண்யமாய் மறுத்தே வருகின்றது. இந்த மறுப்புக் குரலின் நியாயத்தால் தான், கத்தைப் பணத்தைக் கையில் வைத்துக் கொண்டு தந்துதவத் துடிக்கும் இவர்கள் விடாமல் அறிவுறுத்தி வரும், 'சொந்தக் தொழில் துவங்கு' எனும் ஆலோசனைகளையெல்லாம் மிக்டே மறுத்தே வருகிறார்.

யாரிடமிருந்தும் பணம் வாங்கவே கூடாது. சிபாரிசும் பெறக் கூடாது. இது மிக்டே. வாரத்திற்கு நாலு பவுண்டு அளிக்கக் கூடிய வேலை ஒன்றினை தானே தேடிக் கொண்டவர் மிக்டே; ஒரு வேளை மேடம் அல்ஃப்ரெஜ், இவர் பல வாடிக்கையாளர்களை எப்படியாவது சிபாரிசு செய்து இழுத்து வந்து லாபம் சேர்ப்பார் எனக் கருதி வேலை தந்திருப்பாரேயானால், பாவம், ஏமாந்துத் தான் போயிருக்க வேண்டும். இது போன்ற குறுக்கு வழி பிரச்சாரங்களை அடியோடு வெறுக்கும் ரகம் மிக்டே.

வேலைக்குப் போனால், 'அங்கு ஜாம்பவனாக மிளிர்ந்து... பலரை வேலை வாங்கி...' என்றெல்லாம் கற்பனை செய்து வேலைக்குச் சேரவில்லை இவர். இப்போது கூட அந்தத் துணிக்கடை இவருக்குப் பிடிக்கவில்லை. அந்த வேலை திருப்தியாகயில்லை. மேடம் அல்ஃப்ரெஜ் பிடிக்கவில்லை. பொறுமையற்றுக் கத்தும் அமைதியற்ற வாடிக்கையாளர்கள் பிடிக்கவில்லை. உண்மை இது தான். ஆனால் வேறு எந்த வேலைக்கும் உகந்த எந்தத் தகுதியுமே தனக்கு இல்லாததால், தான் விரும்பிப் போய் வேலைபார்க்கும் படி ஒரு வேலை கிடைப்பது அரிது என்ற நிதர்சனமும் மிக்டேவுக்குத் தெரியும். எனவே உண்மையை ஜீரணித்துக் கொண்டார்.

இப்படிப்பட்ட நிலையில் வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கும் போது, ஏதோ வாசல் நிறைய வேலை வாய்ப்புகள் வந்து குவிந்துக் கொட்டிக் கிடப்பதாய் சஞ்சரித்த எட்வர்டின் வார்த்தைகள், காலங்காலையிலேயே தாங்க முடியாத எரிச்சலாய் அமைந்து விட்டன மிக்டேவுக்கு. இப்படி உண்மையிலிருந்து ஏகமாய் விலகி எங்கோ உள்ள ஓர் உல்லாசக் கற்பனை உலகத்திலேயேக் கிடக்க இவருக்கு என்ன உரிமை இருக்கின்றது?

இது தான் இந்தக் குடும்பம். ஆங்கெட்டல் குடும்பம். பிறக்கும் போதே தங்கக் கரண்டியுடன் பிறந்து விட்ட சக்கரவர்த்திக் குடும்பம். இக்குடும்பத்தைச் சேர்ந்தவராயினும் அன்றாடங்கஞ்சியாயிருக்கும் மிக்டே, வெட்டியெடுக்கப்பட்ட ஒரு தனித் தீவு. இவர்கள் ஒருவரையும் போலில்லாத ஒரு தீவு. முழுக்க முழுக்க அப்பா பெண்.

மிக்டேவின் மனம், தந்தை பாசமும் அனுதாபமும் பொங்கித் தளும்ப, நடுத்தரமான ஆனால் நரைத்திருந்த தன் தந்தையின் கவலை தோய்ந்த முகத்தினை நினைத்துக் கொண்டது. பல வருடங்களாய் மெனக்கெட்டும், எத்தனையோ சிரத்தையும் தொழில் முனைப்பும் காட்டியும் அதள பாதாளம் நோக்கியே சரிந்துச் சென்ற ஒரு சிறு குடும்பத் தொழிலை நடத்தி வந்த அப்பா. சரிவு, அவருடைய இயலாமையால் அல்ல. சொந்தத் தொழில்களின் நிரந்தரத் தலைவிதியால்!

தன்னுடைய அதிக புத்திசாலித்தனமான அம்மா கருதியில்லாமல், எப்போதும் ஏதோ ஒரு சோகத்திலும் இயலாமையிலுமே கிடந்த தன் அப்பா கருதித்தான், மிக்டேவின் பெற்றோர் அர்ப்பணிப்பு இயங்கிக் கொண்டேயிருக்கும். அப்பா, அப்பா! எப்போதும் ! தன் வாழ்வின்

மனோஹரமான இடமாய் கருதும் ஏய்ன்ஸ்விக்'குக்குச் சென்று திரும்பும் ஒவ்வொரு முறையும்,வந்த உடனேயே, கணமும் தாமதியாது, வார்த்தைகளின்றி ஏதோ கவலையைக் கொட்டிக் கொண்டிருக்கும் தன் அப்பாவின் வீரியமற்று தொய்ந்துப் போன முகத்தை மலரச் செய்ய என்று, அன்பு கமழ ஓடிப் போய் அவருடைய கழுத்தினை இறுக்கமாய் கட்டிக் கொண்டு சொல்வார் : ''வீட்டுக்குத் திரும்பியதில் எனக்கு அத்தனை மகிழ்ச்சியப்பா. உன்னிடம் வந்து விட்டதில் அவ்வளவு சந்தோஷமப்பா.'' அந்த அப்பாவி முகம் சற்றே மலர்ந்து சிரிக்கும். அது போதும் எனத் தோன்றும் மிக்டேவுக்கு.

தன் பதின்மூன்றாவது வயதிலேயே தாயைப் பறிகொடுத்து விட்டார் மிக்டே. இதனால் தன் தாயைப் பற்றி தனக்குக் கொஞ்சம் தான் தெரிந்திருக்கின்றது, நினைவிருக்கின்றது என்று கூட மிக்டே சில சமயங்களில் நினைத்துக் கொள்வதுண்டு. அழகி, குடும்பத்தில் அதிகம் பிடிப்பற்றவள், உல்லாசி, இவைதான் தன் தாய் குறித்த மிக்டேவின் கணிப்பு. மனைவி போனதும் துக்கமாயும் தனிமையாயும் தன்னை ஆக்கிக் கொண்ட மிக்டேவின் தந்தையார், ஏதோ போய்க் கொண்டிருந்த அவர் சொந்தத் தொழில் மேலும் நொடித்துப் போனதும் இன்னும் அதிகமாய் கூனிக் குறுகிப் போனார். எந்த ஆறுதலும் பலிக்கவில்லை. அதிகம் படுத்து அவதிப்படாது, அமைதியாக, ஆரவாரமின்றி, மிக்டேவின் பதினெட்டாவது வயதில் அவரும் அடங்கிப் போனார்.

பிறகு, மிக்டே ஓர் எடுப்பார் கைப்பிள்ளை ஆனார். ஆங்கட்டெல் பரம்பரையின் பல உறவினர்களின் ஜாகைகளிலும் தங்கியிருக்கிறார்; அவர்கள் அன்பளிப்பாய் தந்ததையெல்லாம் ஏற்றிருக்கிறார்; மகிழ்ச்சி தரும் தருணங்களை உறவினர்களுடன் களித்திருக்கிறார்; ஆனால், பணம் சம்பந்தமாக மட்டும் அவர்களைச் சார்ந்து இருப்பதைத் தவிர்த்து ஒதுக்கியே இருக்கிறார். உறவு அனைத்தும் சரி, மிக்டேயும் சரி. மிக அன்னியோன்யமாய் அன்புடனேயே வாழ்ந்தாலும், இதோ, இப்போது நிகழ்ந்தது போன்ற சில தருணங்களில், இவர்கள் அனைவரிடமிருந்தும் தான் வெகுவாய் பிரிந்து விலகிச் சென்று விட்டதாகவே வெறியாய் விசனப்பட்டு விடுகிறார் மிக்டே. அப்போதெல்லாம் குரோதம் வெடிக்க நினைப்பார்: 'இக் கூட்டத்திற்கு ஒன்றும் தெரியாது. வாழ்வின் நிதர்சனம் தெரியாது.'

இப்போதும் அதே வன்மத்துக்குள் தானிருந்தார் மிக்டே.

உடனடியாய் உணர்ச்சிவயப்படவல்ல எட்வர்ட், ஒன்றும் விளங்காமல் மிக்டேவின் முகத்தைப் பார்த்தவண்ணமிருந்து பின் கேட்டார்: ''உன்னை நான் நிம்மதியிழக்கச் செய்து விட்டேனா மிக்டே? கேட்கக் கூடாதது எதையாவது கேட்டு... ... ...''

அப்போது கதவடியில் கிடைக்கும் இடுக்கில் புகுந்துப் பெருகும் நீராய் புகுந்தார் லூசி. பெருகினார்! ''... ... ... தெரியவில்லையே'' - என்று தான் பேசி வந்த எதையோ இந்த அறைக்குள் நுழைந்து முடித்த லூசி, ''அவள் இங்கு ஹாலோவில் தங்க விரும்புவாளா, இல்லை அங்கு வெள்ளை இல்லத்தில் தங்க பிரியப்படுவாளா...?'' என்றார்!

சுத்தமாய் ஒன்றும் புரியவில்லை என்பது போல லூசியைப் பார்த்தார் மிக்டே. பிறகு திரும்பி அதே போல எட்வர்டையும் பார்த்துக் கொண்டார்.

''எட்வர்டைப் பார்த்தால் மட்டும் உனக்கு தெரிந்து விடப் போகிறதாடீ'' என்றார் லூசி. ''எட்வர்டுக்கு ஒரு மண்ணும் விளங்காது. நீ தான் உதவ வேண்டும். நீ தான் வாஸ்தவமானவள்.''

''நீ என்ன பேசுகிறாய் என்றே புரியாமல் உதவவா...? எதைப் பற்றிப் பேசுகிறாய் என்றே புரியவில்லை லூசி.''

'அதெப்படி' என்பது போல அதிசயித்துப் பார்த்தார் லூசி.

''மரண விசாதணை பற்றி சகோதரி. கெர்டா இதற்காக மீண்டும் வர வேண்டுமில்லையா! வந்தால் அவள் இங்கு தங்குவாளா? அல்லது எனது இன்னொரு வீடான வெள்ளை இல்லத்திலா? இது கொலை நடந்த இடம். எனவே வேதனை கூடும். ஆனால் வெள்ளை இல்லத்தில் வாடகை மக்கள் அதிகமாயிற்றே. நிருபர்களும் சுலபமாய் வந்து போகலாம். இங்கு போல அவர்களையெல்லாம் தடுத்து நிறுத்த முடியாது. புதன் கிழமையாம். பதினொன்றுக்கு'' - இப்படிச் சொன்னதுமே சிறு குதூகலப் புன்முறுவல் அவர் இதழில் விளைந்தது. இதற்கான காரணம் அவர் தொடர்ந்து பேசியதில் தெளிவாயிற்று: ''இதுவரை நான் மரண விசாரணையில் அகப்பட்டதே இல்லை தெரியுமோ...! கறுப்பு உடை. தொப்பி. இவை போதும். கையுறை வேண்டுமா என்ன...!''

இவ்விதமாய் நடந்தபடி பேசிக் கொண்டிருந்தவர், எதிர்ப்பட்ட தொலைபேசியின் செவிக்குழலைக் கையிலேடுத்துக் கொண்டு தொடர்ந்தார்: ''தோட்டத்துக்கு நான் உபயோகப்படுத்திக்

கொண்டிருக்கும் கையுறைகள் தவிர என்னிடம் வேறு கையுறைகள் இல்லை என நினைக்கிறேன். ஒன்றும் புரியவில்லை. கையுறை அவசியமா?''

''கை ரேகையினை தவிர்ப்பதொன்றே அவற்றின் ஒரே உபயோகம்'' என்றார் எட்வர்ட் சிறு சிரிப்பினூடே.

''சரியான சமயத்தில் சரியாகச் சொன்னாய் எட்வர்ட். கொலை நிகழ்ந்துள்ள வீட்டில் விசாரணை முடியும் வரை எப்போதுமே கையுறையுடன் இருப்பது தான் நல்லது'' என்றவர், ''அட இறைவா. இதை எதற்கு கையில் எடுத்துக் கொண்டு நிற்கிறேன்?'' என்றார் கையிலிருந்த செவிக்குழலை சுவையற்றுப் பார்த்தபடி!

''யாருக்காவது தொலைபேசி செய்ய நினைத்தீர்களா...?''

''அப்படியொன்றும் நினைவில்லையே'' என்று யோசித்தபடி, எச்சரிக்கையாய் குழலை அதனிடத்தில் பொருத்தினார்.

நிமிர்ந்து மிக்டேவையும் எட்வர்டையும் மாற்றி மாற்றிப் பார்த்த லூசி, ''எட்வர்ட்'' என்று முக்கியமாய் அழைத்து, ''நீ மிக்டேவைத் தேவையற்று கலங்க வைக்காதே'' என்றார். ''நம்மை விட, நடந்துள்ள ஜானின் கொலையை, ஜீரணிக்க இயலாது மனதில் போட்டு வைத்து விசனப்பட்டுக் கொண்டேயிருக்கிறாள் அவள்.''

''அய்யய்யோ...'' என்று அலறிய எட்வர்ட், ''ஜான் கொலைப் பற்றி கடுகளவு கூட நான் பேசவில்லை'' என்று அவசர அவசரமாய் விளக்கினார். ''மிக்டே வேலை செய்துக் கொண்டிருக்கும் அலுவலகம் பற்றித் தான் கவலைப் பட்டுப் பேசினேன். மிகவும் விரட்டுகிறார்கள் போல. எனக்கென்னவோ வாழ்க்கை மிருதுவாகவே போக வேண்டும் போல உள்ளது லூசி. இல்லையென்றால் ரொம்பக் கவலைப் படுகிறேன்.''

''ம்...'' என்று வெறுத்து வெறுமையாய் ஆரம்பித்த மிக்டே, ''என் மேல் எப்போதும் கரிசனைக் கொண்டு பாராட்டிக் கொண்டே யிருக்கும் முதலாளி இருக்க வேண்டும் என்பது இவரின் ஆதங்கம்'' என்றார்.

''அத்தனை நல்ல மனது எட்வர்டுக்கு'' என்று பெருமையாய் லூசி சொல்லிக் கொள்ள, தனிமை வேண்டும் எனும் அறிவுறுத்தலோடு எழுந்து வெளியேறினார் மிக்டே.

கதவருகே சென்று விட்டிருந்த மிக்டேவுக்காக, ''சத்தியமாய் சொல்கிறேன் மிக்டே'' என்ற எட்வர்ட், ''நீ பணியிடத்தில் படும் அவஸ்தைகளுக்காக நான் ரொம்ப கவலைப்படுகிறேன்'' என மனமொப்பிச் சொன்னார்.

''நாக்கில் நரம்பற்ற அவள், வாரத்துக்கு நாலு பவுண்ட் எனக்குத் தருகிறாள் எட்வர்ட். நடக்கும் சங்கதியெல்லாம் அதில் அடக்கம்.''

சொல்லி விட்டு நீயும் இந்தக் கூட்டமும் எனும் வெறுப்பில், ஹாலோவையே கூட்டித் தள்ளுவது போல், விறுவிறுவென தோட்டத்துக்கு வெளியேறினார்.

ஹென்றி ஏதோ சிந்தனையில் தன் வழக்கமான இடத்தில் அமர்ந்திருந்தார். ஆனால் மிக்டே அவரையும் நெருங்கவில்லை. பூக்கள் நிறைந்த நந்தவனத் தோட்டத்தின் நடைபாதைக்குத் திரும்பி, அது நோக்கி நடக்க ஆரம்பித்தார். ஆங்கெட்டல் குடும்பம் முழுவதுமே மிக்டேவுக்கு வசீகரமானவர்கள் தான். ஆனால் அவர்களின் வசியம் எதுவும் இன்று காலையிலிருந்து மிக்டேவை மயக்கிப் போட இயலவில்லை.

மேல் நோக்கிப் போய்க் கொண்டிருந்த சிறு மலைப்பாதை போன்ற நடைபாதை, தோட்டத்தில் போய் முடியும் உச்சியில், டேவிட் ஆங்கெட்டெல் அமர்ந்திருந்தான்.

டேவிட்டைப் பொறுத்தவரை மிகைப்படுத்தப்பட்ட முக்கியப் பதிவு ஏதுமில்லை ஆதலால், தன் கால்களை அவனை நோக்கி விட்டு, அவனுக்கருகிலேயே அமர்ந்து கொண்டார் மிக்டே, அவனுடைய முகத்தில் தெரிந்த பயத்தினை கவனித்தபடி.

'சே... மக்களிடமிருந்து தப்பித்து தனிமையிலிருக்கத் தான் எத்தனை பிரயத்தனப்பட வேண்டியுள்ளது' - அருகில் வந்தமர்ந்த மிக்டேவைக் கவனித்த டேவிட் கறுவிக் கொண்டான். என்னத் தையோ எடுக்க என்பதற்காக அடிக்கடி உள்ளே நுழைந்து சென்ற பணியாட்களின் இடையூறு பொறுக்காது, மேலும், துடைப்பம், மெழுகும் துணி, நீர் வாளி இவற்றோடு நுழைந்து இம்சித்த வேலைக்காரிகளின் இடையூறும் தாளாது, ரொம்ப நேரத்திற்கு முன்னதாகவே தன் அறையிலிருந்து வெளியேறியிருந்தான், டேவிட். நூலகமும் அங்குக் கிடந்த பொது அறிவுக் களஞ்சியங்களும் கூட, தனிமைப் புகலிடமாய் அவை இருக்கும் என்ற டேவிட்டின் அனுகூல

எதிர்பார்ப்புக்கு ஆதரவு தரவில்லை. அங்கும் லூசி இருமுறை நுழைந்து வந்து, அன்பாய் சில வார்த்தைகள் பேசிச் சென்றார். ஆதிக்கமற்ற லூசியின் அரவணைப்புக் கூட இடையூறாய் தானிருந்து டேவிட்டுக்கு.

இப்படி வந்து இங்கு ஹாலோவில் கிடக்க வேண்டுமா என காரணமின்றி டேவிட்டின் மனோநிலைக்குள் துளைத்துக் கொண்டிருந்த கேள்விக்கான விடையைத் தோண்டித் தோண்டித் தேடத்தான் இங்கு வந்தான். கொஞ்சம் கூட தன் மன ஒப்பின்றி, போனால் போகட்டும்... வாரக் கடைசியின் இரு விடுமுறை நாட்கள் தானே என, விருப்பமேயின்றி உறவினர்களின் அழைப்பினை ஏற்று இங்கு வந்தால், கொடூரக் கொலை, விசாரணை என்று தங்கும் நாட்களின் எண்ணிக்கைக் கூடிக் கொண்டே போவது, டேவிட்டின் மனதுக்குத் திகிலாய் இருந்தது.

தன் படிப்பினால் கிடைத்திட்ட அறிவினை, மேற்கொண்டு விருத்தி செய்யும் திட்டங்களில் மட்டும், தியானம் போல் ஆராய்ந்துக் கொண்டிருக்கும் ஒரே மனம் படைத்திட்ட டேவிட்'டுக்கு, அதிர அதிர உள்ள நிகழ்காலத்தை எதிர்கொள்ள சம்மதமே இல்லை. ஜானின் மரண தினத்துன்று, தான் படித்த கொலை பற்றிய ஏராளமான தலைப்புச் செய்திகளைப் பற்றியெல்லாம் பேசித் தள்ளிய லூசியிடம், அப்படிப்பட்ட செய்திகளிலெல்லாம் தனக்கு நாட்டமே கிடையாது என்று வாதிட்டிருந்த டேவிட்,இப்போது அப்படிப்பட்ட ஒரு நிதர்சனத்தையே எதிர் கொண்டிருக்கிறான்.

கொலை! பிடிப்பின்றி தன்னைத் தானே நொந்துக் கொண்டான். 'என் நண்பர்கள் இனி என்னை எந்தக் கோணத்தில் பார்ப்பார்கள்?' - நினைத்துப் பார்த்தான். கொலைவழக்கில் சம்பந்தப்பட்ட ஒருத்தனை இனி என்ன மாதிரி எதிர்கொள்வர்? என்ன நினைப்பர்? கசப்பாய்? அருவெறுப்பாய்? ஆச்சரியமாய்? பயமாய்? குப்பையாய்?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் தனக்குத் தானே விடை தேடி அமைதியுறும் தேடலில் உள்ள டேவிட், மிக்டேவால் தடைபடவுள்ள தன் தனிமையை, நிச்சயமாய் வரவேற்கப் போவதில்லை. எனவே வந்தமர்ந்த மிக்டேவை, ஏன் வந்து தொந்தரவு செய்கிறீர்கள் எனப் பிரதிபலிக்கும் முக பாவத்துடனே பார்த்தான் டேவிட்.

''உன் உறவுகளை எந்த அளவு நேசிக்கிறாய்?''

தோள்களை மேலே தூக்கி பழித்துக் காட்டியவன், ''உறவுகளைப் பற்றி மிக நிஜமாய் யாராவது கவலைப்படுவதுண்டா என்ன?'' என்றான்.

''அப்படிப் பார்த்தால், எதைப் பற்றித் தான் நாம் கவலைப்பட வேண்டும்?''

''ஒட்டுறவற்ற வாழ்க்கை தான் சரி.''

இப்படிச் சொல்லிய டேவிட், ''கொலை நிகழ்ந்த சம்பவத்தில் தெரிந்தோ தெரியாமலோ முழுவதுமாய் ஈடுபட்டிருக்கும் நான், இனி என் நிலைமை இந்த சமுதாயத்தில் எப்படிப்பட்டது என கணக்கிட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

''சங்கோஜமான நிலைமை தான்.''

டேவிட் திருத்தினான்: ''அலுப்பான நிலைமை.'' தொடர்ந்தான்: ''துப்பறியும் கற்பனைக் கதைகளின் பக்கங்களில் மட்டுமே பார்க்கல்ல திருப்பங்கள். முடிச்சுகள்.''

சிரித்துக் கொண்டே மிக்டே, ''இங்கு வந்ததற்காக நீ வருந்துகிறாய்'' என்றார்.

''ஆமாம். இந்நேரம் என் நண்பன் ஒருவனின் லண்டன் ஜாகை யிலிருந்திருப்பேன். மிகப்பெரிய புத்தகக் கடை வைத்துள்ளான் அவன்.''

''வீட்டை விட இங்கு அனுகூலமாய் அமைதியாய் உள்ளது, இல்லை?''

கேட்ட மிக்டேவை தூஷித்துப் பார்த்த டேவிட், ''வசதி...? அனுகூலம்...?'' என நகைப்பாய்க் கேட்டான். ''அப்படியென்றால்...? எது அனுகூலம்..? விளக்க முடியுமா..? வசதியாய் இருக்க வேண்டும் என எல்லோரும் கூறுகிறார்கள். ஆனால் வசதி எனில் என்ன என வர்ணிக்க இயலாமல். வேடிக்கை.''

''நிஜம் தான்'' - ஒப்புதலாய் தலையசைத்தார் மிக்டே. ''சில அசாதாரண சமயங்களில் 'எதுவுமே வேண்டாம். எல்லாம் பொய். வீண்.' என உலகின் எதைப் பற்றியும் கவலைப்படாத அடங்கிய, ஓய்ந்த மனநிலையை நான் அனுபவித்துள்ளேன்.''

''வாழ்க்கையின் உச்சம் அது. நிறைவு. போதும் என புடைத்துப் போன திருப்தி. ஒரு நொடியேனும் இந்த அனுபவம் கிடைப்பது அரிது. விடாமல் அதைப் பிடித்துக் கொண்டோமேயாயின், அந்த வாழ்வே நிம்மதி.''

பேசிய டேவிட்டைக் கண்ணகல பிரமிப்பாய் பார்த்தார் மிக்டே.

''நான் ஒரு தொழிலாளி. தினக் கூலி. அதனால் தான் வசதியும் அனுகூலமும், தேவைப்படும் வஸ்துக்களாய் இருக்கின்றன டேவிட். நீயும் உன் கூட்டமும் அழுக்குப்படாது அனுபவித்துத் திளைக்கும் மெத்தைத் தூக்கம், விடியற்காலை தலைமாட்டில் ஆடை தட்டிக் காத்துக் கிடக்கும் ஒரு காபி, எழுந்ததும் நீராட தயாராயிருக்கும் வெந்நீர், இவையெல்லாம் கிடைக்கப் பெறாத வேலைக்காரி.''

இப்பட்டியலைத் தன்னிச்சையாய் கொஞ்சம் நிறுத்தினார் மிக்டே.

அந்த இடைவெளியில் அனுபவித்து டேவிட் சொன்னான் : ''முதலாளியாயில்லாத சாதாரண சராசரி தொழிலாளிக்கும் இந்த வசதியெல்லாம் கிட்ட வேண்டும். கிடைத்தாக வேண்டும்.''

''நிதர்சன வாழ்க்கைக்கு ஒவ்வாத - ஏற்றுக் கொள்ள இயலாத - வாதம் டேவிட், நீ சொல்வது'' என்ற மிக்டே, அடிமனத்திலிருந்து சொன்னார் : ''ஏழை, ஏழைதான்.''

## 15

முற்பகலின் சூடு காபியை ருசித்துக் கொண்டிருந்தார் ஹெர்குல் பொய்ரெட். இத்தனை நேரம் மேற் கொண்டிருந்த பணிப் பளுவைக் குறைத்தது காபி. அப்போது ஒலித்த தொலைபேசிக்கு செவி சாய்த்து, எழுந்துப் போய், செவிக்குழலை எடுத்துப் பொருத்திக் கொண்டார். கேட்டார் : ''யாரது?''

''பொய்ரெட்...?''

''லூசி...?''

''அடடா. எத்தனை சரியாக என் குரலைக் கண்டுபிடித்து விட்டீர்கள். வெகு சந்தோஷமாயுள்ளது. உங்களைத் தொந்தரவு செய்கிறேனா...?''

''கிடையவே கிடையாது. நேற்றைய துயரச் சம்பவம் தந்துள்ள மீளா துக்கத்திலிருந்து வெளியேறி விட்டீர்களா...? ஏனையவர்கள் எப்படி உள்ளனர்?''

''ம்ம். இன்னும் இல்லை. நீங்கள் சொல்வது போல, ஜானின் அகால மரணம், எல்லோர் மனதிலும் வெந்துயராய் தான் உள்ளது. மனம் விரும்பிய ஒருவர் கொலை செய்யப்பட்டு மரணித்த அனுபவம், எல்லா பற்றிலிருந்தும் எங்களை விலக்கி, ஒரு வித ஞான நிலையில் வைத்திருப்பது தான் உண்மை, திருமிகு பொய்ரெட்'' என்ற லூசி, ''உங்களால் இங்கு வர முடியுமா என்பதைக் கேட்கத்தான் அழைத்தேன். உங்களை இப்படிப்பணிப்பது தப்புத் தான். ஆனால் நான் அதீத மன அழுத்தத்தில் தவிக்கிறேன். வேறு வழியே தெரியவில்லை. ஆகவே தான் இந்த வேண்டுகோள்.''

''நிச்சயமாய் லூசி. இப்பொழுதே வரவா...?''

''ஆ... ஆ... ஆமாம். இப்பொழுதே வரச் சொல்லத் தான் நினைத்திருந்தேன். ரொம்ப ரொம்ப நன்றி.''

''பரவாயில்லை. மரக்காட்டுக்கள் நுழைந்து வந்து விடுகிறேன்.''

''ஆமாமாம். அது தான் உள்ளவற்றிலேயே சுருக்கு வழி. மிக இனிமையானவர் நீங்கள், பொய்ரெட்.''

தனது மேல் கோட்டின் மீது படிந்திருந்த சில சிறு சிறுத் தூசுகளைத் தட்ட மட்டும் அவகாசம் எடுத்துக் கொண்டு, அதனைத் துரிதகதியில்

அணிந்த பொய்ரெட், சட்டெனக் கிளம்பி, பாதைக்குள் இறங்கி, மரக்காடுகளை வேகமாய் கடக்க ஆரம்பித்தார். நீச்சல் குளத்தின் சுற்று வட்டாரம் பாலைவனமாயிருந்தது - காவலர்கள் வந்து தங்கள் கடமைகளை முடித்துச் சென்று விட்டிருந்தனர். பனிமூட்டம் மிகுந்திருந்த வசந்தக்காலச் சூரிய ஒளியில் அமைதியாகவும், ஒன்றுமே தெரியாதது போன்றும் ஆரவாரமற்று விளங்கிற்று குளம்.

அவ்வழியைக் கடக்கும் போது, நீச்சல் குளத்தின் பார்வையாளர் அறையைத் துரிதப் பார்வை பார்த்தார். ப்ளாட்டினத்தினாலான நரி முகம் இரு தோள் பகுதிகளிலும் வேயப்பட்டிருந்த விலையுயர்ந்த மேல் அங்கி, அது வீசப்பட்டிருந்த நாற்காலியிலிருந்து அகற்றப்பட்டி ருந்ததைக் கவனித்தார். ஆனால் சிறு கோபுரமாய் அடுக்கி வைக்கப் பட்டிருந்த ஆறு வத்திப் பெட்டிகள் மட்டும் அப்படியே இருந்தன. அவற்றை, எப்போதையும் விட அதிக விந்தையாய் இப்போது பார்த்தார்.

இங்கு வத்திப் பெட்டிகளுக்கு அவசியமே கிடையாது. ஈரமான இப்பகுதியில் அவை தேவையில்லை. அவசரத்துக்கு என வேண்டு மென்றால், ஒரு பெட்டி வைத்துக் கொள்ளலாம். ஆறு எதற்கு?

இரும்பு மேஜையில் அடுக்கப்பட்டிருந்த தட்டுகளும் கண்ணாடிக் குவளைகளும் கூட எடுத்துச் செல்லப்பட்டிருந்தன. அந்த மேஜையில், கிறுக்கலாய், தலைவிரித்தாடி பயமுறுத்தும் பாணியில், கிளைபரப்பிக் கிடந்த ஒரு மரத்தினை யாரோ எழுதியிருந்தனர். இரவில் சூறைக்காற்றில் அடங்காமல் ஆடும் மரத்தின் சாயல். பேயாட்டம். அந்தத் தோற்றம் ஹெர்குல்லை வதைத்தது. தூய ஹெர்குல்லின் சிந்தையை பங்கப்படுத்திற்று.

தன் நாவினை உள் மடக்கி ஒலியெழுப்பி, பார்ப்போம் எனும் பாணியில் தலையை அசைத்துக் கொண்டு, எதற்காக லூசி மிக சீக்கிரம் வரும்படி பணித்தார் எனும் சுய ஆலோசனையோடு, ஹாலோ நோக்கித் தொடர்ந்து விரைய ஆரம்பித்தார் ஹெர்குல்.

ஹெர்குல்லின் வருகைக்காக, பிரெஞ்சு ஜன்னலருகேயே காத்திருந்த லூசி, வந்தவரை இழுத்துக் கொண்டு வரவேற்பறை விரைந்தார்.

''தாமதியாது உடனடியாய் வந்து விட்டதற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன், திருமிகு ஹெர்குல்.''

அவர் கைகளை அன்பாய் பிடித்துக் குலுக்கி விட்டார்.

''இது என் கடமை.''

அழகு மிகும் கண்கள் ஆச்சரியத்தில் விரிய, கைகளைப் பேசும் வார்த்தைகளுக்கு ஏற்ப பாவனையாய் அசைத்து அசைத்துப் பேச ஆரம்பித்தார் லூசி: ''வீடு, வீடாய் இல்லை தெரியுமா? எல்லாம் ஸ்தம்பித்துப் போகின்றன. இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறார். பேசிக் கொண்டு - ம்ம், இல்லையில்லை - விசாரணை எனும் பேரில் வரிசையாகக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். சொல்லும் எல்லாவற்றையும் குறித்துக் கொள்ள வேறு பணிக்கிறார். இதற்காக ஓர் இளைஞன் வேறு. கட்ஜன்... ஹாலோவின் அச்சாணியே கட்ஜன் தான், தெரியுமோ! அவனை நம்பித்தான் எங்கள் வண்டி ஓடிக் கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட நிஜ வேலைக்காரன். போலீஸைக் கண்டாலே வேலைக்காரர்கள் எல்லாம் நடுநடுங்கிப் போகின்றனர். இதில் விசாரணை என்றால் சொல்லவும் வேண்டுமா! அனைவரும் நிலை தடுமாறியுள்ளனர், கட்ஜன் உட்பட. அமைதியாய் விசாரிக்கும் இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் கூட இவர்களுக்கு சிம்ம சொப்பனமாய் தானிருக்கிறார். கிரேஞ்ஜ்! திரு பொய்ரெட், இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ்'ஜூக்கு பிள்ளைக் குட்டி உண்டு என்று நினைக்கிறேன். சரிதானே! தூய மனைவி, குழந்தைகள் என சற்றே பெரிய கூட்டமான வீட்டில் தான் அவர் வாழ வேண்டும். பையன்களும் இருக்க வேண்டும்...! இல்லை..? மாலை வேளைகளில் அவர்களுக்கு மெக்கன்னோ (ஒரு வகை இசைக்கருவி) வாசிக்கச் சொல்லித் தந்து... ... ...''

''ஆ...'' வென லூசியைப் பார்த்த வண்ணமிருந்தார் பொய்ரெட். லூசி தன் வளமான கற்பனைக் கலந்து க்ரேஞ்ஜ் குடும்பத்தைச் செதுக்குவதை வைத்த கண் வாங்காது கிரகித்துக் கொண்டிருந்தார் அவர்!

''ஆனால் இன்று அவர் ஏனோ தளர்வாயிருக்கிறார்'' என்ற லூசி, ''துளியும் களங்கமில்லாமல் மிகத் தூய்மையாய் இயங்கும் வீடு கூட, மனத்தினை அழுத்திப் போடவல்ல ஆபத்தானது தான்'' என சிந்தனையாய் சொன்னார். பிறகு தனக்கே உரிய தாவும் வழக்கப்படி, பேசிக் கொண்டிருந்ததை விட்டு விட்டு, ''இந்தச் சந்தடியெல்லாம் ஓயட்டும் திரு ஹெர்குல். அப்புறம் நிச்சயமாய் நீங்கள் மறுபடியும் ஒரு முறை பகல் விருந்துக்கு வந்தாக வேண்டும். சரியா...!''

''உங்கள் விருந்தோம்பலுக்கு நன்றி.''

''போலீஸ் வந்து விசாரணை செய்வதை நான் பொருட்படுத்தவே இல்லை'' என்றார் லூசி. ''என்னைப் பொறுத்தவரை மிக சுவாரஸ்யமாக இருக்கின்றது. 'என்னால் ஏதாவது உபாயம் ஆகும் என்றால், தயங்காமல் சொல்லுங்கள்' என்று கூட இன்ஸ்பெக்டர் கிரேஞ்ஜ்-யிடம் சொல்லியிருக்கிறேன். திகைக்கச் செய்து விஷயத்தை வாங்கும் விசாரணை அதிகாரி வகையாக அவர் செயல்படுகிறார், ஆனாலும், ஒழுங்குப்படுத்தப்பட்ட அணுகுமுறை உள்ளது.''

தொடர்ந்தார் : ''கொலைக்கான இலக்கு, போலீஸ் கூட்டத்திடம் மிக முக்கியமாய் இருக்கின்றது. ஜான் கிறிஸ்டோவுக்கு, ஏதோ ஒரு மாதியிடம் பழக்கமுள்ளது என்கிறது போலீஸ். தீர்க்கமான முக வெட்டும், அழகும், கவர்ச்சியும் நிறைந்தவளாம். ஆனால் இது அரதப் பழசாம். எனவே போலீஸ் ரொம்ப ஒன்றும் ஈடுபாடு காட்டாது. கெர்டா தான் பாவம். இந்த அலைக்கழிப்புக்கு ஈடு கொடுத்து எப்படியெல்லாம் அவள் ஆட வேண்டி வருமோ...? விசுவாசி. என்ன நினைக்கிறீர்கள்? அவள் விசுவாசி தான். ஜான் மீது அத்தனை விசுவாசம் காட்டியவள். கெர்டாவின் பிரத்யேகக் குணம் : சொல்வார் பேச்சை அப்படியே கேட்டு நம்பி விடும் அளவுக்கான விசுவாசம். ஆம். இவ்வகையில், புத்தியற்ற பெண் அவள். கெர்டா போல சுயமாய்ச் சிந்திக்கும் புத்திசாலித்தனமற்றவர்கள், தன் துணை சொல்வதை அப்படியே அடியொற்றி ஏற்று நடப்பது தான் சிறந்தது என்பது என் கருத்து.''

பேசிக் கொண்டேயிருந்த லூசி, வேகமாய் எழுந்து, அருகில் மூடிக் கிடந்த ஹென்றியின் படிக்கும் அறையைப் பட்டென திறந்து, ''இதோ, பொய்ரெட்'' என்று, ஒரு காவலாளி, பெரும் பதவியில் இருக்கும் தன் எஜமானின் வருகையை அறிவிப்பது போல பிரகாசமாய் கூவினார். அவரை உள்ளே விட்டு விட்டு ஒரு சிறு சுழற்சியின் முடிவில் கதவை மூடி விட்டு அறையிலிருந்து வெளியேறினார் லூசி. படிக்கும் மேஜையின் எதிரெதிரே இன்ஸ்பெக்டரும் கட்ஜனும் அமர்ந் திருந்தனர். சிறு நோட்டுப் புத்தகத்தை ஏந்தியபடி ஓர் இளைஞன் அறையின் மூலையில் அமர்ந்து நடப்பவற்றைக் குறித்துக் கொண்டிருந்தான். ஹெர்குல்லைக் கண்டதும் மரியாதை தெரிவிக்கும் முறையில் எழுந்து நின்றான் கட்ஜன்.

பொய்ரெட், முன் அனுமதியின்றி உள்ளே கொண்டு வரப்பட்டதற்கு விரைவாய் மன்னிப்புக் கேட்பதில் இறங்கினார்.

''இதோ வெளியேறி விடுகிறேன். மன்னிக்கவும். இப்படிக் கையைப் பிடித்து வந்து என்னை லூசிதான் உள்ளே இழுத்து... ... ... ''

''பாதகமேயில்லை திரு பொய்ரெட். காலை வணக்கங்கள். வாருங்கள்.''

மிக நம்பிக்கையற்றிருந்தது க்ரேஞ்ஜ்'ஜின் முகம். இன்ஸ்பெக்டர் வீடு பற்றி லூசியின் மிக சமீபத்திய வர்ணனை, மின்னலாய் பொய்ரெட் மூளையில் வெட்டிச் சென்றது. 'ஒரு வேளை வீடு முழுக்க சுத்தம் செய்து களைத்திருப்பாரோ... அல்லது ஓய்வெடுக்கும் படி அமைதியான நேரம் கிட்டாமல் இப்படிக் களைத்துப் போய் விட்டாரோ...!'

உடனேயே மிகக் கடுமையாய் இந்த சிந்தனைகளை ஒதுக்கித் தள்ளினார் ஹெர்குல். சுத்தமான ஆனால் சந்தடி நிறைந்த இன்ஸ்பெக்டரின் வீடு - அவர் பத்தினி மனைவி - அவர் பிள்ளைகள் - இவையெல்லாமே கற்பனை திறன் அசாத்தியமாய் மிகுந்த விறுவிறுப்பான லூசி மூளையின் சிதறல்கள். கற்பனைச் சிதறல்கள். ஆனாலும், அவரின் கற்பனை, தெளிவாய் நிரூபணமாகும் வண்ணம், உண்மையாய் இங்கு க்ரேஞ்ஜிடம் இருப்பது ஹெர்குல்லின் ஈடுபாட்டைத் தூண்டிற்று. இன்ஸ்பெக்டர் தளர்வாயிருப்பது உண்மை. அதற்கான லூசியின் காரணம் கற்பனை. கற்பனை உண்மையாயிருக்குமா...?

இது ஒரு தனி அறிவாற்றல் என்று தனக்குள் குறித்துக் கொண்டார் பொய்ரெட்.

''என்ன சிந்தனை திரு பொய்ரெட். முதலில் உட்காருங்கள். இங்கு விசாரணையை ஏறக்குறைய முடித்து விட்டேன். உங்களுடன் தான் பேச வேண்டுமென்றிருந்தேன்.''

திரும்பி கட்ஜனைக் கவனித்தார். மரியாதையாய் தன் இருக்கையில் அமர்ந்து, எவ்வித முக பாவமும் காட்டாமல், விசாரணையை எதிர் கொள்ள, இன்ஸ்பெக்டரை எதிர்நோக்கியிருந்தான் அவன்.

இன்ஸ்பெக்டர் கேட்டார்: ''இவ்வளவு தான் உனக்கு நினைவிருக்கிறதா...?''

''ஆமாம் இன்ஸ்பெக்டர். எல்லாம் வழக்கம் போல் தான் இருந்தன. சம்பவத்தன்று விரும்பத்தகாத மாதிரியோ, வெறுப்பான மனோ நிலையிலா, யாரும் இல்லை.''

''நீச்சல் குளத்தின் அருகே உள்ள பெவிலியனில், ஆடம்பரமான ஒரு மேல் அங்கி பார்த்தேன். பெண்கள் அணிவது. யாருடையது அது என தெரியுமா?''

''ப்ளாட்டினத்தால் ஆன நரி முகம் பதிக்கப்பட்டிருந்த அங்கியைச் சொல்கிறீர்களா சார்...? நேற்று அங்கிருந்த தட்டு முட்டு சாமான்களை சுத்தம் பண்ணக் கொண்டு வரும்போது கவனித்தேன். அங்கிருந்தது. ஆனால் அது இந்த வீட்டிலிருக்கும் எந்தப் பெண்ணுடையதும் அல்ல, சார்.''

''இங்கு தானே இருக்கிறது! பின் யாருடையது?''

''ஒரு வேளை க்ரே' யுடையதாக இருக்கலாம் சார். செல்வி வெரோனிக்கா க்ரே. சினிமா நடிகை. அவர் அது போல் ஏதோ அணிந்து வந்ததாக ஞாபகம்.''

''எப்பொழுது?''

''நேற்றைய முன் தினம் இரவு அவர் இங்கு வந்திருந்த போது.''

''அவள் ஒரு விருந்தாளியாய் அழைக்கப்பட்டதைப் பற்றி நீ சொல்லவேயில்லையே கட்ஜன்.''

''வெரோனிக்கா, இங்கு அழைக்கப்பட்டிருந்த விருந்தாளி அல்ல, இன்ஸ்பெக்டர். இங்கு அருகிலிருக்கும் புறாக் கூடு எனும் குடிலில் இருக்கிறாள். வார இறுதி நாட்களில் வந்துப் போவாள் போல. இங்கு இரவு சாப்பாடு முடிந்ததும், வத்திப் பெட்டிகள் தீர்ந்து விட்டதாய் காரணம் சொல்லிக் கொண்டு, தீக்குச்சிகள் சில வாங்கிப் போக வந்தாள்.''

''அவள் ஆறு வத்திப் பெட்டிகள் வாங்கிச் சென்றாளா....?'' - ஆர்வமாய் கேட்டார் பொய்ரெட்.

கட்ஜன் வியப்பாய் அவர் பக்கம் திரும்பினான். ''ரொம்பச் சரி, சார். எங்களிடம் போதுமான கையிருப்பு உள்ளதா என ஊர்ஜிதப்படுத்திக் கொண்ட முதலாளியம்மா, வெரோனிக்காவை, ஆறு பெட்டிகள் கொண்டுச் செல்லும்படி வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். கொடுத்தும் அனுப்பினார்.''

''அதை அவள் பெவிலியனில் விட்டுப் போயிருக்கிறாள்'' என முடித்தார் பொய்ரெட்.

''ஆமாம் சார். நேற்று காலை நானும் அவற்றை அங்கு பார்த்தேன்.''

ஓசையெழா வண்ணம் மரியாதையாய் கதவினை அடைத்து விட்டுப் போன கட்ஜனைப் பார்த்தபடி, ''இந்த வீட்டில் இந்த

மாமனிதன் கவனிக்காதது எதுவுமே இல்லை'' என்று குறிப்புச் சொன்னார் ஹெர்குல்.

''வேலைக்காரர்கள், பிசாசுகள். வெகு ஜாக்கிரதையாய் கையாள வேண்டும்'' என்று தன் குறிப்பினையும் சேர்த்து வைத்தார் இன்ஸ்பெக்டர். புதிதாய் விளைந்த சிறு குறும்புடன் ''இதற்கிடையில் சமையற்காரிகள் வேறு'' என்றும் குறிப்பிட்டுக் காட்டினார். ''நமக்கு உதவவல்ல பிறவிகள். வேலையாட்களைப் போலல்லாது, பேசக் கூடியவர்கள் சமையற்காரர்கள். பெண்களல்லவா. பேசுவார்கள். எதைப்பற்றியும். எல்லாவற்றைப் பற்றியும்!''

இருவரும் புன்முறுவிக் கொண்டனர்.

''ஹார்லி தெருவில் விசாரணைக்கு ஓர் அதிகாரியை நியமித்துள்ளேன்'' எனத் தொடர்ந்தார் இன்ஸ்பெக்டர். ''நானும் இன்று மாலை அங்கு இருப்பேன். அங்கு தான் துப்பு கிடைக்க வேண்டும். எப்படியாவது. திருமதி கிறிஸ்டோவைத் துருவ வேண்டும். விடக்கூடாது. நிச்சயம் வெளி வராத விஷயங்கள் அவருக்குத் தெரிந்தே இருக்கும். ரகசியத் தொடர்புகள்...! பிரபலமான படாடோப மருத்துவர்களுக்கும், அவர் தம் பெண் நோயாளிகளுக்கும் இடையே கூட! சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள். லூசியிடமிருந்து விஷயத்தைப் பிடுங்கினேன். ஜானின் தாதியோடு ஏதோ குழப்பம் நிலவியதாக தெரிகிறது. ஆனால் இது குறித்து முழுதும் சொல்லாமல் நிச்சயமற்றுப் பேசினார் லூசி.''

''இருக்கலாம்'' என ஏற்றுக் கொண்டார் பொய்ரெட். ''அவர் எதைத் தான் முழுதுமாய் சொல்லியிருக்கிறார்.''

மிகத் திறமையாய் கற்பனையாக்கப்படும் நிகழ்வுகள் - ஜானுக்கும் அவரிடம் தொடர்ந்து பணியில் இடம் பெறத் துடித்த இளைய தாதியருக்கும் இடையேயான காம லீலைகள் - விலக்க இயலாமல் ஒத்துழைப்புத் தர வேண்டிய தாதி வாழ்க்கை - அதை சாதகமாக்கிக் கொள்ள இயலும் மருத்துவர் எனும் போர்வை - மன்மதச் சீண்டல்கள் - இதனால், கட்டுக்கடங்காமல் பொறாமை கொண்டு எழ கெர்டாவுக்கு அமைந்த வாய்ப்புகள் - இறுதியில் அது ஒரு கொலையில் முடிந்திட்ட அவலம்... ... ...

ஆமாம் - கலைத்துவம் நிறைந்த கற்பனைத்தான் - லூசியால் ஆரம்பிக்கப்பட்டு இப்போது ஹெர்குல் மனத்திலும் வேரூன்றும் கற்பனை தான் - ஆனாலும் நிஜமாக இருக்கலாம் எனக் கட்டியங்

கூறும் கற்பனை! ஹார்லி தெருவில், தனக்குத் தெரிந்தும் தெரியாமலும் நிகழ்ந்துள்ள ஜானின் மன்மத ஆட்டங்கள், இங்கு ஹாலோவில் தனிமையில் இருக்கும் போது, கெர்டாவின் நினைவுக்குள் வீரியமாய் எழுகின்றன - துப்பாக்கிச் சுடும் பயிற்சி புதிதாய் வழி வகுத்துத் தருகின்றது - சுட்டு முடித்ததும் வீழ்ந்த ஜான் அது யாரென்று அறிய திரும்புகிறார் - கெர்டா சுட்டதைக் காணும் ஹென்ரீட்டா, சுட்டு விட்டு பிரக்ஞையற்று நின்ற கெர்டாவின் கைகளிலிருந்து எந்தவித எதிர்ப்புமின்றி துப்பாக்கியைப் பெறுகிறார் - இப்போது திரும்பிய ஜானின் கண்களில் ஹென்ரீட்டா - துப்பாக்கியுடன். ஹென்ரீட்டா எனக் கதறி மாள்கிறார்.

மூடிக் கிடந்து சிந்தனையிலிருந்த தன் கண்களை திடீரென விரித்த ஹெர்குல்,இன்ஸ்பெக்டரிடம், ஆணையாய், பதில் உடனடியாய் வேண்டும் எனும் போக்கில், சிறு ஆர்வம் பொங்கக் கேட்டார் : ''உங்கள் பையன்கள் மெக்கன்னோ வாசிப்பார்களா...?''

''எ...எ... என்னது...?'' - இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ், தன் சிந்தனை தடைப்பட்டு விட்டதை, முகத்ததைச் சுளித்து உணர்த்தி, ''ஏன்...? எது உங்களை இப்படிக் கேட்கத் தூண்டியது...?'' என்றார் அதிர்ச்சி கலந்த ஆச்சரியப் பார்வையைப் பார்த்தபடி. ''அவர்கள் குழந்தைகள். மெக்கன்னோ வாசிக்கும் அளவுக்கு வளராதவர்கள். எனினும் வரும் கிருஸ்துமஸுக்கு ஒன்று வாங்கித் தரலாம் என்று தானிருந்தேன். திடீரென்று ஏன் இக்கேள்வி...?''

பொய்ரெட் ஒன்றுமில்லை என்பது போல் தலையசைத்தார். இன்ஸ்பெக்டர் மூளையில் மெக்கன்னோ திட்டமுள்ளதை, லூசியின் உள்ளுணர்வு எப்படி அறிந்தது?

'பயங்கரமான' - வேறு வழியின்றி, இந்த அடைமொழியை லூசிக்குப் பொறுத்திப் பார்த்தார் ஹெர்குல் - பயங்கரமான லூசியின் உள்ளுணர்வு வெகு இயல்பாய் கொட்டும் ஆபத்தான அனுமானங்கள். அவை பல முறை உண்மையாகிப் போவதை, முக்கியத்துவம் கொடுத்து உணர்ந்தார் ஹெர்குல். சிரமமேயின்றி கற்பனையை வளர்த்துச் சொல்கிறார் லூசி. கற்பனை? இல்லையில்லை. சிரமமேயன்றி உள்ளுணர்வு பிரதிபலிப்பதைச் சொல்கிறார். அந்த உள்ளுணர்வு தகவல்கள் பாதிக்கு மேல் உண்மையாயிருக்கும் போது, மீதியையும், நம்மையும் மீறி, உண்மை எனத் தானே தடையின்றி நம்ப வேண்டியுள்ளது!

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் பேசிக் கொண்டிருந்தார் : ''உங்களிடம் ஒரு விஷயம் குறித்து உதவி வேண்டும், திரு பொய்ரெட். இந்த நடிகை - க்ரே - ஹாலோவுக்கு, வத்திப் பெட்டிகள் வாங்க வேண்டும் என சாக்குச் சொல்லிக் கொண்டு வருகிறார்.''

ஏற்றுக் கொண்டு தலையசைத்த பொய்ரெட், தொடர்ந்து என்ன கேட்கப் போகிறார் என்று உன்னிப்பாகக் கவனிக்கலானார்.

''வத்திப் பெட்டிகள் தான் வேண்டும் எனும் பட்சத்தில் வெகு அருகிலிருக்கும் உங்கள் குடிலுக்கு வராமல், கிட்டத்தட்ட முக்கால் கிலோ மீட்டர் தள்ளியிருக்கும் இந்த ஹாலோவுக்கு ஏன் வந்திருக்க வேண்டும்...?''

இது ஒன்றும் பெரிய விஷயமில்லையே என்பது போல தோள்களைக் குலுக்கிக் காட்டிய பொய்ரெட் சொன்னார் : ''சல்லிக் காசு பெறாத காரணம் தான். என்னுடையது சிறு குடில். முக்கியமோ அவசியமோ காட்டாது. ஆனால் ஹாலோ பெரியது. ஓர் ஈர்ப்பு காட்டியிருக்கும். மேலும் நான் ஏதோ சில வாரங்களில், இறுதி நாட்களில் மட்டும் வந்து ஓய்வெடுத்துச் செல்பவன். லூசியும் ஹென்றியும் இங்கேயே நிரந்தரமாக வசிப்பவர்கள். இந்த வெரோனிக்கா க்ரே, அருகிலிருக்கும் ஒரே நிரந்தரவாசிகளான ஹாலோவாசிகளிடம் அறிமுகம் செய்துக் கொள்ள நினைத் திருக்கலாம். இது மாதிரி எதையாவது கேட்டு வருவது தானே சிறப்பான அறிமுக வழி....?!''

''இருக்கக் கூடும். சாத்தியமாய்த் தான் தெரிகின்றது'' என்ற இன்ஸ்பெக்டர், ''இருந்தாலும் இடைப்படும் வேறு எந்த சாத்தியக் கூறுகளையும் நாம் விளையாட்டாய் கூட ஒதுக்கி விடக் கூடாது'' என்றபடி எழுந்தார். ''இவ்வழக்கு சுலபமாய் விடை தரும் வழக்காய் படவில்லை. ஹென்றி, ஜானைச் சுட்டுக் கொல்ல உபயோகமான துப்பாக்கி, தன் சேகரிப்பிலிருந்து எடுக்கப்பட்டது தான் என சாட்சி தந்து விட்டார். முதல் நாள் பகலில் இதே துப்பாக்கியை வைத்து எல்லோரும் பயிற்சி செய்துக் கொண்டிருந்ததாகவும் சொல்கிறார். திருமதி கிறிஸ்டோ செய்ய வேண்டியதெல்லாம் - ஹென்றி அறைக்குள் நுழைந்து, அவர் அந்தத் துப்பாக்கியை எங்கு வைத்ததாய் பார்த்தாரோ அங்கிருந்து ஒருவருக்கும் தெரியாமல் அபகரித்து, குண்டுகளையும் ஹென்றியின் சிறு தளவாடத்திலிருந்து எடுத்துக் கொண்டு - வெளியேற வேண்டியது தான்! கடினமேயில்லாமல் நிறைவேற்றத்தக்கப் படிகள்.''

''சரியாய் சொன்னீர்கள். துளி சிரமமில்லாமல் நிறைவேற்றத்தக்க ...றிகள்.''

''ஆனால், இப்படித் தான் நடந்தது என நிரூபிக்கத்தான் நம் ...க்குத் தள்ளப் போகின்றது!''

சொல்லி விட்டு விடை பெற்றுக் கொண்டார்.

இவ்வழக்கை, கெர்டா போன்ற அப்பிராணி செய்யத்தக்க உயிர் ...தையாய் கவனித்தார் ஹெர்குல். தான் தான் கொன்றது என தெரியாமலிருக்க எவ்விதத் தந்திர வலைகளும் பின்னாது, தப்பித்துக் கொள்ளவும் எந்தவித முயற்சியும் செய்யாமல், இதனால் ...ளையவல்ல சிக்கலான நிலை பற்றியும் சிந்தியாது - தன் கணவன் ...தான அபரிமித அன்பும் காதலும் மட்டுமே கெசர்டாவை இயக்கித் தள்ள - அரங்கேறி முடிந்துள்ள வன்முறை இது. காதல் ஏற்படுத்திய கசப்பான பொறாமை வேதனை. அது விளைவித்துள்ள கசப்பான உண்மை.

இருந்தாலும், நிச்சயமாக, மிக நிச்சயமாக, தன் தற்காப்புக்காக, பாதுகாப்புக்காக, கெர்டா நடவடிக்கைகள் எடுத்துத் தான் இருப்பார் என நம்பினார் துப்பறியும் நிபுணர்.

அவை என்ன..?

தனக்கு ஒன்றுமே தெரியாதது போலவும் - தன் சுயநினைவே இருளடைந்து போனதாகவும் - பகுத்தறிவு அற்றுப் போய் நிகழ்ந்துள்ள வன்மமிது என்பது போலவும் - மலங்க மலங்க விழித்து நின்றுக் கொண்டிருந்தாரே. இது தான் தற்காப்பா...?

பொய்ரெட்டுக்குள் ஒரு மின்னல் வெட்டி அடங்கிற்று.

ஜானுக்கருகிலிருந்த கெர்டாவின் மரத்துப் போன, உணர்வுகளற்ற, வெறுமையாய்-வெற்றிடமாய் இருந்த முகத்தினை மீட்டிப் பார்த்தார் ஹெர்குல்.

எனில் கெர்டா விக்கித்து நின்றது நி..நி..நின்...றது... நின்றது, நடிப்பா...?

தெரியவில்லை. ஹெர்குல்லுக்கு சுத்தமாய் தெரியவில்லை.

ஆனால் தெரிந்துக் கொண்டே தீர வேண்டும் எனும் நெருப்பு அவருக்குள் கொழுந்து விட ஆரம்பித்தது.

## 16

கெர்டா கிறிஸ்டோ, அணிந்திருந்த கறுப்பு முழு அங்கியினை, தலை வழியே அவிழ்த்து, அருகிலிருந்த நாற்காலியில் போட்டார். அவர் கண்கள் நிச்சயமற்று மிகவும் பரிதாபகரமாக இருந்தன. சொன்னார்: "எனக்கு எதுவுமே விளங்க மாட்டேன் என்கிறதே. உண்மையாகச் சொல்கிறேன். மனம், ஜடம் போலுள்ளது. எதிலுமே பிடித்தமில்லை."

"தெரியும் கெர்டா. புரிகிறது" என்ற திருமதி எலிசி பீட்டர், மிக்க ஆறுதலாக அதே சமயம் துணிவோடு பேசினார். ஆசை ஆசையாய் நேசித்தவரை மரணத்தில் பறிகொடுத்து நிற்கும் அபாக்கியவதிகளின் துக்கத்தினை எப்படித் தணித்துப் பரிகாரம் தருவது என்பதில் கை தேர்ந்தவர் எலிசி. 'எலிசி, இழப்பின் பொருட்டு எழும் துக்கத்தினைப் போக்கவல்ல அருமருந்து' என்பது கெர்டா குடும்பத்தின் ஒட்டுமொத்த கருத்து. எலிசி - கெர்டாவின் சகோதரி.

ஆறுதல் கூற வந்திருந்த எலிசி, இப்பொழுது கெர்டாவின் படுக்கையிறையில், படுத்தேக் கிடந்த கெர்டாவின் அருகாமையில் அமர்ந்திருந்தார். நம்பகத் தன்மையுடனும் வன்மையுடனும் திகழும் நல்ல உயரமான பெண்மணி. இப்போது கெர்டாவை, இப்படி நேர்ந்து விட்டதே என்பதால் சிறு அரவணைப்புடனும், இதற்காக இந்த அளவுக்கா உடைந்துப் போவது என்பதால் சிறு எரிச்சலுடனும் பார்த்துக் கொண்டிருந்தார் எலிசி.

'பாவம், பரிதாபம், என் சகோதரி' - மனப்பூர்வமாய் வருந்தினார் எலிசி. மிகக் கொடூர முறையிலா தன் கணவனை இவள் இழக்க வேண்டும்? இதோ, இப்போது கூட, சம்பவம் நடந்து முடிந்து ஆறி விட்ட இன்று கூட, அதிர்வுகளெல்லாம் வடிந்திருக்க வேண்டிய நாலைந்து நாட்கள் கழித்துக் கூட, அரங்கேறியுள்ள நிகழ்வு குறித்து அர்த்தமாகாமல், சம்பந்தமேபடாமல், சிக்கிக் கொண்டுள்ள விபரீதம் விளங்காமல் இருக்கிறாள்! திருமதி பீட்டருக்கும் தெரியும், கெர்டா விஷயங்களை உள் வாங்கிப் புரிந்துக் கொள்வதில், மிக மிக மெதுவான அசமஞ்சம் என்று! கூட, இக்கொலை விஷயத்தில், தாள முடியாத அதிர்ச்சி வேறு!

அமைதியைக் கலைக்க தனக்கே உரிய சுறுசுறுப்பான குரலில் ஃபலிசி சொன்னார்: "அடுத்த வாரம் ஜானின் மரணத்திற்கு துக்கம் அனுஷ்டிக்க வேண்டும். ஏற்பாடுகள் ஆரம்பமாக வேண்டும்."

"ஒருவரின் இழப்பை மறுபடியும் மீட்டிப் பார்த்து அழும் துக்க அனுஷ்டிப்பு நாள், ஜானுக்குப் பிடிக்காத ஒன்று. மறுபடியும் கலங்கி அழ என்று வழி வகுக்கும் இப்படிப்பட்ட நாள் தேவையே இல்லை என்று என்னிடம் ஒரு முறை சொல்லியிருக்கிறார்."

இப்படிக் குறிப்பிட்ட கெர்டா, கூடவே, ஜானின் மரணத்தை ஒட்டி துக்கம் அனுஷ்டிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமா என தனக்குள்ளே கேட்டும் கொண்டார். இதற்கு யாரிடம் போய் ஆலோசனைக் கேட்பது? 'ஜான்..!' - தன்னிச்சையாய் நினைத்துக் கொண்டவரின் நெஞ்சம் விம்மியது. 'ஜான் தான் வேண்டும். நான் என்ன செய்வது என வழிகாட்ட ஜான் தான் வேண்டும்.'

ஆனால் இனி இந்த பூமியில் ஜான் வரவே முடியாதே...!

முடியாது.

முடியாது.

முடியாது.

பொங்கி வரும் கண்ணீரை அடை காத்தார்.

ஆறி ஆடை தட்டும் மட்டன் - திரவ நிலையிலிருந்து ஆறி திட நிலைக்குப் போகும் அந்த மட்டன் - ஜானின் மருத்துவ அறை, ஏதோ சூரிய மண்டலம் ஒன்று பேராசையுடன் பிறப்பது போல் அதிரடியாய் திறக்கப்படும் ஓசை - ரெண்டு ரெண்டு படிக்கட்டுகளாய் தாண்டி தலை தெறிக்க ஓடி வரும் ஜான் - ஓட்டம் - அவசரம் - எப்போதும் - துடிதுடிப்பு நிறைந்து, உயிரோட்டம் கொண்டு ஓடும் ஓட்டம் - உயிரோட்டம் கொண்டு - வீட்டிலிருந்தாலும் இல்லா விட்டாலும், வீட்டிலே இருப்பது போலவே பிரமை தந்து எல்லோரையும் ஆட்டிப் படைக்கும் உயிரோட்டம் கொண்டு... ... ...

உயிரோட்டம்.

இப்போது?

நீச்சல் குளத்தின் விளிம்பில் சுருண்டுக் கிடந்த ஜான் - தரையின் விளம்பில் வழிந்து, குளத்து நீல நீரைச் சொட்டுச் சொட்டாய் சிகப்பாக்கிய ஜானின் ரத்தம் - கையில் சுமந்து நின்ற துப்பாக்கி...

இவை எல்லாம் மூச்சு நிறுத்தும் துர்சொப்பனங்கள். கெட்டக் கனவுகள். இதோ, இதோ, விழிக்கப் போகிறார். தூக்கம் கலைந்து

'ஹக்..' கென்று வியர்த்து விறுவிறுக்க விக்கித்து எழுந்திருக்கப் போகிறார். ஜான் மரணித்தக் கனவுகளும் கலையப் போகின்றன. ஜான் பக்கத்தில் படுத்திருக்கப் போகிறார்.

கை கூடாத ஆதங்கத்திலிருந்த தெளிவற்ற கெர்டாவை, எலிசியின் ஊக்கமூட்டும் வார்த்தைகள் தட்டின. ''மரண விசாரணையின் போது வேறு வண்ண உடை ஏதும் உடுத்தாதே கெர்டா. கறுப்புடை தான் போட்டுச் செல்ல வேண்டும் என்பது பொது விதி.''

பய விழிகள் இன்னும் விரிய, ''கொடூரமான மரண விசாரணை'' என்றார் கெர்டா, நடுங்கியபடி.

''உனக்கு இந்த அவலம் அதிகம் தான் அன்பே...'' என்றார் எலிசி. ''நடக்கட்டும். எதிர்கொள். பயப்படாதே. கூடிய சீக்கிரம் முடியும். விடியும். பிறகு என்னுடன் வந்து விடு. முழு மனதுடன் சொல்கிறேன். மறுக்காதே. உன்னை வெகு சிரத்தையோடு நாங்கள் கவனித்துக் கொள்கிறோம்.''

தெளிவும் இலக்கும் அற்று இருந்த கெர்டாவின் சிந்தனைகள் இன்னும் இறுகி மரத்தன. அலறலாய்க் கேட்டார் : ''என்னத்துக்கு நான் வாழணும்...? ஜான் இல்லாமல் நான் எப்படி இயங்குவது...?''

இவற்றுக்கான சரியான விடை எலிசாவுக்குத் தெரியும். நேரம் வரட்டும் எனச் சொல்லக் காத்திருந்தார். இப்போது சொன்னார் : ''உனக்கு உன் குழந்தைகள் உள்ளன. ஞாபகமிருக்கட்டும். அவற்றுக்காக நீ வாழ்ந்தாக வேண்டும்.''

ஸெனா தாளாத துயரத்தில் அழுதுக் கொண்டே இருந்தது. மூக்கின் வழி வழிந்த கெட்டித் திரவத்தைப் புறங்கையால் துடைத்துக் கன்னங்களில் ஈஷியபடி, ''டாடீஈஈஈஈஈ...'' என அழுதுக் கொண்டே.யிருந்தது. ''என் அப்பா செத்து விட்டார்'' என பரிதாபமாய் கத்தியபடி, தன் மெத்தையில் புதைந்து அழுதுக் கொண்டேயிருந்தது.

விசாரிக்கும் உத்வேகத்தில், தன் துடிப்பான முகத்தில் பிரகாசமே இன்றி இருந்த டெரன்ஸ், இறுகிப் போயிருந்தான். அழவில்லை.

இருவரிடமும், துப்பாக்கி உபயோகிக்கும் போது எதிர்பாராது நேர்ந்து விட்ட ஒரு விபத்தால் ஜான் இறந்து விட்டார் என்றே சொல்லியிருந்தார் கெர்டா.

சமயோஜிதம் மிகுந்த ஜானின் காரியதரிசியான பெரில் கொலின்ஸ், காலை செய்தித்தாள்களை, அவற்றைப் போடும் பையனிடமிருந்து பறிமுதல் செய்து, குழந்தைகளின் கண்களில் படாமல் பார்த்துக் கொண்டார். வேலையாட்கள் அனைவரையும்,

கொலை பற்றி வீட்டில், அதுவும் குழந்தைகளுக்கு முன் மூச்சு விடக் கூடாது என கண்டிப்பாய் எச்சரித்திருந்தார். பெரில் - கனிவும், சமயோஜிதமும் ஒருங்கே அளித்து வரும் புத்திசாலி.

இருட்டாயிருந்த அறைக்குள் அமர்ந்திருந்த தன் தாயாரை நாடி வந்த டெரன்ஸ் - இறுக்கமாய் வாயை மூடி, முகமெங்கும் சோகைத் தட்டி, சோர்வாயிருந்தான். இறுகிய அவன் முகத்தில் எதையோ அடக்கி வைத்த வன்மமும் அதைக் கொட்டி விட வேண்டும் எனும் வெறியும் தெறித்தன. இப்போது அவன் கேட்ட கேள்வியில், வன்மத்துக்குண்டான காரணமும் விளங்கிற்று.

''அப்பா ஏன் சுடப்பட்டார்...?''

''அது ஒரு விபத்து டெரி. விட்டு விடு. அதைப் பற்றி எ.. எ.. என்... என்னால் பேச முடியாது.''

''விட மாட்டேன்.''

''நெஞ்சு உடைகிறது டெரி, அதைப்பற்றிப் பேசினால்...!''

''அது விபத்து அல்ல. எது உண்மையில்லையோ அதை ஏன் என்னிடம் சொல்லி என்னை நம்ப வைக்கப் பார்க்கிறாய்..? அப்பா கொல்லப்பட்டுள்ளார். உண்டா இல்லையா....?''

''டெ...ரி...''

''சும்மா நிறுத்து. ஏன் பொய் பேசுகிறாய். அப்பா கொலை செய்யப்பட்டுள்ளார். செய்தித்தாள்கள் சொல்கின்றன.''

''டெரி. உனக்கு எப்படி செய்தித்தாள் கிடைத்தது. பெரில்'விடம்... ... ...''

''என்ன பெரில்'விடம்..? செய்தித்தாள்களை மறைக்கச் சொல்லியிருந்தாயாக்கும்...!''

''ஆமாம், ஆமாம். உன் கைகளுக்கு எப்படிக் கிடைத்தது...?''

என்னால் முடியாதது எது எனும் கிண்டல் மிக, சில முறை இகழ்ச்சியாய் தலையசைத்துக் காட்டினான் டெரி. ''வெளியே போய் ஒன்று வாங்கி வந்தேன். போதுமா. செய்தித்தாளில் ஏதோ இருக்கிறது என்றும் அது என்னிடமிருந்து மறைக்கப்படுகின்றது என்றும் சந்தேகப்பட்டேன். இல்லையென்றால் ஏன் செய்தித்தாள்கள், தொடர்ந்து, தினம் தினம் என்னிடமிருந்து மறைக்கப்பட வேண்டும்?''

டெரன்ஸிடமிருந்து உண்மைகளை மறைப்பது இயலாது. அது நல்லதுமல்ல. தெரிந்தால் இப்படித்தான் வெடிப்பான். பற்று ஏதுமற்ற வெறும் அறிவியல் சார்ந்தே இயங்கும் அவனுடைய வேறுபட்ட தாகம்

- ஆவல் - எப்போதும் தணிக்கப்பட வேண்டும். அதே அறிவியல் பூர்வமாக "அப்பா ஏனம்மா கொல்லப்பட்டார்?" என காரணம் தேடினான் டெரன்ஸ்.

இந்நிலையில் உடைந்துப் போனார் கெர்டா. கோப வெறி பிடித்தவராய் கத்தலானார் : "போடா. அது பற்றிக் கேட்காதே. கொலை பற்றிப் பேசாதே. நான் எந்த அளவுக்குப் புண் பட்டிருக்கிறேன் என தெரியுமா உனக்கு...? அந்தப் புண்ணில் வேல் பாய்ச்ச நினைக்காதே. மறுபடி மறுபடி நினைக்க வைக்காதே. போ. போடா. அது பற்றி என்னால் பேச முடியாது. மிகக் கொடூரமானது அது."

அழுதார்.

"அழலாம். ஆனால் விட முடியாது. விட மாட்டார்கள். தெரியுமா?" - பதிலுக்கு விடலை டெரன்ஸின் இள ரத்தமும் குதித்தது. "கண்டுபிடித்தே தீருவார்கள். இல்லையா...? கண்டு பிடித்தாக வேண்டும். அவசியம். முக்கியம்."

காரணம் நிறைந்தப் பேச்சு. பற்றுதல் தள்ளி வைக்கப்பட்டு முடிவு நாடும் முதிர்ச்சி. டெரன்ஸின் இம்முதிர் நிலை, முதிர்ச்சியே அற்ற கெர்டாவுக்கு ஏறாமல், அவரைக் கதறிக் கதறி அழத் தூண்டியது. "பார்த்தாயா எலிசி" என்று சாட்சிக்கு சகோதரியை அழைத்துக் கொண்டு அழுதார் : "கொஞ்சமாவது கரிசனை இருக்கிறதா அவனுக்கு? அவனுக்கு ஈவிரக்கமே கிடையாது. கேள்விகள் கேட்க வேண்டும். அது எப்படி வந்தது இது எப்படி வந்தது என்று. அவ்வளவு தான். சொட்டுக் கண்ணீராவது விட்டிருக்கிறானா பார். சே."

எலிசியின் குறுக்கீட்டை ஒதுக்கித் தள்ளி விட்டு விறுவிறுவென வெளியேறினான் டெரி. இக்கூட்டம் வேண்டாமென்று வெளியேறிய தனிமை நாடும் விடலை.

எப்போதும் தனிமையையே அதிகம் நேசித்திருக்கிறான் டெரன்ஸ். அப்போதெல்லாம் வதைக்காத தனிமை இப்போது வதைத்தது.

அந்தத் தனிமை வேறு. இன்றைய தனிமை வேறு. அதிமேதாவித் தனமாய் நடந்துள்ள கொடுமையின் விலாசத்தை, காரண காரியத்துடனும், தர்க்க ரீதியாகவும் விளக்கவல்ல ஒரு துணை கிடைக்கும் வரை, இனி தனிமை, கொடுமை தான் என பயந்தான் டெரி.

நாளை இவனும் இவன் நண்பன் நிக்கோல்ஸனும், நைட்ரோ-கிளிசரின் தயாரிக்கப் போவதாய் குதூகல ஏற்பாடு. உடலெங்கும் மின்சாரம் பாயும் உணர்வுடன் மிக சிலிர்ப்புடன் நாளைய தேதியை எதிர்பார்த்திருந்தான் சிறுவன். அந்த உத்வேகம் இப்போது மடிந்துப் போய் விட்டது. நைட்ரோ-கிளிசரின் செய்யாவிட்டால் யார் அழுதது எனும் மனோநிலைக்கு ஒரு நொடியில் - தன் தந்தை கொலை செய்யப்பட்டுள்ளார் எனும் செய்தி அறைந்த நொடியில் - போய் விட்டான் டெரி.

மாபெரும் அதிர்ச்சியில் தாக்கப்பட்டதாய் உணர்ந்தான் டெரன்ஸ். அதிகம் நேசித்த வேதியியல் ஆய்வுகளே அவனுக்கு அலுத்துப் போனதாய் பட்டது.

'அப்பா - கொலை செய்யப்பட்டு விட்டார்.'

நினைக்க நினைக்க ஏதோ ஒன்று சுழன்றடித்து உள்ளிறங்கி, ஆழமாய் வேர் பரப்பி, விறுவிறுவென வளர்ந்து, நிலைகொள்ளாமல் ஆக்கி... ... ... அது, மெல்ல மெல்ல வளரும் நிரந்தரக் கோபம்! குரோதம்!

★ ★ ★ ★

படுக்கையறைக் கதவைத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்த பெரில், ''இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் வந்துள்ளார்'' என்றார். பயப் பெருமூச்சு விட்டு, பரிதாபமாய் பார்த்த கெர்டாவுக்கு அமைதி தர, விரைவாய் சொன்னார்: ''உங்களை விசாரணை என்று அழைத்து தொந்தரவு பண்ணப் போவதில்லை என்றார். டாக்டர் கிறிஸ்டோ'வின் மருத்துவத் தொழில் சம்பந்தப்பட்ட வாடிக்கையான கேள்விகள் தான் இன்று கேட்க உள்ளாராம். எனக்கு சமாளிக்கத் தெரியும். என்ன வேண்டுமோ அதை நான் சொல்லிக் கொள்கிறேன். கிளம்பும் போது மட்டும் உங்களை சந்தித்து சில வார்த்தைகள் பேசிச் செல்வார். கவலை வேண்டாம். சரியா...?''

''ஓ...! மிக்க நன்றி கொலின்ஸ்.''

விரைவாக வெளியேறிய பெரில் கொலின்ஸைப் பார்த்தபடி, ''இப்பொழுது என்னுடைய முழு தைரியமும், பெரில் தான். சர்வ சாதாரணமானவள்'' என்றார் கெர்டா.

''நானும் கவனித்தேன். அற்புதமான காரியதரிசி. நிச்சயமாய். வெள்ளை மனம் கொண்ட ஏழை பெண்'' என்றார் எலிசி. ''ஆனால்

கெர்டா...'' என்று ஏதோ ஓர் ஆலோசனை தரும் தொனியில் சொன்னார் : ''ஜான் போன்ற அதி சுந்தரன் முதலாளியாய் கிடைத்து விட்டால், தான் செய்யும் தொழிலில் இது போன்ற ஈடுபாடு ஓர் இளம் பெண்ணிடம் மண்டிக் கிடப்பதில் ஆச்சரியமொன்றுமில்லையே!''

தன் கவலை மறந்து தணலாய் எழுந்தார் கெர்டா: ''என்ன பேசுகிறாய் எலிசி? பேசியதன் அர்த்தம் உணர்ந்து தான் சொன்னாயா? ஜான் அப்படிப்பட்டவர் கிடையாது. என்றுமே அப்படி இருந்தவரும் அல்ல. பணம் காசு இல்லாத இளைய காரியதரிசி ஒருத்திக் கிடைத்து விட்டால், உடனே அவளைப் படுக்கைக்கு அழைத்திருப்பார் என்ற அர்த்தத்திலன்றோ பேசி விட்டாய்...! கீழ்த்தரமான இந்த நினைப்பே அவருக்கு வந்தது கிடையாது. ஏனிப்படி என்னைப் புண்படுத்தி விட்டாய்? அதுவும் இந்த நிலையில்?''

''அடடா...! இந்த அளவுக்கு எடுத்துக் கொள்ளாதே கெர்டா. மன்னித்து விடு. பொதுவான ஆண் குணத்தினை வைத்துச் சொன்னேன். விட்டு விடு.''

ஜானின் மருத்துவ அறையில், அதிர்வே அற்று ஒரு யுத்தத்தை எதிர் கொள்ளவும் தயார் என்று விசாரணையை நோக்கியிருந்த பெரில்'லின் பார்வையைச் சந்திக்கலானார் க்ரேஞ்ஜ்.

'இப்பார்வை, எத்தகைய போரையும் சந்திக்கவல்ல வல்லமை மிகும் பார்வை. இது தான் இவரின் இயற்கையான சுபாவம்' என்று குறித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். 'எனவே, திடகாத்திரமான பெரில்லின் மனோநிலையை வைத்துக் கொண்டு ஜானையும் இவரையும் முடிச்சுப் போட்டுப் பார்க்கக் கூடாது' என நினைத்தார் இன்ஸ்பெக்டர். 'இருவரின் அபரிமிதமான பால் அழகினால், ஒருவருக்கொருவர் ஈர்ப்பு வேண்டுமானால் இருந்திருக்கலாம்; எனவே ஒருவருக்கொருவர் இனிமையாயும் நடந்துக் கொண்டிருக்க லாம். இப்படி நினைக்க வழி உண்டு. ஆனால் நெருக்கம் மிகுந்து... தனிமை சாதகங்கள் உதவி... ம்ம்.. வாய்ப்பில்லை.'

இன்ஸ்பெக்டரின் கேள்விகளுக்கு பெரில் அளித்த பதில்கள் தான், ஸ்படிக சுத்தம் என்பதற்கான உதாரணம். அத்தனை தெளிவு. ஜானின் மருத்துவப் பணி பற்றிய ஒவ்வொரு விவரங்களையும் சர்வ சாதரணமாயும், விடைகளை ஆயத்தமாய் விரல் நுனியில் வைத்துக் கொண்டு உடனடியாயும் தந்துக் கொண்டிருந்தார் பெரில். ஒரு நிலையில் கேள்விகளின் தளத்தினை மிருதுவாக மாற்றிக் கொண்டு,

ஜானுக்கும் கொர்டாவுக்கும் இடையே நிலவிய உறவு முறையின் நிலை பற்றி ஆழம் பார்க்க ஆரம்பித்தார் க்ரேஞ்ஜ். இருவரும் ஒருவரை ஒருவர் அற்புதமாய் புரிந்துக் கொன்டு தான் வாழ்க்கை நடத்தி வந்ததாய் அடித்துச் சொன்னார் பெரில்.

''இருவரும், வழக்கமான தம்பதியினரைப் போல அடிக்கடி சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டதாய் தெரிகிறதே'' - இதை ஒரு பொய்யக் கேள்வியாய் முன் வைத்தார் இன்ஸ்பெக்டர்.

''எனக்குத் தெரிந்து அவர்களுக்குள் எந்தப் பூசலும் இருந்ததில்லை. திருமதி ஜான் தன் கணவனைப் பூஜித்துத் தான் வந்தார். கெஞ்சும் பாணியில் தான் டாக்டருடன் பேசுவார். சொல்லப்போனால் ஒர் அடிமையாக. இப்படிச் சொல்வது மிகையல்ல.''

இந்தப் பதிலின் நெடுகிலும், பெரில்'லின் குரலில் தொக்கி நின்ற அவமதிப்பை-இகழ்ச்சியை, இன்ஸ்பெக்டரால் கேட்க முடிந்தது!

'பெண்ணுரிமைக் கொள்கை மிகுந்தவளாய் இருக்க வேண்டும், இந்தப் பெண்' - நினைத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். கேட்டார்: ''தன் சொந்தக் காலில் கொர்டா நின்றதே இல்லையா...? தன் விருப்பு வெறுப்புக்காகவாவது...!''

''கிடையாது. கொர்டாவின் உலகம் ஒவ்வொரு நொடியும் ஜானைச் சார்ந்தே சுழன்றுக் கொண்டிருந்தது. இதில் அவருக்கென்று விருப்பு வெறுப்பு ஏதும் இருந்ததில்லை.''

''கொடுங்கோலாட்சி...?''

இன்ஸ்பெக்டரின் இந்த வர்ணனையை நெஞ்சில் பதித்துக் கொண்டார் பெரில். ''அப்படியும் சொல்லிவிட முடியாது இன்ஸ்பெக்டர். ஜான், கொர்டாவைப் படுத்தியதெல்லாம் கிடையாது. கொர்டா விஷயத்தில், ஜான் சுயநலவாதி. தன் முடிவுகளுக்கும் தன் எதிர்பார்ப்புக்கும் கொர்டா எப்போதும் உடன்படுபவள் என்ற எழுதா சட்டம் இயற்றி விட்டவர்.''

''நோயாளிகளுடன் இப்படி அப்படி ஏதாவது - அதாவது பெண் நோயாளிகளிடம்...? என்னிடம் ஒளிவு மறைவற்றுப் பேசுவதில் யோசிக்க வேண்டாம் கொலின்...! இவ்வழியில் மருத்துவர்களுக்கு வாய்ப்புக்கள் அதிகம் என்பது எல்லோருக்கும் தெரியும்.''

''ஓ... 'அப்படிப்பட்ட' விஷயமா...?'' - பெரில்'லின் குரல் வெறுப்பானது. ''டாக்டர் கிறிஸ்டோ பெண்கள் விஷயத்தில் பலஹீனமானவர் அல்ல. அவருக்குத் தொழில் - தெய்வம். அத்தனை

சிரத்தை எடுத்துக் கொண்டு மருத்துவத் தொழில் செய்து வந்தார். நோயாளிகளிடம் மிகுந்த மதிப்பு செலுத்துபவர்'' என்றவர், முடிவாய் ஸ்திரமாய் சொன்னார்: ''அவர் ஓர் அபூர்வமான மருத்துவர். நோயாளிகளின் வரப்பிரசாதம்.''

பெரில் குரலில் பெருமிதம் பொங்கி நின்றது.

''இவ்வளவு சொல்லியும் இவ்விஷயத்தில் இன்னும் கேட்க வேண்டியிருக்கிறது பெரில். ஜான் ஏதாவது பெண்ணிடம் ஏடாகூடமாய் மாட்டிக் கொண்டதுண்டா? இது குறித்த தகவல் ஏதேனும் தெரிந்தால் அது வேண்டும் பெரில். முதலாளிக்கு விசுவாசியாய் இருக்க விரும்பி மறைத்து விடாதீர்கள்.''

''தெரிந்தவற்றையெல்லாம் தந்துக் கொண்டு தானிருக்கிறேன் இன்ஸ்பெக்டர். எனக்குத் தெரிந்து அப்படி ஏதுமில்லை.''

'பட்டென்ற பதில். இவளுக்குத் தெரியாமல் கூட இருக்கலாம். எனவே, இருக்காது என ஊகித்து பதில் சொல்கிறாள். நாசூக்கற்றப் பெண்.'

இப்படி எண்ணிய இன்ஸ்பெக்டர், விஷயத்தில் இன்னும் கொஞ்சம் உள்ளிறங்கி கேள்வி தொடுத்துப் பார்த்தார் : ''மிஸ் ஹென்ரீட்டா பற்றி?'' -

பெரில் உதடுகள் இப்போது பட்டென பதில் தராது இறுகிப் பூட்டியே இருந்தன. சில நொடிகளின் நழுவலில், ''அவர் இக்குடும்பத்தின் சிறந்த நெருங்கிய நண்பர்'' என்றார்.

''அது தெரியும். ரீட்டாவினால், ஜானுக்கும் திருமதி ஜானுக்கும் இடையே குழப்பங்கள். கத்தல்கள்.... இது குறித்து?''

''நிச்சயமாய், எந்தக் கத்தலும் கதறலும் நிகழ்ந்தது கிடையாது'' - பதில் அழுத்தந்திருத்தமாய் வந்து விழுந்தது.

''வெரோனிக்கா க்ரே பற்றி...?''

''வெரோனிக்கா க்ரே..?'' - சுத்தமான ஆச்சரியம் பெரில்'லின் குரலில் இருந்தது. ''அப்படியொரு பெயரை இந்தக் குடும்பத்தில் நான் கேட்டதே கிடையாதே.''

''வெரோனிக்கா க்ரே, டாக்டர் ஜானின் நெருங்கிய தோழியாய் இருந்திருக்கிறார், இல்லையா?''

''என்னைக் கேட்டால்?'' - கேள்விக்குக் கேள்வியையே பதிலாக்கிய பெரில், ''ஜான் குடும்பத்தில் இப்பெயர் ஒரு முறை கூட

.அடிபடாவிட்டாலும், வெரோனிக்கா...'' என்று விட்டத்தைப் பார்த்து சிந்தனையாய் சொல்லிக் கொண்டவர், ''இப்பெயர், சமீபக் காலத்தில் எனக்குப் பரிச்சியமாகிய பெயராய் தோன்றுகின்றது'' என்றார்.

''இவர் ஒரு நடிகை. சினிமா பிரபலம்.''

முடிச்சிட்டிருந்த பெரில்'லின் புருவங்கள் கழன்றன. ''ஆமாமாம். நடிகை. எதனால் வெரோனிக்கா எனும் பெயர் எனக்குள் பிரசித்தமாய் உள்ளது என்று சில நொடிகள் வியந்து விட்டேன்'' என்றவர், ''ஆனால் ஜானுக்கு இந்நடிகையைத் தெரிந்திருந்த விவரமெல்லாம் நானறியேன்'' என்றார், டாக்டர் ஜான் தன்னிடம் இது பற்றியெல்லாம் மறைத்துள்ளாரோ என்றுதித்த புதிய எண்ணத்துடன்.

இன்ஸ்பெக்டர், தன் விசாரணையின் தளத்தினைப் பெண்கள் பற்றியதிலிருந்து மாற்றிக் கொண்டு, சென்ற வார சனியன்று என்ன நிலையில் ஜான் இருந்தார் என்று அறிந்துக் கொள்வதில் திசை திருப்பிக் கொண்டார். இப்பகுதி விசாரணையில், முதன் துறையாக, பெரில்'லின் ஆணித்தரமான நிச்சயமான பதில்கள், உறுதியின்றித் தடுமாறி வந்தன. மெதுவாக சக்தியற்றுத்தான் பேசினார்: ''வழக்கம் போல் அவர் இல்லை.''

''அப்படியென்றால்...?''

''வழக்கமாய் நடந்துக் கொள்வது போலில்லை.''

''என்ன வித்தியாசமிருந்தது?''

''குழம்பியிருந்தார். தன் கடைசி நோயாளி வெகு நேரமாய் காத்திருப்பது தெரிந்தும், அது குறித்து நானும் நினைவுபடுத்தியும், அந்த நோயாளியை உள்ளே அழைக்க வெகு நேரம் ஆக்கினார். மணிக்கணக்காய்.''

''அந்த நெடிய இடைவெளியில் என்ன செய்துக் கொண்டிருந்தார்?''

''இதோ இந்த அவருடைய நாற்காலியில் தான் புதைந்துக் கிடந்தார். கடைசி நோயாளி என்றால் படு வேகமாக அவரை விசாரித்து விட்டு, புயல் போல் கிளம்பி ஓடிவிடுவது தான் அவரின் வாடிக்கை. அப்படி நடக்கவில்லை. ஏதோ அவர் மூளையை ஆக்கிரமித்துள்ளதாக நிச்சயமாய் நம்பினேன்.''

எதனால் என்பதில் ஸ்திரமற்று இருந்தார் பெரில்.

இப்படியாக தளம் மாற்றித் தளம் ஓடிக் கொண்டிருந்த விசாரணையில் இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜுக்குக் கடுகத்தனையும் திருப்தி வரவில்லை. கொலைக்கான ஏதாவது இலக்கு பொறித் தட்ட வேண்டும். அப்பொழுது தான் வழக்கு நகரும்; அரசுத் தரப்பிலும் முறைப்படி வழக்குத் தொடர முடியும். குசலம் விசாரிப்பது போல நீளும் உரையாடல்களை வைத்துக் கொண்டு ஒன்றும் செய்ய இயலாது.

இன்ஸ்பெக்டரைப் பொறுத்தமட்டில், அவர் சர்வ நிச்சயமாய் ஒரே ஒரு நிலைப்பாட்டில் தான் உள்ளார். அது: கெர்டாதான், தனது கணவரான ஜானைச் சுட்டுக் கொன்றுள்ளார். கணவர் மீதான பொறாமை தான் கொலைக்கான இலக்கு எனும் பிரபல இலக்கையே கெர்டாவுடனும் பொறுத்தி வைத்திருந்தாலும், இவ்வழியில் விசாரணைக்குத் தெம்பூட்ட இது வரை எந்தத் தடயமும் கையகப்பட வில்லை. தலைமைக் காவலர் (போலீஸ் சார்ஜண்ட்) கூம்பஸ், வீட்டுப் பணியாட்கள் அனைவரையும் புரட்டியெடுத்துக் கேள்விகள் தொடுத்துக் கொண்டிருந்தாலும், எல்லா பதில்களும், பெரில் பதில்களின் தரத்திலேயே தான் நிற்கின்றன. 'திருமதி கெர்டா, தன் கணவன் நடக்கும் நிலத்தின் மண்ணை எடுத்து பாத்திரத்தில் வைத்துப் பூஜித்து வந்தார்' என்பதே பதில்.

எனவே, இங்கு, ஹார்லி தெருவில், கொலைக்களன் அமைக்கப் பட்டிருக்கும் என கிளறுவதில் ஏதும் கிட்ட வாய்ப்பில்லை எனப் புரிந்தது இன்ஸ்பெக்டருக்கு. என்ன நடந்ததோ, அது, சந்தேகத்துக் கிடமின்றி ஹாலோவில் தான் நடந்துள்ளது. இவ்விதமாய் ஹாலோவை நினைத்த மாத்திரத்திலேயே க்ரேஞ்ஜுக்குள் ஓர் அமைதியற்ற மனோ நிலை எழுந்தது. 'பல விபரீத மனிதர்கள் அங்குக் குழுமிருந்திருக்கிறார்கள்.'

மேஜை மீதிருந்த தொலைபேசி சிணுங்க, ஒலிக்குழலை காலின்ஸ் எடுத்தார். மறுமுனை குரலைக் கேட்டு விட்டு, ''உங்களுக்குத் தான் இன்ஸ்பெக்ட்ர்'' என்று செவிக்குழலைத் தந்தார்.

''யாரது...? க்ரேஞ்ஜ் தான் பேசுகிறேன். என்னது...? என்ன, என்ன, என்ன சொல்கிறீர்கள்...?'' - நிதானமாக சென்றுக் கொண்டி ருந்த இன்ஸ்பெக்டரின் குரலில் இப்பொழுது மளமளவென தொற்றிக் கொண்ட அவசரத்துக்கும் பரபரப்புக்குமான காரணம்

விளங்காது, என்ன காரணமாயிருக்கும் எனும் ஒரு வித ஆர்வ மிகுதியால், க்ரேஞ்ஜைத் தீவிரமாய் கவனித்தார் காலின்ஸ். எனினும், மரமாய் இறுகி உணர்வுகளைப் பிரதிபலிக்காத இன்ஸ்பெக்டரின் முகத்திலிருந்து எதையும் படிக்க முடியவில்லை. அதிருப்தி மேலோங்கிய சிங்க உறுமலோடு, மறுமுனையை எதிர் கொண்டபடியிருந்தார் க்ரேஞ்ஜ்.

''சொல்லுங்கள், சொல்லுங்கள், எனக்குப் புரிகின்றது. ஓஓ...! நம்பத் தகுந்த தகவல் தானே இது? பிசகு ஏற்பட வாய்ப்பில்லையே? ம்? சரி. வியப்பாயுள்ளது. சரி, சரி. நான் உடனடியாய் வருகிறேன். இங்கு விசாரணையை ஏறக்குறைய முடித்து விட்டேன்.''

ஒலிக்குழலை அதனிடத்தில் பொருத்தி விட்டு சில நொடிகள் எவ்வித இயக்கமுமின்றி இருந்தார் இன்ஸ்பெக்டர். தன்னுள் உதித்திருந்த ஆர்வமிகுதியோடு இன்ஸ்பெக்டரைப் பார்த்த வண்ணமிருந்தார் பெரில்.

தன்னைத் தானே நிகழ்காலத்திற்குள் புகுத்திக் கொண்ட க்ரேஞ்ஜ், இது வரை துள்ளிக் கொண்டிருந்த தன் குரல் வளமிழந்து கேட்டார்: ''இந்த சமாசாரம் பற்றி உங்களுக்கு எவ்வித ஊகங்களும் இல்லை என நினைக்கிறேன், பெரில்....?''

''எது...?''

''அதாவது, யார் ஜானைக் கொலை செய்திருக்கக் கூடும் என்பது பற்றி...! ஏதேனும் ஊகங்கள்...?''

பின்வாங்காமல் சொன்னார்: ''கிஞ்சித்தும் எனக்கு யார் மீதும் அப்படி ஒரு கண்ணோட்டமே இல்லை இன்ஸ்பெக்டர்.''

பெரில் காதுகளுக்குள் போகட்டும் எனும் நோக்கில், மெதுவாய் இன்ஸ்பெக்டர் சொன்னார் : ''கொல்லப்பட்ட ஜானின் உடலைக் கண்டெடுத்த போது, அருகில், திருமதி ஜான், தன் கையில் ஒரு துப்பாக்கியை ஏந்தியபடி நின்றுக் கொண்டிருந்தார்... ... ...''

இந்த வாக்கியத்தை, வேண்டுமென்றே முடிக்காது விட்டுவிட்டுக் காத்திருந்தார் இன்ஸ்பெக்டர்.

எதிர்பார்த்தபடி பெரில்'லிடமிருந்து தவறாது பதில் வாக்குவாதம் எழுந்தது. சூடாக அல்ல, வெகு நிதானமாக, தர்க்கரீதியாக!

''இதை வைத்துக் கொண்டு திருமதி ஜான் தான் டாக்டரைக் கொன்றிருப்பார் என நீங்கள் முடிவு கட்டினீர்களென்றால், அது முற்றிலும் தவறு என்று தான் நான் சொல்ல வேண்டி வரும். திருமதி

ஜானுக்கு மூர்க்கத்தனம் தெரியாது. வன்முறை வராது. பயந்த சுபாவம். பரம சாது. அடங்கியே வளர்ந்துள்ளவர். இவைமட்டுமல்ல இன்ஸ்பெக்டர். திருமதி ஜான், டாக்டரின் கட்டைவிரல் அசைவுக்குக் கட்டுப்பட்டே சுவாசித்தவர். அதையே விரும்பியவரும் கூட. இப்படிப்பட்டவர் போய் திரு ஜானைக் கொன்றிருப்பார் என நொடியேனும் நினைத்துப் பார்ப்பது கூட எனக்கு அபத்தமாயுள்ளது.''

''கெர்டா இல்லை என்பது இந்த அளவு ஊர்ஜிதமான ஒன்று எனில், ஜானைக் கொன்றது தான் யார்...?''

பெரில் பொறுமை குலையாது சொன்னார்: ''எனக்கு எந்தக் கருத்தும் இல்லை.''

எழுந்த இன்ஸ்பெக்டர் கிளம்ப ஆயத்தமானார்.

பெரில் கேட்டார்: ''திருமதி ஜானைப் பார்க்கப் போவ தில்லையா...?''

''ஆமாம். இ... இல்... இல்லை. சரி, சந்திக்கிறேன்.''

இப்போதும் பெரில் துணுக்குற்றார்; தொலைபேசி அழைப்பு வருவதற்கு முன்பு கத்திப் பார்வை பார்த்துக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்த அந்த மனிதர் கிடையாது இது. 'அப்படி என்ன தான் தகவல் கிடைத்திருக்கும் இவருக்கு, இந்த அளவு இவரைப் புரட்டிப் போட்டு நிலை குலையச் செய்யும் அளவுக்கு...?!' - வியந்துப் கொண்டார் காரியதரிசி.

உள்ளே நுழைந்த கெர்டா, படபடப்போடும், சந்தோஷமற்றும், அதீதமாய் பயந்துப் போனவராயும் காணப்பட்டார். பலமற்ற, நடுக்கம் மேவிய குரலில் ''ஜானைக் கொன்றவன் குறித்து ஏதேனும் கூடுதல் தகவல்கள் கிதைத்துள்ளனவா?'' என்று கேட்டார்.

''இது வரை இல்லை, திருமதி கிறிஸ்டோ.''

''அவரைக் கொலை செய்வதென்பது, கற்பனைக்கு அப்பாற் பட்டது. நடக்கவே இயலாதது. சாத்தியமற்றது, இன்ஸ்பெக்டர்.''

''ஆனால் அது நடந்திருக்கிறது, திருமதி கிறிஸ்டோ.''

ஒப்புக் கொண்டார். தலையைக் குனிந்துக் கொண்டார். கையிலிருந்த கைக்குட்டை நுனியை சிறு பந்தாக சுருட்டிக் கொண்டேயிருந்தார்.

இன்ஸ்பெக்டர் அதிகார தோரணையெல்லாம் இன்றி, மிருதுவாய் கேட்டார்: ''உங்கள் கணவருக்கு விரோதிகள் உண்டா?''

''ஜானுக்கு? ஓ நோ! எதையாவது கேட்காதீர்கள் இன்ஸ்பெக்டர்! அவர் புடம் போட்டத் தங்கம்! அனைவராலும் துதிக்கப்பட்டவர் அவர்!''

''அவருக்கு எதிராய் யாருக்காவது முன் விரோதமோ, பழி வெறியோ இருந்திருக்கும் என சந்தேகமே எழவில்லையா? கொஞ்சம் யோசித்துப் பாருங்களேன்!'' - இப்படிக் கேட்ட க்ரேஞ்ஜ், சின்னஞ்சிறு இடைவெளி விட்டுக் கேட்டார்: ''அல்லது உங்களுக்கு எதிராய் ஏதாவது விரோதம்..?''

''எனக்கு எதிராகவா...?'' ஆச்சரியமானார் கெர்டா. ''கொன்று போடும் அளவுக்கு அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது இன்ஸ்பெக்டர்.''

''வெரோனிக்கா க்ரே...?''

''வெரோனிக்கா க்ரே...?'' - அதையே திருப்பிக் கேட்ட கெர்டா, ''ஓ, அன்றிரவு வத்திப் பெட்டி கேட்டு ஒருத்தி நட்ட நடு இரவில் வந்தாளே.... அவளா?''

''ம். அவர் தான். உங்களுக்கு அவரைத் தெரியுமா?''

''முன்பின் பார்த்தது கிடையாது. பல வருடங்களுக்கு முன்னால் ஜானும் அவரும் நண்பர்கள் என்று சொன்னார்.''

''எனக்கென்னவோ, அவர்களிருவருக்குமிடையே ஓர் உட்பகை, நீங்களறியாத மனக்கசப்பு இருந்திருக்கும் என்று தோன்றுகிறது.''

கெர்டா மதிப்புக் கலந்து சொன்னார் : ''ஜானுக்கு எதிராய் பகையிருந்திருக்கும் என்று நான் நம்புவதற்கில்லை இன்ஸ்பெக்டர். ஜான், கருணை மிகுந்தவர். சுயநலமற்றவர். மருத்துவத் தொழிலை மற்றவர்களுக்கு உதவக் கிடைத்த வரமாய் எண்ணிப் பணியாற்றிவர். மனிதருள் திலகம் அவர்.''

''நல்லது திருமதி ஜான். நடைபெறவுள்ள மரண விசாரணை பற்றி உங்களுக்குத் தகவல் கிடைத்திருக்கும் என எண்ணுகிறேன். புதன் காலை பதினொன்றுக்கு. மிகவும் சாதாரண முறையில்தானிருக்கும். பயம் வேண்டாம். மேற்கொண்டு விசாரணைகள் மேற்கொள்ள வசதியாக இன்னும் சில வாரங்களுக்கு ஒத்தி வைக்கப்படும். அவ்வளவு தான்.''

''அப்படியா...? நன்றி.''

இன்ஸ்பெக்டரைப் பார்த்தபடி நின்றுக் கொண்டேயிருந்தார் கெர்டா. அக்கோலத்தைப் பார்த்த க்ரேஞ்ஜுக்கு வியப்பு மிகுந்துக்

கொண்டே போனது. இது வரை தான் இல்லை.... இப்போதாவது... நடந்துள்ள குற்றத்தின் முதல் சந்தேக மனுஷியே இவர் தானென்று இப்பேதை கிரகித்திருப்பாளா....!

காசு அதிகம் ஆகும் எனினும் ஒரு வாடகை டாக்சியை அமர்த்திக் கொண்டார், துரிதமாய் பயணிக்க. தொலைபேசி வழியே கிடைத்துள்ள சிறு தகவல் பொறியை நொடியும் தாமதமின்றி உடனடியாக ஆராய உகந்த செலவாய் இதனை ஏற்றுக் கொண்டார்! அந்தப் பொறி தன்னை எந்தத் திசை நோக்கிக் கொண்டு செல்கிறது என்று இன்ஸ்பெக்டரால் கணிக்க முடியவில்லை. வாங்கிக் கொண்ட தகவல் பொருந்தவே பொருந்தாமல் தொக்கி நின்று, கேலிக் கூத்தாய்பட்டது க்ரேஞ்ஜுக்கு. எந்தக் கோணத்தில் நோக்கினாலும் அர்த்தமாகவில்லை! உதவுமா! இல்லை ஏமாற்றி விடுமா!

அத்தகவலை நினைக்கும் போது, திரு ஜான் கொலை வழக்கு, இது வரை சுலபமாய் முடியும் என நினைத்திருந்தது போலல்லாது, பல இண்டு இடுக்குகளிலெல்லாம் ஓடி அல்லாட வைக்கப் போகின்றது எனும் ஒரே ஒரு முடிவு மட்டும், இன்ஸ்பெக்டருக்கு நிச்சயமானது.

## 17

திரு. ஹென்றி, இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜை, ஆவல் மேலோங்கப் பார்த்தார். அப்படியே சொன்னார்: ''நீங்கள் கேட்பதின் முழு உள் அர்த்தம் எனக்கு விளங்கவே யில்லை இன்ஸ்பெக்டர்.''

''மிகத் தெளிவான கேள்வி தான் திரு ஹென்றி. நீங்கள் சேகரித்து வைத்துள்ளத் துப்பாக்கிகளை மீண்டுமொரு முறை சரிபார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அவையனைத்தும் வரிசைக்கிரமமாய் பட்டியலிடப்பட்டு அகராதி போல் அட்டவணையிடப்பட்டுள்ளன என எண்ணுகிறேன்.''

''நிச்சயமாக. இது ஒரு துப்பாக்கி நூலகம். எழுத்து வரிசையில் அட்டவணைப்படுத்தியுள்ளேன். மிக நேர்த்தியாக. ஆனால் சென்ற விசாரணையிலேயே அது என்னுடைய சேகரிப்பிலிருந்து எடுக்கப் பட்ட துப்பாக்கி தான் என்று நான் ஊர்ஜிதப்படுத்தி விட்டேனே திரு க்ரேஞ்ஜ்!''

''இருக்கலாம். ஆனால் ஒரு துப்பாக்கியைப் பார்த்த மாத்திரத்தில் அடையாளம் கண்டு சொல்வதென்பது அவ்வளவு சுலபமான விஷயமல்ல என்று கருதும்படி இப்பொழுது உணர வேண்டியுள்ளது.''

க்ரேஞ்ஜ் தொடர்ந்து பேசாமல் சில நொடிகள் இடைவெளி தந்தார். தகவல்களை ஆரம்பத்திலேயே கொட்டி விடாது முன்னேறுவது க்ரேஞ்ஜின் இயற்கைக் குணம். ஆனால் இம்முறை இப்பிறவிக் குணம் தோற்றது. திரு ஹென்றி முக்கியஸ்தர். கமிஷனராக, கவர்னராக பதவி வகித்து ஓய்ந்துள்ள பழுத்த அனுபவஸ்தர். முதியவர். முதிர்ந்தவர். சட்டரீதியாக உதவி நாடி அவரை அணுகும்போது சந்தேகத்துக்கிடமின்றி பூரண ஒத்துழைப்புத் தருவார் தான்; ஆனால், அந்த உதவிக்கான காரணத்தை நிச்சயம் கேட்பார். காரணம் போலியில்லாததாக அமையும் வரை, அவரின் முழு உதவி கிட்டுவது அரிது. எனவே, க்ரேஞ்ஜ், வழக்கு விசாரணையில் தான் பிரயோகிக்கும் ரகசிய அணுகுமுறையை விடுத்து, மேற்குறிப்பிட்ட தன் வேண்டுகோளுக்கான காரணத்தை ஹென்றியின் முன் வைப்பது தவிர்க்கயியலாததாயிற்று; அமைதியாய் சொன்னார்: ''டாக்டர் ஜான், நீங்கள் இன்று காலை அடையாளம் காட்டிய துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்படவில்லை.''

ஹென்றியின் தடிமனான புருவ ரோமங்கள் உயர்ந்துக் கொண்டே போயின. ''ஆச்சரியம், ஆச்சரியம்! மெச்சத்தக்க திருப்பம்!'' என வர்ணித்தார் ஹென்றி.

க்ரேஞ்ஜ் சற்றே ஆசவாசமானார். அதிசயிக்கத்தக்க திருப்பம் என்று தான் இவரும் கூட எண்ணியிருந்தார். அதையே முன்னாள் கமிஷனரும் குறிப்பிட்டதில் விளைந்த ஒரு சிறு உள வசதி...! இப்படிச் சொன்னதற்காகவும், ஏற்பட்டுள்ள திருப்பத்தை இதற்கு மேல் தூக்கி வைத்து பார்க்காததற்காவும் மனதுக்குள் ஹென்றிக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். இப்போதைக்கு வழக்கின் நிலை இவ்வளவு தான் - 'அதிசயிக்கத்தக்க திருப்பம்'! இதைத் தாண்டி உயர்த்திப் பார்ப்பது அறிவீனம் மிகுந்த தற்புகழ்ச்சியாகும்.

ஹென்றி கேட்டார் : ''துரதிர்ஷ்டவசமான ஜான் கொலை, என் துப்பாக்கி சேகரிப்பிலிருந்த ஒரு துப்பாக்கியால் தான் நடந்தேறியுள்ளது என்று நம்புவதற்கு, உங்களிடம் ஸ்திரமான காரணம் ஏதேனும் உள்ளதா, இன்ஸ்பெக்டர்?''

''இல்லை'' - தலையை இடவலமாக அசைந்து உடனடியாய் மறுத்தார் க்ரேஞ்ஜ். ''ஆனால்...'' என்று தொடர்ந்தவர் சொன்னார் : ''அந்தத் துப்பாக்கி உங்கள் சேகரிப்பலிருந்து எடுக்கப்படவில்லை என்றும் நிரூபித்துக் கொள்ள, எனக்கு இப்போது ஒரு புது தேவை உதித்துள்ளது, திரு ஹென்றி.''

எனில் ஒத்துழைக்கத் தயார் எனும் போக்கில் தலையசைத்துத் தயாரானார் ஹென்றி! ''உங்கள் சிரத்தையைப் பாராட்டுகிறேன். சரிபார்த்து விடுவோம். ஆனால் கொஞ்சம் நேரம் பிடிக்கும்.''

தன் மேஜையின் பக்கவாட்டிலிருந்த ஒரு சிறு அறையைத் திறந்து அதிலிருந்து துப்பாக்கிக் கையேட்டினை எடுத்தார். அதன் பக்கங்களைத் திருப்பும் போது, ''கொஞ்ச.... நேரம்.... பிடிக்கும்...'' என்று மெலிதாய் ராகமாய் பாடிக் கொண்டே தேடலானார்.

க்ரேஞ்ஜின் கிரகிப்பு மூளை, ஒலித்துக் கொண்டிருந்த ஹென்றியின் சிறு ராகக் குரலில், எதையோ உணர்ந்து நின்றது. கூர்மையாய் ஹென்றியைக் கவனித்துக் கொண்டார். ஹென்றியின் தோள்கள் சற்று வளைந்துக் தொய்ந்துப் போயிருந்தன. திடீரென சற்று வாடியவராகவும் களைப்புக் கூடியவராகவும் ஹென்றி ஆகியிருப்பது க்ரேஞ்ஜின் போலீஸ் கண்களுக்குக் கிட்டியது. காரணமேயில்லாமல்! சென்ற நொடி வரை இல்லாத தொய்வு!

இன்ஸ்பெக்டரின் முகம் இறுகிற்று; கடுமையாயிற்று. 'பேய்க்கூட்டம்' - நினைத்துக் கொண்டார் க்ரேஞ்ஜ்! 'இவர்களை வைத்துக் கொண்டு எப்படித்தான் இந்த வழக்கினைக் கொண்டு நடத்தப் போகின்றேனோ' எனத் துளி பயமும் அவருக்குள் எழுந்தது.

கண்களை ஒரு சுழற்று சுழற்றி அறைக்குள் விட்டார். பிறகு கைக்கடிகாரத்தைப் பார்த்த வண்ணமிருந்தார். முப்பது நிமிடங்கள் - இருபது நிமிடங்கள் - பத்து நிமிடங்கள்! 'கொஞ்ச நேரம் பிடிக்கும்' என்றிருக்கிறாரே ஹென்றி!

தேடுதலை முடித்தது போல ஹென்றி நிமிர, ''சொல்லுங்கள் ஹென்றி'' என ஆர்வம் காட்டிக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

''A.38 ரகத் துப்பாக்கிக் காணவில்லை.''

இப்படிச் சொன்ன ஹென்றி, ''கைத்துப்பாக்கிகள் வைக்கும் இந்தத் தோல் பையில் வைத்திருந்தேன்'' என துப்பாக்கி வைக்கப் படும் ஒரு பெரிய தோல் பையைக் காட்டினார். அந்தப் பையில், பத்து துப்பாக்கிகள் வைக்கலாம். ஒன்பது இருந்தன; ஓரிடம் காலியா யிருந்தது. ''இந்த மேஜை அறையுள்'' என தான் திறந்திருந்த மேஜையின் பக்கவாட்டு அறையைச் சுட்டிக் காட்டிய ஹென்றி, ''உள்ளே, கடைசியில் வைத்திருந்தேன்'' என்றார்.

இன்ஸ்பெக்டர் ஊக்கமானார். ஆனால் காட்டிக் கொள்ளவில்லை. அமைதியாய் கேட்டார்: ''திரு ஹென்றி. உங்களுக்குத் தெரிந்து, காணாமல் போன இந்தத் துப்பாக்கியை, அதன் இடத்தில், கடைசியாக எப்போது பார்த்தீர்கள் என ஞாபகப்படுத்திச் சொல்ல முடியுமா?''

சில நொடிகள் சிந்தித்தார் ஹென்றி. ''இதற்கு பதில் தருவது கொஞ்சம் கடினம் இன்ஸ்பெக்டர்'' எனச் சொன்னார். ''ஒரு வாரத்திற்கு முன்னால் இந்த மேஜை அறையைத் திறந்து பார்த்ததாக நினைவு. அப்பொழுது துப்பாக்கி மட்டும் காணாமலிருந்திருந்தால், விடுபட்ட காலி இடத்தை, நான் நிச்சயம் கவனித்து உஷாராகி யிருப்பேன். இப்படித் தான் பதில் தர முடிகின்றது இன்ஸ்பெக்டர். 'இங்கிருந்தது, பார்த்தேன்' என அடித்துச் சொல்ல இயலவில்லை.''

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் ஏற்றுக் கொண்டு தலையசைத்தார்.

''நன்றி ஹென்றி'' என்று விட்டு எழுந்தார் இன்ஸ்பெக்டர். சட்டென்ற நடவடிக்கை. என்ன நினைக்கிறார் - நினைத்தார் - நினைப்பார் என்று ஊகிக்க அவகாசம் தராத நடவடிக்கை. ''உங்கள்

நிலை புரிகின்றது. கிளம்புகிறேன். கிடைத்துள்ள தகவலின் பேரில் இன்னும் சில நடவடிக்கைகளைத் துரிதமாக எடுக்க வேண்டியுள்ளது'' என்று கூறியபடி, பதிலுக்குக் காத்திராமல் பறந்தார்.

இன்ஸ்பெக்டர் நகர்ந்த பிறகு கொஞ்ச நேரம் செய்வதறியாது, நடப்பது புரியாது, திகைத்துப் போயிருந்தார் ஹென்றி. பிறகு, ப்ரெஞ்சு ஜன்னல் வழியே, மாடியின் திறந்த வெளி தளத்திற்குள் இறங்கினார். கையில் கூடையுடனும் தோட்ட வேலைக்கு உரிய கையுறைகளுடனும் அங்கிருந்த மொட்டை மாடித் தோட்டத்தில் வேலையாயிருந்தார் லூசி. பெரிய தோட்டக் கத்திரியை வைத்துக் கொண்டு, காடாய் மண்டிக் கிடந்த சிறு புதரினை வெட்டி வீசிக் கொண்டிருந்தார் அவர். அருகில் வரும் கணவனைப் பார்த்து, ஆர்வமாய் கையசைத்தார்.

''என்னவாம் இன்ஸ்பெக்டருக்கு! நம் வீட்டு வேலைக்காரர்களை, மறுபடியும் விசாரணை என்று அழைத்து உட்கார வைத்துக் கொண்டு பயமுறுத்த மாட்டாரில்லையா! தெரியுமா ஹென்றி! அத்தனை வேலைக்கார்களும் பயந்திருக்கிறார்கள். படிக்காத நாட்டான்கள். போலீஸ் என்றாலே அலறுகிறார்கள்! இந்த விசாரணை கிசாரணை எல்லாம் அவர்களுக்குப் பிடிப்பதேயில்லை! நமக்குப் புதுமை யாகவும் வேடிக்கையாகவும் தோன்றுவது போல, விசாரணைக் கூத்து அவர்களுக்கு அமையவில்லை!''

''விசாரணையை நாம் வேடிக்கையாகவா பார்க்கிறோம், லூசி?''

ஹென்றி குரலின் 'பாவம்' லூசியை ஈர்த்தது. என்ன பதிலை நாடுகின்றது என விளங்காத கேள்வி. ஹென்றியை ஆழமாய் பார்த்து பூவாய் மிருதுவாய் சிரித்தார் லூசி. ''மிகவும் களைப்பாய் தெரிகிறீர்கள் ஹென்றி. நாலு பேர் வந்து உலுக்கி விட்டது மாதிரி. இப்படி நீங்கள் இருந்ததேயில்லையே. நடந்தவையெல்லாம் இப்படி உங்களை ஆக்கிப் போடும் அளவுக்கா நீங்கள் மனதில் எடுத்துக் கொள்ள வேண்டும்? ம்?''

''கொலை. கொலை.''

வானத்தை அண்ணாந்துப் பார்த்து சொல்லிக் கொண்டார் ஹென்றி. ''கொலை, கவலைப்படுத்துகின்றது லூசி.''

ஹென்றியின் விளக்கத்தை கவனித்துக் கொண்டார் லூசி. இந்த கவனிப்பினூடே, அசிரத்தையாய், புதரின் சில பகுதிகளை வெட்டி விட்டார். இதனை அறிந்ததும், அவர் முகம் முழுதும் 'அடடா...' எனும் ஆதங்க மேகம் சூழ்ந்தது.

''இந்த கனமான கத்திரி ஒரு தொல்லை தெரியுமோ ஹென்றி'' என்றார். தொடர்ந்தார் : ''பார்த்தீர்களா. கூடுதலாக வெட்டி விட்டேன். ப்ச். இந்த கனத்தைத் தூக்கிக் கொண்டு வெட்டும் போது தேவையான அளவை விட அதிகமாகவே வெட்டி விடுகின்றது. போகட்டும். நீங்கள் என்ன சொன்னீர்கள். கொலை பற்றி... கொலை கவலை தருகின்றது என்றா...! இதில் கவலைப்பட எனக்கு ஒன்றும் தெரியவில்லை ஹென்றி. மரணம் எப்படியோ நிகழ்ந்து விடுகின்றது, இல்லையா? புற்று நோய், காச நோய், சர்க்கரை நோய் என தீராத வியாதி மூலமாகவோ... அல்லது, ஒரு பக்கம் முகம் இழுத்துப் போய் ஷவ்வே... - பார்க்கவே அருவெறுப்புத் தரும் பக்கவாதம் மூலமாகவோ... அல்லது, அடித்தோ சுட்டோ தாக்கப்பட்டோ நிகழ்த்தப்படும் கொலை மூலமாகவோ... எப்படியோ... இது போன்ற ஏதோ ஒரு கண்றாவியால் மரணம் சம்பவிக்கின்றது. ஆனால் இவை அனைத்தின் முடிவும், முற்றுப் புள்ளியும் ஒன்று தான். அது : பிணம். மரணம். எல்லா நெருக்கடிகளிலிருந்தும் விடுதலை. எல்லா கவலைகளிலிருந்தும் கிலேசங்களிலிருந்தும் விடுதலை. அழுவதா வேண்டாமா... உடைந்த மேஜையையும் நலிந்த நாற்காலியையும் விட்டுக் கொடுப்பதா இல்லை பாகப்பிரிவினைக்காக மண்டையை உடைத்துக் கத்துவதா... என்று உறவுகளுக்குத் தான் கவலையும் மனக்கிலேசமும்!''

அங்கிருந்த சிறு பாறாங்கல்லில் அமர்ந்துக் கொண்டார் ஹென்றி. காற்றில் சொன்னார் : ''நாம் நினைத்ததை விட மிக மோசமாக நம்மை ஆட்டிப் படைக்கப் போகின்றது லூசி.''

''எது?''

''இவ்வழக்கு.''

''இருக்கட்டுமே கண்ணா. நாம் தாங்கித் தான் தீர வேண்டும். எப்படியும் ஒரு முடிவு வருமல்லவா. உண்மை வெல்லுமல்லவா. அப்பொழுது இந்த இடத்தை விட்டு வேறெங்காவது சென்று வருவோம். நிகழ்கால அமைதியற்ற நிலையை மறந்து, அந்த எதிர்காலத்து நிம்மதியை நினைத்துக் காத்திருங்கள். மனம் ஆறும். அந்த நாளை தான் நான் எண்ணிக் கொண்டேயிருக்கிறேன். எத்துணை சந்தோஷமாக உள்ளது தெரியுமா. காத்திருத்தல் தரும் சந்தோஷம். கிருஸ்துமஸ'க்குப் பேசாமல் கிளம்பி ஏய்ன்ஸ்விக்'குக்குப் போய் விடலாமா என்று பார்க்கிறேன். அப்படியே புது வருடம் வரை தங்கியிருந்து விட்டுக் கூட வரலாம். என்ன நினைக்கிறீர்கள்?''

''கிருஸ்துமஸ் எங்கேயோ கிடக்கிறது லூசி. அதற்குத் திட்டமிட, வேண்டிய அவகாசமுள்ளது.''

''உண்மைதான். ஆனால் நடக்க உள்ளவற்றை என் மனதுள் படம் பிடித்துப் பார்க்க விரும்புகிறேன். உதாரணத்திற்கு கிருஸ்துமஸ் கொண்டாட்டங்கள்...!'' - ஏதோ மனக்கண்ணில் புலப்படுவது போல 'பார்த்து' நில நொடிகள் தனக்குள் ரசித்துச் சிரித்துக் கொண்டார் லூசி. பிறகு ''இப்பொழுது எல்லாக் குழப்பங்களிலிருந்தும் விடுபட்டிருப்பாள் அவள்'' என்றார் அவர்.

''யார்...?'' - விளங்காது விழித்துக் கேட்டார் ஹென்றி.

திருமதி ஹென்றி மிக அமைதியாய் சொன்னார்: ''ஹென்ரீட்டா...! இருவரும் அக்டோபரில் திருமணம் கட்டிக் கொள்வதாயிருந்தால் - அதாவது அடுத்த அக்டோபரைச் சொல்கிறேன் - அவர்களின் கலியாணத்திற்காக சென்று அப்படியே கிருஸ்துமஸ் வரை தங்கி விட்டு வரலாம் என திட்டமிட்டுள்ளேன். அவர்கள் கலியாணத்தை நினைத்துக் கொண்டேன் ஹென்றி.''

''நான் எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். நீ எங்கிருந்து எங்குத் தாவி எதைப் பற்றிப் பேசுகிறாய்! நீ தாறுமாறாய் கற்பனை செய்கிறாய் லூசி.''

ஹென்றியின் இவ்வர்ணனையை லூசி கண்டு கொண்டதாய் தெரியவில்லை. ''அவளுக்கு ஒரு சிறப்பான சிற்பக் கூடத்தைக் கலியாணப் பரிசாகத் தருவேன்'' எனப் பெருமிதம் தெறிக்கக் குறிப்பிட்டுத் தொடர்ந்தார்: ''ஹென்ரீட்டாவுக்கு ஒரு கூடம் அவசியம். அவள் சிற்பக் கலையின் நுணுக்கங்கள் அனைத்தும் விளங்கப் பெற்ற திறமைசாலி, தெரியுமோ. அவளின் திறமையை பெருமை பொங்க அணுஅணுவாய் அனுபவித்து எட்வர்ட் வாழ்வான் என்பது நிச்சயம். சிறுசுகள். இளமையைக் கொண்டாடிக் களிக்கட்டும். இரண்டு பையன்கள் ஒரு பெண் சரியாயிருக்கும். இல்லை, இரண்டு பையன்கள் இரண்டு பெண்கள்....?!''

''லூசி, லூசி. போதும். நிறுத்தேன். இப்படியா மூளையைத் தாவ விட்டுக் கொண்டே இருப்பார்கள்?''

''டார்லிங்...'' - லூசி தன் வசீகர கண்களை இன்னும் அகல விரித்து ''எட்வர்ட் குணம் தெரிந்து தான் இப்படிச் சொல்கிறேன்'' என்றார். விடுவதாயில்லை. ''ஹென்ரீட்டாவைத் தவிர வேறு ஒருவரையும் எட்வர்ட் மணக்க மாட்டான். உங்களுக்கெல்லாம்

தெரியாது. எனக்கு நன்கு தெரியும். அவன் உடும்பு. அப்படி ஒரு பிடிவாதக்காரன். இந்த விஷயத்தில் அப்படியே என் அப்பா! அவன் மூளைக்குள் ஏதாவது ஒன்று ஸ்திரமாய் முடிவாகும். அப்படி ஆகி விட்டால் விட மாட்டான். சாதித்தே தீருவான். இப்போதைய முடிவு: ஹென்ரீட்டா. ஆகவே, அவன் ரீட்டாவைத் தான் மணந்து தீருவான். இதில், ஜானின் மரணத்திற்குப் பிறகு, வேறு எந்தத் தடையும் கிடையவும் கிடையாது. எட்வர்டும் ரீட்டாவும் ஆழமாய் நேசித்தவர்கள் தான். ஆதிக்க ஜான் புகுந்து ரீட்டாவை ஓரங்கட்டப் பார்த்தது தான் விபரீதம். ஆமாம் ஹென்றி. ரீட்டா வாழ்க்கையில் நேர்ந்துள்ள அதி பயங்கர துரதிர்ஷ்டம் - ஜான்.''

''இருக்கலாம். கலியாணமாகி பிள்ளைக் குட்டிப் போட்டு விட்ட ஜானுக்கு வேண்டாத வேலை இது. பரிதாபமான ஜீவன்.''

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? ஓ, ஜான் இறந்து விட்டதாலா? இதிலென்ன பரிதாபமிருக்கிறது ஹென்றி. பிறந்த அனைவரும் ஒரு நாள் மடிந்துத் தானே தீர வேண்டும்! உலகத்தார் மரிப்பதற்கு நான் கவலைப்படுவதில்லை ஹென்றி. நீங்களும் அப்படிப்பட்டவர் தானே. கமிஷனர் அனுபவம் வேறு. ஆனால் ஜான் கொலை விஷயத்தில் தான் சில சமயங்களில் ஆடிப் போகிறீர்கள்.''

தளம் விட்டுத் தளம் தவ்வித் தவ்விப் பேசினாலும், ஒவ்வொரு தளத்திலும் மிக முதிர்ந்து கருத்துக்கள் கொட்டும் லூசியை, ஆச்சரியம் மேவ ஆவலாய் பார்த்தார் ஹென்றி. பிறகு முக்கியத்துவம் கொடுத்து, கேள்வி சரியாய் லூசியை அடைய வேண்டும் எனும் அழுத்தத்தோடு கேட்டார்: ''உனக்கு ஜானை அதீதமாகப் பிடித்திருந்தது என்று நான் பல முறை கணித்திருக்கிறேன், லூசி.''

துளியும் துணுக்குறாது லூசி பதில் தந்தார் : ''அவரைப் பார்க்கும் பொழுது குதூகலமாய் களிப்பாய் உணர்வேன். அவரிடம் கவர்ச்சியும் இருந்தது. அது ஈர்த்தது. அதிகமாக. அவ்வளவே. ஆனால் யாருக்கும் அதீத முக்கியத்துவம் கொடுத்து ஒட்டுறவாடக் கூடாது என்பது என் குணம் ஹென்றி.''

சிரிப்புக் குலையாத முகத்துடன், ஆனால் பற்றற்ற - பச்சாதாபமற்ற துணிவோடு, படர்ந்திருந்த வேண்டாதப் புதரை வெட்டிச் சிதைக்கலானார் லூசி.

## 18

தன் அறையின் ஜன்னல் வழியே வெளியே பார்த்தபடி அமர்ந்திருந்த ஹெர்குல் பொய்ரெட், ஹென்ரீட்டா, எதிரே தெரிந்த பாதை வழி நடந்துக் கொண்டு, இவர் குடிலின் வாசற் கதவை நோக்கி வருவதைப் பார்த்தார். விபரீதம் நடந்த நாளன்று ரீட்டா அணிந்திருந்த அதே பச்சை நிற மிடியைத் தான் இப்போது அணிந்திருந்தார். கொழுகொழு நாய் ஒன்றும் அவர் சங்கிலிப் பிடியில் இருந்தது.

வாயிற்கதவை வேகமாய் அடைந்து திறந்தார் ஹெர்குல். இவரைப் பார்த்து புன்முறுவியபடி நின்றுக் கொண்டிருந்தார் ரீட்டா.

''வணக்கம். நாயை அழைத்துக் கொண்டு சிறு நடை கிளம்பினேன். உங்கள் குடில் எதிர்ப்பட்டது. உள்ளே வந்து உங்கள் ஜாகையின் அமைப்பை நான் பார்க்கலாமா...? தெரிந்தவர்களின் வீட்டினைச் சுற்றிப் பார்ப்பதில் எனக்கு ப்ரியம் உண்டு.''

''நிச்சயமாக. நாயுடன் சிறு நடை! லண்டன்வாசிகளின் உல்லாசப் பொழுது போக்கு.''

''ஆமாமாம்'' என்றார் ரீட்டா. ''ஆங்கிலேயர்களின் பிரிக்க முடியா பழக்கமல்லவா இது. 'நாட்கள் ஒவ்வொன்றாக நகர்ந்தன. தோட்டத்தில் வளர்த்து வந்த வாத்துகளுக்கு உணவளித்தேன். மனைவியை அழைத்துத் திட்டினேன். தோட்டத்தில் அமர்ந்து தெரிந்த வாத்தியம் ஒன்றை வாசித்தேன். பிறகு நாயை இழுத்துக் கொண்டு ஒரு சிறு ஓட்டம் ஓடி வந்தேன்.' எனும் பிரபலக் கவிதை தெரியுமா உங்களுக்கு? இங்கிலீஷ்காரனின் தினசரி வாழ்க்கையைக் கோடிக் காட்டும் கிண்டல் கவிதை.''

மீண்டும் புன்முறுவினார். பிரகாசமான, ஈடுகட்ட முடியாத புன்னகை.

தன் வரவேற்பறைக்கு மரியாதை கலந்து வழி காட்டியபடி அழைத்துப் போனார் ஹெர்குல். மிகச் சுத்தமாய், சம்பிரதாய அலங்காரங்கள் செய்யப்பட்டு, அழுக்கின்றி காக்கப்படும் ஒரு விளம்பர அறையாய் விளங்கிய ஹெர்குல்'லின் வரவேற்பறையை சுற்றிவரப் பார்த்து கண்ணகல வியந்தார் ரீட்டா.

''கண்ணுக்கும் கருத்துக்கும் இதம் தரும் சுத்தம். அலங்கரிப்பு. ம்...! நீங்கள் வந்து என் சிற்பக் கூட்டத்தைப் பார்த்தால் எப்படி வெறுப்பீர்களோ...!''

''நான் ஏன் ஒரு கலைக் கூடத்தை வெறுக்க வேண்டும்?''

''அப்படி ஒரு நிலையிலிருக்கும் அது! அங்குமிங்கும் களி மண் அப்பிக் கொண்டு. வெறும் ஈரக் காலோடு நடந்தால் போச்சு! 'ஸ்கேட்டிங்' தான்!''

''எனக்கு அது புரியாதா மேடம். நீங்கள் ஒரு கலைஞர். சிற்பக் கலைஞர். உங்கள் கூடத்தின் அழகே, சிற்பச் செதுக்கலால் எல்லாம் தெறிக் கிடப்பது தானே!''

''நீங்கள் கூட தலை சிறந்த கலைஞர் தானே, திருமிகு பொய்ரெட்!''

தன் தலையை ஒரு புறமாய் சாய்த்து ஆச்சரியித்து சிந்திக்கும் தொனியில் பேசினார் : ''சிறப்பான கேள்வி கேட்டீர்கள். இது வரை எந்த நேர்காணல்களிலும் நான் எதிர் கொள்ளாத கேள்வி. ஆனால் பதிலென்னவோ - இல்லை என்பது தான்! எனக்குத் தெரிந்து பல குற்றங்கள் மிகுந்த கலைத் திறமையுடன் நிகழ்த்தப்பட்டதுண்டு. அவை தான், கற்பனை வளத்திற்குத் தேவைப்படும் தலைசிறந்த பயிற்சிக்கான மிக உன்னத எடுத்துக்காட்டுகள்! கொலைகாரர்களே - கலைஞர்கள். ஆனால் என் போன்ற துப்பறிபவர்களுக்கு, பிறகு மெனக்கெட்டுக் கொலைகாரனைத் துலக்கிப் பிடிக்க, கற்பனைத் திறனோ கலைத் திறமையோ தேவையே அல்ல. தேவையெல்லாம், எப்படியாயினும் உண்மைக் குற்றவாளியை, நழுவ விடாது வெளிக் கொண்டு வந்து விட வேண்டும் எனும் தீராத தாகம் தான்.''

''உண்மையை வெளிக் கொண்டு வந்து விட தாகம்'' என தனக்குத் தானே சொல்லிக் கொண்ட ரீட்டா, ''இதற்கான பயணம் எத்தனை ஆபத்துக்களில் உங்களைச் சிக்க வைக்கும் என்று எனக்கு விளங்குகின்றது. உண்மை மட்டும் வெளியாகி விட்டால், உங்களுக்குப் பூரண மன திருப்தி வந்த விடுமா?'' என கேட்டார்.

கேள்விகளால் மகிழ்ந்து இன்னும் ஆர்வம் மேலோங்க ரீட்டாவைப் பார்த்தார் ஹெர்குல். ''விளங்கவில்லையே ரீட்டா'' என்றார். ''என்ன சொல்ல வருகிறீர்கள்?''

''ஒரு துப்பறியும் வல்லுநராய் உண்மை வெளி வந்தாக வேண்டும் எனும் உங்களது நிலைப்பாடு எனக்கு விளங்குகின்றது. உண்மை

மட்டும் தெரிந்து விட்டால் போதுமா?'' - கேட்டு விட்டு சிறு இடைவெளி தந்த ரீட்டா தொடர்ந்து கேட்டார்: ''அப்படி உண்மை தெரிந்து விட்டால், தெரிந்த உண்மையை வைத்துக் கொண்டு இன்னும் பல படிகள் முன்னேறி, மேற்கொண்டு சுறுசுறுப்பாய் நடவடிக்கைகள் எடுக்கத்தானே செய்வீர்கள்?''

ரீட்டாவின், மெதுவாய் முன்னேறும் அணுகுமுறையை விழைந்தார் ஹெர்குல். ''அதாவது, டாக்டர் கிறிஸ்டோவைக் கொன்றது யார் என்று எனக்குத் தெரிய வரும் பட்சத்தில், அந்த உண்மை தெரிந்தது போதும் எனும் அளவில் நான் திருப்தியாகி விடுவேனா எனக் கேட்க வருகிறீர்கள் - இல்லையா?'' - தான் சற்று முன் விளக்கிய கலைஞன் பற்றிய வர்ணனைக்கு இத்தனை ஆழமான அர்த்தத்தையா கற்பித்தாய் எனும் தொனியில் கேட்ட ஹெர்குல், ''அவர் துர்மரணம் குறித்த உண்மை உங்களுக்குத் தெரியுமா?'' என்றார், தன் குரலின் ஒலியை சற்றுத் தாழ்த்தி.

ஹென்ரீட்டா தன் இரு தோள்களையும் மேலே தூக்கி ஒரு குலுக்கிக் குலுக்கி இறக்கினார். ''வெளிப்படையாய் தெரியும் ஒரே தெரிவு, கெர்டா. இது போன்ற துரதிர்ஷ்ட சம்பவங்களில், முதல் வேலையாய் கணவனையோ மனைவியையோ சந்தேகப்படுவது தான் எத்தனை தவறான போக்கு!''

''ஏன்...? கெர்டாவை சந்தேகப்படுவதில் நீங்கள் உடந்தை இல்லையா?''

''நான் எப்பொழுதும் திறந்த மனதுடனும் மூளையுடனுமே எதையும் - குறிப்பாக இது போன்ற இக்கட்டான நிகழ்வுகளை அணுக விரும்புகிறேன்.''

இப்பொழுது பொய்ரெட் வலிக்காது கேட்டார் : ''இங்கு இப்பொழுது ஏன் வந்துள்ளீர்கள், ரீட்டா?!''

''நீங்கள் குறிப்பிட்டது போல உண்மையைத் தேடி பைத்தியமாய் அலையும் ரகமில்லை நான் என்பதை, திரு பொய்ரெட், நான் மனமொப்பி ஏற்றுக் கொள்கிறேன். நாயின் கழுத்தில் சங்கிலியைக் கட்டி, வர மாட்டேன் என அடம் பிடித்து நாம் இழுக்கும் எதிர்த் திசையில் வலித்துக் கொண்டு பாயும் அதனை, மூச்சு முட்ட இழுத்துக் கொண்டு தெருவில் திரிவது, லண்டன் போன்ற பகுதிகளில் வாழும் இங்கிலீஷ்காரர்களின் புத்திசாலித்தனமான தப்பிப்பு. வீட்டின் இறுக்கத்திலிருந்து அம்பாய் வெளியேற உருவான தப்பிப்பு. ஆனால், இப்படி தப்பிக்க உதவ, ஆங்கட்டெல் தம்பதியினரிடம் நாயில்லாதது

ஒரு குறை. இதனை, அன்று நீங்கள் வந்திருந்தபோதே கவனித்திருப்பீர்கள்.''

''நான் குறித்துக் கொள்ளும் எந்த உண்மையும் என்னிடமிருந்து தப்பாது'' என்று சூசகமாய், தான் நாய் அங்கு இல்லாததைக் கவனித்திருந்ததை உணர்த்தினார் ஹெர்குல்!

''எனவே தோட்டக்காரனின் நாயினை துணைக்கழைத்துக் கொண்டேன். அது தான் இது. திருமிகு ஹெர்குல்...! நான், சர்வமும் உண்மையானவளல்ல, திரு ஹெர்குல். அதாவது, அதீதமாய் - ஆழமாய் முழுக்க முழுக்க நேர்மையானவளல்ல. உண்மையாக, உண்மையானவளல்ல! இதை நீங்கள் அறிந்துக் கொள்வது விசாரணைக்கு உதவும்.''

இதைச் சொல்லி முடித்ததும் ரீட்டாவின் பிரகாசப் புன்னகை அவர் உதடுகளில் மீண்டும் மிளர்ந்தது. இத்தனை நேரம் தனக்குள் எந்த எண்ணத்தையும் ஏற்படுத்தியிராத இப்புன்னகை, இப்பொழுது, திடீரென, சகித்துக் கொள்ள முடியாதது போல் - தாங்க இயலாததாய் நகர்வதாய் உணர்ந்தார், துப்பறியும் நிபுணர். 'இது ஏன்' என்று விளங்காத ஒரு வித வினோதம் கலந்தும் உணர்ந்தார் ஹெர்குல்.

அமைதியாய், ''அப்படியா'' என்று கேட்டுக் கொண்டவர், ''ஆனால் உங்களிடம் சீரிய, மேன்மையான நேர்மை உள்ளது'' என்றார்.

''எதை வைத்துச் சொல்கிறீர்கள்?'' இப்படிக் கேட்ட ரீட்டா, திடுக்கிட்டு, பின் வெறுப்பாகி விட்டதாய் தோன்றியது ஹெர்குல்லுக்கு. திடீர் குரோதம். காரணம் ஏதுமின்றி! பதித்துக் கொண்டார் துப்பறியும் நிபுணர்!

பதில் தந்தார் : ''என் இந்தக் கணிப்பு மிகச் சரி என நான் நம்புவதால்!''

''நேர்மை'' - தனக்குத் தானே சிறு சிந்தனை கலந்து சொல்லிக் கொண்டார் ரீட்டா. ''என்னைப் பற்றி நான் வெளிப்படையாய் சொல்லியும், எப்படி நீங்கள் நேர்மை என்று... எந்த நிருபணத்தைத் வைத்துக் கொண்டு மேன்மையான நேர்மை என்று... ஆச்சரியமாயுள்ளது! உங்கள் வார்த்தைகளின் அர்த்தமே எனக்கு விளங்கவில்லை.''

இப்படிச் சொல்லி விட்டு, அசைவற்று அமர்ந்திருந்தார் ரீட்டா. கீழே விரித்திருந்த விலையுயர்ந்த கம்பளத்தையே பார்த்தபடியிருந்தார். சில நிமிடங்கள் கூட நழுவின. பிறகு நிமிர்ந்து ஹெர்குல்'லை

உறுதியாய் பார்த்துக் கேட்டார் : ''நான் ஏன் இங்கு வந்தேன் என்று அறிய விருப்பமில்லையா?''

''கேட்டேனே! இன்னும் பதில் தான் வரவில்லை. காரணத்தை வார்த்தைகளாக்கிச் சொல்ல முடியாமல் தடுமாறுகிறீர்கள் போல.''

''ஆமாம்'' என்றார் ரீட்டா. ''அப்படித்தான் என நினைக்கிறேன். நாளை மரண விசாரணை, திரு பொய்ரெட். அது மூளையில் உட்கார்ந்துக் கொண்டு கட்டுப்பாடிழக்கச் செய்கின்றது. மரண விசாரணையினை எதிர் கொள்ளும் போது, உள ரீதியாக தன்னைத் தயார் படுத்திக் கொள்ள, ஒருவன்.... ஒருவன்... ஒ...ரு...வ...ன்...''

கொஞ்சம் நொறுங்கிப் போனார். எழுந்து இலக்கில்லாத நடையுடன் ஓரமாய் ஜன்னலை ஒட்டியிருந்த அலமாரியருகே போய் நின்றுக் கொண்டார். ஹெர்குல் குறுக்கிடவில்லை. அங்கு மேஜையின் மீதிருந்த சில அலங்காரப் பொருட்களை இங்குமங்குமாய் மாற்றி வைத்துக் கொண்டு நின்றிருந்தார். பிறகு மேஜையின் நடுவிலிருந்த அழகுப் பூக்கூடையை தூக்கி, அலமாரியின் இடக்கோடியில் வைத்தார். வைத்ததும் சில அடிகள் நடந்து பின்னுக்கு வந்தார். தலையை சற்றே இடவலமாய் சாய்த்துச் சாய்த்து, இவ்விதமாய் இடம் மாற்றி வைத்தது வனப்பாய் தோன்றுகின்றதா எனப் பார்த்துக் கொண்டார். அப்படியேக் கேட்டார் : ''இது எப்படி இருக்கிறது, திரு பொய்ரெட்?''

''ம்ம்.''

''ஒப்புக் கொள்ள மாட்டீர்கள் என்றே நானும் நினைத்தேன்.'' சொல்லி விட்டு சிரித்தபடி, லாகவமாகவும் துரிதமாகவும், நகர்த்தியிருந்த பொருட்களை அவற்றின் பழைய இடங்களுக்கே மாற்றி வைத்தார் ரீட்டா. பிறகு ''நல்லது'' என நாடகப் பாணியில் ஆரம்பித்துச் சொன்னார்: ''ஏதோ ஒரு விஷயத்தைச் சொல்லியே ஆக வேண்டும் என மெனக்கெட்டு அதற்காக வந்தபிறகு, அதனைச் செய்து விட வேண்டும்! காலந்தாழ்த்தாமல். நம்பிக்கையோடு நான் நினைப்பதை விவாதிக்க - பேச - உகந்த ஒரே நபராக நீங்கள் தான் எனக்குத் தெரிகிறீர்கள். எனவே, இதோ செய்கிறேன். சொல்லுங்கள் திருமிகு பொய்ரெட், நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...! நான் ஜான் கிறிஸ்டோவின் அபிமானப் பெண்ணாயிருந்தேன் என்பது போலீஸுக்குத் தெரிந்து தான் தீர வேண்டுமா...?''

உணர்ச்சிகளை வெளிக்காட்டாத வறண்ட நிலையிலிருந்தது ரீட்டாவின் குரல். இப்படிக் கேட்கும் போது துப்பறியும் நிபுணரை

நேருக்கு நேராய் பார்க்காது அவர் பின்னாலிருந்த சுவரினைப் பார்த்தபடித்தான் பேசினார். மேஜையின் மீது புதுப் பூக்களைச் சுமந்திருந்த ஒரு பூ ஜாடியின் வளைவுகளில் தன்னிச்சையாக பிரயாணித்துக் கொண்டிருக்கும் ரீட்டாவின் விரல் நுனி ஸ்பரிஸத்தின் வாயிலாக, ரீட்டாவுக்குள் எழுந்திருக்கும் உணர்ச்சிப் போராட்டம் வழிந்தோடிக் கொண்டிருப்பதாக அறிந்துக் கொண்டார் ஹெர்குல். ஒரு வகை தப்பிப்பு. தப்பிக்கத் தேவையிருக்கிறது என வெளிக்காட்டாத - வெளிக்காட்ட விரும்பாத - முகமூடி தப்பிப்பு என எண்ணிக் கொண்டார்.

*ரீட்டா சொன்னதன் சாராம்சத்தை அறியப்பெற்றவராய் ரத்தினச் சுருக்கமாகவும் எந்த உணர்வையும் வெளிக்காட்டிக் கொள்ளாமலும் ஹெர்குல் கேட்டார்: ''ஓஹோ. எனில் நீங்கள் இருவரும் காதலர்கள்...?''*

''அந்த வகையில் பொருத்திப் பார்ப்பது தான் உசிதம் என நீங்கள் விரும்பினால்!''

இப்பதிலால் ஆர்வம் தலைத் தூக்க ரீட்டாவைப் பார்த்தார் ஹெர்குல். ''ஓ! நீங்கள் இக்கோணத்தில் - அதாவது காதலர்கள் - என கருதவில்லை. ம்?''

''இல்லை.''

''ஏன் கூடாது?''

ஏனோ எனும் தொனியில் தோள்களைக் குலுக்கிக் காட்டினார் ரீட்டா. நடந்து வந்து அவருக்கருகில் சோபாவில் அமர்ந்துக் கொண்டார். கேள்விக்கான பதிலை மிக மெதுவாகச் சொன்னார்: ''எவ்வளவு துல்லியமாக விவரித்துக் காட்ட முடியுமோ அவ்வளவு துல்லியமாக தர நினைக்கிறேன்.''

இப்படிச் சொன்ன ரீட்டாவின் மீது, தனக்கிருந்த ஈடுபாடு இன்னும் வளர்ந்து கூடுவதைக் கவனித்துக் கொண்டார் ஹெர்குல். ''நீங்கள், டாக்டர் கிறிஸ்டோவின் மனம் கவர்ந்தவராக இருந்திருக்கிறீர்கள். எவ்வளவு காலமாய்?'' - கேட்டார்.

''கிட்டத்தட்ட ஆறு மாத காலமாய்.''

''ஜானின் கடைசி மூச்சு வரை.''

''ஆமாம்.''

''எனில், இந்தத் தகவலை அடைவதொன்றும் போலீஸுக்கு சிரமமாக இருக்காது என்று தான் சொல்வேன்.''

ஹென்ரீட்டா கருத்தில் கொண்டார். எனினும் சொன்னார்: ''எனக்கு அப்படித் தோன்றவில்லை திரு பொய்ரெட். அதாவது - பெண் தொடர்பு ஏதாவது ஜானுக்கு இருந்திருக்குமா எனும் தேடல் விளைந்தாலன்றி நான் சொன்ன தகவலை அவர்கள் அடைய எத்தனிக்க மாட்டார்கள் என்று சொல்ல வருகிறேன்.''

''ஓ, ரீட்டா. இந்தக் கொலை வழக்கில் நிச்சயம் அப்படி ஒரு தேடலிருக்கும். இது ஊர்ஜிதம்.''

'அவர்கள் பண்ணக் கூடும் என்று தான் நானும் எண்ணியிருக் கிறேன்' - நினைத்துக் கொண்ட ரீட்டா, கைகளிரண்டையும் நெட்டி முறித்து, உட்கார்ந்தபடியே குனிந்து முட்டியைத் தாண்டி நீட்டி, இந்நிலையிலேயே சற்று நேரம் கைகளைப் பார்த்த வண்ணமிருந்தார். பிறகு அப்படியே திரும்பி, தோழமை மிகுந்து துப்பறியும் நிபுணரைப் பார்த்துக் கேட்டார் : ''இந்நிலையிலிருக்கும் ஒருவர் என்ன செய்யக் கூடும், திரு ஹெர்குல்? இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜைப் போய்ப் பார்த்து, தடிமனான மீசை வைத்து அலையும் அவர் போன்ற போலீஸ்காரரைக் கண்டு பயந்து - அல்லது நம்பி - எல்லாவற்றையும் கொட்டி விடுவதா? அது சிறந்ததா? செய்யலாமா?''

ஹெர்குல்'லின் விரல்களனைத்தும் விரிந்து, மேலெழும்பி, அழகாய் கத்திரிக்கப்பட்டு சிறிதாய் அலங்கரிக்கப்பட்டிருந்த அவருடைய மீசையைத் தடவிக்காட்டின! சிறு நகைக்சுவை மிளிரக் கேட்டார்: ''என்னுடைய மீசை எப்படி, மேடம்...?''

''உங்களுடைய மீசை, திரு பொய்ரெட், அது ஒரு கலைத்துவம் மிகுந்த பெருமித வெற்றி. எதனுடனும், யாருடையதோடும் ஒப்பிட முடியாத தனி எடுத்துக்காட்டு. என்னைப் பொறுத்தவரை அது, அது தான்!''

''பலர் சொல்லியிருக்கிறார்கள். என்னிடம் நம்பிக்கை ஏற்படுத்துவதே, என் மீசை தானாம்.''

''இந்தக் காரணத்தினால் தானோ என்னவோ நான் யார் என்பதை அப்படியே உள்ளபடி உங்களுடன் பகிர்ந்துக் கொண்டிருக்கிறேன். இரண்டாம் கருத்துக்கு இடமின்றி! திருமிகு பொய்ரெட், என்னைப் பற்றியும் ஜானைப் பற்றியும் போலீஸ் அறிந்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும் போது, அதனை பகிரங்கமாய் எல்லோரும் அறியும்படிச் செய்ய வேண்டிய அவசியமுள்ளதா?''

''விடை கூறுவது கடினம்'' என்றார் ஹெர்குல். ''நிலைமையைப் பொறுத்தது அது. உங்களிருவரின் நெருக்கத்துக்கும் வழக்குக்கும்

எவ்விதப் பிடிப்பும் இல்லை என போலீஸ் உணர்ந்தால், அதில் போட்டு மண்டையை உடைத்துக் கொண்டு வீணடிக்காமல், புத்திசாலித்தனமாய் ஒதுக்கி விடுவார்கள்'' என்று விளக்கிய பொய்ரெட் கேட்டார் : ''செல்வி ஹென்ரீட்டா! இவ்விஷயத்தில் 'என்ன நடக்கும்' என்ற ஆவல் கூடிய கவலையுடன் இருக்கிறீர்களா?''

ஆம் என தலையசைத்த ரீட்டா, சில நொடிகள் தன் விரல் நுனிகளையே வெறித்த வண்ணம் அமர்ந்திருந்தார். பிறகு சட்டென நிமிர்ந்துப் பேச ஆரம்பித்தார். இப்போது அவர் குரல் வறண்டும் கனமற்றுமில்லாது, பேசும் விஷயத்தில் முக்கியத்துவம் மிகுந்து ஒலித்தது.

''கெர்டா. பாவம். பரிதாப ஜென்மம். இப்போதிருப்பதை விட, மேலும் மேலும் நிலைமை ஏன் அவருக்கு மோசமாக்கப்பட வேண்டும்? ஜானை அவர் அன்போடும் மரியாதையோடும் தொழுது வந்தார்; ஆனால் அந்த ஜானோ இறந்தாயிற்று. கெர்டா, ஜானை இழந்து விட்டார். திரும்ப கிடைக்கவே கிடைக்கா வண்ணம் இழந்து விட்டார். சுமக்க முடியாத - ஜீரணிக்க முடியாத பாரம் அவர் தோள்களில். மரண விசாரணை எனும் பேரில் வேறு அவர் தோளில் மேலும் பாரங்கள் ஏற்றப்பட வேண்டுமா?''

''அவர் தான் உங்களைப் பாதிக்கிறாரா?''

''ஓ...! இக்கேள்வியின் உள்ளர்த்தம்? நான் கபடு நிறைந்து பேசுவதாக நினைக்கிறீர்களா? கெர்டாவின் மன நிம்மதியைப் பற்றி நான் அக்கறை காட்டாதிருந்திருந்தால், என்னால், ஜானின் மனத்தில் இடம் பிடித்திருக்கவே முடியாது - என எண்ணி நடந்துக் கொண்டுள்ளதாய் நீங்கள் நினைக்கிறீர்கள்? இல்லையா? எனக்கு அப்படித்தான் தோன்றுகின்றது! ஆனால் அது அல்ல நிஜம் என்பது உங்களுக்கு விளங்கவில்லை. நான் ஜானின் திருமண பந்தத்தை உடைக்கவில்லை. உடைக்கவும் நினைத்ததில்லை. அவர் வாழ்க்கை எனும் ஊர்வலத்தில் நானும் ஒரு ஜனம். அவ்வளவே இது உங்களுக்குப் புரிய வேண்டும். புரிந்தாக வேண்டும்.''

''ஆஹ்...'' எனச் சிரித்துக் காட்டிய ஹெர்குல், ''வெறுமனே அவ்வளவு தானா?'' எனக் கேட்டார்.

''இல்லை, இல்லை, இல்லை'' என்று குரலை சற்று உயர்த்திக் கத்திய ரீட்டா, அவரை குறி வைத்துக் கூர்மையாய் பார்த்தார். தொடர்ந்தார் : ''நீங்கள் நினைப்பது போல் வேறு எதுவும் இல்லை. வேறு எதுவும் கிடையாது. இதை விளக்கத்தான் நான் பிரியத்தனப்

பட்டுக் கொண்டிருக்கிறேன். ஜான் எப்படிப்பட்டவர் என்று பலர் மனத்தில் உதித்திருக்கும் தப்பபிப்ராயம்; அதற்காகத்தான் நான் இங்கு வந்துள்ளேன். வந்ததற்கான காரணம் புரிந்ததா? கொஞ்சமாய் நிச்சயமற்று பனி மூட்டம் மூடியது போன்ற நம்பிக்கை எனக்குள்ளது - உங்கள் மீது! உங்களுக்குப் புரிய வைக்க முடியும் என்பதன் மீது! 'புரிய வைக்க' - அதாவது ஜான் யார், எப்படிப்பட்டவர், எந்த குணாதிசயத்தால் ஆக்கப்பட்டவர் என்று புரிய வைக்க! இல்லையென்றால் என்ன நடக்கும், சூடாக எங்காவது சிறு பொறி கிடைத்தாலும் அவல் மெல்லுவது போல அரைத்துத் தள்ளி விடும் பத்திரிகைக் காரர்களால் என்ன நடக்கும், அத்தனை செய்தித் தாளிகளின் தலைப்புச் செய்திகளிலும் என்ன இடம் பெறும், என என்னால் இப்போதே பார்க்க முடிகின்றது. 'ஒரு டாக்டரின் காதல் லீலைகள்' - இது தான் தலைப்புச் செய்தியாயிருக்கும். கொர்டா, நான், வெரோனிக்கா க்ரே ஆகியோர் முக்கியப்படுத்தப்படுவோம். இப்படி ஏதேனும் நடந்தால் நிச்சயம் அது பொய்யும் உண்மைக்குப் புறம்பானதும் அன்றி வேறாயிருக்காது. இப்படியான ஒரு முக்கியச் செய்திக்கு உகந்தவரல்ல ஜான். ஜான் அப்படிப்பட்டவரல்ல, அல்ல. பெண்களைப் பற்றியே சிந்தித்து வாழ்ந்த கீழ்த்தரமானவரல்ல அவர். மிக உயர்ந்த சிந்தனைகளிலும் எதிர்பார்ப்பிலும் திளைத்த ஓர் உயர் ஆன்மா. பெண்கள் அல்ல, அவருக்கு மிகப் பொருட்டாகப்பட்டவை. அது தொழில்; தொழில் சிரத்தை; தொழில் வெறி; இவை தான் அவர் மதித்தவை, நினைத்தவை, சிந்தித்தவை. அவரின் முழு ஈடுபாடும், எழுச்சியும், கிளர்ச்சியும், ஆபத்தைக் கருதாது துணிந்து உழைத்த உழைப்பும், மையம் கொண்டு திகழ்ந்தது அவர் தொழிலின் மீது தான். இரவிலும். பகலிலும். பெண்ணே அல்ல. ஒரு வேளை தூக்கத்தில் எழுப்பி உங்களைக் கவர்ந்த பெண்ணொருத்தியின் பெயரைச் சொல்லுங்கள் என்று கேட்டிருந்தால், ஜான் சட்டென்று சொல்லியிருக்கும் ஒரே பெயர் - திருமதி க்ரேப்ட்ரீ.''

ஜானின் இது வரை தானறிந்திராத வர்ணனையை ரீட்டாவிட மிருந்து கிடைக்கப்பெற்று அதனை ஆழ்ந்து உள் வாங்கிக் கொண்டிருந்த ஹெர்குல், கண்கள் முழுவதும் ஆச்சரியம் மேவ, ''என்னது? இன்னொரு பெண்ணா? நாலாவதாக? திருமதி க்ரேப்ட்ரீ? யாரிவள்?'' என ஹாஸ்யமாய்க் கேட்டார்.

சிரிப்புக்கும் ஆதங்கத்துக்கும் இடையிலான குரலில் ஹென்ரீட்டா தொடர்ந்துக் கொண்டிருந்தார் : ''அவள் ஒரு கிழவி. முகம் முழுக்க

சுருக்கம் கண்ட, அழகுக் குலைந்த, கொஞ்சம் அசுத்தமான, ஆனால் எதற்கும் சளைக்காத கிழவி. அவள் தான் ஜானின் உலகம். அவளன்றி வேறு உலகம் அவருக்குக் கிடையாது. ஜான், முதன்மை மருத்துவராகச் சென்று வரும் செயின்ட் கிறிஸ்டஃபர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கும் நோயாளி இவள். ரிட்ஜ் வே நோய் கண்டவள். கோடியில் ஒருவருக்கு வரக்கூடிய ஒரு வகை உயிர்க்கொல்லி நோய். பீடித்து விட்டால் மடிய வேண்டியது தான். தீர்வே கிடையாது. இந்நோயினை ஒழித்துக் கட்டத்தான் ஜான் மகா அப்பியாசம் பண்ணிக் கொண்டிருந்தார். ஆழ்ந்த ஆராய்ச்சி. இது குறித்து என்னால் மருத்துவரீதியாய் விவரிக்க முடியாது. மிகச் சிக்கலான ஆய்வு இது. நோயாளியின் ஹார்மோன் சேகரித்து அதன் மீது மேற்கொள்ளப்படும் மருத்துவம். ரிட்ஜ் வே நோயை வெல்ல மருந்து தேடி மேற்கொண்ட ஆய்வில் பற்பல பரிசோதனைகளை ஜான் மேற்கொண்டிருந்தார்; அவற்றிற்கு உதவ கிடைத்திட்ட பொக்கிஷப் பொருள் தான் திருமதி. அப்படி ஒரு நெஞ்சழுத்தக் கிழவி அவள். சாகக் கூடாது என்றொரு பிடிவாதம்.

''அதனால் நோயிலிருந்து வெல்ல மருத்துவரோடு பூரண ஒத்துழைப்புத்தர அவளுக்குச் சம்மதம். கூடுதலாக ஜானின் சத்தியமான அன்பு, மருத்துவம் ஆகியவற்றின் மீது அவளுக்கிருந்த அசாத்திய நம்பிக்கையும் உதவின. அழகாய் அமைந்திட்ட அற்புதத் கூலவையாய், இருவரும் ஒரே குறிக்கோளோடு போராடினர். ரிட்ஜ் வே நோயும் திருமதியும் தான் ஜானின் மனத்திலும் சிந்தனையிலும் கனவிலும் நினைவிலும் வியாபித்திருந்த இரு பொருட்கள்; வேறேதுமில்லை. இது தான் டாக்டர் ஜான். மருத்துவம். உண்மை. உழைப்பு. கனிவு. சுயநலமற்ற ஆராய்ச்சி. ஹார்லி தெருவில் பணத்துக்காகவும் புகழுக்காகவும் மண்டிக் கிடக்கும் ஆயிரமாயிர மருத்துவரில் ஒருவர் கூட ஜானின் பரிசுத்த இலக்குகளின் முன் நிற்கவே முடியாது. அது தீவிர அறிவியல் ஆர்வம், ஆய்வு செய்து அறிந்துக் கொள்ளத் துடிதுடிக்கும் அவா, மேலும் சாதனைகள் - இவை தான் ஜான். பேசித் தீர்த்து விட்டேன். நா... நான், ஓ... நான், உங்களுக்கு விளங்க வைக்க முடியும் என நம்புகிறேன்.''

ரீட்டாவின் கைகள், என் மீது இத்தனை நம்பிக்கையற்று இருக்கிறீர்கள் எனும் அபிநயம் பிடித்துப் பொய்ரெட்டை நோக்கி ஆற்றாமையால் நீள, இந்த நீளமான விரல்கள் தான் எத்தனை நளினமும் மிருதுத் தன்மையும் மிகுந்து உள்ளன என நினைத்துக்

கொண்ட பொய்ரெட், ''நீங்கள் எல்லோரையும் மிக நன்றாகப் புரிந்துக் கொள்வீர்கள் போல'' என்று வர்ணித்தார்.

ரீட்டா, ''ஆமாம்'' என்று அனுபவித்து தன்னைத் தானே ஆமோதித்து சொல்லி, தொடர்ந்தார் :

''ஆமாம். நான் ஆழமாய் புரிந்துக் கொண்டேன். முக்கியமாய் ஜானை. ஜான் என்னை வந்துப் பார்த்துப் பேசுவார், தெரியுமா? தன் மருத்துவ ஆய்வு முன்னேற்றங்கள் பற்றி, அவற்றில் விளையும் ஐயங்கள் பற்றி, குழப்பங்கள் பற்றியெல்லாம் பேசித் தீர்ப்பார். அந்த சம்பாஷணைகளில் பல என்னிடம் இருக்காது; அவரிடமே இடம் பெறும்! என்னை உட்கார வைத்து விட்டு தனக்குத் தானே பேசி ஆராய்ச்சியை விமர்சித்துக் கொள்வதில் பல சந்தேகங்கள் தீர்ந்து விடுவதாய் பூரிப்பார். சில சமயங்களில் ஆய்வு தரும் தோல்விகளின் நிராசையால் - திருமதியின் மீது ஆய்வு மேற்கொள்ளும் போது அவருடலில் விஷத்தன்மை மிகுந்துப் போவதாய் ஜான் அல்லாடுவது ஓர் உதாரணம் - நம்பிக்கையற்றுச் சிதைவார். பிறகு அந்தத் தோல்வியை எதிர்கொள்ள மாற்று சிகிச்சைக்கான ஓர் அபிப்ராயம் சிந்தையை வெட்ட, குதிப்பார். ஜானின் இந்த நிலைமையை நீங்கள் உணரும்படி எப்படி முன் வைப்பது? அது, அது, அது ஒரு போர். ஆமாம், போரே தான்! உலகையே மறந்து அந்தப் போரில், மனத்தையும் சிந்தையையும் குவித்து அவர் காட்டிய ஒருமுக இலக்கு; அந்தப் போரில் மட்டுமே மனத்தைப் பொருத்தியிருந்ததால் அவருக்குள்ளேயே கூடிக் கூடிப் பெருகிய தீவிர உபாதை; இதைத் தாளாது அவர் சோர்ந்து களைத்துத் தவித்த தவிப்பு... ... ...''

ஹென்ரீட்டா தொடர்ந்து மௌனமாக இருந்தார். அவர் கண்கள் நிலைக்குத்தியிருந்தன. ஞாபகங்களால். ஜான் குறித்தெழும் நினைவுகளால்.

ஹெர்குல் ஆர்வமாய் கேட்டார் : ''அப்படியென்றால் உங்களுக்கும் மருத்துவ அறிவும் பயிற்சியும் கொஞ்சம் இருக்க வேண்டும்.''

மறுத்துத் தலையசைத்தார் ரீட்டா. ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. வேறு வழியில்லை. ஏனோ என்னை நம்பினார். எனவே, பாவம், தேடி வந்து ஆய்வு பற்றி என்னவெல்லாமோ பேசுவார். ஆகவே அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டும் என்பதற்காக, அவர் என்னுடம் உரையாடும் ரிட்ஜ் வே நோய் பற்றி

மட்டும் சற்று தெரிந்து வைத்திருந்தேன். இந்நோய் பற்றிய புத்தகங்கள் வாங்கி அறிந்தேன்.''

இப்போது மீண்டும் அமைதியானார். அவர் முகம் இறுகிற்று; இதழ்கள் சேராது மெலிதாய் திறந்திருந்தன. 'மலரும் நினைவுகளில் இருக்கிறார்' - நினைத்துக் கொண்டார் ஹெர்குல்.

ஒரு சிறு மூச்சுடன், அவர் சிந்தனை நிகழ்காலத்திற்குள் மீண்டும் நுழைந்தது. ஆழ்ந்த எதிர்பார்ப்போடு ஹெர்குல்லைப் பார்த்தார் ரீட்டா. ''எத்தனை விவரித்து விட்டேன்... அவை அத்தனையையும் உங்களை மனக்கண் கொண்டு பார்க்க மட்டும் செய்து விட்டேனென்றால்... ... ...'', என ஆதங்கப்பட்டு வருத்தமாய் முன்னேறிய ரீட்டாவின் வார்த்தைகளை, ''... ... ... செய்து விட்டீர்கள், செல்வி ஹென்ரீட்டா'' என்ற ஹெர்குல்லின் வார்த்தைகள் அணைப் போட்டு நிறுத்தின.

''நி.. நி... நிச்சயமாய்?!''

''நிச்சயமாய்! ஒருவர் தீவிரமாய் பேசுவதை ஆழ்ந்து கவனிக்கும் போது மெய்மை புலப்பட்டு விடும் ரீட்டா.''

''நன்றி, நன்றி, திருமிகு பொய்ரெட். மிக்க நன்றி. ஆனால் இத்தனை சுலபமாக இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜை நம்ப வைத்து விட முடியும் என எனக்குத் தோன்றவில்லை.''

''கஷ்டம் தான். அவர் போலீஸ். அவர் மேற்கொண்ட பயிற்சி முறை, அவரை,அக்கோணத்தில் மட்டுமே பார்க்க வைக்கும். உங்களின் உறவு முறை குறித்த சந்தேகக் கோணத்தில் மட்டுமே பார்ப்பார்.''

ஹென்ரீட்டா காரமாய் சொன்னார் : ''அது முட்டாள் தனம். முழுக்க முழுக்க முட்டாள்தனம். அப்படி எந்த உறவு முறையும் இருந்திருக்கவேயில்லை. அக்கோணச் சிந்தனைக்கு முக்கியத்துவமே தர வேண்டாம். தரக் கூடாது.''

கேட்ட பொய்ரெட்டின் புருவங்கள் லேசாய் உயர்ந்துக் காட்டின. பொய்ரெட்டின் வார்த்தைகளற்ற எதிர்ப்பினை எதிர் கொண்டார் ரீட்டா : ''அது தான் உண்மை. இப்படி ஓடிக் கொண்டிருந்த எங்களிரு வரின் சந்திப்பில், நான், ஜானுக்கும், ஜானின் ஆராய்ச்சிக்கும், ஆக இரண்டுக்கும் தேவையான மிக முக்கிய ஊக்கப் பொருளானேன். நான் ஜானைப் பாதித்தேன் - ஒரு பெண்ணாக. இதனால், அதாவது என்னால், எத்தனை முக்கியத்துவம் கொடுத்து ஆராய வேண்டும் என

கணக்கிட்டிருந்தாரோ, அத்தனை முக்கியத்துவம் தந்து முழு ஈடுபாட்டோடு இயங்க முடியாமல் நொடிந்தார். இந்த வீழ்தலின் ஒரே விளைவாக - பயந்தார். மிக பயந்தார். என்னைக் காதலிக்க ஆரம்பித்து விட்டதாய் பயந்தார்; இந்தக் காதல் விதையால் ஏனைய அனைவரையும் வெறுத்துத் தள்ளத் துவங்கி விட்டதாயும் பயந்தார். இதை உணர்ந்த மாத்திரத்தில் என்னை அப்படியே மறந்து விடத்தான் பியத்தனப்பட்டார் பாவம். ஆனால் என்னை மறக்க வேண்டும் என்பதிலே நானே அடங்கியிருப்பதால், அவர் சிந்தனை முழுதும் என் மீதே கிடக்க, என் மீதான அவரின் காதல் இன்னும் தீவிரமாய் தானாயிற்று. என்னால் மலர்ந்த புதுக் காதல், பந்தமேதுமின்றி, உறவாய் எல்லாம் பரிமாணமெடுத்து விடாமல், ஹாய் ஹாய் எனும் அளவிலேயே இருந்து விடட்டும் என்பதில் மட்டும் கறாராயிருந்தார்.''

''ஓ...! இதற்கு நீங்கள்....'' என்று துவங்கி, பந்தமேயில்லாமல் வெறுமனே அவரோடு 'இருக்க' உங்களுக்கு சம்மதமா எனும் கோணத்தில் பேச விழைந்த ஹெர்குல்'லை இடைமறித்தார் ரீட்டா. ''மறுபடியும் சொல்கிறேன். நீங்கள் புரிந்துக் கொள்ளாததால் தான் 'அப்படியா' எனக் கேட்க ஆரம்பிக்கிறீர்கள். நாங்கள் ஆத்மார்த்தமாய் விரும்பத் தொடங்கினாமே அன்றி, அதற்கு மேல் எது குறித்தும் சிந்தனையே எழவில்லை. காதல் தான். காமம் அன்று, திருமிகு ஹெர்குல்.''

ரீட்டா சொன்னவற்றை நுணுக்கமாக தன்னுள் பதிவு செய்துக் கொண்டிருந்த பொய்ரெட் கேட்டார்: ''ஜானின் நோக்கத்திற்கு நீங்கள் ஆதரவு தந்தீர்களா? அதாவது உறவேயின்றி ஜானுடன் இருந்து விட உங்களுக்கு சம்மதம் தானா?''

ஹென்ரீட்டா எழுந்தார். பதில் சொன்னார், அதே பழைய உணர்வற்ற வறண்டக் குரலில் : ''இல்லை. அங்கீகாரமின்றி வாழ எனக்கு ஒப்புதலில்லை. நானும் மனுஷி தானே!''

''ஒப்புதலில்லை எனும் பட்சத்தில், எதற்காக ரீட்டா... ... ...''

''எதற்காக...?'' - அதே கேள்வியைப் பொதுவாகக் கேட்டுக் கொண்ட ரீட்டா, ''எல்லாம் ஜானுக்காக'' என்றார். தொடர்ந்தார் : ''ஜான் திருப்தியாயிருக்க வேண்டும். எனக்குள் ஆழ வேரூன்றிய எண்ணமாய் இது ஆனது. ஜான் விருப்பப்படுவதைத் தந்து விட வேண்டும் என்றே ஆகிப் போனேன். எந்தத் தடங்கலும் இன்றி அவர்

அந்தமாய் நேசிக்கும் மருத்துவத் தொழிலை மேற்கொள்ள வேண்டும் என தீர்மானமாயிருந்தேன். அவர் மனம் நோகாது, பழையபடி ஆவேசமாய் ஆய்வினைத் தொடர, அவருக்கு நான் அத்தியாவசிய மானேன். சரியென என்னையே தந்தேன். எதற்காக என்றீர்களே... எல்லாம் இதற்காகத்தான்!''

தன் மூக்கினை ஒரு முறை தேய்த்துக் கொண்ட பொய்ரெட், சற்று தளம் மாற்றிக் கொண்டுக் கேட்டார்: ''சில நிமிடங்களுக்கு முன்னால், நமது உரையாடலினிடையே, ரீட்டா, நீங்கள், வெரோனிக்கா க்ரே பற்றி குறிப்பிட்டீர்கள். அவரும் ஜான் கிறிஸ்டோவின் தோழியா?''

''கடந்த சனிக்கிழமை வரை, கிட்டத்தட்ட பதினைந்து வருடங் களாய் அவரைச் சந்திக்காமலே தான் வாழ்ந்திருக்கிறார் ஜான்.''

''அதிருக்கட்டும். பதினைந்து வருடங்களுக்கு முன்னால் பழக்கமிருந்திருக்கிறது. அப்படித்தானே?''

''திருமணம் செய்துக் கொள்ள இருவருக்கும் நிச்சயதார்த்தம் நடந்திருக்கிறது'' என்ற ரீட்டா மீண்டும் வந்து அமர்ந்துக் கொண்டு தொடர்ந்தார்: ''அது ஒரு சரித்திரம். வேறெப்படியும் உங்களுக்கு சந்தேகம் வந்து விடாமலிருக்க நான் சுத்தமாக விளக்கி விட வேண்டும். ஜான், வெரோனிக்காவை, அடி முதல் நுனி வரை காதலித்திருக்கிறார். வெறி. பைத்தியம். இப்படியெல்லாம் கூட சொல்லிக் கொள்ளலாம். வெரோனிக்கா, ஒரு பிசாசு. அப்போதும். இப்போதும்! மமதை ஈன்றெடுத்த தலைப்பிள்ளை. அவள், ஜானின் முன் வைத்த ஒரே நிர்ணயம் இது தான்: ஜான், தான் நேசிக்கும் அத்தனையையும், அவரின் மருத்துவப் படிப்பு உட்பட எல்லா வற்றையும், இழைப்புளி வைத்துத் தேய்த்துத் தள்ளப்படும் மரச் சில்லு போல செதுக்கித் தள்ளி விட்டு, இந்த அகங்காரியின் பின்னால், ஒரு சிறு கூஜாவைத் தூக்கி கொண்டு வந்து விட வேண்டும்! ஜான் பொறுமையிழந்தார். திருமண நிச்சயத்தை உடைத்தார் - மிகச் சரியாக. அதற்காக அவள் பக்கத்திலிருந்து ஏவப்பட்டவற்றை எதிர் கொண்டு ரொம்பவே அவதிப்படுத்தப் பட்டார். அப்போது, தனக்குத் திருமணம் என்று ஒன்று நடந்தால், வெரோனிக்கா சாயல் துளியும் இல்லாத ஒரு பெண்ணாய் பார்த்துத் தான் இடம் பெற வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டார். கெர்டாவை, மரியாதையற்று வர்ணிப்பதற்கு மன்னிக்க, அதாவது ஒரு முதல் ரக மரக்கட்டையை

மணமுடித்தார். திருமிகு பொய்ரெட்... ஜானின் கவர்ச்சிக்கும் இளமைக்கும் இயற்கையாக அவருக்குப் பல தொடர்புகள் இருந்தன. ஆனால் ஒன்று கூட கெர்டாவுக்குத் தெரியாது. தெரிந்தாலும் பெரிசாய் ஒன்றும் விளங்கிவிடப் போவதில்லை. ஆனால் எனக்குள் ஒன்று மட்டும் வெகு ஸ்திரமாய் பதிந்துள்ளது - கடந்த பதினைந்து வருடங்களாக ஏதோ ஜானை வதைத்து வந்துள்ளது. ஏதோ.. ஏதோ... வெரோனிக்காவுடன் தொடர்புடைய ஏதோ! ஆமாம் திருமிகு பொய்ரெட். ஜான் முழுமையாக வெரோனிக்காவிடமிருந்து தப்பித்திருக்கவில்லை என்பது என் அபிப்ராயம். கடைசியில் கடந்த சனியன்று அவர் வெரோனிக்காவைச் சந்திக்கிறார்.''

ஒரு நீண்ட கவனித்தலுக்குப் பிறகு, ''வெரோனிக்கா வீட்டைப் பார்க்க என்று காரணம் சொல்லிக் கொண்டு அன்றிரவே அந்த நடிகையோடு கிளம்பிய ஜான், அதிகாலை மூன்று மணிக்குத் தான் ஹாலோ திரும்புகிறார்'' என்று கதை போல் சொன்னார் பொய்ரெட்.

''அட, இது உங்களுக்கு எப்படித் தெரியும்?!''

''ஹாலோவின் ஒரு வேலைக்காரிக்குப் பல் வலி!''

''பல் வலி?''

''அதனால் அவள் அத்தனை நேரமும் தூங்கவில்லை!''

இருவரும் சிரித்துக் கொண்டனர். ''தேவையற்று அந்த பங்களாவுக்குள் ஏகமாய் வேலைக்காரர்களை வைத்திருக்கிறார், லூசி.''

''ஆனால் ஜான் வெரோனிக்காவுடன் சென்று வந்தது உங்களுக்கே கூட தெரியும், ரீட்டா.''

''ஆமாம்.''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

சிறு இடைவேளை. பிறகு ஹென்ரீட்டா மெதுவாய் சொன்னார்: ''நான் என் அறை ஜன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது அவர் ஹாலோ திரும்பிக் கொண்டிருந்ததையும் பார்த்தேன்.''

''பல் வலி?!''

''ம்...!'' - பொய்ரெட்டைப் பார்த்துப் புன்முறுவினார் ரீட்டா. ''வேறுவகையான வலி!''

எழுந்துக் கொண்டு விடை பெறும் இலக்கோடு கதவை நோக்கி நகர்ந்தார் ரீட்டா. பொய்ரெட் இதைக் கவனித்து சொன்னார் :

''திரும்பிச் செல்லும் உங்களுடன் நானும் காலாற வருகிறேன், ரீட்டா.''

படியிறங்கிய இருவரும், தெருவில் சிறிது தூரம் நடந்து மரக்காட்டு எல்லைக்குள் நுழைந்தனர். ''நீச்சல் குளம் வழியாகச் செல்ல வேண்டாம், திரு பொய்ரெட். இதோ, இந்த இடப்புறமாய் பயணித்து, அப்படியே பூக்கள் வளர்க்கப்படும் நந்தவனத்துக்குள் நுழைந்து அந்த வழியாய் போய் விடுவோம்.''

மரக்காட்டிலிருந்து செங்குத்தாய் உயர்ந்து ஒரு பாதை நீண்டது. அதன் முடிவில் ஓர் அகலமான பாதை விரிந்து சிறு தளம் உருவாகியிருந்தது. தற்சமயம் அங்கிருந்த ஓரிருக்கையில் ரீட்டா அமர, அவளருகில் ஹெர்குல்'லும் அமர்ந்துக் கொண்டார். மரக்காட்டின் நெடுநெடு மரங்களின் அடிப்பாகம் இத்தளத்திற்கு கீழேயும், நுனி பாகம் இத்தளப் பகுதிக்கு மேலேயுமாய் அமைந்து, சுற்றுவட்டாரம் முழுதும் 'ஹோ...' வென்ற பள்ளத்தாக்கு சூழலை உண்டுபண்ணி யிருந்தன. இத்தளப் பகுதியின் பக்கவாட்டிலிருந்து சிறு பாதை கீழிறங்கி, நீச்சல் குளம் வழியாக, ஹாலோ நோக்கி ஓடியது. இப்பாதையின் நுனியிலிருந்து கீழே நோக்குங்கால் காற்றின் அதிக்கத்தில் அதிர்ந்துக் கொண்டேயிருக்கும் குளத்தின் தளப்பகுதி, நீல நிற வெள்ளியாய் தென்பட்டது.

பேசாது ஹென்ரீட்டாவை கவனித்துக் கொண்டிருந்தார் ஹெர்குல். ரீட்டாவின் முக இறுக்கம் தளர்ந்திருந்தது. அமைதியாகியிருந்தது. இளமை மீண்டும் வந்து குடிகொள்ள பளபளவென்றானது. இப்படியான ஒரு சஞ்சலமற்ற நேர்த்தியோடு தான் சிறு வயசு ரீட்டா வாழ்ந்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார் அவர். மிருதுவாய் சொன்னார்: ''எதை பற்றிய சிந்தனை, செல்வி?''

''ஏய்ன்ஸ்விக் பற்றி.''

''ஏய்ன்ஸ்விக் என்றால் என்ன?''

''ஏய்ன்ஸ்விக்? அது ஓர் ஊர். சிறு மாகாணம்.''

தன் இனிய கனவாய் ஏய்ன்ஸ்விக்கை விவரித்துக் கொண்டிருந்தார் ரீட்டா. பசுமை நிறைந்த சுற்றம், கலகலவென்ற வீடு, தன் மர தாகத்துக்குத் தீனி போடும் அழகழகான நெடு மரங்கள், சுற்றி வர மரம்செடி-கொடிகள் மட்டுமே கொண்டு வடிவமைக்கப்பட்ட இயற்கை அரங்கம்... ... ...

''ஓ! அது உங்கள் சொந்த ஊரா?''

''அப்படியில்லை. நான் அயர்லாண்டிலிருந்து வருபவள். ஏய்ன்ஸ்விக்'கிற்குத் தான் வருவோம் - நாங்களனைவரும் - விடுமுறைக்காக. எட்வர்ட், நான், மிக்டே. சொல்லப்போனால் அது லூசியின் வீடு. அவர் தந்தை கட்டிய பழமை பொதிந்த வீடு. பெரியவரின் மறைவிற்குப் பிறகு எட்வர்டுக்கு வந்து விட்டது.''

''ஹென்றிக்கு வரவில்லை? அவருக்குத் தானே நேர் உரிமை உள்ளது.''

''சட்டரீதியாய் பார்க்கப் போனால் எட்வர்ட் கை தான் ஓங்கியிருந்தது. ஹென்றி வெகு தூரத்துச் சொந்தமாவார்.''

''எட்வர்ட் ஆங்கட்டெலுக்குப் பிறகு இந்த ஏய்ன்ஸ்விக் வீடு யாருக்குப் போகும்?''

''விநோதமான கேள்வி'' - ஆச்சரியமாய் பொய்ரெட் பக்கம் திரும்பினார் ரீட்டா. ''இந்த ரீதியில் நான் நினைத்துக் கூட பார்த்ததில்லை'' என்று விவரிப்பாய் சொன்னார். ''எட்வர்ட் மட்டும் கலியாணம் செய்துக் கொள்ளாமல் இப்படியே இருந்து விட்டால் -'' நிறுத்தினார். ஒரு சிறு நிழல் அவர் முகத்தில் படர்ந்து நின்றது. இப்படி ஒரு நிழலாடும்படி அவர் மூளைக்குள் என்ன சிந்தனை வந்து நிற்கிறது என்று அறிய இயலாது ஆர்வமானார் பொய்ரெட்.

பிறகு, ''நான் என்ன நினைக்கிறனென்றால்....'' என்று மெதுவாய் ஆரம்பித்த ரீட்டா, ''அந்த வீடு டேவிட்டுக்குத் தான் போகும்'' என்றார். ''ஒரு வேளை இதைப்பற்றியெல்லாம் பேசத் தான் டேவிட்டை, லூசி, இங்கு... ... ....''

தொடராமல் நிறுத்தி விட்டார்.

''பேசவா...? என்ன? என்ன?''

''டேவிட். ஏய்ன்ஸ்விக் வீடு'' - இப்படிச் சொல்லிப் பார்த்துக்கொண்ட ரீட்டா, ''ம்ம்'' என தலையை மறுத்து அசைத்துக் கொண்டு, ''இரண்டும் கொஞ்சமும் பொருத்தவில்லை'' என்று முடித்துக் கொண்டார்.

பொய்ரெட், அவர்களுக்கு முன் நீண்டு போய்க் கொண்டிருந்த பாதையைச் சுட்டிக் காட்டினார். சொன்னார் : ''இந்தப் பாதை வழியாகத் தான், செல்வி ரீட்டா, நீங்கள் நீச்சல் குளத்திற்கு நேற்று இறங்கிப் போனீர்கள்.''

சிறு நடுக்கத்தை உடனடியாக பிரதிபலித்தார் ரீட்டா.

''இல்லை. அதோ, வீட்டிற்கு அருகிலிருக்கும் அந்த வழியாக நான் வந்தேன். எட்வர்ட் தான் இவ்வழியாக வந்தடைந்தார்.''

சொல்லி விட்டு சட்டென ஹெர்குல்லைப் பார்த்த ரீட்டா, "நீச்சல் குளத்தைப் பற்றி மேலும் நாம் பேசத் தான் வேண்டுமா? நான் நீச்சல் குளத்தினை வெறுக்கிறேன். ஏன், ஹாலோவைக் கூட வெறுக்கிறேன். அது ஒரு கொலை நிலம். கொலை கொலை என ...டும் எதிரொலிக்கும் - கொலை எனும் வார்த்தையை மட்டும் ஆமோதித்து எதிரொலித்துக் கொண்டேயிருக்கும், பிரதேசம்" என்றார்.

"எதிரொலிப்பு..!" - ஆச்சரியம் மிக தனக்குத் தானே ஒரு முறை ...த்து சொல்லிப் பார்த்துக் கொண்டார் ஹெர்குல். "எதிரொலிப்பு என்றீர்களே. அதை என்ன அர்த்தத்தில் சொன்னீர்கள், ரீட்டா?"

"பல அர்த்தங்களில். இதோ, இந்த இடம், இந்த ஹாலோ! இது ...ர் எதிரொலிப்பு. எட்வர்டுடன் சனிக்கிழமை அன்று சிறு நடை சென்றபோது, இந்த ஹாலோவே, ஓர் ஏய்ன்ஸ்விக்'காக என் முன் ...ிந்து சிலிர்க்க வைத்ததை உணர்ந்தேன். ஹாலோ - ஏய்ன்ஸ்விக்'கின் எதிரொலி! நாங்கள் கூட, இந்த ஆங்கட்டெல் கூட்டம் கூட, எதிரொலிப்புகள் தான்! ஏதோ ஒன்றின் சாயல் தான் நாங்கள். தனித்துவம் அற்றவர்கள். எனில் நாங்களும் எதிரொலிப்புகள் தானே. சுயம் அற்ற எதிரொலிப்புகள். நாங்கள் சுயமானவர்கள் அல்ல - ஜானைப் போல நிஜமானவர்கள் அல்ல."

இப்படிச் சொல்லி விட்டு சற்று வன்மம் தொனித்த ஆதங்கத்தோடு பொய்ரெட்டைத் திரும்பிப் பார்த்து சொன்னார் : "என் நீண்ட விளக்கத்திலிருந்து ஜானை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள் என நினைக்கிறேன், திருமிகு பொய்ரெட். நாங்களெல்லாம் சுயமற்ற நிழல்கள். எந்தச் சாயலும் அற்று வாழ்ந்த ஜான் மட்டுமே நிஜம். நிழலேயற்ற நிஜம். ஜான் நிஜமாய் உயிர்ப்புடனிருந்தார் திரு பொய்ரெட்."

"அந்த உயிர்ப்பு அவர் உயிர் அடங்கும் போது கூட துளியும் குறையாமல் பிரகாசித்திருந்தது, செல்வி ரீட்டா!"

"ஆமாம். நானும் அதை கிரகித்தேன். ஜான் இறந்து விட்டார். நாங்கள், வெறும் எதிரொலிப்புகள், உயிருடனிருக்கிறோம். உயிருடன், திரு பொய்ரெட். உயிர்ப்புடன் என்று சொல்லவில்லை."

இப்படிச் சொன்ன ரீட்டா பரந்து விரிந்திருந்த நீல வானத்தை ஊடுருவியபடி "மிக மோசமான நகைச்சுவை, இது" என்றார். விரக்தியாய் சிரித்தார்.

அவர் முகத்தில் வந்திருந்த இளமைத் துடிப்பு மீண்டும் காணாமல் போயிற்று. கசப்பான எண்ணத்தால் அவர் உதடுகள் சிறு துடிதுடிப்புடன் வலி கொண்டன.

இச்சமயத்தில், தொடர்ந்து பொய்ரெட் ஒரு கேள்வியைக் கேட்க, ரீட்டா, சில நொடிகள், அந்தக் கேள்வியை உள் வாங்கிக் கொள்ள இயலாமல் வெறுமனே இருந்தார். பிறகு அறிந்து, ''மன்னித்து விடுங்கள் திரு பொய்ரெட். கவனிக்கவில்லை. என்ன சொன்னீர்கள்?'' என்றார்.

''அதாவது உங்கள் இன்னொரு உறவான லூசி, டாக்டர் கிறிஸ்டோவின் வருகையையும் அவர் இருப்பதையும் விரும்பினாரா என்று கேட்டேன்.''

''நிச்சயமாய் ஜானை லூசி மிக நேசிப்பார்.''

''எட்வர்ட் - இவர் உங்களுடைய இன்னோர் உறவு என்றறிந்தேன் - இவர்?''

ஒலித்த ரீட்டாவின் குரல் கட்டுப்படுத்தப்பட்டு ஒலித்ததாய் உணர்ந்தார் பொய்ரெட். ரீட்டா சொன்னார் : ''குறிப்பிட்டுச் சொல்ல இருவருக்கும் ஒன்றுமில்லை. எட்வர்ட், ஜானை, மிகக் கொஞ்சமாய் தான் அறிந்திருந்தார்.''

''அந்த இன்னொரு உறவுப் பையன்? இவன் பெயர் டேவிட், இல்லை?''

ஹென்ரீட்டா மெலிதாய் சிரித்தார்.

''எனக்குத் தெரிந்து, ஜானை என்றல்ல, அனைவரையும் டேவிட் வெறுக்கிறான். சிறைக்குள் அடைக்கப்பட்டவனைப் போல் தன்னை நூலகத்துக்குள் திணித்துக் கொண்டு காலங்கழிக்கிறான் அவன்.''

சிந்தனையாய் பொய்ரெட் சொன்னார்: ''ஆபத்தான குணம்.''

''டேவிடுக்காக வருந்துகிறேன். மிகக் கடுமையான குழந்தைப் பருவத்தை அனுபவித்தவன் டேவிட். அவன் தாய் உபயோகமற்றவள். நிதானமில்லாதவள். பாச பந்தங்கள், உறவுகள் எல்லாவற்றையும் அறுத்தெறிந்தவள். தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ள, இப்பொழுது அவனுக்கு இருக்கும் ஒரே ஒரு வழி, இங்கிருக்கும் யாரையும் விட தானே மிகப் பெரியவன் என்று காட்டிக் கொள்வது தான்! மெனக்கெடுகிறான். நூலகத்தில் உட்கார்ந்து மிகப் பெரிய பொது அறிவுப் புத்தகங்களாய் படித்துப் படித்து விஷயங்களை அறிகிறான் - எல்லோரையும் விடத் தானே எல்லாம் தெரிந்தவன் என நிரூபிக்க!''

பொய்ரெட் கவனித்த வண்ணமிருந்தார்.

''எப்போதும் பாச்சா பலிக்கின்றதா! இல்லையே! மேதாவித் தனமாய் தன்னைக் காட்டிக் கொள்ளும் போது சில பல சமயங்களில் பரிதாபமாய் பல்லிளித்துக் தோற்றுப் போகிறான். அப்போதெல்லாம் சுக்குநூறாய் உடைகிறான். இதனால், சுலபமாய் காயப்படவல்ல டேவிட், பொறுமையிழந்து, கத்திக் கூப்பாடு போட்டு அவலட்சண மாகிறான்.''

''டாக்டர் கிறிஸ்டோவை விட சிறந்தவனாக, மேம்பட்டவனாக தன்னைத்தானே டேவிட் கருதுகிறானா?''

''முயற்சி செய்திருக்கிறான் என்பதே என் கருத்து. ஆனால் அம்முயற்சி திருவினையாகவில்லை. திரு பொய்ரெட்... அப்படியே ஜான் கிறிஸ்டோ போன்ற மனிதனாக தான் உருவெடுக்க வேண்டும் என்று டேவிட் தீவிரமாய் விழைந்ததாக நான் சந்தேகப்படுகிறேன். அது முடியாமல் போக, விளைவு, ஜானை தீவிரமாய் வெறுத்தான்.''

''மனோ ரீதியான சங்கடங்கள்!'' - இப்படிச் சொல்லிக் கொண்ட பொய்ரெட், டேவிட் குறித்து நிகழ்ந்த சிறு உரையாடலைத் தீர கிரகித்துக் கொண்டவராய் தலையசைத்துக் கொண்டார். ''ஆம். இது அதீத தன்னம்பிக்கையின் வீச்சு. தான் நஷ்டப்படாமலிருக்க பிரயத்தனப்படும் முயற்சிகளின் தாக்கம். ஆண்மையும் அதன் வீரியமும் மிகும் காழ்ப்பு. எல்லாம் அதிமிகுதியான ஆண் சுபாவங்கள்; தீவிர புருஷ லட்சணங்கள். டேவிட், என் கவனத்தைக் கவர்கிறான். மிக மிக.''

ஹென்ரீட்டாவுக்கு பதில் கூற முடியவில்லை. தெரியவில்லை.

நிலவிய மௌனத்தின் இடையில், மர இடுக்குகளின் வழியே தெரிந்த நீச்சல் குளத்தின் சுற்றுப் பகுதியில் கண்களைப் பதித்த பொய்ரெட், அங்கு, குனிந்து வளைந்து தாழ்வாயெல்லாம் நடந்து, ஒருவன் எதையோ தேடிக் கொண்டு - அல்லது அது போல் எதையோ செய்துக் கொண்டு இருப்பதைக் கவனித்தார்.

சன்னமாய் முணுமுணுத்தார் : ''ஆச்சரியமாயிருக்கிறது.''

''கேட்கவில்லை. என்ன சொன்னீர்கள், திரு பொய்ரெட்?''

''அதோ, அது இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜின் ஆள். எதையோ தேடிக் கொண்டிருப்பதாய் படுகின்றது.''

''ஏதேனும் துப்புக்காயிருக்கலாம்! போலீஸ்காரர்கள் துப்புத் தேடக் கூடாதா என்ன? ஒரு சிகரெட் துண்டு! இல்லை அதன் சாம்பல்! காலடி! பாதி எரிந்த தீக்குச்சிகள்! இவற்றிற்காக!'' - எரிச்சலான பரிகாசத்தைத் தாங்கி நின்றது அவர் குரல்.

பொய்ரெட் முக்கியத்துவமளித்து பதில் தந்தார் : ''உளவாளிகள் சிகரெட்டுக்கும் தீக்குச்சிக்கும் தான் அலைவார்கள். வேறு வழியில்லை. அது தான் உளவு. சில சமயங்களில் அவை கிடைக்கும். உதவும். உதவாமலும் போகும். ஆனால், செல்வி ரீட்டா, நாம் எதிர் கொண்டுள்ள இது போன்ற வழக்குகளின் நிஜத் துப்புகள், தீக்குச்சித் துண்டிலோ, எரிந்து ஓய்ந்த சிகரெட் துண்டிலோ அகப்படாது, செல்வி ரீட்டா. அவை - வழக்கினுள் பின்னிப் பிணைந்துள்ள மனிதர்களின் தனிப்பட்ட உறவுமுறைக்குள் தான் படுத்துக் கிடக்கும். அதனைக் கண் கொண்டு காண வேண்டும். பிறகு தட்டியெழுப்ப வேண்டும். உண்மையின் முடிச்சு, அப்போது, பொலபொலவென அவிழும்!''

''ம்ம்'' என்று மறுத்துத் தலையசைத்த ரீட்டா, ''நீங்கள் சொல்வது எனக்குத் துளியும் அர்த்தமாகவில்லை'' என்றார்.

''சிறு சிறு விஷயங்களில்... சிறு சிறு அசைவுகளில்... சிறு சிறு வசனங்களில்....'' என்றார் பொய்ரெட். தலையை அப்படியே பின்னுக்குத் தள்ளிப் போட்டுக் கொண்டு பாதி கண்கள் மூடி சிந்தனையாய் சொன்னார் : ''இப்போது தேவை சிகரெட்டோ அதன் சாம்பலோ அல்ல. ஒரு பார்வை - எதிர்பாரா ஒரு நடவடிக்கை - அதிரடியான ஒரு நொடிச் செயல் - ஒரு சைகை.''

ஹென்ரீட்டா சட்டென்று அவர் பக்கம் திரும்பி கூர்மையாய் பார்த்தார். தன் பார்வையை அவர் பக்கம் திருப்பாமலே, அவர் தன்னைத் தான் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதனை உணர்ந்தார் பொய்ரெட்.

''அப்படி ஏதாவது ஒரு நடவடிக்கையை - செயலை - சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்களா, பொய்ரெட்?''

''ஆமாம். நீங்கள் ஒரு சில அடிகள் முன் வந்து, துப்பாக்கியைத் திருமதி கிறிஸ்டோவின் கைகளிலிருந்து பெற்று, பிறகு அதனை அப்படியே குளத்தினுள் நழுவ விட்டீர்களல்லவா.... அது எப்படி நிகழ்ந்தது என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.''

கேட்டதும், சட்டென்று ஒரு துடிப்பு உந்தித் தள்ள, எதற்கோ ஓர் அவசர ஆரம்பம் காட்டினார் ரீட்டா. ஆயினும் அவர் குரல் அமைதியாகவும் துணுக்குறாமலுமே இருந்தது.

''கெர்டா, ஒரு வகையில் அவலட்சணமானவள். அதுவும் இது போன்ற சமயங்களில் சொல்லவே வேண்டாம். அனைவரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கிய அந்த சமயத்தில், துப்பாக்கியில் மட்டும் இன்னும் சில குண்டுகள் இருந்திருக்குமேயாயின், மேலும் சில

*ற்றுக்கள் சுட்டு யாரையேனும் காயப்படுத்தியோ அல்லது கொன்றோ தீர்த்திருப்பாள்."

"ஆனால், இந்நிகழ்வில், துப்பாக்கியைப் பெற்று நீச்சல் குளத்துக்குள் நழுவ விட்டதால், அவரை விட அதிக அவலட்சணமாய் நடந்துக் கொண்டு நீங்கள் தானே!"

"நானும் வேண்டிய அளவு அதிர்ச்சியில் தானே இருந்தேன்."

இப்படிச் சொல்லி விட்டு நிறுத்திய ரீட்டா கேட்டார் : "நீங்கள் என்ன உணர்த்த வருகிறீர்கள், திரு ஹெர்குல்?"

பொய்ரெட் நிமிர்ந்து விறைப்பாய் அமர்ந்தார். கட்டளை போல், 'இது தான் உண்மையென நினைக்கிறேன்' எனும் தாட்சணியமற்ற முறையில் பேசினார்.

"அந்தத் துப்பாக்கியில் கைரேகைகள் பதிந்திருக்குமேயானால், குறிப்பாய் சொல்வதானால் திருமதி கிறிஸ்டோ கையாளுவதற்கு முன் பதிந்திருந்த கைரேகைகள், அவை யாருடையவை என்பதை அறிந்துக் கொள்ளவதில் ஆர்வம் மிகுந்து நிற்கும். ஆனால் அவற்றை இனி நாம் அறிந்துக் கொள்ளவே இயலாது."

ஹென்ரீட்டா சமாதானமாய் ஆனால் கோவையாய் பதில் தந்தார்: "அவை என்னுடையதாயிருக்கும் என அர்த்தப்படுத்துகிறீர்கள்? நான் ஜானைச் சுட்டு விட்டு, துப்பாக்கியையும் அவர் உடலருகே வைத்து விட்டு, கெர்டா அவ்வழியே வந்து அதனை ஒரு குழந்தை போல தூக்கிக் கொண்டு நிற்பார் எனும் எதிர்பார்ப்பில் இயங்கியுள்ளதாய் ஆலோசிக்கிறீர்கள்? அப்படித்தானே, திரு ஹெர்குல்? அப்படி மட்டும் நான் செய்திருந்தால், முதல் வேலையாய், அதிமேதாவித் தனமாய் திட்டமிட்டு, செயல்பட்டு, அதிலிருந்து என் கை ரேகைகளை முழுவதுமாய் வழித்தெடுத்துத் துடைத்திருப்பேன்..! ஞாபகமிருக்கட்டும்!"

"இருக்கலாம். ஆனால், செல்வி ஹென்ரீட்டா! நீங்களே சுட்டிருக்கும் பட்சத்தில், உங்கள் கை ரேகை முழுதுமாக அழித் தெறியப்படுவது மட்டுமல்லாது, துப்பாக்கியில் வேறு யாருடைய கைரேகையுமில்லாது திருமதி ஜான் கிறிஸ்டோவின் கை ரேகைகள் மட்டுமே இருக்க வேண்டும் என்று ஆவது தான் உயரியது என இயங்கியிருப்பீர்கள்! நீங்கள் அத்தகைய மேலோங்கிய மேதாவித் தான்!" – ரீட்டாவின் பேச்சுக்கு இவ்விதமாய் பதிலடி தந்த ஹெர்குல், தனது தீவிரமான கருத்து இதுதான் என பின்வருமாறு சொன்னார்: "நினைவிருக்கட்டும் ரீட்டா. முன்தினம் தான் அத்தனை பேரும்

அந்தத் துப்பாக்கியைப் பயன்படுத்தியுள்ளார்கள். அனைவரது கை ரேகைகளும் கலவையாய் அதில் பதிந்து தான் இருந்திருக்கும். தான் உபயோகிப்பதற்கு முன், அதிலிருந்த அத்தனை ரேகைகளையும் கெர்டா கிறிஸ்டோ அழித்திருக்கவே மாட்டார் - அவர் ஏன் அப்படி செய்ய வேண்டும்? தவிர, கெர்டாவுக்கு 'இப்படியெல்லாம்' சிந்திக்கவும் வராது...!''

மெதுவாய் ரீட்டா கேட்டார்: ''ஆக நான் தான் ஜானைக் கொன்றதாய் நீங்கள் நினைக்கிறீர்கள்?''

''டாக்டர் கிறிஸ்டோவின் மூச்சு அடங்கிக் கொண்டிருக்கும் போது அவர் 'ஹென்ரீட்டா' என்று அலறினார்.''

''அதை நீங்கள் குற்றச்சாட்டாய் எடுத்துக் கொள்கிறீர்கள்? அப்படி கிடையாது.''

''பிறகு வேறெப்படி?''

சட்டென பதில் பேசவில்லை ரீட்டா. தன் கால்களை நீட்டி, தரையில் ஓர் உருவ மாதிரியை வரைந்தார். அதைப் பார்த்தபடி தாழ்ந்த ஒலியில் சொன்னார் : ''நான் சிறிது நேரத்திற்கு முன்னால் சொன்னதை - நானும் ஜானும் கொண்டிருந்த உறவு முறை பற்றிச் சொன்னதை - நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள் என நினைக்கிறேன்.''

''ஆஹ்....! ஆமாமாம். அவர் உங்கள் காதலன். அதனால் அவர் இறக்கும் தறுவாயில் 'ஓ... ஹென்ரீட்டா' என்று சொன்னாரா! நெஞ்சைத் தொடும் காட்சி!''

திரும்பி, தகிக்கும் பார்வையை அவர் மீது வீசினார் ரீட்டா.

''இந்த அளவு ஏளனம் செய்யத்தான் வேண்டுமா?''

''நான் பரிகசிக்கவில்லை. ஆனால் என்னிடம் பொய் பேசப் படுவதையும் நான் விரும்பவில்லை. நீங்கள் அதைத் தான் செய்ய முயலுகிறீர்கள்.''

பதறாது ரீட்டா சொன்னார் : ''நான் மிகவும் உண்மையானவள் அல்ல என உங்களிடம் சொல்லியிருக்கிறேன். ஆனால், ஜான், தன் மரணத் தறுவாயில் 'ஹென்ரிட்டா' எனச் சொன்னது என் மீது கொலைப் பழிச் சுமத்த அல்ல என்பது மட்டும் உண்மை. என் போன்ற, கலா ரசனையுடன் ஜீவன்களை சிருஷ்டிக்கும் - படைக்கும் - உருவாக்கும் திறன் படைத்தவர்கள், ஒரு கொலை செய்து ஜீவனை அழிக்க இயலாதவர்கள் என்று உங்களுக்குப் புலப்படவில்லையா, திரு ஹெர்குல். நான் படைப்பாளி - மனிதர்களைப் படைப்பவள். கொல்பவள் அல்ல. என்னால் கொல்ல முடியாது ஹெர்குல்.

கலப்பில்லாத பூரண உண்மையிது. இறந்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதன் - அச்சமயத்தில் தான் என்னப் பேசுகிறோம் என பிரித்தறியியலாத ஒரு மனிதன் - என் பெயரை உச்சரித்ததை வைத்துக் கொண்டு என்னைக் கொலையாளியாக்கிப் பார்க்கிறீர்கள்.''

''டாக்டர் கிறிஸ்டோவுக்கு அட்சர சுத்தமாகத் தான் என்ன பேசுகிறோம் என்பது தெரிந்து தானிருந்தது. அறுவை சிகிச்சை அறையில், 'ம்.... அந்த கத்தியை எடு' என்று குழப்பமற்றுப் பரபரக்கும் ஒரு டாக்டரின் துல்லியமும் சுயநினைவும் உயிர்ப்பும் அவரிடமிருந்தன.''

''ஆ...ஆ...ஆனா...ஆனால்....'' - வீழ்ந்து விட்டதாய் உணர்ந்தார் ரீட்டா. பேச்சுத் தடுமாற பின்வாங்கினார். இதைக் கவனித்து, ஆனால் இதற்காகவெல்லாம் நிறுத்தாது, வேகமாக தொடர்ந்துக் கொண்டேயிருந்தார் ஹெர்குல்:

''டாக்டர் கிறிஸ்டோ கடைசி சில மூச்சுக்களுக்காகப் போராடும் போது உங்கள் பெயரை அதிர்ந்துச் சொன்ன காரணத்தால் மட்டும் உங்கள் பக்கம் நான் விரல் நீட்டவில்லை, ரீட்டா....! முன்னேற்பாடாய் திட்டமிட்டு ஒரு கொலையை நிகழ்த்தவல்லவராய் உங்களை என்னால் கண நேரம் கூட கற்பனை செய்து பார்க்கயியலாது. ஆனால், அந்த ஒரு குண்டுச் சுற்றினை, எதிர்பாராத ஒரு நொடிப் பொழுதில் உங்களுக்குள் விளைந்திட்ட கொடூரமான கோபத்தால், பயங்கரமான ஆத்திரத்தால், நீங்கள் சுட்டிருக்கலாம். அப்படியென்றால், அப்படியென்றால், செல்வி ஹென்ரீட்டா...! அதனால் விளையவல்ல சுவடுகளை உங்களின் கற்பான திறனாலும் ஆக்கபூர்வ நிபுணத்துவத் தாலும் நிச்சயம் மறைக்கவல்லவர் - அழிக்கவல்லவர், நீங்கள்.'' துப்பாக்கியை, ரீட்டா கெர்டாவிடமிருந்து வாங்கி, குளத்துக்குள் விட்டு விட்டதே கூட, தனது இந்த விமர்சனத்துக்கு ஒரு சான்றே என்பது போல, மிக ஸ்திரமாய் முடித்தார் ஹெர்குல்.

ஹென்ரீட்டா எழுந்து விட்டார். பேயறைந்தாற் போல் உலுக்கப்பட்டு சில வினாடிகள் நின்ற வண்ணமிருந்தார். எதிர்ப்பற்று. எதிர்க்கத் திராணியற்று. பின், சட்டென விளைந்த வருத்தம் தந்த இரக்கப் புன்முறுவலோடு சொன்னார்: ''நீங்கள் என்னை விரும்புகிறீர்கள் என நினைத்து வந்தேன்.''

பெருமூச்செறிந்த ஹெர்குல், வருத்தம் தோய்ந்து, ''எனக்கு நேர்ந்த பெரும் துரதிர்ஷ்டமே அது தான். நான் உங்களை மிக மதிக்கிறேன்'' என்றார் சிறு துக்கத்தோடு.

## 19

ஹென்ரீட்டா வெளியேறிப் போனதும், பொய்ரெட் உட்கார்ந்தபடியே இருந்தார் - கீழே சென்றுக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜைப் பார்க்கும் வரை. நீச்சல் குளத்தின் பக்கமாய் உறுதியான நோக்குடனும் அகட்டி வைத்த அடிகளுடனும் சென்றுக் கொண்டிருந்த க்ரேஞ்ஜ், பெவிலியனைத் தாண்டி நீண்ட பாதையைத் தேர்ந்தெடுத்து நடக்கலானார்.

இன்ஸ்பெக்டர், நிர்ணயித்த ஏதோ ஓர் இலக்கினைக் குறி வைத்து விரைந்துக் கொண்டிருந்தார். எனவே, அவர், ரெஸ்ட் ஹெவனுக்கோ அல்லது புறாக் கூடுக்கோ தான் சென்று கொண்டிருக்க வேண்டும். எந்த இடத்திற்காயிருக்கும் என வியந்துக் கொண்டார் பொய்ரெட்.

எழுந்து வெளி வந்த ஹெர்குல், இன்ஸ்பெக்டர் சென்ற பாதையை ஒற்றித் தொடர்ந்தார். இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ், தன்னைக் காண என வந்திருக்கும் பட்சத்தில் எட்டடிப் பாய்ச்சலில் வேகவேகமாய் அவர் என்ன சொல்வதற்காக வந்திருப்பார் என அறிய ஆர்வம் கொண்டார் ஹெர்குல்.

ஆனால் தனது ஜாகையான ரெஸ்ட் ஹெவனை வந்தடைந்ததும், யாரும் பார்வையாளர் வந்து போனதாய் எந்த அறிகுறியும் தென்படவில்லை அவருக்கு. சிறு சிந்தனையோடு பாதையின் மேட்டில் தெரிந்த புறாக் கூடுக் குடிலைப் பார்த்தார் துப்பறியும் நிபுணர். வெரோனிக்கா க்ரே இன்னும் லண்டனுக்குப் புறப்பட்டுச் செல்லவில்லை என்பது நினைவு வந்தது.

வெரோனிக்கா க்ரே பற்றி அறிந்துக் கொள்ள தனக்குள் ஓர் ஆர்வம் திபுதிபுவென வளர்ந்து வருதை அவரால் உணர முடிந்தது. பளபளவென ஒளிர்ந்தபடி பெவிலியனில் வீசப்பட்டுக் கிடந்த விலையுயர்ந்த மேலாடை - ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டு அங்குக் கிடந்த வத்திப் பெட்டிகள் - அறிமுகமில்லாத ஒரு புது வீட்டுக்குள், நட்ட நடு ராத்திரியில், நேர்த்தியேயற்று இடம்பெறும் திடீர் க்ரே பிரவேசம் - இவையெல்லாவற்றுக்கும் மேலாக, ஜான் கிறிஸ்டோ மற்றும் வெரோனிக்கா க்ரே பற்றி ஹென்ரீட்டா வெளியிட்ட ரகசியத்திலிருந்து அறிய கிடைத்த உண்மைகள்!

இது ஒரு நுணுக்கமான அலங்கார வேலைப்பாடாய் அர்த்தமாயிற்று பொய்ரெட்டுக்கு! ஆம். வழக்கில், வெரோனிக்காவின் சம்பந்தத்தை முடிபடித்தான் பொய்ரெட் நோக்கினார்: அலங்கார வேலைப்பாடு!

பின்னிப் பிணைந்த உணர்ச்சிப் போராட்டங்களாலும், தனி மனித கௌரவங்களின் மோதலாலும், இவை விளைவித்த தாக்குதலாலும் கோர்க்கப்பட்டு அலங்கரிக்கப்பட்ட வேலைப்பாடு! விசித்திரமான ஆனால் ஆழ்ந்த அலங்கரிப்பு! தேவையென்ற தாகத்தாலும் அது கிடைக்காததால் உண்டான அக்கினி வெறுப்பாலும் உருவாக்கப்பட்டு கரு நூலினால் கோர்க்கப்பட்ட ஆழ்ந்த அலங்கரிப்பு!

கெர்டா கிறிஸ்டோ தன் கணவனைச் சுட்டிருக்க முடியுமா? அல்லது, இப்படி வார்த்தைகள் போட்டுக் கேட்டுப் பார்த்துக் கொள்வது போல, அது, அவ்வளவு சுலபமானது இல்லை தானா?

ஹென்ரீட்டாவுடன் நிகழ்ந்த உரையாடலை மீண்டும் மீட்டிப் பார்த்துக் கொண்ட ஹெர்குல்'லுக்கு, தான் நினைப்பது போல, கெர்டா ஜானைக் கொன்றிருப்பார் என்பது, அவ்வளவு சுலபமாய் முடிவு கட்டக் கூடிய சமாச்சாரமில்லை என்பது தெளிவாயிற்று.

பேசிக் கொண்டிருந்த ஹென்ரீட்டா, ஹெர்குல் பக்கத்து வாதத்தைக் கேட்ட சுருக்கில், ஏதோ இவர் அவரைக் கொலை செய்தவர் என்றே சந்தேகிப்பதாய் ஒரு முடிவுக்குள் குதித்து விட்டார். ஆனால் இவரோ, அந்த ஓர் அதீத முடிவுக்கு இன்னும் தன்னளவில் போய் விடவில்லை! இக்கொலை வழக்கில், ஹென்ரீட்டாவுக்கு - இன்னும் அவர் வெளிச்சொல்லாத சில ரகசியங்கள் தெரிந்தே தான் உள்ளன எனும் அளவிலான நம்பிக்கையைத் தாண்டி - இவர் மனதில் வேறில்லை! அவருக்கு ஏதாவது தெரியுமா இல்லை ரகசியமாக்கப் பார்க்கிறாரா, இவ்விரண்டில் எது, என்பதிலேயே துப்பறியும் நிபுணருக்கு சிறு குழப்பமுள்ளது!

கலவையான சுய வாதங்கள். திருப்தியற்று தன் தலையை இடவலமாக ஆட்டிக் கொண்டார் ஹெர்குல்!

நீச்சல் குளத்துக் காட்சியை நினைத்துப் பார்த்தார். ஓர் அரங்க வடிவமைப்பு. அமைக்கப்பட்ட அரங்கம்.

யாரால்? யாருக்காக?!

இரண்டாவது கேள்விக்கான விடையாக 'ஹெர்குல் பொய்ரெட்' என்று ஆழமாய் ஐயப்பட்டார். ஹெர்குல் ஹாலோவுக்குள் நுழைந்து முதன் முதலாய் நீச்சல் குளத்தைப் பார்த்த பொழுதில் இவர் இப்படித் தான் நினைத்தார். அதிகப்பிரசங்கித்தனமாக, சம்பந்தா சம்பந்த

மின்றி அமைக்கப்பட்ட முரட்டுத்தனமான காட்சி அமைப்பாயும், நகைப்புக்கு இடமளித்து விட்ட சுத்த கேலிக் கூத்தாயும் தான் எடை போட்டார் - துப்பறியும் நிபுணரான தன் விருந்துக்காக அமைக்கப் பட்டிருந்த அந்த அசம்பாவித நாடக மேடையைப் பார்த்து! இதோ இப்பொழுது நினைத்துப் பார்க்கும் போது கூட, அமைக்கப்பட்டிருந்த அந்த அரங்கம், அதிகப்பிரசிங்கத்தனமாய் தான் பொய்ரெட்டுக்குப் பட்டது. ஆனால், இப்போது, அது, கேலிக் கூத்தல்ல. நடந்து முடிந்து விட்ட விபரீத நிஜம்.

அந்த முதல் கேள்விக்கான விடை?

'தெரியவில்லை' - எண்ணியபடி தலையை மறுத்து ஆட்டிக் கொண்டார். கிஞ்சித்தும் கருத்து இல்லை.

பாதிக் கண்களை மூடிக் கொண்ட ஹெர்குல், அனைவரையும், ஒருவர் விடாமல் அனைவரையும், தன் மனக்கண் முன் வரிசையாய் நிற்கச் செய்து, சர்வ நிச்சயமாய் ஆராய்ந்துப் பார்த்துக் கொண்டார். திரு ஹென்றி - கண்ணியமான பொறுப்பிலும் நாடாளும் மன்னனின் நல்மதிப்பிலுமிருந்த நேர்மையானவர். லூசி ஆங்கட்டெல் - நழுவவும் ஏமாற்றவும் இயலுகின்ற, பயங்கரமாகவும் அதே சமயம் விளையாட்டுத் தனமாயும் திடீர் திடீரென்று எதிர்பாராது திடுக்கிட வைக்கவல்ல பெண்மணி; தொடர்பற்ற ஆனால் உண்மையாக ஆகக் கூடிய ஆலோசனைகளை அள்ளித் தரும் ஆபத்தான உள்ளுணர்வு சக்தி மிகுந்தவர். ஹென்ரீட்டா - தன்னைத் தான் நேசிப்பதை விட ஜானை மானமார நேசித்தவர் - காதலித்தவர். மிருதுவான ஆனால் எதிர்மறை குணம் கொண்ட எட்வர்ட் ஆங்கட்டெல். நேர்மறை குணம் மிளிரும் மிக்டே. அதிர்ந்து பயந்து வெளிறிப்போன முகத்தோடு, கைக் குழந்தையாய் துப்பாக்கியைக் கையில் சுமந்து நின்றுக் கொண்டிருந்த கெர்டா கிறிஸ்டோ. சடுதியில், அவமதிப்புகளுக்கும் அதனாலுண்டா கும் வெறுப்புகளுக்கும் இரையாகிப் போகும் டேவிட் ஆங்கட்டேல் எனும் விடலை.

அங்கு ஹாலோவில் எல்லோருமிருந்தனர் - சட்டத்தின் வலைக்குள் தப்பயியலாது அகப்பட்டுக் கொண்டு! திடீரென, எதிர்பாராது, இரக்கமற்று நடந்து முடிந்துவிட்ட அதிபயங்கர மரண சம்பவத்தில் சேர்ந்து சிக்குண்டு விட்ட ஹாலோ பிரஜைகள்.

ஒவ்வொருவருக்கும், ஒவ்வொருவருக்குள்ளும், வலி தரும் ஒரு சோகமும், அந்த சோகத்திற்கு ஓர் அர்த்தமும், அந்த அர்த்தத்தை விளக்கவல்ல ஒரு கதையும் உள்ளன.

அந்த சோகங்களுக்குள், பாத்திரங்கள் அனுபவிக்கும் ரண வலிகளுக்குள், உணர்ச்சிக் கொந்தளிப்பினாலான அவர்களின் கதைகளுக்குள் - தெய்வமேயென்று படுத்துக் கிடக்கிறது - உண்மை.

இந்தச் சூழலில், மனித உளவியலை ஆய்வதை விட, ஒரே ஒரு பிரமிப்பான வேட்டை தான் பொய்ரெட்டின் முன் விரிந்து நின்றது.

ஜான் கிறிஸ்டோவின் மரணத்திற்கான உண்மை காரணத்தின் தேடுதல் மீதான வேட்டையே அது!

* * * *

நிச்சயமாய் இன்ஸ்பெக்டர்'' என்றார் வெரோனிக்கா. ''உங்களுக்கு உதவ மிகவும் ஆர்வமாய் உள்ளேன்.''

''நன்றி, வெரோனிக்கா க்ரே.''

இப்படி அப்படி என்று இன்ஸ்பெக்டர் கற்பனை செய்து வந்திருந்தபடி வெரோனிக்கா இருக்கவில்லை.

கவர்ச்சி ததும்பும்படியான, செயற்கை அலங்காரங்கள் மிகுந்த, ஒரு வெள்ளித்திரை கதாநாயகியை எதிர்பார்த்து தான் க்ரேஞ்ஜ் வந்திருந்தார். தன் விசாரணைக்கு, வெரோனிக்காவிடமிருந்து, ஒரு வகை நடிப்பு கலந்த மறுபதில்கள் வந்திருந்தாலும் ஆச்சரியப் பட்டிருக்க மாட்டார்.

இப்போது கூட, சொல்லப்போனால், தன் விவேகமான புத்தி நுட்பத்தால், க்ரே நடித்துக் கொண்டிருப்பதாய் தான் கணக்கிட்டார் இன்ஸ்பெக்டர். அவர் எதிர்பார்த்து வந்தது போலல்லாத நடிப்பு; ஆனால், நடிப்பு தான்!

பெண்மையைத் தூக்கி நிறுத்திய எந்த அதீத வசீகரிப்புமில்லை - கவர்ச்சி அழுத்திக் காட்டப்படவில்லை!

மாறாக, மிக மிக அழகு ததும்பும் பெண்ணுக்கு எதிரில், விலையுயர்ந்த ஆடைகளையும் நகைகளையும் தரித்து அலங்கரித்துள்ள ஒரு பெண்ணுக்கு அருகாமையில், அதுவும் தன் தொழிலில் பலரறிய புகழ் பெற்ற ஒரு பெண்ணருகில் அமர்ந்திருப்பதாய் உணர்ந்தார் க்ரேஞ்ஜ்.

'வெரோனிக்கா க்ரே சமயோஜிதம் மிக்கவள். முட்டாளல்ல' - நினைத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

''ஒளிவு மறைவற்ற சுத்தமான - சரியான வாக்குமூலங்கள் தேவை வெரோனிக்கா. நீங்கள் ஹாலோவுக்கு, சென்ற சனியன்று, இரவு செல்கிறீர்கள்?''

''ஆமாம். என் குடிலிலிருந்த வத்திப் பெட்டிகள் தீர்ந்திருந்தன. நான் கொண்டு வரவுமில்லை. இது போன்ற பொருட்களெல்லாம் பட்டிக்காடுகளில் எத்தனை அத்தியாவசியம் என்பதை நாம் மறந்து விடுகிறோம்.''

''இங்கிருந்து எங்கோயிருக்கும் ஹாலோவிற்கா சென்றீர்கள்? உங்கள் அடுத்த வீட்டிலிருக்கும் திரு பொய்ரெட்டிடம் போய்க் கேட்டிருக்கலாமே?''

இதற்கு க்ரே சிரித்தார். பிரமாதமான நம்பிக்கை மிளிரும் காமிரா சிரிப்பு.

''என் அடுத்த வீட்டில் வசிப்பது யார், அவர் பெயரென்ன என்றெல்லாம் நான் அறிந்து வைத்திருக்கவில்லை. தெரிந்திருந்தால் சென்றிருப்பேன். யாரோ வெளிநாட்டினன் என்ற அளவில் தான் நினைத்திருந்தேன். அறிமுகம் என்று செய்துக் கொண்டால் அடிக்கடி வந்து தனிமையைக் கெடுக்கும் வஸ்துவாகி விடுவார் என்றும் நினைத்தேன். அதானல் அடுத்த வீட்டை அணுகவில்லை.''

'ம். நியாயமென்றே தோன்றுகிறது' என நினைத்துக் கொண்டார் க்ரேஞ்ஜ். கேட்டார் : ''வத்திப் பெட்டிகள் கிடைத்தன. அங்கிருந்த டாக்டர் கிறிஸ்டோவுக்குள் உங்களது பழைய நண்பனை கண்டு பிடித்தீர்கள், இல்லையா?''

ஒப்புக் கொண்டார். ''பரிதாப முடிவு. அவரை நான் பதினைந்து ஆண்டுகளாய் சந்தித்திருக்கவில்லை.''

''உண்மையாகவா?'' - மரியாதையான அவநம்பிக்கை இன்ஸ்பெக்டரின் குரலில் நின்றது.

''உண்மையாக!'' - க்ரே'யின் குரல் ஸ்திரமாய் ஊர்ஜிதம் செய்தது.

''அவரை அங்கு சந்தித்ததில் சந்தோஷம் தானே?''

''மிக மிக. இன்பமானேன். பழைய நண்பர்களை எதிர்பாராது சந்திப்பது மகிழ்ச்சி ஊட்டும் என்பது நீங்கள் அறியாததா இன்ஸ்பெக்டர்?''

''ம். சில சமயங்களில்.''

வெரோனிக்கா க்ரே தொடர்ந்தார், மேலும் கேள்விக்களுக்காகக் காத்திராது. ''என்னுடன் வீடு வரை வந்தார் ஜான். அப்போது எங்களுக்குள் நடைபெற்ற உரையாடலின்போது ஜான் பேசிய வசனங்களில், நடந்த அசம்பாவிதத்துடன் தொடர்பு படுத்தவல்ல ஏதேனும் நோக்கம் தென்படுகிறதா என நீங்கள் அறிய விரும்பலாம்.

நானும் மிக உன்னிப்பாக எங்களிருவருக்குமிடையே நடந்த உரையாடலை அசை போட்டுப் பார்த்து விட்டேன். ம்ம். அப்படிச் சுட்டிக் காட்டும்படி எதுவும் தென்படவில்லை.''

''நீங்கள் என்ன பேசினீர்கள், க்ரே?''

''பழைய நாட்கள் பற்றி. அது நினைவிருக்கிறதா, இது நினைவிருக்கிறதா, அந்த இடம்? இப்படி!'' - ஆழ்ந்த யோசனையும் அதில் ஊறிய வருத்தமும் தொனிக்க உதடு பிரியாது மெலிதாய் சிரித்தார். ''தென் பிரான்ஸில் இருந்த போது இருவருக்கும் பழக்கம். ஜான் மாறியிருக்கிறார். கொஞ்சமாய் வயதாகியிருக்கிறது. கூடவே தன்னம்பிக்கையும் கூடியிருக்கிறது. அவரின் மருத்துவத் தொழிலில் நல்ல பேரும் புகழும் கொண்டு விளங்குவதாய் அறிந்தேன். நடைபெற்ற உரையாடலில் தன் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றி அவர் வாய் திறக்கவேயில்லை. இதனால் அவரின் திருமண வாழ்க்கை ஆரோக்கியமானதாய் இல்லையோ என உணர நேர்ந்தது - ஆனால் இது ஒரு நிச்சயமில்லாத ஊகம் தான். எனக்கென்னவோ, ஜானின் மனைவி, உடல் முழுதும் பொறாமை கொண்ட பெண்ணாய், ஜானின் அழகழகான பெண் நோயாளிகளைப் பற்றி தப்புத் தப்பாகக் கற்பனை செய்து வாழும் கிராக்கியோ என்று தோன்றியது.''

''கிடையாது'' - மறுத்தார் க்ரேஞ்ஜ். ''உண்மையில் அப்படிப்பட்ட வகையாய் அவர் தோன்றவில்லை.''

வெரோனிக்கா உடனடியாய் சொன்னார் : ''ஓ! பின் உள்ளுக்குள் ளேயே, அதாவது மனதின் அடியிலேயே போட்டு அடைத்து வைக்கப் பட்டிருந்த பொறாமையாயிருக்கும் என சொல்ல வருகிறீர்களா? ஆமாமாம்! அப்படியும் இருக்கலாம். எனில் அது படு பயங்கர மன்றோ!''

நானா இப்படியான அர்த்தத்தில் சொல்ல வந்தேன் என எண்ணிக் கொண்ட இன்ஸ்பெக்டர், இதனை வெளிக்காட்டிக் கொள்ளாமல் ''நீங்கள் திருமதி கிறிஸ்டோ தான் சுட்டுக் கொன்றுள்ளதாய் நினைப்பதாக கருதுகிறேன், க்ரே'' என்று குறிப்பிட்டார்.

''அப்படி நேரடியாக நான் சொல்லக் கூடாது, இல்லையா? வழக்கு விசாரணை நடந்துக் கொண்டிருக்கும் போது, யாரும் கருத்துத் தெரிவிக்கக் கூடாதே! அவருக்காக மிக வருந்துகிறேன் இன்ஸ்பெக்டர். என் வேலைக்காரிகளுள் ஒருத்தி தான் சொன்னாள்.

உடலுக்குப் பக்கத்தில் கையில் துப்பாக்கியைச் சுமந்துக் கொண்டு சிலையென அவர் நின்றுக் கொண்டிருந்ததைப் பார்த்ததாய் அவள் சொன்னாள். நாட்டுப்புறத்தில் எது நடந்தாலும் அது உடனுக்குடன் எப்படி பெரிதுபடுத்தப்பட்டு வம்பளக்கப் படுகின்றது பார்த்தீர்களா?''

''இருக்கலாம். இருந்தாலும் வேலைக்காரர்கள் சில சமயங்களில் வழக்கினை முடித்துப் போட அற்புதமாய் உதவுவார்கள், செல்வி க்ரே!''

''ஓ. அவர்கள் மூலமாய் நீங்களெல்லாம் அதிகப்படியான தகவல்களை சேகரித்து விடுவீர்கள் என நம்புகிறேன்.''

க்ரேஞ்ஜ் சற்று மந்தமாய் சொன்னார் : ''இங்கு ஒரு கேள்விக்குத் தான் விடை வேண்டும், க்ரே. யாருக்கு இலக்கிருந்தது? ஜானை சுட்டு வீழ்த்த யார் குறிக்கோள் கொண்டு அலைந்தது... ... ...?''

சொல்லி விட்டு சிறு இடைவெளி தந்தார்.

கவலைதோய்ந்த சக்தியற்ற குரல் கொண்டு வெரோனிக்கா சொன்னார்: ''கணவன்மார்களின் கொலைகளில், மனைவி தான் உலகம் சந்தேகப்படும் முதல் நபர்! ம்! நல்லதில் நம்பிக்கையற்ற உலகம்! ஆனால், வழக்கமாய், மனைவி மீது சந்தேகம் எனும் போர்வைக்குள் ஒளிந்துக் கொண்டு இன்னொரு பெண்ணும் இருப்பாள். அவளைத் துருவ வேண்டும் இன்ஸ்பெக்டர். அவளுக்குள், நீங்கள் தேடும் 'இலக்கு' நிச்சயம் இருக்கும் என்பது என் கணிப்பு.''

''டாக்டர் கிறிஸ்டோவின் வாழ்க்கையில் இன்னொரு பெண் இருந்திருப்பாள் என நினைக்கிறீர்களா?''

''ம்...'' - சிந்தித்தார். ''ஆமாம்'' என்றார் நிச்சயமாய். ''இருக்கக் கூடும் என்றே நினைக்கிறேன். ஓர் ஊகம். இது போன்ற தருணங்களில் ஊகங்கள் உதிக்கின்றன!''

''அப்படி உதிக்கும் ஊகங்கள் சில சமயங்களில் எதிர்பாராமல், மிகப் பெரிய அளவில் உதவி விடும்'' என்றார் க்ரேஞ்ஜ்.

''அவர் என்னிடம் பேசியதிலிருந்து, அந்த சிற்பிப் பெண் இருக்கிறாளில்லையா, அவள், ஜானுக்கு, மிக நெருக்கமான தோழியாய் இருந்திருப்பதாய் தோன்றிற்று. அது குறித்தெல்லாம் உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கும் என்றும் கருதுகிறேன்.''

''நிறைய தகவல்கள் சேகரித்துள்ளோம். எல்லாவற்றிலும் தீர ஆராய வேண்டியுள்ளது.''

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜின் குரல் துளியேனும் பட்டும் படாமலிருந்தது. ஆனால், அவர், கவனிப்பது தெரியாது கவனித்தார் ... மிகு அந்தப் பிரகாசமான பெரிய நீல நிற விழிகளில் மின்னி ... மறைந்த திருப்தியை. சிற்பிப் பெண் பக்கமாய் பழியைத் ... போட்டுப் பார்ப்பதில் உருவாகும் திருப்தி!

...சாரணை நிமித்தமாய் கேட்பது போல கேட்டார் : ''உங்களை அழைத்து வந்து வீடு வரை விட்டுச் சென்றதாய் சொன்னீர்கள். அவருக்கு நீங்கள் குட் நைட் சொல்லி விடை கொடுத்த போது மணி எத்தனையிருந்திருக்கும்?''

''நிச்சயமாய் தெரியவில்லை! ஞாபகத்துக்கு வரவில்லை! கொஞ்ச ... பேசிக் கொண்டிருந்தோம். அது நினைவுள்ளது. காலம் தாழ்ந்து ... ளெம்பியிருக்க வேண்டும்.''

''உள்ளே வந்தாரா?''

''ஆமாம். குடிக்கக் கொஞ்சம் கொடுத்தேன்.''

''ஓஹோ. நானோ, உங்கள் சம்பாஷணை, வெளியே, நீச்சல் குளத்துப் பெவிலியன் அருகே நிகழ்ந்திருக்க வேண்டும் என ...நினைத்திருந்தேன்.''

க்ரே'யின் கண்ணிமைகள் படபடவென துடித்து அடங்கியதைக் கவனித்துக் கொண்டார். ஒரு நொடி தாமதம் தான். பிறகு பேச ஆரம்பித்து விட்டார்: ''நீங்கள் திறன் மிக்க துப்பறியும் நிபுணரே தான்! இல்லையா பின்னே? எப்படி கண்டுபிடித்து விட்டீர்கள்! நாங்கள் அங்கும் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தோம். குளிருக்கு அடக்கமாய் புகை பிடித்தோம். சிறிது உரையாடினோம். அது சரி. இது எப்படி உங்களுக்குத் தெரியும்?''

தனக்கு விளக்கப்படாத சிறு விளையாட்டு வித்தையால் குழந்தை கொள்ளும் அசிரத்தையைக் காட்டினார் க்ரே.

''விலையுயர்ந்த உங்களுடைய மேல் அங்கியை அங்கேயே விட்டு விட்டு வந்துள்ளீர்கள், வெரோனிக்கா'' என்று இன்ஸ்பெக்டர், எவ்வித முக்கியத்துவமும் இல்லாது இப்போது பேசியது போலவே சொன்னார் : ''வத்திப் பெட்டிகளையும்!''

''ஆமாம். அங்கேயே விட்டிருக்கிறேன்.''

''தெரிந்துக் கொள்ளுங்கள்'' என்று அறிவிப்பது போல ஆனால் முக்கியத்துவம் தராது சொன்னார் : ''டாக்டர் கிறிஸ்டோ ஹாலோ திரும்பியபோது மணி, அதிகாலை மூன்று.''

''ஓ...! அந்த அளவுக்கா காலம் கடந்து விட்டிருந்தது?'' - வெரோனிக்கா மிக ஆச்சரியமடைந்தாற் போல் கூவினார்.

''ஆமாம். அதிகாலை மூன்று மணி, க்ரே!''

''அத்தனை பேச இருந்திருக்கிறது, எங்களுக்குள்! ஒருவரை யொருவர் பல வருடங்களாய் சந்தித்தும் பேசியும் கொள்ளாததால் மணி ஓடியதையே அறியவில்லை.''

''நீங்கள், டாக்டர் கிறிஸ்டோவை சந்தித்து இத்தனை வருடங்கள் ஆகி விட்டதாய் பெருமூச்செறிகிறீர்கள்! உண்மையாகவா நீங்களிருவரும் பதினைந்து வருடங்களாய் சந்தித்துக் கொள்ளாமல் இருந்திருக்கிறீர்கள்?''

''இப்பொழுது தானே சொன்னேன். நாங்களிருவரும் சந்தித்து முழுசாக பதினைந்து ஆண்டுகள் ஆகி விட்டன.''

''சரியாக, தவறு நேராமல் தான் சொல்கிறீர்கள் இல்லையா? இதில் குழப்பமில்லையே? நீங்கள் அடிக்கடி சந்தித்துக் கொண்டுள்ளதாய் எனக்கு ஓர் ஊகம் உள்ளது!''

''எதை வைத்து இப்படிச் சொல்கிறீர்கள்?''

''இதோ'' என்றவர் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு சிறு தாளை எடுத்து ''உதாரணத்திற்கு இந்தத் துண்டுச் சீட்டு'' என்றவர், தொண்டையைச் செருமிக் கொண்டு அதனை வாசித்தார் : ''தயவுசெய்து காலையில் என் இடத்துக்கு வரவும். உன்னை நான் பார்த்தே ஆக வேண்டும் - வெரோனிக்கா.''

''ஆ...ஆ... ஆமாம்'' - சிறு சிரிப்பு, வெரோனிக்காவின் இதழ்களில். ''ஒரு வகை கட்டளை, அதிகார வேண்டுதல் எனலாம். எல்லாம் ஹாலிவுட் சினிமா உலகின் தாக்கம். ஒருவரை, அது, எத்தனை முரடனாக்கி விடுகின்றது.''

''இந்த அதிகாரத்துக்கு உட்பட்டு, டாக்டர் கிறிஸ்டோ மறுநாள் காலை உங்கள் குடில் தேடி வருகிறார். உங்களுக்குள் சண்டை சச்சரவு நிகழ்கின்றது. அந்தப் பூசல் எதன் பொருட்டு நிகழ்ந்தது என்று எனக்குச் சொல்ல முடியுமா. க்ரே?''

இன்ஸ்பெக்டர் தன் போலீஸ் சக்தியின் முகத்திரையை அவிழ்த்துக் காட்டினார். தனக்குள் ஒளிர்ந்த கோபக் கனலைக் கொட்டி விட்டிருப்பார் - ஆனால் உடனடியாய் செய்ய விரும்பவில்லை. உதடுகளை இறுக்கி அமைதி காத்தார்.

கிளை உடைந்தாற் போல் பட்டென க்ரே சொன்னார் : ''நாங்கள் சண்டை போடவில்லை.''

''மறைப்பது ஆபத்து, க்ரே. நீங்களிருவரும் பேயாட்டம் ஆடியிருக்கிறீர்கள். அதில் நீங்கள் விட்ட கடைசி வார்த்தையைச் சொல்லட்டுமா'' என்று அதிகாரம் விஸ்வரூபமெடுக்கச் சொன்னார்: ''இப்பொழுது, உலகில் வேறெதையும் காட்டிலும் வேறு யாரையும் காட்டிலும் உன்னை முழுக்க வெறுகிறேன் ஜான். போ. போய் விடு.''

க்ரே அமைதியானார். யோசிக்கிறாள் - வேகவேகமாய் அவசர அவசரமாய் எதையோ இட்டுக்கட்டிப் பேச யோசிக்கிறாள் - என அபிப்பம் பிடித்தார் இன்ஸ்பெக்டர். சராசரி பெண்ணாயின் மறுத்துப் பேச முண்டியடித்துக் கொண்டு விழைந்திருப்பார். ஆனால் வெரோனிக்கா க்ரே புத்திசாலி.

தன் தோள்களை ஒரு முறை மேல் கீழாய் உலுக்கிக் கொண்டு சமமற்றுச் சொன்னார்: ''வேலைக்காரக் கூட்டம் கட்டி விட்டிருக்கும் கதை! என் வேலைக்காரிக்கு உயிரோட்டம் நிறைந்த கற்பனா சக்தி அதிகம். கேட்பவற்றை வைத்துக் கொண்டு, திரு க்ரேஞ்ஜ், விதம் விதமாய் அர்த்தப்படுத்தலாம், தெரியுமா! அது ஒரு சிறு ஊடல் வார்த்தை. சரச வார்த்தை என வைத்துக் கொள்ளுங்களேன். ஒருவருக்கொருவர் இவ்விதமாய் தான் பேசிக் கொண்டிருந்தோம்.''

''அந்த வார்த்தைகளை ஆபத்தான நோக்கில் எடுத்துக் கொள்ளத் தேவையில்லை என்கிறீர்களா?''

''நிச்சயமாக. இத்தனை சொல்லியும் ஏன் சந்தேகம்! உங்களுக்குப் பிரமாணம் செய்து தர முடியும் இன்ஸ்பெக்டர். நான் கடைசியாய் ஜானைப் பார்த்து பதினைந்து வருடங்கள் கடந்து இருக்கின்றன. நீங்களே கூட இதனை சரிபார்த்துக் கொள்ளலாம்.''

மீண்டும் தான் பேசுவதில் ஸ்திரமானார் க்ரே.

க்ரேஞ்ஜ், தொடர்ந்து விவாதிக்கவும் இல்லாமல், தொடரவும் இல்லாமல், எழுந்துக் கொண்டார். ''இப்போதைக்கு இவ்வளவு தான், செல்வி வெரோனிக்கா க்ரே!'' என இனிமையாய் குறிப்பிட்டார்.

★ ★ ★ ★

''புறக்கூடு' குடிலிலிருந்து கிளம்பி, தெருவிறங்கி, ரெஸ்ட் ஹேவன் குடில் வாயிற்கதவுகளைத் திறந்து நுழைந்தார் இன்ஸ்பெக்டர்.

அதிகபட்ச ஆச்சரியத்தின் விளிம்பில் தொங்கிக் கொண்டு இன்ஸ்பெக்டரைப் பார்த்தார் ஹெர்குல் பொய்ரெட். கொஞ்சங்கூட

நம்பாமல் கேட்டார் : ''கெர்டா சுமந்து நின்றுக் கொண்டிருந்த துப்பாக்கி - பிறகு உடனேயே நீச்சல் குளத்தில் நழுவி விழுந்த துப்பாக்கி - அந்தத் துப்பாக்கி - ஜானின் உயிர் பறித்த குண்டினை சுழற்றிபடித்த துப்பாக்கி இல்லையா? ஆச்சரியம், அதிசயம்! அசாதாரணம்!''

''அதே தான், அதே தான். அசாதாரணம் தான், திரு பொய்ரெட்! கிடைத்துள்ள தகவலை கை கால் ஒட்டாமல் அப்படியே பார்த்தால், இது வேறெப்படியும் அர்த்தமாகவில்லை.''

பொய்ரெட் அமைதியாய் முணுமுணுத்தார். ''நிச்சயமாய் அர்த்தமற்றப் பேச்சாய் தான் தோன்றுகிறது. குளத்தில் மூழ்கிய துப்பாக்கி வேறா? ஆனாலும், திரு க்ரேஞ்ஜ், இது நிஜமாய் நிகழ்ந்துள்ள திருப்பம். எனவே, இது, தகுந்த அர்த்தத்தைத் தந்தே ஆக வேண்டும். உச்சகட்டம் இதில் தானுள்ளது. அதை நாம் அறிந்தாக வேண்டும்.'' - துரிதப்பட்டார் ஹெர்குல்.

மிக நீண்டப் பெருமூச்செறிந்த இன்ஸ்பெக்டர், பொய்ரெட்டை ஆமோதித்து சொன்னார் : ''வெகு சரியாய் சொன்னீர்கள் பொய்ரெட். ஏதோ ஒரு வழியைக் கண்டுபிடித்து, இப்புதுத் திருப்பத்தை அர்த்தப்படுத்தியே தீர வேண்டும். ஆனால்... ஆனால்... இந்தக் கணத்தில், எனக்கு, அப்படி உதவ வல்ல ஒரு வழி தென்படவே யில்லை. கொலைகார குண்டினைச் சுண்டி விட்ட துப்பாக்கி பற்றிய ஸ்திரமான தகவல்கள் கிடைக்கும் வரை, திருமிகு பொய்ரெட், இவ்வழக்கு விசாரணையில் ஓரடி கூட நம்மால் முன்னேற முடியாது என்பது தான் தற்போதைய நிதர்சன நிலை. திரு ஹென்றியின் துப்பாக்கி சேகரிப்பலிருந்து ஒரு துப்பாக்கி காணாமல் போயுள்ளது; இதனால், ஜானை வீழ்த்திய துப்பாக்கி அவரது சேகரிப்பிலிருந்து தான் எடுக்கப்பட்டிருக்க வேண்டும் எனக் கொள்ளலாம். இந்தக் கருத்து சரியானால், ரகசியம் முழுதும் இன்னும் கட்டவிழாமல் ஹாலோவுக் குள்ளேயே தான் கிடக்கின்றது.''

சிறு திகிலுடன், ''ஆமாம்'' என்றார் பொய்ரெட். ''ஜான் கொலைக்கான அத்தனை ரகசியமும் ஹாலோவுக்குள்ளேயே தான் உறங்கிக் கொண்டிருக்கின்றன.''

''ஆரம்பத்தில் சிக்கலேயில்லாத எளிய சுலபமான வழக்காய் தான் பட்டது'' - தொடர்ந்தார் இன்ஸ்பெக்டர் : ''ம்ம். அத்தனை சாதாரண வழக்கல்ல இது.''

''பயமுறுத்துகிறது. துப்பாக்கியே காணவில்லை எனில் எப்படித்தான் முன்னேறுவது?''

''திட்டமிட்டு செய்யப்பட்ட ஒரு சதி என எதிர்படும் சாத்தியக் கூறினை, திரு பொய்ரெட், நாம் ஏற்றுக் கொண்டு கூர்ந்து நோக்க வேண்டும். அதாவது 'கெர்டா கிறிஸ்டோவை இக்கொலையுடன் சம்பந்தப்படுத்தி சிக்க வைக்க வேண்டும் என திட்டப்பட்ட திட்டம்' எனும் சாத்தியக் கூறினைக் குறிப்பிடுகிறேன்'' என்ற க்ரேஞ்ஜ் உடனேயே பின்வரும் கேள்வியையும் கேட்டுக் கொண்டார்: ''இது தான் திட்டமெனில், கெர்டா எடுக்கட்டும் என ஏன் சுடப்பட்ட துப்பாக்கியையே ஜான் உடல் பக்கத்தில் விட்டு வைக்கவில்லை?''

''ஒரு வேளை துப்பாக்கியை கெர்டா எடுக்காமல் விட்டு விட்டால்... எனும் சந்தேக்தினால் இருக்கலாம்''

''இருக்கட்டுமே. கெர்டா துப்பாக்கியை எடுக்காமலே விட்டு விட்டாலும் கூட, அந்தத் துப்பாக்கியில் வேறு யாருடைய கை ரேகையும் இல்லாத பட்சத்தில் - அதாவது, கை ரேகையே பதியாது துப்பாக்கியைக் கையாண்டுள்ள பட்சத்தில் - அருகில் நிற்கும் கெர்டா தானே சந்தேகத்துக்கிடமாகி இருப்பார்? அது தானே கொலையாளி எதிர்பார்த்தது, இல்லையா?''

''அப்படியா?!''

பொய்ரெட்டின் இக்கேள்விக்குத் திகைத்துப் போய் பார்த்தார் க்ரேஞ்ஜ். பின் தொடர்ந்தார் : ''திரு பொய்ரெட்! நீங்கள் ஒரு கொலையை செய்தீர்களாயின், துரிதமாக உடனடியாக அச்சதிகாரச் செயலை வேறு ஒருவர் மீது நட்டு விட்டு நழுவத் தானே துடிப்பீர்கள்? கொலை வெறி தணிந்த ஒரு சாதாரண கொலையாளியின் சராசரி நடவடிக்கை இந்த எதிர்பார்ப்பு தானே!''

''ஆஆஆ... மாமாமா...ம்ம்ம்'' என்று ஸ்பஷ்டமாக ஒப்புக் கொண்ட பொய்ரெட் தொடர்ந்து சொன்னார் : ''ஆனால் நம்மிட முள்ளவரோ வழக்கத்துக்கு மாறான அசாதாரணக் கொலையாளி அல்லவா! எனில், அது - அது - அதுவே, நம் வழக்குக்கான விடையாகி விடும் சாதியக் கூறுகள் அநேகம்!''

''எது?''

பொய்ரெட் ஆழ்ந்து சொன்னார்: ''அது - வழக்கத்துக்கு மாறான அந்த அசாதாரணக் கொலையாளி!''

ஆர்வம் மேலோங்க பொய்ரெட்டை விழுங்குவது போல் பார்த்தார் க்ரேஞ்ஜ். கேட்டார் : ''அப்படியென்றால் கொலையாளியின்

எண்ணம் தான் என்ன? அவனுக்கோ அல்லது அவளுக்கோ இதில் கிடைக்கப் போவது என்ன?''

கைகளிரண்டையும் பறப்பது போல் விரித்து சிறு கொட்டாவியை விடுவித்தபடி கோணிய வாயில் சொன்னார் : ''இதற்கு என்னிடம் விடை இல்லை. எந்த விடையும் இல்லை.'' பிறகு சரியாய் அமர்ந்து, ''ஆயினும், மிக மிக மங்கலாய் தெளிவற்று ஒன்று தோன்றகிறது... ... ...'' என்றார்.

''ம், ம்?''

''அந்தக் கொலையாளி - ஜானை சுட்டு வீழ்த்த முடிவெடுத்து விட்டக் கொலையாளி. ஆ..னா..ல்.., ஆனால்..., எக்காரணம் கொண்டும், கெர்டா கிறிஸ்டோவை வம்பில் மாட்டி விடப் பிரியப்படாதக் கொலையாளி!''

''ஆஹ்...'' என திணறிப் போனார் இன்ஸ்பெக்டர். ''திருமிகு பொய்ரெட்... ஆரம்பத்திலிருந்து நாம் திருமதி கிறிஸ்டோவை சந்தேகப்பட்டுள்ளோம்.''

''ஆமாம். இல்லை எனவில்லை. அது துப்பாக்கி பற்றிய உண்மைகள் வெளிச்சம் போடப்படுவதற்கு முந்தைய காலக் கதை. இப்போது நமக்குக் காட்டப்படும் கோணமே வேறு. இந்த இடைவெளியில் கொலைகாரனுக்குப் போதிய இடைவெளியும் தருணமும் வாய்த்துள்ளன.''

''தருணம்? எதற்கு? என்ன செய்ய?''

''ஆஹ் ஆஹ் ஆஹ். இங்கு தான் நிற்கிறான் பொய்ரெட். ஹெர்குல் பொய்ரெட்! மறுபடியும் நான் எனக்குத் தெரியாது என்று தான் பதில் சொல்ல வேண்டியுள்ளது!''

இன்ஸ்பெக்டர் எழுந்துக் கொண்டு அறையின் குறுக்கும் நெடுங்குமாய் கொஞ்ச நேரம் நடந்தார். பிறகு, பொய்ரெட்டுக்கு எதிராய் வந்து நின்றுக் கொண்டு பேச ஆரம்பித்தார் : ''இப்பொழுது உங்களை நான் காண வந்திருப்பது, திருமிகு பொய்ரெட், இரு காரணங்களுக்காக. ஒன்று, எனக்கு நன்றாய் தெரியும் - எங்கள் காவல் படைக்கே கூட பிரபலமாய் தெரியும் - உங்களுக்கு துப்பறியும் துறையில் நீண்ட நெடிய அனுபவம் இருக்கிறது என்பதும், இப்பொழுது நாம் எதிர் கொண்டுள்ள இவ்வழக்கு போன்றவற்றில் மிகச் சாதுர்யமாக இயங்கி நீங்கள் வெற்றி தேடித் தந்துள்ளீர்கள் என்பதும் - காவல் துறைக்கு உள்ளங்களை நெல்லிக்கனி போல்

தெரியும். இது முதல் காரணம். இது பொது காரணம். ஆனால் மேலும் ஒரு பிரத்யேகக் காரணமுள்ளது. நீங்கள் அங்கிருந்திருக்கிறீர்கள், திரு பொய்ரெட். கொலை ஸ்தலத்தில். சம்பவத்தைக் கண்கூடாக நேரில் கண்ட சாட்சி நீங்கள். என்ன தான் நடந்தது என்பதைப் பார்த்தவர் நீங்கள்.''

பொய்ரெட் ஆமென தலையசைத்தார். ''ஆமாம். என்ன நடந்தது என பார்த்தேன். ஆனால் இன்ஸ்பெக்டர்.... இந்தக் கண்கள் இருக்கின்றனவே, இவை, துளிக்கூட நம்பகத்தன்மை அற்ற சாட்சிகள்!''

''என்ன சொல்கிறீர்கள், திரு பொய்ரெட்?''

''குழம்பாமல் புரிந்துக் கொள்ளுங்கள். கண்கள், சில சமயங்களில், எதிரில் என்ன நடக்கிறதோ அதைப் பார்க்காது, என்ன நடப்பதாய் அவை பார்க்க வேண்டுமோ அதைப் பார்க்கும்!''

சில நொடிகள்தான் சிந்தித்தார்; பின் பதிலின் பொதிந்த அர்த்தம் விளங்கப் பெற்று பிரமிப்பாய் பார்த்தார் இன்ஸ்பெக்டர். ''இந்தக் கொலை முன்னமேயே திட்டமிடப்பட்ட ஒன்று எனச் சொல்ல வருகிறீர்களா?''

''கற்பூரம்'' என வாயாற பாராட்டிய ஹெர்குல், ''நான் அப்படித்தான் சந்தேகிக்கிறேன்'' என்றார். தொடர்ந்தார் : ''புரிந்துக் கொள்ளுங்கள் இன்ஸ்பெக்டர்! அது, அந்த நீச்சல் குளப் பகுதி, ஓர் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நாடக மேடை. நான் பார்த்த மாத்திரத்தில் இது எனக்கு விளங்கிப் போயிற்று. மிகச் சமீபத்தில் சுடப்பட்ட ஒரு மனிதனும், அவனருகில், அவனைச் சுட உபயோகித்த துப்பாக்கியைக் கைகளில் பிடித்தபடி, அவனைச் சுட்ட பெண் நிற்பது போலவும் ஆன காட்சி. இது தான் நான் கண்ட காட்சி. ஆனால் இதில் ஒரு பகுதி தவறு என இப்போது அறியப் பெற்றுள்ளோம்; அந்தத் துப்பாக்கி, ஜானைக் கொல்ல உபயோகப்படுத்தப்பட்ட துப்பாக்கியல்ல என்பதே அது.''

''ஹம்ம்...'' - தொங்கிய தன் மீசையை இன்னும் இழுத்து விட்டுக் கொண்ட இன்ஸ்பெக்டர். ''இக்காட்சியின் இன்னபிற தகவல்களும் கூட தவறாகப் போகலாம் என நீங்கள் உணர்த்துவதாய் தோன்றகின்றது'' என்றார்.

தன் கருத்தினைச் சரியாய் பிடித்துக் கொண்ட இன்ஸ்பெக்டருக்கு சிறு திருப்தி புன்னகையை அளித்த பொய்ரெட் மேலும் தொடர்ந்தார்:

''அங்கு மேலும் மூன்று பேர் இருந்தனர் - அக்களத்திற்கு அப்போது தான் வந்து சேர்ந்திருந்த மூவர். இது கூட, அதாவது அப்போது தான்... அந்தக் கணத்தில் தான் வந்து சேர்ந்தனர் என்பது கூட, பொய்யாக இருக்கலாம். குளம் அமைந்துள்ள அமைப்பு அப்படி. சின்னதாகவும் பெரியதாகவும் பல்வேறான மரங்களைக் கொண்ட மரக்காட்டின் அடர்ந்த சூழலைப் பின்னணியாகக் கொண்டக் குளமது. குளத்தினை மையமாகக் கொண்டு ஐந்து பாதைகள் செல்லுமாறு வடிவமைத்துள்ளனர். ஒன்று வீட்டுக்கு. இரண்டாவது மேல் நோக்கி மரக்காட்டுக்குள். மூன்றாவது விரிந்துக் கிடக்கும் நந்தவனத்துக்கு. நான்காவது நீச்சல் குளத்திலிருந்து கீழ் நோக்கி, பண்ணைக்கு. ஐந்தாவது நம்மைக் கொண்டு வந்து இந்த சாலையில் சேர்க்கும் பாதை.''

நினைவில் உள்ளது என இன்ஸ்பெக்டர் முகபாவம் காட்டியதும் துப்பறியும் நிபுணர் தொடர்ந்தார் : ''அந்த மூவரும் ஒவ்வொரு பாதை வழியாக நடந்து நீச்சல் குளத்தினை அடைந்துள்ளனர். இதுவும் எந்த அளவுக்கு உண்மை என்பது தெரியாத ஒன்று. மேடான மரக்காட்டுக்குள்ளிருந்து எட்வர்ட் ஆங்கட்டெல், பண்ணையிலிருந்து லூசி, நந்தவனத்திலிருந்து ஹென்ரீட்டா, என! இந்த மூவரும், ஏறத்தாழ, சமகாலத்தில், அசம்பாவிதம் நடந்த ஸ்தலத்திற்குள் நுழைகிறார்கள்.''

க்ரேஞ்ஜ் கூர்மையாய் உள் வாங்கிக் கொண்டிருப்பதை நோட்டமிட்ட படி, ''இவை மட்டுமல்ல இன்ஸ்பெக்டர்'' என்று சுவை கூட்டித் தொடர்ந்தார் ஹெர்குல்: ''இந்த மூவரில் ஒருவர், கெர்டா கிறிஸ்டோ வந்தடைவதற்கு முன்னதாகவே கூட குளத்திற்கு வந்து, காத்திருந்து, ஜான் கிறிஸ்டோவை சுட்டுக் கொன்று விட்டு, நான் குறிப்பிட்ட ஏதோ ஒரு பாதைக்குள் மீண்டும் ஓடி புகுந்து ஒளிந்து, மற்றவர்களுடன் வருவது போல், எல்லோரும் நுழையும் போது தானும் வெளியேறி சேர்ந்திருக்கலாம்.''

''இது சாத்தியமே'' என்று ஏற்றுக் கொண்டார் க்ரேஞ்ஜ்.

''மேலும் ஒரு சாத்தியக்கூறு. அப்போது தோன்றாத ஒன்று. இந்த ஏதோ ஒரு வழியாக, இது வரை முகம் தெரியாத அந்தக் கொலையாளி வந்து, நீச்சல் குளமடைந்து, ஜான் கிறிஸ்டோவை சுட்டு விட்டு, அதே வழியில் ஓடி மறைந்திருக்கலாம் - யார் கண்களிலும் படாமல்!''

''அற்புதம். நீங்கள் சொல்வது தான் மிகச் சரி'' - எகிறிக் குதித்தார் இன்ஸ்பெக்டர். ஹெர்குல் தொடரலாம் என அறிந்தும், தனக்குத்

தோன்றியதை உடனடியாக முன் வைக்க இன்ஸ்பெக்டர் முனைந்தார்: ''கெர்டா கிறிஸ்டோவைத் தாண்டி இன்னும் இருவர் மீது என் சந்தேகம் ஆழ ஊன்றியுள்ளது, திருமிகு பொய்ரெட். கெர்டாவை முன் நிறுத்த நாம் கொண்டுள்ள அதே இலக்கு - பொறாமை தான், இவர்களிடமும்! கொலை வரை கொண்டு நிறுத்தியுள்ள ஆசை. அவா. அபிலாஷை. 'ஜான் அபிலாஷை'. அது ஏற்படுத்தியுள்ள பொறாமை. ஆமாம், திரு பொய்ரெட். ஜான் கிறிஸ்டோவின் வாழ்க்கையில் மேலும் இரு வேறு பெண்களின் கலப்பு உள்ளது.''

சிறு இடைவெளி அளித்துத் தொடர்ந்தார் : ''கிறிஸ்டோ, வெரோனிக்கா க்ரேயைப் பார்ப்பதற்காக, அவரைத் தேடி, சம்பவம் நிகழ்ந்த அன்று காலை சென்றிருக்கிறார். மிகப் பெரிய அளவிலான வாக்குவாதம் இருவருக்குமிடையே நடந்துள்ளது. 'பதினைந்து வருடங்கள் முன்னால் என்னைத் தலைக்குப்புறத் தள்ளி விட்டு ஓடி வந்தாய். இன்று மீண்டும் என்னைத் தலைக்குப்புறத் தள்ளி சிதைத்து விட்டாய். ஜான். இவ்விரண்டுக்கு உன்னை பதில் சொல்ல வைப்பேன். வருந்த வைப்பேன். ஓய மாட்டேன்' எனக் கறுவியிருக்கிறார் க்ரே. அது மட்டுமல்ல. 'இப்பொழுது, உலகில் எவற்றையும் காட்டிலும் வேறு யாரையும் காட்டிலும் உன்னை முழுக்க வெறுக்கிறேன் ஜான். போய் விடு.' என்று வைராக்கியமாய் ஜான் மீது வன்மம் கொண்டிருக்கிறார். பொறாமை வன்மம். குரூர வன்மம்.''

''ஓஓஓ...'' - ஈடுபாடானார் பொய்ரெட்.

''முந்தைய நாள் இரவு பெவிலியனில் விட்டுச் சென்ற தனது விலையுயர்ந்த மேலங்கியை எடுப்பதற்காக மீண்டும் க்ரே வந்திருக்கலாம். வந்திருப்பார். அப்போது ஜானைக் குளக்கரையில் பார்த்திருப்பார். அடங்கியிருந்த நெருப்பு – வன்ம நெருப்பு - கனன்றுக் கொண்டிருந்த அந்தப் பொறாமை நெருப்பு – திகுதிகுவெனப் பிடித்துக் கொண்டிருக்கும். கண் புத்தி எல்லாம் மழுங்க, கண நேர முடிவாய் - சுட்டிருப்பாள். யாரோ வரும் அரவம் கேட்க வந்த வழியே சுவடு தெரியாமல் திரும்பியிருப்பார்.''

சிறு இடைவெளி. பின் எரிச்சலாய் பேசினார்: ''இப்படி பல கோணங்களைத் தரும் ஒழுங்கற்ற குலைந்த நிலையைக் கெட்டியாய் பிடித்துக் கொண்டு நாம் இங்கு உட்கார்ந்திருக்கிறோம். ப்ச்! அவளுடைய சொந்தத் துப்பாக்கியைக் கொண்டு வந்து சுட்டு வீழ்த்தி

விட்டு திரு ஹென்றியின் சேகரிப்பிலிருந்த துப்பாக்கி ஒன்றினைக் சுழற்றி எடுத்துக் கொண்டு போயிருப்பாளோ! அப்பொழுது தானே ஹாலோவில் கூடிக் கிடந்த கூட்டத்தினர் மீது போலீஸின் சந்தேகப் பார்வை விழும்! விளங்கவில்லை! குழம்புகிறது! எனில் ஹென்றியின் துப்பாக்கி சேகரிப்பு இருப்பெல்லாம் எப்படி வெரோனிக்காவுக்குத் தெரிந்திருக்கும்?''

இவ்வாறு பேசிய இன்ஸ்பெக்டர், கோபம் பொங்கி வரச் சொன்னார் : ''துப்பாக்கிக் குண்டினை வைத்துக் கொண்டு அல்லது குண்டு துளைத்தத் தடத்தைக் கூட வைத்துக் கொண்டு, அது எந்தத் துப்பாக்கியைச் சேர்ந்தது எனும் தகவலைத் துருவி எடுத்து விடும் நம் திறமையை அறியாதவள், அந்த நடிகை!''

''இந்த சாத்தியக் கூற்றினை எத்தனை பேர் அறிந்திருப்பர்? எனக்குத் தெரியவில்லை!'' - இது பொய்ரெட்.

''இதே கேள்வியை திரு ஹென்றியிடமே கேட்டு விட்டேன். அநேகமாய் எல்லோருக்கும் தெரிந்திருக்கும் என்றே கருத்துச் சொன்னார். இக்காலங்களில் வரும் துப்பறியும் கதைகள் சொல்லித் தந்து விடுமென்றார். 'The clues of the dripping fountain'- குண்டுகளி லிருந்தும் துப்பாக்கிகளிலிருந்தும் துப்புத் தேடுவது குறித்த புத்தகமாம். ஜான் கிறிஸ்டோ, இப்புத்தகத்தை, அந்த சனியன்று படித்துக் கொண்டிருந்ததைக் கவனித்திருக்கிறார் ஹென்றி. சரியான புத்தகமாம் அது!''

''ஆனால், எப்படியோ, ஹென்றியின் சேகரிப்பிலிருந்து துப்பாக்கியைக் கடத்தியிருக்கிறார் வெரோனிக்கா!''

''இது உண்மையெனில், முழுக்க முழுக்க திட்டமிட்டு நடத்தப் பட்டுள்ள கொலை இது'' - தன் தொங்கு மீசையை இன்னுமொரு முறை இழுத்து விட்டுக் கொண்டு தொடர்ந்தார் க்ரேஞ்ஜ்: ''திருமிகு பொய்ரெட், நீங்களே கூட, சந்தேகத்துக்குரிய இன்னொரு சாத்தியக் கூறு பற்றி எனக்கு குறிப்பு தந்திருக்கிறீர்கள். அது - ஹென்ரீட்டா. இங்கு தான், சம்பவ ஸ்தலத்தை நேராய் பார்த்த உங்களுடைய கண் சாட்சி - இல்லையில்லை, கண் சாட்சி என்று சொல்வதை விட, காது சாட்சி எனலாம், ஆம், அது தான் சரி! - காது சாட்சி முன் வருகின்றது.''

இருவர் முகங்களிலும் லேசான புன்முறுவல் முளைத்து அடங்கிற்று. ''டாக்டர் தன் உயிர் பிரியும் போது 'ஹென்ரீட்டா' என்றிருக்கிறார்'' - இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார் : ''அவர் அப்படிச் சொன்னதை நீங்கள் கேட்டுள்ளீர்கள். அங்கிருந்த எல்லோருமே

கேட்டிருக்கிறார்கள். ஆயினும் திரு எட்வர்ட் மட்டும் ஜான் கடைசியாய் சொன்ன வார்த்தை என்ன என்பதை சரிவர கேட்கவில்லை என்கிறார்.''

''எட்வர்ட் ஆங்கட்டெல் கேட்கவில்லையா? விசித்திரமாயுள்ளது!''

''அப்படித்தான் பேச்சு. மற்ற அனைவரும் கேட்டுள்ளனர். மரணத் தறுவாயில், ஜான், தன்னுடன் பேசத் துடித்ததாக, செல்வி ஹென்ரீட்டாவே கூட ஒப்புக் கொள்கிறார். கடைசியாய் கண்களைத் திறந்த ஜான், எதிரே செல்வி ரீட்டாவைப் பார்த்ததும் தான், ஹென்ரீட்டா என்று சொன்னதாய் குறிப்பிடுகிறார், லூசி; இதற்கு அவரிடம் அதிக முக்கியத்தும் தென்படுவதாய் எனக்குத் தோன்ற வில்லை.''

பொய்ரெட் சிறு புன்னகையூடே, ''இதற்கெல்லாம் அவர் முக்கியத்துவம் தருபவர் அல்ல'' என்று சொல்லி, விட்டு விட்டார்.

''இப்பொழுது உங்கள் சுற்று, திருமிகு பொய்ரெட்! நீங்கள் என்ன உணர்ந்தீர்கள் என சொல்ல முடியுமா? நீங்கள் அங்கு தான் இருந்தீர்கள். நடந்தவற்றைப் பார்த்துள்ளீர்கள். கேட்டுள்ளீர்கள். டாக்டர் கிறிஸ்டோவின் 'பாவம்' எப்படியிருந்தது? எல்லாம் இந்த ஹென்ரீட்டா தான் - என்னைச் சுட்டு சாய்த்தவள் இவள் தான் - என்றா சொல்ல முயன்றார்? அவர் குரலின் - அவர் முகத்தின் - அவர் இயக்கத்தின் 'பாவம்' வேண்டும், திருமிகு பொய்ரெட்! ஹென்ரீட்டா என்று அவர் கூவியது, அவளே குற்றவாளி என சாட்சி கூறுவது போலா இருந்தது?''

பொய்ரெட் நிதானமாய் சொன்னார் : ''இத்தனை ஆழமாய் அப்பொழுது நான் எண்ணியிருக்கவில்லை, இன்ஸ்பெக்டர். அதனால், கூர்மையாய் கவனிக்கவில்லை.''

''ஆனால் இப்பொழுது திரு பொய்ரெட்! இப்பொழுது... இப்பொழுது... என்ன நினைக்கிறீர்கள்!''

நெடு மூச்சு விட்டார் பொய்ரெட். பிறகு அமைதியாய் விளக்கினார் : ''இருந்திருக்கலாம். இதை விட என்னால் எதுவும் சொல்ல இயலாது. அந்தக் காட்சியின் பதிவு என்னுள் எப்படி உள்ளது என அறிய கேட்கிறீர்கள். திரு க்ரேஞ்ஜ். அந்தக் கணம் போய் விட்டது. சென்று விட்டக் கணத்தை மீட்டிக் கொண்டேயிருந்தால், அப்போது இருந்திராததைக் கூட இருந்ததாக நினைக்கத் தோன்றும்!''

க்ரேஞ்ஜ் அவசரப்பட்டுப் பேசினார்: ''சொல்லுங்கள் திரு பொய்ரெட். உங்களுக்குள் ஓர் ஊகம் இருக்கத்தான் வேண்டும். நீங்கள் சொல்லப் போவதை யாரும் குறிப்பெழுதி வாக்குமூலம் ஆக்கப் போவது கிடையாது. திரு பொய்ரெட் நினைத்ததெல்லாம் சாட்சியாகி விடாது. எனக்குத் தெரியும். இது உங்களுக்கும் தெரியும். ஒரு விளக்குக் கீற்று - ஓர் ஒளிக் கோடு - அதற்குத் தான் அல்லாடுகிறேன்.''

''உணர்ச்சிவசப்படாதீர்கள் திரு க்ரேஞ்ஜ். உங்கள் இலக்கு எனக்கா புரியாது. நானே தானே குறிப்பிட்டேன், என் நினைவிலுள்ள காட்சிப் பதிவு பற்றி அறியத் துடிக்கிறீர்கள் என்று! பிறகு! கண்ணால் கண்ட சாட்சியத்தின் சரியான எண்ண அபிப்ராயம் பிரம்மாண்டமாய் உதவும் தான். ஆனால் என் கண் சாட்சி 'சரியான' எனும் ஸ்தானமற்றது என்பதே என் தாழ்மையான கருத்து. அப்போது, நான், ஒரு தவறான அபிப்ராயத்திலிருந்தேன். கண்ணால் கண்ட காட்சியின் தாக்கத்திலிருந்தேன். திருமதி கிறிஸ்டோ தான் அவர் கணவரைச் சுட்டவர் - என்பதே அது. ஆதலால், ஜான் திடுமென கண் திறந்து ஹென்ரீட்டா என்றதும், அதனை ஒரு குற்றச்சாட்டாய் என்னால் கருத முடியாமல் போயுள்ளது. இப்படித்தான் இதுநாள் வரை உறுதியா யிருந்தேன். ஆனால் இப்பொழுதோ, அக்காட்சியிலில்லாத, அதாவது நான் உணர்ந்திராத எதையோ பற்றித் தேடித் துளாவும் போது, ஓஹ்... என் மன உறுதியே ஆட்டிப் பார்க்கப்படுவதாய் உணர்கிறேன்.''

''புரிகிறது, பொய்ரெட்'' என்றார் க்ரேஞ்ஜ். ''ஜானால், கடைசியாய் பேசப்பட்ட ஒரே வார்த்தை 'ஹென்ரீட்டா' எனும் போது, நான் இனி சொல்ல இருக்கும் இரண்டில் ஏதோ ஒன்றினைத் தான் அது சுட்டுகிறது என எனக்குப்படுகின்றது. ஒன்று, நாம் இத்தனை நேரமாய் விவாதித்தது தான் - செல்வி ரீட்டாவே கொலை காரி என்று சாட்டப்பட்டக் கொலைப் பழி. அல்லது, காரசாரமற்றதாய் உங்களுக்குப் படலாம் திருமிகு பொய்ரெட், வெறும் காதல் வயப்பட்ட உணர்ச்சி பூர்வ வெளிப்பாடு! செல்வி ரீட்டாவைத் தான், ஜான் மனமார காதலித்திருக்கிறார் - அப்படிப்பட்டவர் இறந்துக் கொண்டிருக்கிறார்! இந்த இரண்டையும் மட்டும் மனதில் இப்போது கொள்ளுங்கள். சொல்லுங்கள் - ஜானின் ஹென்ரீட்டா எனும் கடைசி உச்சரிப்பின் 'பாவம்', எதனோடு ஒன்றிப் போகின்றது!''

பொய்ரெட் கண்களை சற்றே சுழற்றிக் கொண்டார். மூடிக் கொண்டார். திறந்து மீண்டும் மூடிக் கொண்டார். கைகளை

வெறுப்பின் வெளிப்பாடாய் உதறிக் காட்டினார். நொடிகளின் நழுவலில் சொன்னார்: ''அவர் குரல் வேக வேகமாய் இயங்கியது. இவ்வளவு தான் என்னால் சொல்ல முடியும். ஏனென்றால், இது தான் என் நிலை - ஆரம்பம் முதல்! அவசர அவசரமாயிருந்தது. கொலை பழி சுமத்துவதாகவும் படவில்லை. காதலின் வெளிப்பாடாகவும் படவில்லை. வெறும் அவசரம். ஆமாம், ஆமாம். வெறும் அவரசம் மட்டுமே இருந்தது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். தன் கட்டுப்பாடிழக்காமல் இருந்தார் அவர். அவயங்கள் அவர் கட்டுக்குள் தானிருந்தன. ஒரு புத்திசாலி மருத்துவரைப் போல... ஆமாம், ஒரு புத்திசாலி மருத்துவர்... கண் முன்னே ரத்தம் கசியக் கசிய மடிந்துக் கொண்டிருக்கும் ஒரு நோயாளியைப் பார்த்துத் துரிதமாய் இயங்கும் ஒரு மருத்துவரைப் போல.... அப்போது அறுவை சிகிச்சைக்கான உபகரணங்களுக்கு மளமளவென ஆணையிடும் ஒரு மருத்துவரின் அவசரம் மிகத் தான் அவர் சொன்னார் - ஹென்ரீட்டா என்று!''

மௌனக்கெட்டு இவ்விதமாய் விளக்கிய பொய்ரெட் முடித்தார் : ''இன்ஸ்பெக்டர். இவ்விஷயத்தில், இது தான் என்னால் செய்ய இயன்ற அதிகபட்சம்!''

''மருத்துவர்...?'' - விடுவதாயில்லை இன்ஸ்பெக்டர்! ''இது ஒரு மூன்றாவது கோணத்தை அன்றோ என் கண் முன் விரிக்கின்றது!!'' என உற்சாகமானார். ''ஆமாம், திருமிகு பொய்ரெட். மூன்றாவது கோணமொன்றும் தென்படுகின்றது. ஜான் சுடப்பட்டு விட்டார். தான் இறந்துக் கொண்டிருப்பதாய் அவருக்குப் புரிகின்றது. உடனடியாய் அவரைக் காப்பாற்ற துரிதமாய் ஏதாவது செய்தாக வேண்டும். ஒரு மருத்துவராய், இதன் அவசியம், அவருக்கே கூட விளங்கியிருக்கும். திருமதி ஹென்றி சொன்ன போல, ஒரு வேளை அந்த இக்கட்டிலும் சிரமப்பட்டு அவர் கண்களைத் திறந்து, அப்போது ஹென்ரீட்டா தென்பட்டிருக்கிறாரென்றால், அவரிடம் தானே அவர் முறையிட்டிருக்க முடியும்! என்ன, திரு பொய்ரெட் சிந்திக்கிறீர்கள்? இது திருப்திகரமாயில்லையா?''

''இந்த வழக்கில் எதுவும் திருப்திகரமாயில்லை'' என்றார் கசப்பாய்.

ஒரு கொலை மேடை - அலங்கரிக்கப்பட்டுத் தயாராயிருந்த நாடக மேடை - ஹெர்குல்லை ஏமாற்ற என அவரை விருந்துக்கு அழைத்தவர்களால் போடப்பட்டிருந்த மேடை - அப்போது திருமிகு

ஹெர்குல் பொய்ரெட்டை ஏமாற்றியதோ இல்லையோ, இப்போது விமரிசையாக ஏமாற்றிக் கொண்டிருக்கின்றது!

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டு நின்ற வண்ணமிருந்தார். அப்போது ''ஹாய்'' என்றார், தனது காவலாளியான சர்ஜண்ட் க்ளர்க்'கினைப் பார்த்து. பொய்ரெட்டுக்குச் சொன்னார் : ''க்ளர்க். என் உதவியாளன். ஏதோ கிடைத்து விட்ட பரபரப்பிலன்றோ வந்துக் கொண்டிருக்கிறான். வேலையாட்களிடம் பேச விட்டிருந்தேன். மிக நெருக்கமான நண்பன் போல் பேசி விஷயத்தைக் கிரகிப்பதில் கில்லாடி. இது போன்ற சிக்கலான வழக்குகளில் அவனைத் தான் பயன்படுத்துவேன். நல்ல அழகன். பெண்களை வசியமாக்கி விடுவான். ஜாலியான பேர்வழி.''

இத்தனை அறிமுகமும் முடியும் போது, ஓட்டமும் நடையுமாக மூச்சு வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்திருந்தான் க்ளர்க். எது குறித்தோ வெகு சந்தோஷமடைந்திருந்தான். அதனை சொல்லலாமா எனும் அனுமதிக்குப் போலீஸ் மரியாதை கலந்துக் காத்து நின்றான்.

''நீங்கள் இங்கு வந்திருப்பது தெரிந்ததால், ஓடிவந்து சொல்லிவிட வேண்டும் என்று வந்துள்ளேன்.'' - விறைப்பாய் நெற்றியில் வலது விரல்களைப் பொருத்தி ஒரு போலீஸ் வணக்கம் வைத்தான். வைத்தவன் சற்று சுணங்கினான் - ஹெர்குல்லைப் பார்த்து. மேற்கொண்டு பேசாது, அந்நியராய் அமர்ந்திருந்த பொய்ரெட்டை சந்தேகக் கண்கொண்டு பார்த்தபடி, தன் போலீஸ் அமைதியும் விறைப்பும் குலையாது இன்ஸ்பெக்டரை கவனித்து நின்றான்.

இதனை உணர்ந்து, ''ம். சொல்ல வந்ததை சொல்'' என்று ஆணையாய் சொன்னார் க்ரேஞ்ஜ்.

விறைப்பாய் இன்னொரு வணக்கம் வைத்தவன், ''இதோ'' என்று விட்டு, ''விஷயம் இது தான். சமையற்கட்டிலிருந்து வாங்கினேன்'' என்ற முகவுரையோடு ஆரம்பித்தவனை சற்று நிறுத்தும்படி கையமர்த்திய இன்ஸ்பெக்டர், பொய்ரெட் பக்கம் திரும்பி முழக்கமாய் சொன்னார்: ''நான் சொன்னேனில்லையா, திரு பொய்ரெட்! சமையற்காரர்கள் இருக்கும் வீட்டில் துப்புக்கு சாத்தியம் அதிகம் என்றேனா இல்லையா! வழக்கு நடைபெறும் ஹாலோ போன்ற வீடுகளில் இந்த சமையல்காரர்கள் மட்டும் இல்லையாயின், வானம் தான் இறங்கி வந்து நமக்கு உதவ வேண்டும்! சமையற்காரர்கள் பேசுவார்கள். அதுவும் எப்படி: சளசளவென...! ரகசியங்களைக்

கொட்டும் வகையில்! அவர்களுக்கு வேறு வழியில்லை. அடுப்புடன் எத்தனை நேரம் தான் மௌன மொழி பேசுவது! கேட்க என்று ஒருவர் கிடைத்து விட்டால் போதும்... ரகசியமாய் பேச ஆரம்பித்து விடுவார்கள் - ரகசியங்களை!''

பெருமை பொங்க மீண்டும் சர்ஜண்ட் பக்கம் திரும்பிய இன்ஸ்பெக்டர், ''ம். தொடங்கு'' என்றார்.

''சமையல்காரப் பெண் சொன்னாள் சார். அந்த ஞாயிறு மதியம், வீட்டின் தலைமை சமையல்காரன் கட்ஜன், வரவேற்பறையின் குறுக்காய் ஒரு துப்பாக்கியை எடுத்துக் கொண்டு நடந்து சென்றதாய் சொல்கிறாள்.''

''கட்ஜன்?''

''ஆமாம் இன்ஸ்பெக்டர்'' - க்ளர்க் உடனடியாய் கையிலிருந்த குறிப்பேட்டினைப் புரட்டிப் பார்த்து, ''இதோ, அவள் சொன்னது சொன்னபடி'' என எழுதி வைத்திருந்ததைப் படித்தான் :

''அப்போது, என்ன செய்வதென்றே எனக்குத் தோன்றவில்லை. பேசாமல் சிலையாய் நின்றுக் கொண்டிருந்தேன். பிறகு, நான் அன்று பார்த்ததை சொல்லியே ஆக வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டேன். கட்ஜனை, நட்டநடு அறையில், கையில் ஒரு துப்பாக்கியோடு நின்றுக் கொண்டிருப்பதை, இதோ, என் இந்த இரு கண்களால் பார்த்தேன்! அப்போது மிக விசித்திரமாய் இருந்தார் அவர்.''

இப்படிப் படித்து முடித்தவன், ''கட்ஜன் விசித்திரமாய் தோன்றினார் என்று அந்த சமையற்காரி குறிப்பிட்டதில் எனக்கொன்றும் முக்கியத்துவம் பிடிபடவில்லை, சார். அவள் கற்பனை மிகுதியின் வர்ணனை என்றே உணர்ந்தேன்'' என்றான். ''ஆனால் இத்தகவலை உடனடியாக நீங்கள் அறிந்துக் கொள்ள வேண்டும் என்பது தான் எனக்கு அவசியமாய் பட்டது.''

தனக்கு முன் ஓர் இலக்கு நிர்ணயிக்கப்பட்டு விட்டதைக் கண்ணுற்று, அதனை மிக நேர்த்தியாக முடிக்கக் கூடிய தகுதியும் திறனும் ஆர்வமும் உள்ள ஒரு மனிதனாய் திருப்தியடைந்து எழுந்தார், இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ்.

''கட்ஜன்?'' - தன்னைத் தானே கேட்டுக் கொண்டார். ''உடனடியாய் கட்ஜனைப் போய்ப் பார்த்துப் பேசி விடுகிறேன்.''

## 20

மீண்டுமொரு முறை திரு ஹென்றியின் அலுவலக அறையில் கிரேஞ்ஜ். தனக்கு முன்னாலிருந்த மனிதனின், உணர்வுகளைப் பிரதிபலிக்காத முகத்தினை மறுபடியுமொரு முறை எதிர்கொண்டு விசாரிக்க வந்துள்ளார். இதுவரை பழகியபடியே மிக கௌரவமாக நின்றுக் கொண்டிருந்தான் கட்ஜன்.

''என்னை மன்னித்து விடுங்கள்'' என்று ஓரிரு முறை திருப்பித் திருப்பிச் சொன்னான். ''நடந்த சம்பவத்தினை உங்களிடம் சொல்லியிருக்க வேண்டும் என்றே நினைக்கிறேன். விசாரணை குறித்த முக்கியத்துவம் தெரியாததாலும், அந்த நிகழ்வு இப்படிக் கிளம்பும் என நான் எதிர்பாராததாலும், என் மூளையிலிருந்து அது பிழன்று விட்டது. மன்னிக்கவும்.''

மன்னிப்பினைக் கண்களிலும் தெரிவித்தபடி, இன்ஸ்பெக்டரையும் ஹென்றியையும் மாற்றி மாற்றிப் பார்த்தான் கட்ஜன்.

''அப்போது மணி ஐந்தரை இருக்கலாம். வரவேற்பறையைக் கடந்து வாசலுக்குச் சென்றுக் கொண்டிருந்தேன், அன்றைய தினத்திற்கு ஏதாவது தபால் வந்து பெட்டியில் கிடக்கிறதா என பார்ப்பதற்கு. அப்போது வரவேற்பறை மேஜையின் மீது துப்பாக்கி ஒன்று வெறுமனே கிடப்பதைக் கவனித்தேன். முதலாளியின் சேகரிப்பைச் சேர்ந்த துப்பாக்கியே அது என நானே நினைத்துக் கொண்டு அதனை எடுத்த நான், இதோ, முதலாளியின் இவ்வறைக்கு வந்தேன். அந்தப் பெரிய அலமாரியினருகிலுள்ள சிறு அலமாரியில், அத்துப்பாக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டிய இடம் காலியாயிருந்தது. எனவே, அதனிடத்தில் வைத்து விட்டு சென்று விட்டேன்.''

''வைத்த துப்பாக்கியைக் காட்டுங்கள்'' - சொன்னார் க்ரேஞ்ஜ்.

இன்ஸ்பெக்டர் நெருக்கமாய் பின்தொடர, எழுந்த கட்ஜன், பேச்சில் அடிபட்டுக் கொண்டிருந்த சிறு அலமாரி அருகில் சென்று நின்றான்.

''இது... இந்தத் துப்பாக்கி தான் இன்ஸ்பெக்டர்.''

கட்ஜனின் சுட்டு விரல், மிகச் சிறிய கைத்துப்பாக்கி ஒன்றினைச் சுட்டியது.

0.25 என்றழைக்கப்படும் மிகப் பொடிசான துப்பாக்கியது. இது கூட்டு நிச்சயமாய் மனிதன் இறக்க வாய்ப்பு கிடையாது; எனவே இத்துப்பாக்கியால் ஜான் கிறிஸ்டோ கொல்லப்பட்டிருக்க இயலாது.

கட்ஜனின் முகத்தில் தன் பார்வையை ஆழப் பதித்த இன்ஸ்பெக்டர், ''இதையா துப்பாக்கி என்றாய்! இது ஆபத்தான பெரிய துப்பாக்கி அல்ல, கட்ஜன். மிகச் சிறு துப்பாக்கி. கொல்லும் ஆபத்தெல்லாம் இதில் கிடையாது. துப்பாக்கி என்று குறிப்பிடக்கூட ஸ்தானமற்றது இது.''

கட்ஜன் சிறிசாய் இருமினான். ''அப்படியா ஐயா?'' என புருவங்கள் தூக்கக் கேட்டான். ''இந்தத் துப்பாக்கி ரகங்கள், அவற்றின் வீரியங்கள் இவையெல்லாம் எனக்கு சுத்தமாய் தெரியாது, இன்ஸ்பெக்டர் சார். 'துப்பாக்கி' என பொதுவாய் சொல்லியிருப்பேன்.''

''ஆனால் இந்தக் கைத்துப்பாக்கியைத்தான் நீ அறையில் கண்டெடுத்து இங்கு கொண்டு வந்தாய் என்பது நிச்சயம் தானே?''

''நிச்சயம் தான் சார். இதில் இரண்டாவது கருத்துக்கு வகையில்லை, இன்ஸ்பெக்டர் சார்.''

இப்படிச் சொல்லியதை நிச்சயிக்கும் பொருட்டு அந்தக் கைத் துப்பாக்கியை எடுத்துக் காட்ட வேண்டி, அதனை நோக்கி கையை நீள விட்ட கட்ஜனை, ''ம்ம். தொடாதே'' என்று தடுத்து நிறுத்தினார் க்ரேஞ்ஜ். ''தயவுசெய்து தொட வேண்டாம். அதில் பதிந்துள்ள கை ரேகையையும் அதில் குண்டுகள் போடப்பட்டிருக்கின்றனவா என்பதையும் நான் பரிசோதிக்க வேண்டும்.''

''அதில் குண்டுகள் இருக்கும் எனத் தோன்றவில்லை ஸார். முதலாளியின் எந்த சேகரிப்பும் குண்டு போடப்பட்டு உள்ளே இருக்காது. கைரேகைகளைப் பொறுத்தவரை, என் கைக் குட்டையைக் கொண்டு சுத்தமாய் துடைத்துவிட்டுத் தான் மறுபடியும் அதனிடத்தில் கொண்டு போய் வைத்தேன், ஆகையால், என் கை ரேகைகள் மட்டும் தான் அதிலிருக்கும்.''

''ஏனப்படிச் செய்தாய்?'' என்று ஈட்டி போல் கேட்டால் இன்ஸ்பெக்டர்.

கட்ஜனின் மன்னிப்புக் கோரிக் கொண்டிருந்த முகபாவம் இக்கேள்வியால் துளியும் அதிரவில்லை. அதே மன்னிப்பு தொனியில், ''அழுக்குப் போகத் துடைத்து விட்டு வைக்கலாமே எனத் தோன்றியதால் ஸார்'' என்றான்.

இவர்களிருந்த அறை திறக்கப்பட திருமதி லூசி உள்ளே வந்தார். இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜைப் பார்த்துப் பளீரென சிரித்தார். பேச ஆரம்பித்து விட்டார்: ''ஓ! இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ்! உங்களைப் பார்த்ததில் தான் எத்தனை சந்தோஷம்! ரிவால்வரையும் கட்ஜனையும் சேர்த்துப் போட்டு என்னது இது! அடுப்பளையில் இருக்கும் அந்த சமையற்காரக் குழந்தையோ கண்ணீர் வெள்ளத்தில் அல்லாடிக் கொண்டிருக்கின்றது. அவள் மீது பாவம் என்ன தவறு இருக்கின்றது! தான் பார்த்ததைச் சொல்லி விட வேண்டும் என்று தனக்குப்பட்டதை செய்து முடித்துள்ளாள்; ரொம்பச் சரி தானே அது! இன்ஸ்பெக்டர்! எது சரி எது தவறு எனும் நிலை பல சமயங்களில் என்னை பயமுறுத்துகின்றது. கொலை நடந்த வீட்டில், அதுவும் ஒரு துப்பாக்கிக் கொண்டு கொலை நிகழ்த்தப்பட்ட வீட்டில், ஒருத்தன் துப்பாக்கியைச் சுமந்துக் கொண்டு இப்படியும் அப்படியும் நடந்ததை, உண்மையான ஒரு தகவலாய் தந்ததில் அந்தக் குழந்தை பயந்து நடுங்கிக் கொண்டு இருக்கின்றது! காரணம் - விசாரணை! ம்! வேலைக்கார்கள் போலீஸ் என்றாலே மயங்குகிறார்கள், திருமிகு க்ரேஞ்ஜ்! கிடைக்கும் எவ்வொரு தகவல்களுக்கும் ஓடி ஓடி வந்து அவர்களை விசாரிப்பதைத் தவிர்க்கயியலாதா...? அவரரவர்களுக்கு எது சரி எனப்படுகின்றதோ அதை யோசிக்காது செய்து முடித்து விட வேண்டும் என்பது என் கட்சி. அப்படித்தான் என் வேலையாட்களும் சுதந்திரம் தரப்பட்டுள்ளனர். அந்த ஒப்பேறாத கைத்துப்பாக்கியைப் பற்றி என்ன சொல்லிக் கொண்டிருந்தாய் கட்ஜன்?'' - படபடவென பேசி நிறுத்தினார் லூசி.

கட்ஜன் மரியாதைக் கலந்து, ஆனால் அழுத்தம் தந்து சொன்னான்:

''முதலாளியம்மா! அந்த சின்னஞ்சிறு கைத்துப்பாக்கி, வரவேற்பறையின் பிரதான மேஜையிலிருந்தது. எங்கிருந்து அது அங்கு வந்தது என்பது குறித்து எனக்கு எதுவும் தெரியாது. அதனையெடுத்து வந்து, இங்கு அதனிடத்தில் வைத்தேன். இதைத் தான் இப்பொழுது இன்ஸ்பெக்டரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். அவரும் புரிந்துக் கொள்கிறார்.''

மறுத்துத் தலையசைத்து ''நீ அப்படிச் சொல்லியிருக்கவே கூடாது, கட்ஜன்'' என்று வலிக்காத அதிகாரமாய் சுட்டிக் காட்டினார் லூசி. ''விஷயமே வேறு. நான் இன்ஸ்பெக்டரிடம் பேசி விளக்கிக் கொள்கிறேன்.''

இதனை ஏற்றுக் கொண்டதாய் சற்று பின்னுக்குத் தள்ளி நின்றுக் கொண்டு கட்ஜன் உணர்த்த, புத்துணர்வான குரலில் லூசி சொன்னார்: "உன்னுடைய சிரத்தையான குறிக்கோளைப் பாராட்டுகிறேன் கட்ஜன். சங்கடங்களிலிருந்தும் இடைஞ்சல்களிலிருந்தும் ஒவ்வொரு முறையும் நீ எங்களைக் காப்பாற்றிக் கொண்டிருப்பதை நானும் கவனித்துக் கொண்டு தான் வருகின்றேன்."

கட்ஜன் சிறு தயக்கம் காட்டி, துரிதமான பார்வைகளை சட்டென்று ஹென்றியின் மீதும் இன்ஸ்பெக்டரின் மீதும் பதித்து விலக்கி, பின் மரியாதையாய் முதுகு வளைத்து வணக்கம் காட்டி விட்டு, கதவு நோக்கி நடக்கலானான்.

செல்லும் கட்ஜனைப் பிடித்து நிறுத்தும் இயக்கத்துக்காக இன்ஸ்பெக்டர் ஒரு சிறு அவசர நகர்த்தலை மேற்கொண்டாலும், விளக்கயியலா ஏதோ ஒரு காரணத்திற்காக, அவரால், அவரையே செலுத்த முடியாமல் போயிற்று. இதற்காக எழுந்த தன் கரத்தை அப்படியே போட்டு விட்டார். கட்ஜன் வெளியேற கதவு மீண்டும் மூடிக் கொண்டது.

நின்றுக் கொண்டிருந்த லூசி தன்னை ஒரு நாற்காலியில் புதைத்துக் கொண்டு இரு ஆடவர்களையும் பார்த்து சிரித்தபடி சம்பாஷணையைத் தொடர்ந்தார்:

"கட்ஜனின் புத்திசாலித்தனத்தை நினைத்துப் பார்க்கிறேன். தானே முன்னால் செய்து முடித்ததாக இருக்க வேண்டும் எனும் வகை. அதிகாரம், ஆனால், அமுங்கிய அதிகாரம். பிரபுத்துவம் - ராஜாங்கம். ஆமாம்... அது தான் அவனுக்கு சரியான வர்ணனையாகும் - பிரபுத்துவம்."

க்ரேஞ்ஜ் இறுக்கமாய் கேட்டார்: "இக்கைத்துப்பாக்கி விஷயத்தில் உங்களுக்கு சிறப்பான தகவல்கள் தெரியும் என நான் நம்பலாமா, திருமதி ஹென்றி."

"நிச்சயமாக. அந்தத் துப்பாக்கியை, கட்ஜன், வரவேற்பறையிலும் பார்க்கவில்லை; மேஜையிலிருந்தும் கண்டெடுக்கவில்லை. முட்டைகளை வெளியே எடுக்கும் போது பார்த்திருக்கிறான்."

"முட்டைகள்? வெளியே? எங்கிருந்து வெளியே எடுத்தான்?" - லூசியைப் பார்த்துத் திருதிருவென விழித்தார் க்ரேஞ்ஜ்.

"கூடையிலிருந்து!"

"இப்படிச் சொல்லி விட்டதால் எல்லாம் நமக்கு அழகாய் விளங்கி விட்டதாய் நினைக்கிறாள், அவள்" என்று விளக்கிக் கூறிய ஹென்றி,

''நீ இன்னும் விரிவாய் சொல்ல வேண்டும் லூசி. நானும் இன்ஸ்பெக்டரும் கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்ட நிலையிலிருக்கிறோம்'' என்றார்.

''ஓ'' - ஒளிவுமறைவில்லாது முழுக்க விளங்கும் பாணியில் தன்னை ஆக்கிக் கொண்ட லூசி, ''அந்தக் கைத்துப்பாக்கி இருக்கிறது பாருங்கள்'' என்று நீண்டதொரு கதையைச் சொல்லப் போவது போல துவங்கினார்:

''அது, கூடையில், அதற்குள்ளிருந்த எல்லா முட்டைகளுக்கும் அடியில் இருந்தது.''

''என்ன முட்டை? என்ன கூடை? வழக்குக்கும் கோழி முட்டைக்குமா சம்பந்தம்!''

''பண்ணையிலிருந்து நான் கொண்டு வந்தக் கூடையைக் குறிப்பிடுகிறேன், திரு க்ரேஞ்ஜ். குட்டிக் கைதுப்பாக்கி, அந்தக் கூடையின் அடியில் கிடந்தது. அதன் மேலே, நான் அன்று எடுத்த அத்தனை முட்டைகளையும் அடுக்கி, அப்படியே மறந்து விட்டேன். கூடையை எடுத்துக் கொண்டு நீச்சல் குளம் வழியே வந்த நான், ரத்த ஆற்றில் ஜான் மடிந்துக் கிடந்ததைப் பார்த்தேனா, எத்தனை பெரிய அதிர்ச்சி அது, இல்லையா...?! அதனால் நிலைகுலைந்துப் போய் கூடையை நழுவ விட, லபக்' கென்று தரையில் விழாது அதைப் பிடித்துக் கொண்டான், அப்போது என்னருகிலிருந்த கட்ஜன். முட்டைக்காக. விழுந்தால் அத்தனையும் உடைந்துப் போகுமே! அந்தக் களோபரத்தின் நடுவே அவரவர் வீடு திரும்பும்போது கட்ஜனும் திரும்பினானில்லையா! அப்போது கூடையை அவன் தான் சுமந்து வந்தான். கொஞ்ச நேரம் கழித்து அவனைச் சந்திக்க நேர்ந்த போது, கொண்டு வந்த அத்தனை முட்டை ஓடுகளிலும் அன்றைய தேதியை எழுத வேண்டுமே எனச் சொன்னேன். இது என்னுடைய தினசரி வழக்கம். இல்லையென்றால் பழைய முட்டைகளை விட்டுவிட்டு புது முட்டைகளை உபயோகித்து விடுகிறார்கள். அந்த வேலையை முடித்தாயிற்று என்று பதில் தந்தான் அவன். இப்போது உணர முடிகிறது - அப்பதிலை, அவன், முக்கியத்துவம் தந்து அழுத்தித் தான் சொல்லியிருக்கிறான் என்று. இதைத் தான் நான் பிரபுத்துவம் என்றேன்... தானே மற்ற வேலையாட்களையெல்லாம் விட முந்தி முடித்து முதலாளியிடம் பேர் வாங்கும் வேலைக்கார ராஜாத்துவம். முட்டைகளை எடுத்து முடித்ததும் கூடையின் அடியில் கிடந்த சிறு துப்பாக்கியினை பார்த்திருப்பான்; அப்போது தான்

கொண்டு வந்து ஓசைப்படாமல் - எங்கும் போலீஸ் இருக்கிறார் களே... அதற்கு பயந்து - ஓசைப்படாமல் இங்குக் கொண்டு வந்து வைத்திருப்பான். வீட்டுக்குள்ளே ஏதோ காரணத்தைச் சொல்லிச் சொல்லி சுற்றிக் கொண்டிருக்கும் போலீஸைக் கண்டாலே அவர்களனைவரும் நடுநடுங்குகிறார்கள், இன்ஸ்பெக்டர். இந்த உண்மையைத் தானே, இன்ஸ்பெக்டர், நீங்கள் அறிய விரும்பினீர்கள்?''

இன்ஸ்பெக்டரை நோக்கி திருப்தி மிகு சந்தோஷமான புன்சிரிப்பை வீசி முடிந்தார் லூசி.

''உண்மையை அறியத் துடித்தேன் எனும் அளவில் சரியே. இத்தனையும் உண்மை தானே?''

லூசி சிறு பெருமூச்சு விட்டு ஏகமாய் காற்றை உள்ளிழுத்துக் கொண்டார், இன்னுமொரு முறை நீண்டு பேச: ''எதை உண்மையென்று நம்புவது என விளங்காவண்ணம், சேறும் சகதியும் போல எல்லாம் குழம்பித்தான் கிடக்கின்றன. வழக்கும் அப்படித்தான் உள்ளது - குழம்பி; இவரா அவரா எனப் புலப்படாமல் ஜானை வேட்டையாடியவனை மோப்பம் பிடித்து அலையும் உங்கள் கூட்டமும் அப்படித்தானுள்ளது! எனக்கென்னவோ, அது யாரா யிருந்தாலும் சரி, ஜானைக் கொன்ற அந்த பாதகன், சுட வேண்டும் என்றே, அதாவது, திட்டமிட்டு என்று வைத்துக் கொள்ளுங்களேன், திட்டமிட்டுக் கொன்றிருப்பான் எனத் தோன்றவில்லை. கெர்டாவாயிருக்குமோ என்கிறோம். நிச்சயமாய் அது கெர்டா கிடையாது. எந்தக் காரணத்திற்காக இல்லையென்றாலும், குறி தவறாதாவது கெர்டா சுடுவதாவது எனும் காரணத்திற்காகவாவது கெர்டாவை நாம் ஒதுக்கி விடலாம்! கெர்டாவால் குறி தப்பாது சுட முடியும் என்று யாராவது நம்ப முடியுமா, ம்! தவிர, அவள் ஓர் அற்புதப் பிறவி. அவளைக் கொண்டு போய் சிறையிலடைத்துத் தூக்கில் தொங்க விடுவதால், அவளது குழந்தைகளுக்கு நேரவுள்ள கதியைப் பற்றி யாராவது சிந்திக்கிறீர்களா? அவளே சுட்டிருக்கட்டும். அவர்களுக்குள் என்ன கண்றாவித் தகராறோ. ஆனால் இப்போது வருந்துகிறாள். உளமாற. விட்டுத் தொலையுங்களேன். இவளைத் தொங்க விட்டால் ஜான் வந்து விடுவாரா! அப்படி வந்து விட்டாலாவது குழந்தைகளுக்கு ஒரு துணை கிடைத்துப் போகும்; இவளைத் தொங்க விடுங்கள் எனலாம். அதுவும் கிடையாது.''

கெர்டாவைத் தூக்கிலிட, கற்பனைக்கெட்டாத நீதியைக் கூசாமல் கூறும் லூசியை மலைத்து, சற்று பயந்து பார்த்துக் கொண்டிருந்தார் க்ரேஞ்ஜ். லூசியா நிறுத்துவார்! ''அப்பா கொலை செய்யப்பட்டு விட்டார் என்பதே குழந்தைகளுக்கு நேர்ந்துள்ள பெரும் அசம்பாவிதம். அதற்காக அவர்களின் தாயார் தூக்கிலிடப்படுவ தென்பது மாபெரும் கொடூரமாயன்றோ போகும்! இந்த மனிதாபிமானமெல்லாம் போலீஸ் மண்டைக்குள் எட்டவே எட்டாதா?''

''இப்போதைக்கு யாரையும் கைது செய்வதாய் நாங்கள் முடிவெடுக்கவில்லை, திருமதி ஹென்றி.''

''அப்பாடா! இது புத்திசாலித்தனம்!'' என்ற லூசி, சட்டென ''இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ்'' என அழைத்து, பேசிக் கொண்டிருந்த விஷயங்களையெல்லாம் காற்றில் விட்டு விட்டுக் கேட்டார் : ''நீங்கள் மிகவும் உணர்ச்சிவசப்படுபவராகவே எனக்குத் தோன்றி வந்திருக்கிறது.''

மறுபடியும் அந்த வசீகர அடிக்கும்படியான புன்சிரிப்பு - லூசி முகத்தில்.

இதென்ன தேவையற்ற அபிப்ராயம் என்றுணர்ந்த இன்ஸ்பெக்டர் கொஞ்சமாய் விழித்தார். வேறொன்றும் செய்ய இயலவில்லை. பிறகு ஒருவழியாய் சமாளித்தபடி, ''நீங்கள் சற்றுமுன் சொன்னபடி, திருமதி ஹென்றி... உண்மையைத் தான் நான் தேடி அலைந்துக் கொண்டி ருக்கிறேன் - உணர்ச்சிபூர்வமாய். சரி. நீங்கள் இங்கிருந்து தான் துப்பாக்கியை எடுத்துப் போயிருக்கிறீர்கள். எந்தத் துப்பாக்கி அது?''

பெரிய அலமாரிக்கு அருகிலிருந்த சிறு அலமாரியை நோக்கித் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டார் லூசி. ''இடதிலிருந்து இரண்டாவது. 0.25 ரகம்.''

நேர்த்தியாய், தொழில்நுட்ப சுத்தமாய் லூசி பேசியது, அவரின் குணாதிசயத்துக்கு சற்றும் பொருந்தாது முரண்பட்டு நின்று இன்ஸ்பெக்டரை அதிர வைத்தது. இப்பொழுது வரை, க்ரேஞ்ஜ், தன் கணிப்புக்குள், தெளிவற்றவர் என்றும் விவரமறியாதவர் என்றும் எடை போட்டு வைத்திருந்த லூசி, இத்தனைத் தொழில்நுட்ப துல்லியத்தோடு ஒரு துப்பாக்கியின் விவரத்தைச் சொல்லுவார் என, ஏனோ கொஞ்சமும் எதிர்பார்த்திருக்கவில்லை.

''சின்னஞ்சிறு கைத்துப்பாக்கி உங்களுக்கு ஏன் தேவைப்பட்டது என தெரியவில்லை. அதை இங்கிருந்து எடுத்திருக்கிறீர்கள்.

கூடையில் வேறு போட்டுக் கொண்டு பண்ணை வரை சென்றிருக்கிறீர்கள். ஏன் இத்தனை? பண்ணையிலிருந்து நீச்சல் குணத்தின் அற்புதமான பகுதிகளையும் குறி வைத்து சிறப்பாய் பார்க்கலாம், இல்லையா ஹென்றி."

"இப்படி நீங்கள் கேட்பீர்கள் என்பது நான் எதிர்பார்த்தது தான்."

சொன்ன லூசியின் குரல், முன்னறிவிப்பின்றி, முழக்கமாய் எழுந்தது. "இருக்க வேண்டும், நான் செய்ததற்கு ஏதோ காரணமிருக்க வேண்டும். அப்படித்தானே ஹென்றி!"

தன் கணவன் பக்கமாய் திரும்பிக் கேட்டார் லூசி. "அன்று காலையில் உங்கள் துப்பாக்கியை, உங்கள் அனுமதியின்றி நான் தூக்கிக் கொண்டு போனதற்கு ஒரு காரணம் இருந்திருக்கத் தான் வேண்டும் என உங்களுக்குத் தோன்றவில்லையா, ஹென்றி!"

"காரணத்தோடு தானே லூசி, யாரும் எதையும் செய்வார்கள்!"

"ம்ம்" ஒப்புக் கொள்ளும் பாவனையில் தலையசைத்த லூசி, "ஒருவர் ஒரு செயலை செய்கிறார்" என்று எதிரிருக்கும் இருவரையும் முறைப்பது போல் பார்த்தபடி துவங்கி, "பிறகு ஏன் அப்படி செய்தோம் எனும் காரணம் ஞாபகத்துக்கு வராமலேயே நின்று விடுகிறார்!" என்று அவர்களைத் திக்குமுக்காடச் செய்யும் பதில் தந்து தொடர்ந்தார் : "இன்ஸ்பெக்டர்! நான் நினைக்கிறேன்! எதற்கும் காரணம் உண்டு - அது என்ன காரணம் என்பது நினைவுக்கு வரும் பட்சத்தில். நினைவுக்கு மட்டும் வராவிட்டால் அவ்வளவு தான்... நடந்து முடிந்த அந்தச் செயல் காரணமேதுமின்றியே இருந்து விடும். பெரிய கைத்துப்பாக்கியை எடுத்து முட்டைக் கூடைக்குள் போட்டுக் கொள்ளும் போது நிச்சயம் எனக்குள் ஒரு காரணம் இருந்திருக்கதான் வேண்டும்." இவ்வாறு ஓர் ஆணையாகவே குறிப்பிட்ட லூசி அவரையே கேட்டார் : "அது என்ன காரணமாயிருக்கலாம் என நினைக்கிறீர்கள்!"

என்னத்தைப் பேசுவார், பாவம் இன்ஸ்பெக்டர். கண்களை விரித்தபடி அமர்ந்திருந்தார். தனக்கு மட்டுமே தெரிந்துள்ள காரணத்தைப் போய் இன்ஸ்பெக்டரிடம் கேட்கிறோமே என்கிற தர்ம சங்கடமே இல்லாமல், கேட்ட கேள்விக்கு என்ன விடை வரப் போகிறதோ எனும் ஒரு குழந்தையின் ஆர்வ எதிர்பார்ப்பிலிருந்தார் லூசி.

"என் மனைவியிருக்கிறாளே இன்ஸ்பெக்டர்" என்ற ஹென்றி, "மிக மோசமான ஞாபக மறதிப் பேர்வழி" என்றுக் குறித்துக் காட்டினார்.

''அப்படித் தான் தோன்றுகிறது'' என்றார் க்ரேஞ்ஜ். இனிமையாய் அல்ல. கசப்பாய்.

''எதற்காக அந்தச் சின்னக் கைத்துப்பாக்கியை நானெடுத் திருப்பேன்?'' - மீண்டும் ரகசியமாய் இன்ஸ்பெக்டரைக் கேட்டார் லூசி.

''எனக்கெப்படி.... ... ...?''

''நானிங்கு வந்தேனா'' - மிக முணுமுணுப்பாய் ஆரம்பித்தார் லூசி. ''வேலைக்காரனை அழைத்து, தலையணை உறையெல்லாம் இப்படிப் பழசாகி விட்டனவே எனப் பேசினேன். பிறகு? ம், பிறகு? ஆங்... அவனை அனுப்பி விட்டுக் குளிர் காய நெருப்பு மூட்டும் அந்தச் சுவர் அடுப்புக்கு சென்றதாய் கொஞ்சம் ஞாபகமுள்ளது. சுள்ளியைக் கிளற புது கரண்டி வாங்க வேண்டும் என நினைத்துக் கொண்டேன்.''

இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் மிகப் பரிதாபமானார். கேட்டது என்ன! வரும் விடைகள் தான் என்னென்ன! அவர் தலை ஒரு 360 டிகிரி சுழன்று நின்றது. ''அப்படியே சுவர் அடுப்புக்கருகில் வந்த போது தான் இந்த சிறு அலமாரியும் எதிர்ப்பட்டது. .25-ஐ எடுத்துப் பார்த்தேன். அதன் மீது எனக்கு எப்போதுமே ஒரு கண் இருந்தது உண்டு. மிக அழகான வடிவமைப்பு, கைக்குழந்தை போல. இந்த வீட்டில் தான் குழந்தையே இல்லாமல் போய் விட்டதே. ஒன்று தெரியுமோ! கொஞ்ச நேரம் தூக்கிக் குழந்தை போல கையில் வைத்து ஆட்டிக் கூட பார்த்தேன். பிறகு கையில் சுமந்து வந்திருந்த கூடையுள் போட்டுக் கொண்டேன். எதனால்? ம்? எதனால்? ஏதாவது காரணம் கிடைக்கின்றதா?''

இன்ஸ்பெக்டரும் ஹென்றியும் போட்டி போட்டுக் கொண்டு முழித்துக் கொண்டிருந்தனர்.

''எதனால்? ஒரு வேளை குழந்தையே இல்லை என்றாகி விட்ட ஆதங்கத்தால் - நானறியாமலேயே என்னுள் முழுதும் வியாபித்துள்ள அந்த ஏக்கத்தால் - குழந்தை போலிருந்த ஒரே காரணத்திற்காக, என்னையறியாது, நான் என்னுடன் அதனை அழைத்துச் சென்றிருப் பனோ? என் மண்டைக்குள் தலையணை உறை, வாங்க வேண்டிய சுள்ளி, மதிய உணவு எல்லாமும் ஓடிக் கொண்டிருந்தபோது, ஏன் .25-ஐ எடுத்துப் போட்டுக் கொண்டேன் என தெரியவில்லை இன்ஸ்பெக்டர்.''

தீவிரமான கோபம் விறுவிறுவென கூட, நாசூக்கற்று, தொங்கும் ஒட்டடையை விலக்கி எறிய காட்டப்படும் மரியாதையற்ற

கண்டிப்போடு கேட்டார் : ''அதில் நீங்கள் குண்டு போட்டு நிரப்பினீர்களா?''

லூசியை ஆட்டிப் போட வேண்டும் என்று எதிர்பார்த்துத் தான் இக்கேள்வியைக் கேட்டார். பயமுறுத்த வேண்டும் என்று கூடச் சொல்லலாம். ஆனால் லூசியோ, தன் ஆழமான சிந்தனைக்கு வேலை தரும் இன்னுமொரு கேள்வியாய் தான் இதனை எதிர் கொண்டார்.

''நான் போட்டேனா? ஞாபகத்துக்கு வர மாட்டேன் என்கின்றதே! போட்டிருப்பேன் என்று தான் தோன்றகிறது, இல்லையா இன்ஸ்பெக்டர்! அதாவது, ரவை போடப்படாத துப்பாக்கியும் ஒரு துப்பாக்கியா என்ற அர்த்தத்தில் சொல்கிறேன். அந்த நேரத்தில், அதாவது – துப்பாக்கியை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது முதல், அதனை எடுத்துக் கூடையுள் போட்டுக் கொண்டது வரையில் என்ன தான் நான் நினைத்துக் கொண்டு ஒவ்வொன்றாய் செய்தேன் எனும் விளக்கம் மட்டும் எனக்கு ஞாபகம் வந்துத் தொலையக்கூடாதா!''

''அன்பு லூசி'' - அழைத்தார் ஹென்றி. ''உன் மண்டைக்குள் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்பதைக் கண்டே பிடிக்க முடியாததால் தானே உன்னைப் பல ஆண்டுகளாய் அறிந்துள்ள அனைவரும் உன் மீது எப்படி எப்போது எதில் நம்புவது என விளங்காது திக்குமுக்காடிக் கொண்டிருக்கிறோம்.''

பிரகாசமான புன்சிரிப்பினை உதிர்த்தார் லூசி.

''நானும் ஞாபகப்படுத்தத் தான் முயன்றுக் கொண்டிருக்கிறேன், அன்பு ஹென்றி! ஏதோ ஆவலாய் சில விஷயங்களைச் செய்து விடுகின்றோம். நாமென்ன ஜடங்களா, ஆர்வமற்றுக் கிடக்க! பிறகு விளைவுகள் விபரீதமாகும் போது காரணம் தேடித் துருவுகிறோம். எங்கிருந்து கிடைக்கும்? பாருங்கள். அன்றொரு நாள் தொலைபேசி யின் ஒலிக்குழலை கையிலெடுத்துக் கொண்டு, காதிலெல்லாம் பொருத்தாமல், எதிரிலிருந்தவர்களிடம் பேசிக் கொண்டே இருந்திருக்கிறேன். பிறகு தான் கையில் ஒலிக்குழல் இருந்ததும், அதை நான் உபயோகிக்காமல் வெறுமனே கையில் பிடித்திருந்தும் உறைத்தது. இதை நான் ஏன் செய்தேன்? ம்? சொல்லுங்கள்?''

''யாருக்கோ தொலைபேசி செய்ய என எடுத்திருப்பீர்கள். அதற்குள் எதிரிலிருந்தவரிடம் பேச்சு நிகழ்ந்திருக்கும்'' - இப்படித்தானிருக்கும் என்ற முடிவில் சொன்னார் இன்ஸ்பெக்டர்.

''அது தான் கிடையாது. என்னையே தாக்கிய செயலாய் இருந்தது இந்த செவிக்குழல் சம்பவம். எனவே ஆழ யோசித்தேன். காரணம் அகப்பட்டது.''

இரு உயரதிகாரிகளும் லூசிக்கு முன்னால் சிதைந்துப் போய் அமர்ந்திருந்தனர்!

''தோட்டக்காரனின் மனைவி, தன்னுடைய குழந்தையை எப்போதும் அதன் தலை மிக மிக தொங்கும்படித் தான் தூக்கிக் கொண்டு அலைவாள். ஏனப்படி என ஆராய, செவிக்குழலை குழந்தையாக்கிச் சுமந்துப் பார்த்தேன். புரிந்தது. அவள் இடக்கைக்காரி. அதனால்'' என்றவர், சிறு பெருமூச்சு விட்டு, ''இந்த வீட்டிலுள்ள வேலைக்காரர்கள் மட்டுமல்ல... வர வர எல்லாமுமே என் குழந்தைகளாகி வருகின்றன! செவிக்குழல்! .25!''

உயர்வாய் பேசிய தொனியில், இரு ஆண்களையும் மாற்றி மாற்றி முழக்கமாய் பார்த்துக் கொண்டார் லூசி.

'இருக்கலாம்' என நினைத்துக் கொண்டார் க்ரேஞ்ஜ். 'இது போன்ற மக்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.'

ஆயினும் இச்சிந்தனை குறித்து முழு நம்பகத்தன்மை அவருக்கு இருக்கவில்லை.

இப்போது நடந்து முடிந்த முழு விசாரணையுமே பொய் எனும் துணியால் போர்த்தப்பட்டுள்ள உரையாடலாகவே தெரிந்தது அவருக்கு. உதாரணத்திற்கு அந்த சமையற்காரப் பெண்மணி. அவள், கட்ஜன் கையில் துப்பாக்கி சுமந்திருந்தான் என பகுத்துக் காட்டியிருக்கிறாள். இருந்தாலும் ஒரு நல்ல திருப்பமாய் இதனை அமைத்துக் கொள்ளயியலவில்லை. எங்கோ முட்டுகின்றது. முட்டி நிற்கின்றது. துப்பாக்கியின் வகையெல்லாம் அறிய வாய்ப்பில்லாத அந்தப் படிப்பற்றப் பெண்மணி, சிறு கைத் துப்பாக்கி மற்றும் ஆள் கொல்லும் பெரிய துப்பாக்கி என்றெல்லாம் பகுத்தறிய இயலாது, ஜான் சுட்டுக் கொல்லப்பட்டுள்ளார் எனும் திகில் செய்தியின் தாக்கத்தாலேயே, கட்ஜன் கையில் அபாயமற்ற சிறு துப்பாக்கியைப் பார்த்ததைக் கூட, ஆபத்தான துப்பாக்கியாய் கருதி முறையிட்டிருப்பாள். போகட்டும்.

கட்ஜன் மற்றும் லூசி இருவருமே, மாற்றமில்லாது, ஒரே கைத் துப்பாக்கியைத் தான், அந்த .25 ரக குறு துப்பாக்கியைத் தான், மீண்டும் கொண்டு வந்து வைத்த துப்பாக்கியாக சுட்டிக் காட்டினார்கள் - ஆனால் அவர்களை, அவர்கள் சொன்னதை நிரூபிக்க

ஒன்றுமில்லை. இப்போது காணாமல் போய் எல்லோரையும் அலைய வைத்துக் கொண்டிருக்கும் கொலைகாரத் துப்பாக்கியாய் இருந்திருக்கும் - கட்ஜன் கையாண்டிருந்த அந்தத் துப்பாக்கி! அதனைக் கொண்டு வந்து திருப்பியிருப்பான் - அதன் அலமாரி த்தில் அல்ல - லூசியிடத்தில்! அன்பாய் ஆதரவாயிருக்கும் முதலாளியம்மா மட்டும் கிடைத்து விட்டால், என்ன எதுவுமாயினும் செய்வார்கள் இந்த வேலைக்காரப் பயல்கள்!

இருக்குமா? என்ன காரணமாயிருக்கும்? - போன்ற எந்த அடித்தளமுமில்லாது, ஒரு வேளை லூசியே ஜானை சுட்டு த்தியவரா என்று கருதிய க்ரேஞ்ச், எனில், அவரைக் காப்பாற்ற று கருதி, வீட்டிலுள்ள அனைவரும், அவரைப் போர்த்திப் ார்த்திப் பாதுகாக்க முயற்சிப்பார்களா என்று எண்ணினார். ஆம், அப்படித்தான் செய்வார்கள், அப்படித்தான் செய்தாக வேண்டும் ும் கசப்பான ஓர் அசௌகரிய உண்மை அவரை அறைந்தது.

எதுவுமே ஞாபகம் வரவில்லையாம். இதனை இட்டுக்கட்ட ழந்தையின்மை, செவிக்குழல் என எத்தனை அதியற்புத ாளிப்புகள். இந்த அழகில், தான் உண்மையைத் தவிர வேறேதும் சவில்லை என்று சாதிக்கும் லூசி.

க்ரேஞ்ஜ் எழுந்துக் கொண்டார்.

வறட்சியாய் சொன்னார் : ''ஒருவேளை பிறகு ஏதாவது சொல்ல வேண்டும் எனக் கூடுதலாக ஞாபகம் வரும்பட்சத்தில், திருமதி ஹென்றி, தாமதியாது என்னை அழைத்துச் சொல்லி விடவும்.''

''நிச்சயமாய். பின்னே?'' என்றார் லூசி ஆர்வமாய். ''சில மயங்களில், விட்டுப் போனவை, திடுமென சடுதியில் ஞாபகத்துக்குள் வந்து நின்று விடும். தெரியுமோ.''

வெகுளியாய் பேசுகிறாரா, இல்லை வெகுளி போல் பேசுகிறாரா! க்ரேஞ்ஜால் இக்கேள்விக்கு ஓர் உளவியல் மருத்துவராய் நின்று விடை காண முடியவில்லை. ஆனால் நம்பினார் - இந்த ஹாலோவில் தான் அத்தனை உண்மையும் அடைந்துக் கிடக்கின்றன என்று ஸ்திரமாய் நம்பினார். எப்படி வெளிக் கொணர்வது?

இப்படி நினைத்து இதனால் நெற்றியில் வலியிறங்கிய போது, க்ரேஞ்ஜுக்கு உடனடியாய் ஒன்றுதான் தேவைப்பட்டது.

புகையிலைத் திணித்து புகையை உள்ளுக்கிழுக்க இவருக்கு உதவி வரும் இவருடைய பால்ய நண்பனான, அந்த, பழைய, மர, சிகரெட் பைப்!

## 21

ஹென்றியின் பிரத்யேக அறையில், லூசி, அங்குமிங்குமாய் நடந்து, சிதறிக்கிடந்தவற்றையெல்லாம் எடுத்து அடுக்கி சரி செய்துக் கொண்டிருந்தார். தன் சாய்நாற்காலியில் நன்கு சாய்ந்து படுத்தவாறு லூசியைக் கவனித்துக் கொண்டிருந்த ஹென்றி, ஒரு நிலையில் கேட்டார்: ''அந்த சிறு கைதுப்பாக்கியை என் தொகுப்பிலிருந்து நீ ஏன் எடுத்து சென்றாய், லூசி?''

செய்துக் கொண்டிருந்த வேலையை அப்படியே வைத்து விட்டு ஹென்றியினருகிலிருந்த நாற்காலியில் தாராளமாய் பரப்பிக் கொண்டு அமர்ந்தார் லூசி. ''எனக்கே உறுதியாய் தெரியவில்லை ஹென்றி'' என்றார். ''ஏதோ ஒரு விபத்து குறித்து எனக்குள் ஓர் எண்ணம் - உள்ளுணர்ச்சி - எழுந்ததாய் ஞாபகம்.''

''விபத்து?''

''ஆமாம். மண்ணுக்குள் அடங்கியிருக்காமல் வெளியே துருத்திக் கொண்டு படர்ந்திருக்கும் ஒரு மரத்தின் இரும்பு போன்ற கடினமான வேர்கள்'' என குழப்பமான ஒரு சிந்தனையின் துணையோடு ''நடப்பவரை சுலபமாக திருப்பிப் போட்டு விழ வைக்கவல்ல திண்ணென்ற வேர்கள். எவ்வளவு தான் கவனமாக இருப்பினும், விபத்தை சுலபமாக ஏற்படுத்த வல்ல ஆபத்து'' என்றார்.

லூசி சொல்வது புரியாமல் ஹென்றி குழப்பினார்.

குழம்பிய தன் ஞாபகத்தால் லூசி குழப்பினார்.

''துப்பாக்கியால் இலக்குப் பலகைகளைச் சுட்டுக் கொண்டிருந்தோம். முந்தைய நாள். எல்லாக் குண்டுகளையுமா சுட்டுத் தீர்த்தோம்? ஒன்றையாவது சுடாமல் அப்படியே துப்பாக்கிகளில் விட்டிருக்கலாம், இல்லையா! ஞாபக மறதியால் தான்! மக்களுக்கு ஞாபக மறதிதான் வழக்கமான ஓர் இயல்பாகி விட்டதே! ஜானுக்கு நேர்ந்த அசம்பாவிதம் போன்றவை, ஒரு விபத்தாய் தான் நிகழ முடியும் என்றே எனக்குத் தோன்றகிறது ஹென்றி. நடந்த பிறகு தான் விபரீதமே புரியும். மர வேர்கள் ஏற்படுத்தவல்ல ஆபத்து போல - தடுக்கிய பிறகு தான் விவரமே புரியும்! பிறகு வலி தாளாது அழுது - புலம்பி - வைது... ... ...''

லூசியின் குரல் அடங்கியது. அவரின் கணவர், கண்கொட்டாமல், சிலையாய் அமர்ந்திருந்தார். மீண்டும், அதே அமைதி குலையாத ஆனால் சிறு கவலை தோய்ந்த குரலில், "உள்ளுணர்வினால் விபத்து என உணர்ந்ததாய் சொன்னாயே, அன்பு லூசி. அந்த விபத்தை சந்திக்கப் போவது யாராயிருக்கும் என உணர்ந்திருந்தாயா?" எனக் கேட்டார்.

தன் தலையை ஹென்றியின் பக்கமாய் லேசாய் திருப்பி, சிறு ஆச்சரியம் படர பார்த்து, "வேறு யார்?" என்று கேட்டார். சொன்னார்: "ஜான் கிறிஸ்டோதான்."

"ஓ...ஓ...! அடக் கடவுளே! லூசி...! நிறுத்துகிறாயா?" - உடைந்துப் போனார் ஹென்றி.

இதிலென்ன அலற உள்ளது என்ற கருத்து மேவ பார்த்த லூசி, "ஹென்றி! நினைக்க நினைக்க எனக்குக் கவலையாய் உள்ளது ஹென்றி" என்று ஆரம்பித்தார். "ஏய்ன்ஸ்விக் பற்றி."

"ஏய்ன்ஸ்விக்? எதற்காக இப்போது பேச்சை திசை திருப்புகிறாய்?"

லூசி கண்டுகொண்டதாகவே தெரியவில்லை. "எட்வர்டும் 'டேவிட்'டும் தான் நம் ஆங்கட்டெல் பரம்பரையின் கடைசி வாரிசுகள். வேறு ஆண்களே கிடையாது" என, தான் துவங்கிய பிரச்னைக்குள் நுழைந்தே விட்டார்.

"ஏய்ன்ஸ்விக், ஏய்ன்ஸ்விக் என்று ரொம்பவுமே வாழ்ந்து விட்டாய் லூசி. சொல்லப் போனால், உன் வாழ்க்கையில், எதையும் விட, ஏய்ன்ஸ்விக் மாகாணத்திற்காக நீ வாழ்ந்தது - வாழ்வது தான் - நீ செய்யும் ஒரே செயல் என்று கூடத் தோன்றுகிறது."

இவ்வார்த்தைகளை ஆழ்ந்து உணர்ந்த லூசி, தன் உரையாடலைத் தொடர்ந்தார் : "டேவிடால் பைசா பெறாது. பிரயோஜனமற்றவன் அவன். அவன் தாயாரின் குழப்படியான வாழ்க்கையைப் பார்த்துப் பார்த்து சலித்து விட்ட அவன் குணாதிசயத்திற்கு திருமணமெல்லாம் ஒட்டவே ஒட்டாது. இந்த அழகில் எட்வர்ட் காலத்துக்குப் பிறகு தலைமகனாய் டேவிட் தான் ஆவான். திருமணமும் செய்துக் கொள்ளப் போகாத இவனால், ஆங்கட்டெல் பரம்பரையே பூண்டோடு முடியும் அபாயம் ஏற்படும். அவனை அப்படியிப்படி எதையாவது செய்து மாற்றப் பார்க்கலாம் என்றால், அவன் வயதுக்கு வந்து பொறுப்புள்ளவனாக ஆகுமுன் நீங்களும் நானும் பரலோகம்

சென்றிருப்போம்'' என்ற லூசி, பிடிவாதமாய் குறிப்பிட்டார் : ''ஆங்கட்டெல் பரம்பரையைக் கண்ணுக்கெதிரேயேவா மடிய விடுவது?''

''இது, இத்தனை முக்கியத்துவம் தர வேண்டிய பிரச்னையா, லூசி?''

''என்னைப் பொறுத்தவரை - ஆமாம். ஏய்ன்ஸ்விக், ஹென்றி, ஏய்ன்ஸ்விக்!''

''நீ ஆண் பிள்ளையாய் பிறந்திருக்க வேண்டியவள் லூசி. என்ன சுறுசுறுப்பு! பரம்பரை மீது எத்தனை கரிசனம்!''

ஆயினும், தன் வாழ்க்கைக்கு ஓர் அர்த்தத்தை ஏற்படுத்தியுள்ள தன் மனைவி லூசி, பெண்ணாயிருந்ததே நல்லது என்றெண்ணியும் கொண்டார் ஹென்றி.

''எனவே, இப்போது, நம் சந்ததியின் விருத்தியே எட்வர்டின் கைகளில் தான் உள்ளது. அவன் திருமணத்தில் தான் உள்ளது. அவனோ என் அப்பாவை அப்படியே உரித்து வைத்துக் கொண்டு பிறந்திருக்கிறான் - பிடிவாதத்தில் சொல்கிறேன். வீண் பிடிவாதத்தில். ஹென்ரீட்டா பைத்தியத்திலிருந்து விடுபட்டு வேறு ஒரு குணவதியான பெண்ணாய் பார்த்து மணமுடித்து வாழ்வான் என எண்ணியிருந்தேன். அந்த நம்பிக்கை வீணாகிப் போய் விட்டதை இப்போது நன்றாய் உணர்கிறேன். இன்னொரு பக்கம், ஜான் – ஹென்ரீட்டா உறவு! மற்ற பெண்களிடம் கொண்டிருந்த தொடர்புகள் போலவே ஹென்ரீட்டாவுடன் ஜான் கொண்டிருந்த தொடர்பும் முடியும் என்று காத்துக் கிடந்தேன். எந்தப் பெண்ணிடமும் நிலையற்றத் தொடர்பு தானே வைத்திருந்தார்! ஆனால் அவர் இம்முறை ஹாலோ வந்திறங்கிய மாலையில் ரீட்டாவை ஊடுருவிப் பார்த்த அந்தப் பார்வையைக் கவனித்தேன். அசாதாராணப் பார்வை. ரீட்டாவை அவர் மட்டும் கையகப்படுத்தி வைத்திருக்கத் துணியும் அத்தனை ஈடுபாடான பார்வை. அந்தப் பார்வைத் தூண்டிலில் இந்த ஹென்ரீட்டாவும் சிந்தனையின்றி – அதாவது அந்த ஆள் திருமணமாகி ரெண்டுப் பிள்ளைகளைப் பெற்றெடுத்தவன் என்ற சிந்தனையின்றி – ஆர்வமாய் வீழ்ந்தேக் கிடந்தாள். ரீட்டாவின் வழியிலிருந்து ஜானைப் பெருக்கித் தள்ளினாலே ஒழிய, ரீட்டா, எட்வர்டை மணக்கவே மாட்டாள் எனத் தெளிந்தேன். ரீட்டா ஒன்றும் போய் விட்டானே என்று பழைய நினைப்பிலேயே வாடி வதங்கித் தன்னை அழித்துக்

கொள்பவளும் அல்ல - இது ஓர் அனுகூலம். இந்த எல்லாம் சேர்ந்து முடிவது ஒன்றில் தான் - ஜானிடமிருந்து விடுதலை அடை!''

லூசி இவ்விதமாய் கருத்துச் சொல்லி முடித்த கணத்தில், எது உந்தித் தள்ளியதோ தெரியாது எனும் போக்கில் ஹென்றி பின்வருமாறு கேட்டார்: ''லூசி. நீ... நீ ஒன்றும்... நீ ஒன்றும் இல்லை...! இது தான் உன் கருத்தா! நீ என்ன செய்தாய் லூசி?''

எழுந்துக் கொண்டார் லூசி. மேஜையிலிருந்த பூ ஜாடியில் கொஞ்சமாய் பிதுங்கி வெளியே தொங்கிக் கொண்டிருந்த இரு மலர்களைக் கிள்ளி எறிந்து விட்டுக் கேட்டார் : ''இப்பொழுது பாருங்கள், ஹென்றி. மிக அழகாயில்லை! இந்த அத்தனை பூக்களின் வரிசையையும், நேர்த்தியையும், தேவையற்றுத் தொங்கிக் கொண்டு இருந்த இரு மலர்களும் இத்தனை நேரமாய் மறைத்திருந்தன. இனி அழகு தான்.''

திரும்பி ஹென்றியைப் பார்த்தார். லூசியின் பூ வர்ணனையை, ஜானோடு ஒப்பிட்டுப் பார்த்தவர் போல, ஹென்றி முகம் முழுவதும் பயக்கலவரம்.

''டார்லிங்'' என்றார் லூசி. ''கற்பனை செய்தா பார்க்கிறீர்கள் - நான் ஜானைச் சுட்டுக் கொன்றிருப்பேன் என்று! இப்பொழுதும் சொல்கிறேன் ஹென்றி! ஜான் கொலையைப் பொறுத்தவரை, என் உள்ளுணர்வுக்குள் உதித்திருக்கும் 'விபத்து' எனும் நிலைப்பாடுதான் இருக்கின்றது. இருந்தாலும் நினைவிருக்கிறதா ஹென்றி! இங்கு... இதோ இந்த இடத்தில் வைத்து தான் ஜானைக் கேட்டோம்! இல்லையா! ஹெர்குல் வரும் போது நீச்சல் குளத்தருகில் ஒரு கொலை நாடகக் காட்சியை அரங்கேற்றலாமா என்றும் அதில் கொலை யுண்டவனாய் ஜான் நடிக்கத் தயாரா என்றும் கேட்டோம்! வீடு வந்த விருந்தாளியிடம் கேட்கக் கூடிய கேள்வியா அது! நாமிருவரும் முட்டாள்கள் ஹென்றி! கடைசியில் நாடகமே நிஜமாகித் தொலைத்தது.''

ஹென்றியை வாஞ்சையோடு ரசித்தபடி சிறு புன்னகை யோடிருந்தார் லூசி.

''உட்கார் லூசி. உன்னைப் பற்றியக் கவலை தான் எனக்குப் பெரியக் கவலையாய் உள்ளதம்மா.''

''தேவையற்றது கண்ணா. என்ன நடந்ததோ... அது நல்லதோ கெட்டதோ! விட்டு விடுங்கள்! எப்படியோ - நடந்த அத்தனையும்

சுபமாகவே நடந்தேறியுள்ளன! ஜான் பெருக்கித் தள்ளப்பட்டு விட்டார் - நம் முயற்சி இல்லாமலே'' என்ற லூசி நினைவுபடுத்திச் சொன்னார்: ''நம் வழியில் இடைப்படும் எவரும் வாழ்கிலர் என்பதை இது எனக்கு நினைவு படுத்துகின்றது ஹென்றி. பம்பாய் நிகழ்வை எடுத்துக் கொள்ளுங்கள். நாம் அங்கிருந்த கொஞ்ச காலத்தில் நம்மைக் குலை நடுங்க வைக்குமளவு பயமுறுத்தினான் பக்கத்து வீட்டுக் காரன். என்னாயிற்று? சில நாட்களில் ட்ராம் ரயிலேறி ஸ்தலத்திலேயே போய்ச் சேர்ந்தான்.''

அப்படியே நகர்ந்த லூசி, ப்ரேஞ்சு ஜன்னலின் கொக்கியினைத் திறந்து, அது வழியே இறங்கி, தோட்டத்துக்குள் நுழைந்து விட்டார்.

மாபெரும் பதவிகளில் அமர்ந்து பலதரப்பட்ட மனிதர்களைக் கையாண்டவர் தான் ஆயினும், எழுந்திருக்க மனமின்றி அமர்ந்தே யிருந்தார் ஹென்றி - சிலையாய். உயரமான வாகிற்கு ஈர்ப்பு சேர்க்கும் ஒல்லியான அமைப்பினாலான தன் மனையாள் லூசி, அங்குமிங்கும் நடந்தவாறு தோட்ட வேலை செய்துக் கொண்டிருப்பதைக் கவனித்தபடியே இருந்தார் ஹென்றி; அவர் - வருத்தமாய், அது தந்த மனக் களைப்பினால் வாடியவராய், தன் மிக மிக அருகில் மாபெரும் அபாயம் உலவிக் கொண்டே இருக்கிறது என்பவராய் தெரிந்தார்.

★ ★ ★ ★

அடுப்பளையில், ''நீயாய் ஒரு முடிவுக்கு வந்துக் கொண்டு, அதையே நிஜமாயும் கருதி, ஓடிப் போய் போலீஸிடம் என்னைப் பற்றி சொல்லவில்லை என இங்கு யார் அழுதது'' என்று கதறிக் கொண்டிருந்த கட்ஜனுக்கு முன்னால், புதிதாக பணிக்குச் சேர்ந்திருந்த பணிப் பெண் விசும்பி விசும்பி அழுதுக் கொண்டிருந்தாள்.

''சரியாய் சொன்னாய் கட்ஜன்'' என கட்ஜனின் கூற்றுக்கு சேர்ந்திசைப் பாடிக் கொண்டிருந்தனர், சமையற்காரி மெட்வே மற்றும் குழுவினர்!

''அறிவில்லை உனக்கு? முதிர்ச்சியற்றவள். முதிர்ச்சியற்றவள்'' - இப்படிக் குரோதத்தில் துடித்தது, அனைவரின் முன்னும் அமைதியின் திருவுருவாய் விளங்கிக் கொண்டிருக்கும் கட்ஜன்!

''என் கையில் துப்பாக்கியைப் பார்த்தாயில்லையா? என்ன செய்திருக்க வேண்டும்? சொல்லுடீ! கல்லை விழுங்கியதைப் போல ஏன் நிற்கிறாய்? என்ன செய்திருக்க வேண்டும்? ம்? என்னிடம் நேராய்

வந்து, 'எதற்காக துப்பாக்கியைக் கையில் சுமந்துக் கொண்டு நடு அறையில் நிற்கிறீர்கள்?' என்று விளக்கம் கேட்டிருக்கலா மில்லையா?''

இடைபட்ட நொடியில் மெட்வே ''என்னிடமாவது வந்து தொலைத்திருக்கக் கூடாது? உதவியிருப்பேனே! க்ரேஞ்ஜ் தான் கிடைத்தாராக்கும்!'' என நுழைந்துக் கொண்டார். ''உலகமறியாத பெண்களுக்கு உதவுவது என்றால் எனக்கு இனிப்பு சாப்பிடுவது போல!''

''ஒரு போலீஸ்காரனிடம் - அதுவும் ஏட்டை விட தாழ்ந்த ஒரு சார்ஜனிடம் போயா பெரிய துப்புத் துலக்கியவளைப் போல பீற்றிக் கொள்வது? ஏற்கெனவே வீடு முழுக்க வேற்றுக் கிரக ஆசாமிகள் போல போலீஸ் சுற்றிக் கொண்டே இருப்பதைக் கண்டு எனக்கு வயிற்றில் புளியைக் கரைக்கிறது. இதில் போய்...''

கட்ஜனை விலக்கி உரையாடலில் நுழைந்த மெட்வே, ''தேவையற்ற மன உளைச்சலப்பா உனக்கு... இந்த இரண்டுங் கெட்டானால்'' என ஊதி விட்டார்.

''எல்லோரும் கேட்டுக் கொள்ளுங்கள்'' என சட்டம் இயற்றியது போல பேச ஆரம்பித்தான் கட்ஜன்: ''நம் எல்லோருக்கும் மதிப்புக்குரிய லூசி மேடம் பற்றித் தெரியும். நமக்கு அவரைப் பற்றி, அவரின் குழந்தை உள்ளம் பற்றி, அவரின் பரோபகார குணம் பற்றியெல்லாம் நன்கு தெரியும். ஆனால் போலீஸுக்குத் தெரியாது. நம்மைப் போல அவரைப் புரிந்தவர்களல்லர் அவர்கள். கையில் ஏதோ ஒரு துப்பாக்கியை வைத்துக் கொண்டு நான் போய்க் கொண்டிருந்தேன் என்ற ஒரே ஓர் உப்பு சப்பற்றக் காரணத்திற்காக, நம் முதலாளியம்மா தேவதனைப்படும்படியான எந்த சந்தேகக் கேள்வியையும், அவரிடம் இந்தப் போலீஸ் நாய்கள் கேட்டு விடக் கூடாது. புரிந்ததா? பரபரப்பான அவர் குணத்தால் முதலாளியம் மாவுக்கு மறதி ஜாஸ்தி தான். இதை நான் பலமுறை பார்த்திருக்கிறேன், அனுபவித்துமிருக்கிறேன். எதையோ எடுத்து எங்கோ கொண்டு போய் வைப்பார்; அவ்வளவு தான். இதை மீறி ஒன்றுமில்லை. பூ மாலைக் கையில் சுமப்பதும் துப்பாக்கியைக் கையில் சுமப்பதும் இரண்டும் அவருக்கு ஒன்றே. இதை அறியாத போலீஸ், துப்பாக்கியால் கொலை நிகழ்ந்துள்ள ஒரு வீட்டில்,

துப்பாக்கியோடு உலவிக் கொண்டிருந்தார்களா என அவர் மீது பாயும்!''

''எல்லாம் உன் நன்மைக்குத் தான் சொல்கிறோம். இனி எதைப் பார்த்தாலும் மூச்சு விடக் கூடாது. இல்லை, தொலைத்து விடுவோம்'' என்றார் மெட்வே, சமையற்காரியிடம்.

கட்ஜன் கிளம்புமுன் முடிவாய் குறிப்பிட்டான்: ''முதலாளியம்மா தங்கமானவர். அவருக்காக, அவரின் திருப்திக்காக நான் எதையும் செய்வேன். அதை விமர்சித்தாலோ, இடை புகுந்தாலோ... ... ...''

பெரிய விழிகளை உருட்டி எல்லேரையும் ஒரு முறை உஷ்ணமாய் பார்த்து விட்டு வெளியேறினான் கட்ஜன்.

# 22

**வா**சல் மதில் சுவர் இரும்பு கேட்'டின் தாழ்ப்பாள் விலக்கப்படும் ஓசை கேட்டு வீட்டுக்கு வரும் பார்வையாளர் யார் என்று அறிய ஜன்னல் வழியே பாதையை எட்டிப் பார்த்தார் ஹெர்குல். யாரென்று உடனேயே அடையாளம் தெரிந்து விட்டது. எந்தக் காரணம் வெரோனிக்கா க்ரே'யை இழுத்துக் கொண்டு தன் வீட்டுக்கு வந்துள்ளது என வியந்தார் துப்பறியும் நிபுணர்.

[illegible] வரும்போது கூடவே இனிய மணம் பொதிந்த திரவியத்தின் வாசனையையும் சுமந்தே வந்தார் வெரோனிக்கா. வாசனை [illegible]யத்தின் வாசம் - அன்று பெவிலியனில் தன் மூக்கு சுவைத்த [illegible] வாசம் என பிரித்தறிந்தார் ஹெர்குல். ஹென்ரீட்டா போலவே [illegible]பரம் குறைந்த உடையலங்காரத்தில் க்ரேயும் வந்திருந்தாலும், [illegible]ள், ஹென்ரீட்டாவிலிருந்து அதிகம் வித்தியாசமானவள் என [illegible]மாய் கண்டு வைத்துக் கொண்டார்.

''திருமிகு பொய்ரெட்...!'' என க்ரே அழைத்த குரல் மகிழ்ச்சி [illegible]யும் கவர்ச்சி முலாம் பூசியுமிருந்தது. ''என் குடிலுக்கு அருகில் [illegible]பது யாரென்று இப்பொழுது தான் அறியப் பெற்றேன். நான் அறியத் துடித்துக் கொண்டிருந்த ஹெர்குல் எனக்குப் பக்கத்திலான [illegible]லில்... எனும் போது மிக கிளர்ச்சி கொண்டேன்.''

கை நீட்டி குலுக்கி மகிழ்ந்த க்ரே'யைப் பார்த்து, ''மிக்க நன்றி'' [illegible]றார் பொய்ரெட்.

பொய்ரெட்டின் விருந்தோம்பலை மரியாதையாய் ஏற்றுக் [illegible]ண்ட க்ரே, அவர் வழங்க விரும்பிய தேநீர் உபசரிப்புக்கு அமைதியாய் மறுப்புத் தெரிவித்து விட்டார்.

''உங்களுடன் பேச வேண்டும் என்றே வந்துள்ளேன், திருமிகு [illegible]ாய்ரெட். முக்கியமாய் சில விஷயங்களைப் பேச வந்துள்ளேன்'' [illegible]ற க்ரே சற்றே ஒலியடக்கிய குரலில், ''எனக்கு மிகக் கவலையாய் [illegible]ள்ளது'' என்றார்.

''கவலையில் உள்ளீர்களா? கேட்கவே கஷ்டமாக உள்ளது, செல்வி [illegible]ரே.''

வெரோனிக்கா நீண்ட பெருமூச்சு விடுவித்தார். ''ஜான் கிறிஸ்டோவின் மரணம் உண்டுபண்ணித் தரும் கவலை. நாளை மரண விசாரணை. உங்களுக்குத் தெரியுமா?''

''ஆமாமாம். எனக்குத் தெரியும்.''

உடைந்தார் க்ரே. ''யாரிடம் போய் சொல்லுவேன். யாரும் நம்ப மாட்டார்கள். ஆனால் நீங்கள் நம்புவீர்கள். நிச்சயமாய். ஒரு துப்பறியும் நிபுணராய் நீங்கள் மனதினைப் படிக்கத் கற்றவர். எனவே நீங்கள் புரிந்துக் கொண்டு நம்புவீர்கள்.''

''மனித மனத்தினைப் படிக்கக் கொஞ்சம் பயிற்சி பெற்றவன் தான் நான்'' - ஒப்புக் கொண்டார் பொய்ரெட்.

''இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் என்னைப் பார்க்கவென்று வந்திருந்தார். ஏதோ நான் ஜானுடன் நீண்ட வாக்குவாதமும் சண்டையும் செய்தேன் என்று தன் மண்டைக்குள் ஏற்றிக் கொண்டுள்ளார் அவர். இது ஒரு வகையில் நிஜம் தான். ஆனால் அவர் அர்த்தப்படுத்திக் கொண்டுள்ள வகையில் அல்ல. அவரிடம், நான் ஜானைப் பதினைந்து வருடங்களாக சந்திக்கவே இல்லை என்றேன். அவர் நம்பவே மாட்டேன் என்கிறார்; இந்த உண்மையை அப்படியே ஒதுக்கித் தள்ளி விடுகிறார். ஆனால் இது தான் உண்மை, திருமிகு பொய்ரெட்.''

''உண்மை தானே. பிறகு வெகு சுலபமாய் மெய்ப்பித்துக் காட்டி விடலாமே. இதற்குப் போய் என்ன கவலை?''

பொய்ரெட்டின் சிறு புன்முறுவலுக்கு எதிர் புன்முறுவலை உதிர்த்த க்ரே, ''அந்த சனியன்று என்ன நடந்தது எனும் உண்மையை இன்னும் நான் இன்ஸ்பெக்டரிடம் சொல்லவில்லை என்பது தான் நிஜம். அப்படிச் சொன்னாலும் அதையும் அவர் முழுக்க முழுக்கப் பொய் என்றே கருதி ஒதுக்கி வைக்கத்தான் போகிறார். எனவே மறைத்து விட்டேன். ஆயினும் யாரிடமாவது சொல்லியே தீர வேண்டும் என்பது என் மன அரிப்பு. சொல்லித் தீர வேண்டும். இது தான் காரணம், இதோ, நான் இங்கு, இப்பொழுது வந்ததற்கு!''

''என்னை மிகவும் முகஸ்துதி செய்கிறீர்கள்.'' இந்த சிறு வஞ்சப்புகழ்ச்சியை அப்படியே வெரோனிக்கா எடுத்துக் கொண்டதைக் கவனித்தார் ஹெர்குல். இது தான் இப்பெண்ணின் குணாதிசயம் என்றும் முடிவெடுத்துக் கொண்டார். தானிருக்கும் இடத்தில் தான் ஏற்படுத்தும் விளைவின் மீது ஸ்திரமான நம்பிக்கை

வைத்துள்ள பெண் என எடை போட்டுக் கொண்ட ஹெர்குல், எதிர்பாரா தருணங்களில் இந்த நம்பிக்கை சுக்கு நூறாய் உடைந்துத் தோற்றுப் போகும் என்றும் உள்ளூர சிரித்துக் கொண்டார்.

''நானும் ஜானும் திருமணம் செய்துக் கொள்ள நிச்சயம் செய்யப்பட்டோம். இது நடந்தது பதினைந்து வருடங்களுக்கு முன்னால். என் மீது அப்படியொரு காதல் வைத்திருந்தார். நானே சில சமயம் அதிரும் அளவுக்கான அளவு கடந்த காதலது. நான் நடிப்பதை விட்டு விட வேண்டும் என்று வற்புறுத்தினார். அது மட்டுமல்ல. எனக்காகவோ, என் விருப்பத்துக்காகவோ நான் வாழ்வதை, அவர் தடை செய்து அழிப்பார் என்று எனக்கு விளங்கிப் போகுமளவு சில சமயங்களில் நடந்துக் கொண்டார். எனக்கு விளங்கிற்று. என்னை அப்படியே அபகரித்து சொந்தமாக்கிக் கொள்ளும் வெறி பிடித்தவர் என்பதும், என்னை அமுக்கிப் போட்டு அதிகார ஆட்சி நடத்தும் கொடுங்கோலன் என்பதும் வெளிச்சமாக ஆரம்பித்தன. இப்படிப் பட்டவரோடு வாழ்க்கையா என்ற திகில் என் முன் விரிய, நிச்சயதார்த்தத்தை உடைத்தெறிந்தேன். இதனை அவர் மிக ஆழமான அவமானமாக எடுத்துக் கொண்டார்.''

பொய்ரெட், அச்சச்சோ என்பதை, ''ச்சுச்சுச்சுச்சு'' என்று நாக்கினால் ஒலியெழுப்பிக் காட்டினார்.

''அதற்குப் பிறகு கடந்த சனி இரவு வரை அவரை நான் சந்திக்கவேயில்லை. அதாவது பதினைந்து வருடங்களாக! இரவு கடந்து நெடு நேரமாகியிருந்ததால், என் குடில் வரை துணையாக வந்தார். பழைய நாட்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். இது வரை இன்ஸ்பெக்டரிடம் சொல்லியிருந்தேன். ஆனால் வெறுமனே கடந்தக் காலத்தைப் பேசியதை விட, அன்று, என் குடிலில், அதிகமாய் பல நடந்தேறின.''

''அப்படியா?''

''ஜான், பைத்தியக்காரனைப் போல, கட்டுப்பாடிழந்து கத்த ஆரம்பித்தார். உணர்ச்சிப் பெருக்கில் துடித்தார். அவர் மனைவியையும் குழந்தைகளையும் விட்டு விட்டு வந்து விடுவாராம். நானும் என் கணவரிடத்திலிருந்து விவாகரத்துப் பெற்று வந்து விட வேண்டுமாம். பிறகு நாங்களிருவரும் மணமுடித்துக் கொள்வதாம். என்னை மறக்கவே முடியவில்லை என்றும் என்னைப் பார்த்த கணத்தில் சுற்றும் பூமி கூட சில கணங்கள் நின்று போனதாகவும் சொன்னார்.''

இப்படிக் குறிப்பிட்ட க்ரே, கண்களை மூடி அமர்ந்துக் கொண்டார். எச்சிலை ஆழமாய் விழுங்கிக் கொண்டவரின் அரிதாரத்திற்குள் மறைந்திருந்த முகத்தில் தளர்ச்சி பிரதிபலித்தது. கண்களை விரித்துத் திறந்த க்ரே, இது சாத்தியமா எனும் போக்கில் முகத்தினை அமைத்துக் கொண்டு கேட்டார்: ''திருமிகு பொய்ரெட்! இது போல - ஜான் இருந்தது போன்ற மனோ நிலை சாத்தியமாகுமா? என்ன நினைக்கிறீர்கள்?'' என்றார்.

''ம்'' என சிந்தித்த பொய்ரெட் ''சாத்தியமுண்டு. தீவிர காதலின் விளைவு. ஆமாம். சாத்தியமே'' என்றார்.

''மறக்காத ஜென்மங்கள். காத்திருந்து காத்திருந்து, மீண்டும் எப்படி அடைவது என திட்டம் தீட்டிக் கொண்டே காத்திருந்து, அந்தத் திட்டங்களும் நிறைவேறும் என முட்டாள் தனமாய் எதிர்பார்த்திருந்து, தான் அடைய நினைத்ததை எப்பாடு பட்டாவது அடைந்தே தீருவது எனும் குருட்டுத்தனமான வறட்டுப் பிடிவாதத்தில் வாழும் ஆண்கள். சே. திருமிகு பொய்ரெட். இப்படியும் ஆண்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்!''

''ஆமாம். பெண்களும் உள்ளனர்.''

சட்டென நிமிர்ந்தார் வெரோனிக்கா. புன்னகை குன்ற, அசௌகரியமாய் அவரைப் பார்த்தார் க்ரே. மேலும் காட்டிக் கொள்ளாமல், ''நான் குறிப்பிடுவது ஆண்களை - குறிப்பாய் ஜான் கிறிஸ்டோவை'' என தொடர்ந்தார் வெரோனிக்கா. ''இது தான் அன்று நடந்தது. நான் முதலில் ஜானின் வார்த்தைகளையும் திட்டங்களையும் எதிர்த்தேன். நிறைவேற முடியாத கற்பனை என சிரித்தேன். இறுதியாய் ஸ்திரமாய் மறுத்தும் பார்த்தேன். எதற்கும் அவர் படியாததால் சற்று பொறுமை குறைய, பைத்தியமா நீங்கள் என கேட்டு விட்டேன். வாக்குவாதம் காரசாரமானது. வெகு நேரம் கழித்துத் தான் அவர் வீட்டுக்குத் திரும்பிப் போனார். வாதம் செய்துக் கொண்டே இருந்தோம். விட்டுக் கொடுக்கவேயில்லை. விட்டுக் கொடுத்துப் பேசும் சங்கதியையும் நாங்கள் பேசிக் கொண்டிருக்க வில்லையே! துளியும் அவர் தளரவேயில்லை - முடிவாய் இருந்தார், நாங்கள் இருவரும் மீண்டும் இணைய வேண்டும் என்பதில்!''

பொய்ரெட் எவ்வித பாவமும் காட்டாமலிருக்க, மறுபடியும் எச்சிலை விழுங்கிக் கொண்டார் க்ரே.

''இந்தப் பிரச்னையை முடித்துக் கட்ட வேண்டும் என்ற அவசரத்தினாலேயே மறுநாள் அவருக்கு நான் சிறு குறிப்பு

அனுப்பியிருந்தேன். மறுபடியும் பழைய கதை கிளறப்பட்டு புதுப்பிக்கப்படுவதில் எனக்கு ஒப்புதல் இல்லை. அவர் எதிர்பார்த்தது இயலவே இயலாதது - என உணர்த்த விரும்பினேன்.''

''அப்படியா?'' என்று கேட்டார் பொய்ரெட்.

வெரோனிக்கா இக்கேள்வி விளங்காது ''என்ன?'' என்றார்.

''ஜானின் எதிர்பார்ப்பு, நிறைவேற்ற இயலாத ஒன்று என்றா கருதினீர்கள்?''

''பின்னே? வெகு நிச்சயமாய் அது இயலாதது தான்! என்ன திருமிகு பொய்ரெட்! குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு விட்ட நாங்களிருவரும் எல்லாவற்றையும் உதறித் தள்ளி விட்டு மறுபடியும் இணைவதா? ஊஃப்ப்ப்! நினைத்தாலே குமட்டுகின்றது! அவர் மீண்டும் வந்தார். வந்தும் என்ன பிரயோஜனம்? நிச்சயம் நான் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்க மாட்டார் என்பது சத்தியம்! சொன்னதையே சொல்லிக் கொண்டும் கதறிக் கொண்டுமிருந்தார். ஒரு நிலையில் கட்டுப்பாடிழந்தேன். எப்படியாவது அவர் என்னை மறந்துப் போகட்டும் எனும் எண்ணத்தினால், அவர் பிரயோஜன மற்றவர் என்றும், பகுத்தறிவு இல்லாத ஜடம் என்றும், நான் அவரைக் காதலிக்கவில்லை என்றும், அவரை முழுக்க முழுக்க - அதுவும் உலகில் உள்ள ஏனைய அனைத்தையும் விட - அதிகமாய் வெறுப்பதாகவும் கத்தினேன்.''

நிறுத்தினார் க்ரே. அவருக்கு மூச்சு வாங்கிற்று. ''அவரை என் வாழ்விலிருந்து விலக்கி வைக்க, நான் சற்று கரடு முரடாய் தானிருக்க வேண்டியதாயிற்று. நெஞ்சு முழுக்க கோபத்தோடு பிரிந்து சென்றார். இப்பொழுது.... அவர் மரித்து விட்டார்.''

வெரோனிக்காவையே ஆழ கவனித்துக் கொண்டிருந்தார் பொய்ரெட். சொல்வதில் என்னவோ பயம் அவரைப் பீடித்திருப்பதை கிரகித்துக் குறித்துக் கொண்டார். நாக்கு வறண்டு போய் மடக்கு மடக்காக எச்சிலை விழுங்கி ஆசுவாசமாகும் அளவுக்கு இங்கொன்றும் தீவிர சம்பாஷணை நடக்கவில்லையே என எண்ணிக் கொண்டார். வெரோனிக்காவின் உள்ளங்கைகள் தன்னிச்சையாய் பிசையப்பட்டுக் கொண்டிருந்தன. விரல்கள் பின்னிப் பின்னிப் பிரிந்துக் கொண்டிருந்தன! நீளமான விரல்கள். ஹெர்குல்லுக்கு ஏனோ, அவை, குரூரமாகவும் தோன்றின.

வெரோனிக்கா அனுபவித்துக் கொண்டிருந்த கனமான உணர்ச்சிப் போராட்டம், அவரின் இறுப்புக் கொள்ளாமையால், தானாகவே வெளியாகிக் கொண்டிருந்தது. அந்த உணர்ச்சிப் போராட்டம், ஆழ்ந்த துக்கம் கிடையாது; விசனமோ பச்சாதாபமோ கூட கிடையாது என பிரித்தறிந்தார் பொய்ரெட். அது - ஏமாற்றப்பட்ட ஒரு பச்சை அகங்காரியின் கடுங்கோபம்!

அக்கடுங்கோபத்தை அடக்கி, கட்டுப்படுத்தி, வெளிக்காட்டிக் கொள்ளாத முயற்சியோடு ''திருமிகு பொய்ரெட்'' என அழைத்த வெரோனிக்கா, ''இந்நிலையில் நான் என்ன செய்ய? நாளை மரண விசாரணை. நடந்தக் கதையை அப்படியே சொல்வதா? இல்லை எனக்குள்ளேயே மூடி வைத்துக் கொள்வதா? இது தான் நடந்தது. ஆனால் நம்புவதற்கு, திறந்த நடுநிலையான மனம் வேண்டும்'' என்றார்.

பொய்ரெட், சொன்ன வெரோனிக்காவைப் பார்த்தார் - நீளமான, ஆழமாய் ஆராயும் பார்வை.

நிச்சயமாய் வெரோனிக்கா உண்மை பேசவில்லை என்றே ஹெர்குல் நம்பினாலும், இவை தான் நடந்தன என்று அந்த நடிகை தந்துக் கொண்டிருந்த தகவல்களில், ஒதுக்கித் தள்ள முடியாத நேர்மை மிகுந்தேயிருந்தது.

'இருக்கும் - தகவல்களில் நேர்மை நிச்சமாய் இருக்கும்' - நினைத்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார் பொய்ரெட். வெரோனிக்கா சொன்னவை தான் நடந்தவை - ஆனால் அவர் குறிப்பிட்ட விதத்திலல்ல!

திடுமென விளைந்த இந்தத் தெளிவால், சிலிர்க்கும்படி பொய்ரெட்டுக்கு எல்லாம் பிடிபட்டுப் போயின. வெரோனிக்கா சொன்னது ஓர் உண்மைக் கதைதான் - ஆனால், தலைகீழாய் திருப்பிப் போட்டுச் சொல்லப்பட்ட உண்மைக் கதை. விக்கித்துப் போனது ஜான் அல்ல, வெரோனிக்கா, வெரோனிக்கா தான்! வெரோனிக்கா தான் ஜானை மறக்கவே இயலாது ஸ்தம்பித்துப் போயிருப்பது! ஜானுடனான உறவின் முறிவால் சுக்கு நூறாய் உடைந்து வஞ்சிக்கப்பட்டதாய் கிடப்பது க்ரே தான்! இப்பொழுது, தன் ப்ரீத்தியான இரை பிடுங்கப்பட்ட கோபத்தில் கர்ஜிக்கும் பெண் புலியாய் சீறியெழுந்துள்ளார் - வளரும் இந்த நடிகை! தனது மமதை, தனது இறுமாப்பு, க்ரேவுக்குத் தணிக்கப்பட வேண்டும். இதற்காக

ஒரு கதையை தானாகவே சிருஷ்டித்துக் கொண்டார்! அடிபட்டு விட்ட அவரின் கர்வத்துக்கு ஆறுதல் சொல்லும் விதமாகவும், விரிந்து ஆடும் தன் கூரிய நகங்களுக்கு இடையில் அகப்படாமல் தப்பியோடி விட்ட தனது ஆண் மகன் தரும் தீர்வில்லாத ஆண் தாக வலிக்கு மருந்து போடும் விதமாகவும், சுய ஆறுதலுக்காக ஒரு கதையை சிருஷ்டித்துக் கொண்டு விட்டார்! வெரோனிக்கா க்ரேவால் - தான் வேண்டியது, விரும்பியது, வாழ்க்கையாய் உயிராய் அடையத் துடித்தது - கை நழுவி விட்டதை ஏற்றுக் கொள்ள முடியவில்லை! முடியாது! எனவே, அத்தனையையும் அப்படியே தொங்கும் வொளவால் போல் தலைகீழாக்கித் தந்துள்ளார்.

இந்த சிந்தனை திருப்திகரமான ஒரு நீண்ட பெருமூச்சினை பொய்ரெட்டிடமிருந்து விடுவித்தது. சொன்னார்: ''நீங்கள் சொன்ன அத்தனையும் ஜானின் மரணத்துடன் தொடர்புடையதாக ஆக்கப் பட்டால், நீங்கள் சொல்லித் தான் ஆக வேண்டும்; வேறு வழியில்லை. அப்படி அமையாவிட்டால் - ஒரேயடியாக ஒதுக்கப்பட்டு விடும் என எனக்குத் தோன்றவில்லை- மிகவும் முக்கியத்துவம் தந்து கேட்கப்படா விட்டால், நீங்கள் முக்கியத்துவம் தந்து பதில் தந்து பெரிசாக்க வேண்டாம். அப்போது நீங்கள் இது பற்றியெல்லாம் பேசாமலிருந்து விடுவதே மேல்.''

இந்தப் பதில், அதாவது நடந்ததாய் வெரோனிக்கா அளித்த 'கதை' குறித்து இனி பேசாமலிருந்து விடுவதே உசிதம் எனும் கோணத்தில் தானளித்த பதில், அவருக்கு அதிருப்தியைத் தான் உண்டு பண்ணியிருக்கும் என எதிர்பார்த்தார் பொய்ரெட். இப்பொழுது இருக்கும் மன நிலையில், தன் கதை, கட்டுக் கதை, செய்தித்தாளின் பிரதான பக்கங்களில் பிரசுரமானால் தான் அடங்குவார் - வெரோனிக்கா.

பொய்ரெட்டை மெனக்கெட்டுத் தேடி வந்துள்ளார், வெரோனிக்கா. 'ஏன்?' கேட்டுக் கொண்டார் பொய்ரெட். தன் கதை எந்த அளவு செல்லுபடியாகிறது என்று பரீட்சிக்கவா? நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, தன் கதை எந்தவித எதிர்வினையைப் பொய்ரெட்டிடம் உண்டு பண்ணுகின்றது என்று கணிக்காவா? இல்லை, பொய்ரெட்டை உபயோகப்படுத்தி, துப்பறியும் நிபுணரை மழுப்பி, தன் கட்டுக் கதையை அவர் மூலமாகவே ஊர் முழுக்கப் பரப்பவா?

*இத்தனை நேரம் ஈடுபாட்டோடு வெரோனிக்கா சொன்ன கதைக்கு மிக மெலிதான முடிவே பொய்ரெட்டிடம் விளைந்ததற்கு, வெரோனிக்கா வன்மம் தான் கொண்டார். ஆனால் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.*

*எழுந்துக் கொண்டார் ஹாலிவுட் நடிகை. தனது நீண்ட மிருதுவான கையை நீட்டி விடைபெறும் குலுக்கலை நிகழ்த்திக் கொண்டார்.*

*''நன்றி திருமிகு பொய்ரெட். நீங்கள் சொல்வது தான் முதல் தரமான ஆலோசனையாகப்படுகின்றது. சரியான நேரத்தில் உங்களை வந்து அடைந்ததாக பெருமையும் நிம்மதியும் அடைகின்றேன். யாருக்காவது உண்மை தெரிந்தாக வேண்டும் என்பதே என் நிலைப்பாடு.''*

*''பயப்பட வேண்டாம் வெரோனிக்கா க்ரே. நான் ரகசியம் காப்பேன்.''*

*அவர் அறையிலிருந்து வெளியேறிச் சென்றதும், மூடியிருந்த ஜன்னல் கதவுகளைப் பாதித்திறந்து விட்டார் ஹெர்குல். க்ரே பூசி வந்திருந்த வாசனைத் திரவியத்தின் வாசம் ஹெர்குல்லைப் பாதித்தது. அந்த வாசம் துப்பறியும் நிபுணருக்கு பிடித்ததாய் அமையவில்லை. மிதமிஞ்சித் திகட்டிய வாசம். அதிக சக்கியும் அதீத முக்கியத்துவமும் காட்டும் திரவியம் - வெரோனிக்காவைப் போலவே!*

*நடந்த உரையாடலின் சாராம்சமாய், வெரோனிக்கா க்ரேவுக்குள் ஜானை வெட்டிப் போடும் வெறி வியாபித்திருப்பதை அறிய முடிந்தது ஹெர்குல்லால். திரைச்சீலையை விலக்கி வெளிக் காற்று உள் புக வழி செய்யும் போது, ஒரு வேளை க்ரே தான் ஜானை வீழ்த்தியவரோ என்று கூட பின்வாங்காது நம்பினார் அவர்.*

*ஜானைக் கொல்ல வெரோனிக்காவுக்குள் தீர்மானமான விருப்பமிருந்திருக்கும் - பொய்ரெட் நம்பினார். 'இதற்காக துப்பாக்கியின் அழுத்தானை அழுத்துவதில் வெறி கொண்ட சந்தோஷமடைந்திருப்பாள் அவள்... அந்தக் குண்டு மார்பைத் துளைத்து ஜான் நெடு மரமாய் சாய்வதை அகல வாய் திறந்து சிரித்துப் புளகாங்கிதமடைந்திருப்பாள்'- ஹெர்குல்லின் மூளைக்குள் ஸ்திரமாய் தீர்மானங்கள் நிறைவேறின. வெரோனிக்காவின் பழிவாங்கும் வெறிக்குப் பின்னால் ஒளிர்ந்த புத்திசாலித்தனமான - பாராட்டும்படியான - அதிராத - கணக்கிட்டு முன்னேறும் நகர்த்தல்களும் திட்டமிடலும், ஹெர்குல்லின் முடிவுக்கு நெய் வார்த்து உதவின.*

## 23

மரண விசாரணை முடிந்தது. வெறும் சம்பிரதாயமான நீதிமன்ற அலுவலாகத் தான் விசாரணை இருக்கும் என்று எல்லோருக்கும் நம்பிக்கை தரப்பட்டிருந்தது போலவே தான், மரண விசாரணையும் அமைந்திருந்தது; ஆனாலும் இந்த விசாரணையுடன் வழக்கு பைசலாகி விடக் கூடாதா எனும் அர்த்தமற்ற ஏக்கம் மட்டும் எல்லோரிடமும் மிகுந்தே காணப்பட்டது.

போலீஸ் பக்கத்து வேண்டுகோளுக்கிணங்க, வழக்கு, இரு வாரங்களுக்குத் தள்ளிப் போடப்பட்டது.

வாடகைக்கு எடுக்கப்பட்ட காரில், கெர்டா, தன் சகோதரி திருமதி பீட்டருடன், லண்டனிலிருந்து வந்திருந்தார். வழக்கு விசாரணைப் பொழுதில் வழக்கமாக லண்டன் வாசிகள் அணிய அறிவுறுத்தப்படும் கறுப்பு உடையிலும், முகம் முழுக்க மறைக்கப்பட வேண்டும் எனும் எதிர்பார்ப்பில் அணியப்பட்டிருந்த பெரிய தொப்பியோடும் வந்திருந்த கெர்டா, அதிகமான நடுக்கத்திலும் பயத்திலும் இருந்தார்.

விறுவிறுவென வாடகை ஊர்திக்குள் ஏறி லண்டன் திரும்ப எத்தனித்துக் கொண்டிருந்த கெர்டா, அவரைக் காண விரைந்து நெருங்கிய லூசியைக் கண்டதும் நிதானித்தார்.

''அருமை கெர்டா'' - நெருங்கும் போது இவ்வாறு அழைத்துக் கொண்டே ஓட்டமும் நடையுமாய் வந்தார் லூசி. ''எப்படி கண்ணே இருக்கிறாய்? கண்ணெல்லாம் ஏன் இப்படி இடுங்கிக் கிடக்கின்றன? தூங்குவதேயில்லையா? மரண விசாரணையை எண்ணியெண்ணி பயந்துக் கொண்டிருந்தாயா? ம்? கவலையை விடு. விசாரணை, நாம் எதிர்பார்த்தபடி ஒன்றுமே இல்லாமல் போய் விட்டது! உன்னை அழைத்துக் கொண்டு ஹாலோ போக முடியவில்லையே என எவ்வளவு வருந்துகிறேன், தெரியுமா! அப்படியே அழைத்துக் கொண்டு போனாலும், ஹாலோவின் இடங்கள், உனக்கு அதிகம் வருத்தமுண்டாக்கும் என்றும் புரிகின்றது!''

தனக்கே உரிய நம்பிக்கைமிகு குரலில் திருமதி பீட்டர் பேசினார்: ''நேராக நீதிமன்றத்துக்கு சென்று விட்டு உடனடியாக திரும்பி விட வேண்டும் என்பது செல்வி கொலின்ஸ் தந்த ஆலோசனை. வாடகைக்

கார். ஏகமாய் டாலர் விழுங்கி விட்டது. இருப்பினும் உகந்தச் செலவாய்த் தான் கருதுகின்றோம்.''

''நானும் அப்படியே நினைக்கிறேன். உடனடியாய் வண்டிக்குள் புகுந்துக் கொள்ளும் வசதியில்லையென்றால், குதறும் இந்த நிருபர்களிடம் மாட்டிக் கொண்டு... அப்பப்பா....!''

திருமதி எலிசி பீட்டர் தன் குரலை நன்றாய் தாழ்த்திச் சொன்னார்: ''திருமதி ஹென்றி! கெர்டாவையும் அவளுடைய குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு என் வீட்டிற்கு - பெக்ஸ்ஹல்'லில் உள்ளது - அங்கு நேராகச் செல்கிறேன். அங்கு தான் கொஞ்ச காலம் தங்கப் போகின்றார்கள். இவளுக்கு இப்போது தேவை, தனிமை, அமைதி. இவை தான். நிருபர்கள்! எப்போது வருவார்கள், துளைப்பார்கள் - யாரும் அறியாத ஒன்று! ஜான் கொலை வழக்கை மோப்பம் பிடித்துக் கொண்டு, ஹார்லி தெருவையே பிரதட்சணம் செய்துக் கொண்டுள் ளனர். வேறு ஏதாவது கொலை விழும் வரை, அவர்களுக்கு இக்கொலை தான் தீனி.''

சொன்ன தன் சகோதரியை ஆபத்து மிகப் பார்த்து, பின் பயந்த தனது கண்களைத் தாழ்த்திக் கொண்டார் கெர்டா.

நிமிர்ந்து, பயக் கலவரத்தோடு பார்த்த கெர்டாவின் முக தரிசனத்திற்காகவே காத்திருந்தது போல ஒரு நிருபர் க்ளிக் என்று புகைப்பட ஒளியைச் சிதற, தன் சகோதரியை வேகமாக காருக்குள் தள்ளிக் கொண்டு பறந்தார் எலிசி.

முகம் முழுக்க மறைக்கும்படி அமைந்திருந்த தொப்பியின் விளம்பிற்குள், கெர்டாவின் முகத்தை, கூடியிருந்த அவரின் நெருக்கமானவர்கள் ஊடுருவிப் பார்த்து வைத்தனர். அது - வெறுமையாயிருந்தது. எல்லாவற்றையும் இழந்து விட்டதாய் உணர்ந்த வண்ணமிருந்தது. திருவிழாவில் தொலைந்துப் போன குழந்தையின் திக்கு முக்காடலில் இருந்தது!

''ஒன்றும் தெரியாத பாப்பா'' - பற்களைக் கடித்துக் கொண்டு வாய்க்குள்ளேயே சொல்லிக் கொண்டார் மிக்டே.

''அப்படி என்னத்தைத் தான் ஜானிடம் கண்டார்கள்? இப்படி நெஞ்சுடைந்து நொறுங்கிப் போகும் அளவுக்கு என்னத்தைத் தான் கண்டார்கள் இந்தப் பெண்கள்?'' - எரிச்சலாய் பேசினார் எட்வர்ட்.

''ஜானால் ஒரு பொட்டலமாகக் கட்டப்பட்டு வாழ்ந்திருக்கிறார் கெர்டா. அதன் விளைவு இது'' - மிக்டே.

''எதற்காக அப்படி வாழ்ந்திருக்க வேண்டும்? இது தான் எனக்குப் புரியவில்லை! ஜான் ஒரு சுயநலவாதி. தனக்கு மட்டுமே பெண்கள் எனும் சுயநலவாதி. பார்க்க பழக உகந்தவர் தான் - ஆனாலும்... ஆனாலும்...'' - உடைந்துப் போன எட்வர்ட், இது குறித்து மேலும் பேசாது சட்டென்று பின்வருமாறு கேட்டார் : ''நீ அவரைப் பற்றி என்ன நினைத்திருந்தாய், மிக்டே?''

''நான்...?'' - மிக்டே, என்ன லஜ்ஜையான கேள்வியிது என பிரமித்தார். வேறு வழியின்றி, நாம் ஜானைப் பற்றி இப்படியா நினைத்திருந்தோம் என்று தனக்குத் தானே வியந்துக் கொண்டு சொன்னார் : ''அவர் மீது மிக்க மரியாதை வைத்திருந்தேன் எனலாம்.''

''மரியாதை? அவர் மீது? எந்தக் காரணத்தால்?''

''காரணம்!'' - வியப்பாய் யோசித்தார். சொன்னார் : ''அவர் செய்யும் தொழில் பற்றி முழுவதும் அறிந்திருந்தார்.''

''ஒரு மருத்துவராய்?''

''ஆமாம்.''

மேலும் பேச்சினைத் தொடர அவகாசமின்றிப் போனது.

ஹென்ரீட்டா, தன் காரில் லண்டனுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார், மிக்டேவோடு. எட்வர்ட் மதிய உணவுக்காக ஹாலோவுக்குத் திரும்பியிருந்தார்; டேவிடை அழைத்துக் கொண்டு மதிய ரயிலிலேயே ஊர் திரும்புவதாய் திட்டம். கிளம்பும் போது ''ஒரு நாள் என்னுடன் வந்து நான் தரும் விருந்தினை ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும்'' என்று மிக்டேவிடம் எட்வர்ட் கூற, தனக்கும் இதில் ஆனந்தமான சம்மதமே என்றும் ஆனால் தன் முதலாளியிடமிருந்து ஒரு மணி நேர அவகாசம் கூடப் பெற முடியாது என்றும் பதில் தந்தார் மிக்டே.

பிறகு ஹென்ரீட்டாவிடம் நகர்ந்தவர், ''உனக்கு நான் தொலைபேசி செய்கிறேன், ஹென்ரீட்டா'' என்றார்.

''ம்'' என்று ஒற்றை வார்த்தையில் பதில் தந்தவர், ''முயற்சி செய்யுங்கள். கிடைத்தால் பேசுவோம். நான் வெளியூர் செல்ல வேண்டிய அவசியங்கள் உள்ளன.'' என்றார்.

''வெளியூர்?''

காரணம் அறியும் ஆவல் மிகக் கேட்ட எட்வர்டை, பரிகசித்துப் பார்த்த ரீட்டா, ''என் இழப்பினை - அது ஏற்படுத்தியுள்ள

வலியினைக் கரைக்க வேண்டும். வீட்டுக்குள் அடைந்து, கவலையைக் கரைக்காது சுமந்துக் கொண்டு, ஏனைய பெண்கள் போல அழுதுக் கொண்டேயிருப்பேன் எனவா நினைத்தீர்கள்?'' என்றார். கிண்டலாய் ஒரு சிறு முறுவலையும் செய்தார்.

இவற்றையெல்லாம் எதிர்கொள்ளயிலாத எட்வர்ட், குரல் எழாது மெதுவாய் சொன்னார் : ''இப்போதெல்லாம் உன்னை என்னால் புரிந்துக் கொள்ளவே முடிவதில்லை ரீட்டா. நீ வித்தியாசமாய் நடந்துக் கொள்கிறாய்.''

எட்வர்டிடமிருந்து தன்னைப் பற்றி இவ்வாறாய் ஒரு விமர்சனம் விளைந்ததும் தலையைக் குனிந்துக் கொண்டு, எட்வர்ட் விரும்பும் படியான அமைதியான சாயல் கொண்டார் ரீட்டா.

''இதோ... இதோ...'' - துரிதமானார் எட்வர்ட். ''இது தான் என் ரீட்டா. ஆனால் சமீப காலத்திய ரீட்டாவோ, எதையோ மனதுள் போட்டுப் புழுங்கிப் கொண்டேயிருக்கும் ரீட்டாவாய் தான் தென் படுகிறாள். என்ன ரகசியம் அது? எது உன்னைத் துளைக்கின்றது?''

''மறுபடியும் விசாரணை எனும் பட்சத்தில் நான் இங்கு வரலாமில்லையா, லூசி?'' - அப்படியே தளத்தை மாற்றி லூசியிடம் இவ்வாறு கேட்டார் ரீட்டா.

''என்ன கண்மணி கேள்வி இது? இரு வாரங்களுக்குப் பிறகு மீண்டும் மரண விசாரணை உள்ளது. வா. நிச்சயம் வா'' - முன் வந்து சொன்னார் லூசி.

கார் நிறுத்தத்தில் தன்னுடைய காரினை நிறுத்தி வைத்திருந்த இடம் நோக்கி நகர்ந்தார் ரீட்டா. அதனுள் ரீட்டா மற்றும் மிக்டேவின் பெட்டிகள் ஏற்கெனவே ஏற்றப்பட்டிருந்தன.

இருவரும் ஏறிக் கொண்டனர். ஜன்னல் கண்ணாடிகள் ஏற்றப்பட்டன. உள்ளிருப்பது யாரென்று உணர்த்தாத கரும் கண்ணாடிகள். கார் சீறிக் கிளம்பியது. பின் பறந்தது.

சிறு குன்றுச் சாலையை ஏறி, விரிந்து நீண்டு லண்டன் நோக்கி வழிகாட்டிய விசாலமான நெடுஞ்சாலையில் இறங்கி, பின் தரையிலிட்ட ஐஸ் கட்டியாய் வழுக்கிப் பறந்தது கார்.

உரையாடலை, திடுமென துவக்கினார் மிக்டே : ''அங்கிருந்து விடுதலையானதில் நிம்மதியாயுள்ளது - லூசியிடமிருந்து உட்பட! இனிமையானவர் தான் - சந்தேகமில்லை. இருந்தாலும் பல சமயங்களில் நமைச்சல் தந்து விடுகிறார்.''

பின்னால் வருபவற்றைக் குறித்துக் காட்டும் ஒட்டுநருக்கான சிறு கண்ணாடியை மிக உன்னிப்பாய் கவனித்துக் கொண்டிருந்தார் ரீட்டா.

அதிக கவனம் தராது, ''அது அவர் குணம்'' என்றார் ரீட்டா. ''நடக்கும் அனைத்திற்கும் புத்தம்புது வர்ணம் அடித்து விட வேண்டும் அவருக்கு - கொலை உட்பட!''

''இப்பொழுது நினைத்தாலும் குலை நடுங்குகின்றது, ரீட்டா. கொலை பற்றியெல்லாம் நான் இதுவரை சிந்தித்தது கூட கிடையாது.''

''எதற்கு நினைக்க வேண்டும்? ஒருவர் கற்பனை செய்து பார்க்க வல்ல நிகழ்வா அது? குறுக்கெழுத்துப் போட்டியில் உபயோகிக்க வல்ல இரண்டெழுத்து வார்த்தை அது. அல்லது, அடுத்து என்ன என்ன என்று ஏங்க வைக்கும் சுவையான மர்ம நாவல் ஒன்றின் கரு. அவ்வளவே'' என்ற ரீட்டா, ''இருந்தாலும், நிஜக் கொலை என்பது----''

ரீட்டா நிறுத்தியதை, ''நிஜம். ஆம் ரீட்டா. நிஜக் கொலை என்பது தான் நிஜம்! அந்த, 'நிஜம்' என்பது தான், ஒருவரை அறைந்துத் தள்ளுகின்றது'' என்று முடித்துத் தந்தார் மிக்டே.

''இக் கொலை வழக்கில், உன் நிலை வேறு மிக்டே'' என்றார் ரீட்டா. ''உனக்கு எந்த அதிர்ச்சியும் வரத் தேவையேயில்லை. நீ, இக்கொலையின் வெளியே நிற்கின்றாய். சொல்லப் போனால், நம் கூட்டத்தில், நீ ஒருத்தி மட்டும் தான், வழக்கோடு தொடர்பே அற்று வெளியே நிற்கின்றாய். எனவே உனக்குக் கவலையே தேவையில்லை.''

''நான் மட்டுமில்லை ரீட்டா. எல்லோருமே. நாமெல்லோரும் ஜானின் நண்பர்கள் என்பதைத் தவிர வேறெந்த வகையிலும் இவ்வழக்கோடு தொடர்பு இல்லாதவர்கள். அடுத்த விசாரணையிலேயே இது ஊர்ஜிதமாகி விடும் பார்.''

ஹென்ரீட்டா முணுமுணுத்தார் : ''நாம் எல்லோருமா?''

இக்கேள்விக்கு அர்த்தம் போதிக்கும் விதமாய், ஒட்டுநருக்கான சிறு கண்ணாடியைப் பார்த்துக் கொண்டார் ரீட்டா. சட்டென தனது வலக்காலைக் கீழே அழுத்தி, காரின் வேகத்தை மிக அதிகமாக்கினார். கார் ஒத்துழைத்தது. வேகமானியில் கண் பதித்துப் பார்த்தார். முள், எழுபதைக் காட்டியது; இப்பொழுது அதையும் மீறி எகிறியது.

காரின் திடீர் வேகத்தால், மிக்டே திரும்பி ரீட்டாவின் பக்கவாட்டு முக பாவத்தை நோட்டமிட்டார். கவலையற்று அஜாக்கிரதையாக

கவனமின்றி ஓட்டுவதாய் எந்தக் குறிப்பும் தெரியவில்லை அவர் முகத்தில்; ஏதோ காரணத்தால் தான் இத்தனை புது வேகம் என்பது விளங்கிற்று. ஆயினும் கொண்டை ஊசி வளைவு மிகுந்திருந்த லண்டன் நெடுஞ்சாலையில் இப்படி ஓர் அசுர வேகத்தில் இவர் பறக்கக் காரணமும் தென்படவில்லை. இறுக்கமான ஒரு சிரிப்பு மட்டும் ரீட்டாவின் முகத்தில் தொடந்த வண்ணமிருந்தது.

''நிமிர்ந்து, ஓட்டுநரின் கவனத்திற்கான இந்த சிறு கண்ணாடியைப் பார். குறிப்பிட்ட இடைவெளியில் தொடர்ந்துக் கொண்டே வரும் அந்தக் கார் தெரிகிறதா?''

''ஆமாம். அதற்கென்ன?''

''வென்ட்னர் 10 ரகம்.''

''ஓ'' - மிக்டேவுக்கு இந்தத் தகவலிலெல்லாம் ஈடுபாடு இல்லை.

''குறைந்த பெட்ரோல் குடிக்கும் உபயோகமான கார் அது. அளவில் சிறியவை. கரடு முரடான பாதைகளில் கூட ஒத்துழைக்கும். ஆனால் வேகம் கூட்டி ஓட்ட இயலாதவை.''

''ஓ.''

கார்களின் மீதும் அவற்றின் செயல்பாடுகளின் மீதும் தான், இவளுக்கு எத்தனை மோகம் என ஆச்சரியமானார் மிக்டே.

''நான் குறிப்பிட்டது போல வென்ட்னர் வகைக் காரர்கள் வேகமற்றவை தான். ஆனால் மிக்டே, அதோ, அந்த வென்ட்னர் கார், எப்படியோ சமாளித்து, நம் காரிடையேயான இடைவெளியைப் பாதுகாத்துக் கொண்டு, தொடர்ந்து வந்துக் கொண்டேயிருக்கிறது. நான் எழுபதைத் தாண்டி விட்டேன். விடுவேனா என்கின்றது! விடவும் விடாது!''

கடைசி வார்த்தைகள் மிக்டேவின் குழம்பிய மனதுக்கு மேலும் பயம் சேர்த்து விட, திடுக்கிட்டுப் போய் ரீட்டாவைப் பார்த்தார் மிக்டே. கேட்டார்: ''என்ன சொல்ல வருகிறாய் ரீட்டா? போலீஸ்... நம்மை.... பின்தொடர்ந்து...''

ஒப்புக் கொண்டு தலையசைத்தார் ரீட்டா. ''ஆமாம். சிறப்புப் படைகளை, சந்தேகம் ஏற்படாதிருக்க வேண்டும் என்பதற்காக சாதாரண ஊர்திகளில், ஆங்காங்கே போலீஸ் அமைத்து வைத்திருப்பதாய் நான் நம்புகிறேன்.''

''அப்படியென்றால் நம் அனைவர் மீதும் போலீஸ் இன்னும் கண் பதித்துத் தான் உள்ளது என்கிறாயா?''

''அது வாடிக்கை தானே?''

மிக்டே ஒரு சிறு நடுநடுங்கி ஓய்ந்தார். கேட்டார்: ''ஹென்ரீட்டா! உனக்கு, பூதாகாரமாய் கிளம்பியுள்ள இந்த இரண்டாவது துப்பாக்கிப் பிரச்னை பற்றி ஏதாவது பிடிபடுகின்றதா?''

''இல்லை. இப்பிரச்னை முளைத்துள்ளதால் கெர்டா கூட சந்தேகப் பிடியிலிருந்து நழுவி விடுகிறார். இதற்கு மேல் இப்பிரச்சினை வேறெந்த வகையிலும் வலு சேர்ப்பதாய் எனக்குத் தோன்றவில்லை.''

''அதெப்படி கெர்டா நழுவுவார்! ஒரு வேளை இந்த இரண்டாவது துப்பாக்கியும் திரு ஹென்றியின் தொகுப்பிலிருந்தே எடுக்கப் பட்டதாயிருந்தால்....!''

''அப்படித்தானா என்று நமக்குத் தெரியாது. அந்த உண்மை இன்னும் புலனாகவில்லை, நினைவிருக்கட்டும்.''

''அது சரி. ஆனால், ஒரு வேளை திரு ஹென்றியின் துப்பாக்கியாய் இல்லாத பட்சத்தில், கொலையாளி, ஒட்டு மொத்தமாக வெளியி லிருந்து அன்றோ வந்திருக்க வேண்டும்! அப்படி ஒரு நிலை ஏற்பட்டால், ஹென்ரீட்டா, சொல், யார் ஜானைக் கொலை செய்திருக்க நினைத்திருப்பார் என நீ கணிக்கிறாய்? அந்தப் பெண்?''

''வெரோனிக்கா க்ரே?''

''ஆமாம்.''

ஹென்ரீட்டா இதற்கு பதில் தரவில்லை. எதிரே ஆ..வென விரிந்து நீண்ட நெடுஞ்சாலையிலேயே தீவிரமாய் கண்களைப் பொருத்தி காரினை செலுத்திக் கொண்டிருந்தார்.

''நான் கேட்பது சாத்தியமே என உனக்குப்படவில்லையா, ரீட்டா?'' - விடாமல் முரண்டுப் பிடியாயிருந்தார் மிக்டே.

விடையை மெதுவாய் தந்தார்: ''சாத்தியம்? ம்! சாத்தியமுள்ளது.''

''ஸ்திரமாய் நீ நினைக்கவில்லை... ... ...''

மிக்டேவைத் தொடர விடாது இடைமறித்து ரீட்டா சொன்னார்: ''ஒன்றினை நினைக்க வேண்டும் என்பதற்காக, தோன்றிய ஏதோ ஒரு கோணத்தில் நினைத்துக் கொண்டேயிருப்பதில் ஒரு பிரயோஜனமும் கிடையாது மிக்டே. மாற்றி மாற்றி 'நினைத்து'க் கொண்டிருப்பதில் இல்லை, நம் விடுதலை! தீர்மானமான, ஸ்திரமான, ஆதாரபூர்வமான ஒரு திருப்பத்தில், அது தரவல்ல பிரமிப்பான முடிவில் உள்ளது நம் விடுதலை.''

''நம் விடுதலை? எனில்... நாம்... இன்..இன்...இன்னும்...''

''ஆம் மிக்டே! பயப்படாமல் தைரியமாகவே ஒப்புக் கொள்ளலாம் - ஏனெனில் அது தான் உண்மை! நாம் இன்னும் கிஞ்சித்தும்

விடுதலையாகவில்லை. நாம்! நாம் எல்லோரும்! நீ உட்பட, கண்ணே! நீ ஜானைக் கொல்ல, ஆழமான ஓர் இலக்குக் கிடைக்காத பட்சத்திலும், நீயும் இன்னும் போலீஸ் வட்டத்துக்குள் தான் பத்திரமாக இருக்கிறாய் ! ஆனால், எனக்குள், வேறு யாருமில்லாது வெரோனிக்காவாயிருக்குமோ எனும் ஐயம் நீண்டு வளர்ந்து தான் வருகின்றது!''

இப்போது ரீட்டாவைக் கூர்மையாய் வெட்டும் பார்வை பார்த்த மிக்டே கேட்டார் : ''கெர்டா - வெரோனிக்கா - நீ - ஜான் ! இந்தக் கலவை எப்போதாவது உன்னுள் பழி கொள்ளும் உத்வேகத்தை ஏற்படுத்தியிருக்கிறதா, ரீட்டா?''

''ஏன் கேட்கிறாய்'' என்று சற்று யோசித்த ரீட்டா, ''நான் ஜானைக் காதலித்ததாலா?'' என்றார்.

''ஆமாம்.''

இப்படிச் சொன்னவுடனேயே - ஓர் உண்மை, இலைமறை காய் மறையாக இது நாள் வரை அறியப்பட்டு வந்த ஓர் உண்மை, முதன் முறையாக, வார்த்தைகளால் அங்கிகரிக்கப்படுவதை - சிறு அதிர்ச்சியுடன் உணர்ந்தார் மிக்டே. இது, ரீட்டாவும் ஜானும் மோகிப்பது, எல்லோராலும் - லூசியால், ஹென்றியால், மிக்டேவால், ஏன் எட்வர்டால் கூட ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை. ஆனால் வார்த்தை கொண்டு இது வரை ஒருவரும் குறிக்கவில்லை; இப்போது அது அரங்கேறியே விட்டது! ரீட்டாவாலேயே!

ரீட்டா உடனே எதுவும் பேசவில்லை. சிந்தனையிலிருந்தார். பிறகு சிந்தனையூடே சொன்னார்: ''நான் என்ன உணர்கிறேன் என்று என்னால் உனக்கு விளக்க இயலவில்லை. சொல்லப் போனால், அந்த உணர்வு என்ன என்று எனக்கே கூட வெளிச்சமாகவில்லை.''

கொஞ்சம் கொஞ்சமாக கிராமம் கலைந்து தலைவிரித்தாடும் லண்டன் நகரம் புலப்பட ஆரம்பித்தது.

ரீட்டா சொன்னார்: ''ஒரு நடை, சிற்பக் கூடம் வரை வந்து போ மிக்டே. டீ அருந்துவோம். பிறகு நானே உன் இடம் வரை கொண்டு போய் சேர்க்கிறேன்.''

போனாற் போகிறது என்று கொஞ்சமாய் தலை நீட்டியிருந்த மதிய நேரத்து லண்டன் சூரியனும் ஒடுங்க ஆரம்பித்திருந்தான். பனியின் வீரியம் மிகுந்திருந்தது. காரை சிற்பக் கூட நுழைவாயில் வரை ஒட்டி நிறுத்திய ரீட்டா இறங்கி சாவி போட்டுக் கூடத்துப் பிரதானக் கதவினை திறந்தார். விளக்குகளுக்கு உயிர் கொடுத்தார்.

''எமக் குளிர்'' என்று வெடவெடக்கும் குளிரை வர்ணித்த ரீட்டா, ''நெருப்பு மூட்டுவதே சிறந்தது'' என்றவர், ''ஆஹா... வத்திப் பெட்டிகள் வாங்கி வர வேண்டும் என நினைத்திருந்தேன்...'' என்று குறிப்பிட்டு மறந்து விட்டேனே என ஆதங்கப் பட்டார்.

''என்னிடம் சிறு 'லைட்டர்' உள்ளது. அது போதாதா?''

''போதாது மிக்டே. சுள்ளிகளைப் பற்ற வைக்க வேண்டும். சரி. கொஞ்சம் காத்திரு. தெருக்கோடியில் ஒரு குருட்டுக் கிழவன் வசிக்கிறான். சிறு பெட்டிக் கடை போன்று வைத்து பிழைப்பு நடத்தும் குருடன். அவனிடம் தான் எப்போதும் நான் வத்திப் பெட்டிகள் வாங்குவேன். கதவினைப் பூட்டிக் கொண்டு சென்று வருகிறேன். ஓரிரு நிமிடங்களில் திரும்பி விடுவேன்.''

விசாலமான கூடத்தில் தனியே விடப்பட்ட மிக்டே, எழுந்து, ரீட்டாவின் கலை வேலைப்பாடுகளை ஒவ்வொன்றாய் பார்த்தபடி நடந்துக் கொண்டிருந்தார். மண் கல் உலோகம் போன்றவற்றால் ஆக்கப்பட்டு,பல வித உணர்வுகளைப் பிரதிபலிக்கும் ரீட்டாவின் படைப்புகளோடு தனியே இருப்பது, மிக்டேவின் மனத்துக்கு, சிறு அசௌகரியத்தை ஏற்படுத்தியது.

ராணுவ வீரன், விவசாயி, கல்லூரி கலாட்டா என பல தினுசில் சிற்பங்கள் உயிரோவியமாய் ஆக்கப்பட்டு அமர்ந்திருந்தாலும், கூடத்தின் மூலையில், கழுத்தளவு செதுக்கப்பட்டிருந்த மரச் சிற்பம் மிக்டேவை நிலை குத்தச் செய்தது.

இப்போது கதவினைத் திறந்துக் கொண்டு, மூச்சு வாங்க, ஏறக்குறைய ஓடி வந்த ரீட்டாவிடம், ''என்னது இது ரீட்டா?'' என்றார் மிக்டே, மரச்சிற்பத்திலிருந்து கண் அகற்றாமல். ''இதன் உணர்வுப் பிரவாகம் என்னை பயமுறுத்துகின்றது.''

''அதுவா? அது ஒரு பக்தை. சர்வதேசப் போட்டிக்குச் செல்கின்றது.''

அதிலிருந்து இன்னும் கண்களை விலக்கியிராத மிக்டே மீண்டும் சொன்னார் : ''அச்சுறுத்துகின்றது.''

நெருப்பு மூட்ட, சுவரோரத்தில் கிடந்த சுள்ளிப் பொந்துக்கருகே முட்டியிட்டு அமர்ந்த ரிட்டா, ''நீ இப்படிக் குறிப்பிடுவது ஆனந்தமாய் உள்ளது. சரி, சொல். ஏன் அது உன்னை பயமுறுத்துவதாய் உள்ளது?'' எனக் கேட்டார்.

''அதாவது... அதாவது...'' - விடையைத் தேடிக் காற்றில் பரபரத்த மிக்டே, அது கிடைத்து விட்ட துரிதத்தில் சொன்னார் : ''ஏனென்றால்,

இந்த பக்தை முகத்துக்கென்று ஒரு சுய விலாசமே இல்லையே. அதனால்.''

''எத்தனை சரியாய் இச்சிறப்பத்தை படித்து விட்டாய் நீ!''

''இது பிரமாதம் ஹென்ரீட்டா. நீ ஒரு பிரமாதமான கலைஞன்.''

ஹென்ரீட்டா ஏற்றுக் கொண்டு அமைதியாய் சொன்னார் : ''சந்தன மரத்தில் உருவாகியுள்ள சிற்பம். என் படைப்புகளில் நான் மிகவும் மகிழ்வது இதில் தான்.''

முட்டிப் போட்ட நிலையிலிருந்து எழுந்த ரீட்டா, தன் மேலங்கியை அவிழ்த்து நாற்காலியில் வீசினாற் போல் போட்டு விட்டு, கையிலிருந்த வத்திப் பெட்டியை, மேஜையின் மீது வைத்தார்.

இப்போது ரீட்டாவின் முகத்தில் வீசிய - விளக்கயிலாத - மர்மமான - காரணம் புதைந்த எக்காள சந்தோஷத்தைக் கண்ணுற்று - துணுக்குற்றுப் போனார் மிக்டே.

''இனி, டீ'' என்றார் ரீட்டா. இந்தக் குரலிலும், சில நொடிகள் முன்பு ரீட்டாவின் முக பாவத்தில் மிக்டே கண்டு அதிர்ந்த அதே புளகாங்கிதம் - வெற்றிகரமாய் எதையோ செய்து முடித்து விட்ட புளகாங்கிதம் பொங்குவதை மிக்டேவால் பிரித்தறிய முடிந்தது.

திடீர் மாற்றம். வெளியே போய் வந்ததில் தோன்றியுள்ள அதிரடி மாற்றம். ஆனால் மேஜையில் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கி ரீட்டா தற்சமயம் வைத்திருந்த இரு வத்திப் பெட்டிகளைப் பார்த்த மாத்திரத்தில் வரிசை வரிசையாக வந்து விழுந்த வெரோனிக்கா குறித்த நினைவுகள், மிக்டேவை, ரீட்டாவிடம் தோன்றியுள்ள வெற்றிக் களிப்பு குறித்த தாக்கத்திலிருந்து அகற்றி விட்டன.

''அன்றிரவு வந்து வெரோனிக்கா க்ரே வாங்கிச் சென்ற வத்திப் பெட்டிகள் நினைவிருக்கிறதா ரீட்டா?''

''லூசி திணித்து அனுப்பிய அரை டசன் பெட்டிகள்? ம், நினைவிலுள்ளது.''

''அவளது புறாக் கூடு குடிலுக்குள் உண்மையிலேயே வத்திப் பெட்டிகள் இருந்தனவா இல்லையா என்று யாராவது தகவல் சேகரித்தார்களா?''

''போலீஸ் செய்திருக்கும் என்பது என் எதிர்பார்ப்பு. பூமியைத் தோண்டி சாட்சிகளைத் தேடுவதில் முனைப்பாயுள்ளது போலீஸ்.''

'இருந்தாலும் என்ன!' எனும்படியான முழக்கப் புன்னகையை, ஏளனப் புன்னகையை, பேசிய ஹென்ரீட்டாவின் உதடுகள்

ு நிர்ப்பதைக் கவனித்த மிக்டே, ரீட்டாவைப் புதிராய் பார்த்தார்; ரீட்டாவிடம் இது நாள் வரை தான் கவனித்திராத இந்தக் குரூர பாவத்தால் உச்சத்தில் எறியப்பட்டவரைப் போல் கவனித்தார்; பின் பயந்தார்.

பயம் என்றோர் உணர்வு மனதுள் விளைந்ததும், அந்த பயத்துக்கு நீர் ஊற்றும் படி மிக்டே பயந்துக் கொண்டிருக்கும் இன்ன பிற எண்ணங்களும் வரிசையாய் வந்தன. அவற்றில் முதலில் - எட்வர்ட். 'இனி எட்வர்ட் நீண்ட காலம் காத்திருக்கத் தேவையில்லை...' - இப்படி நினைக்கும் போதே, கத்தி ஒன்று அடிவயிற்றில் நுழைந்து கிழிப்பதாய் உணர்ந்தார் மிக்டே.

எட்வர்டைப் பொறுத்தவரை, தான், அவர் எப்போதும் குறிப்பிடுவது போல, வெறும் 'மிக்டே குட்டி...' தான்; இதற்கு மேல் அல்ல என எண்ணியது மிக்டேவின் மனது. அவர் என் மீது செலுத்துவது தீரா அவா. ஆசை. அன்பு. ஆனால் காதலல்ல.

காதல் வலி. அழ வேண்டும் போலிருந்தது மிக்டேவுக்கு.

எட்வர்ட் - மிகக் கனிவானவன். கனிவானவர்களை இறைவன் என்றுமே கை விடுவதில்லை. அவர்கள் வேண்டுவதை இறைவன் கடைசியில் தந்து விடுகின்றான். எனவே எட்வர்டுக்கு அவர் வேண்டிய ரீட்டா கிடைத்து விடுவாள். எட்வர்ட் - ஹென்ரீட்டா - ஏய்ன்ஸ்விக் - பிரிவின்றி இந்தத் தம்பதியர் மேலும் மேலும் வாழ்வர்.

'இதைத் தானே மிக்டே, இதைத் தானே, எட்வர்டின் நல்வாழ்வைத் தானே நீ வேண்டினாய்.... அது அமைகின்றது... சந்தோஷப் படேன்', என அவர் மனது ஆறுதலளித்தாலும், லஜ்ஜையின்றி எட்வர்டை நாடும் மனம் மட்டும் அடங்கவில்லை.

இது தான் நடக்கப் போகின்றது. தெளிவாய் விளங்கிற்று மிக்டேவுக்கு. மிக்டே குட்டிக்கு!

''சந்தோஷமாயிரு மிக்டே'' - மிக்டேவின் சிந்தனையை அடித்தது ரீட்டாவின் குரல். ''நடந்துள்ளக் கொலை, உன்னைக் கீழே வீழ்த்தி சாய்க்கும்படி ஆக்கிக் கொள்ளக் கூடாது. வெளியே நல்ல உணவகமாய் போய் இரவு இருவரும் ஒன்றாக உணவருந்தலாம்.''

விருட்டென அவசரத்தில் எழுந்து, தன் அறைக்கு உடனடியாய் திரும்பியாக வேண்டும் எனக் கூறி, ரீட்டாவின் கோரிக்கையை மறுத்து விட்டார் மிக்டே. வேலையிருக்கிறது என்றார். கடிதங்கள் எழுத

வேண்டும். முதலாளியம்மாவைப் பார்த்தாக வேண்டும். தேநீர் அருந்தியதுமே கிளம்ப வேண்டியது அவசியம் என்றார்.

''சரி. நானே வந்து உன்னை இறக்கி விட்டு வருகிறேன்.''

''எதற்கு? வாடகைக் கார் போதாதா?''

''போடீ. கார் இருக்கிறது. உபயோகிப்போமே.''

பனியால் மெழுகப்பட்டு குளிரடித்தக் காற்றில் இருவரும் பயணித்தனர். மிக்டேவின் ஜாகைக்கு அருகே கார் திரும்பும்போது, ரீட்டா, தெருவோரமாய் ஒளிந்தாற் போல் நின்றுக் கொண்டிருந்த காரைக் காட்டி, ''அதே வென்ட்னர் 10. நம் நிழல். பார். நம்மைத் தொடர ஆரம்பித்து விடும்'' என்றார்.

''மிருகத்தனமான நடவடிக்கை.''

''அப்படியா? எனக்கு அப்படியெல்லாம் வெறுப்பே உண்டாகவில்லை தெரியுமா? அவர்கள் கடமையைச் செய்கிறார்கள்!''

மிக்டேவை இறக்கி விட்டு, தன் காரினைப் பழுது பார்க்கும் கொட்டகைக்குள் விட்டு விட்டு, தன்னுடைய சிற்பக் கூடத்துக்குள் மீண்டும் நுழைந்துக் கொண்டார் ரீட்டா.

அமைதி. வேறு ஏதோ எண்ணத்தில் ஈடுபட்டக் காரணத்தால் கூடத்தில் நினைவு பதிக்காது நின்ற வண்ணமிருந்தார் அவர். கை விரல்கள், அருகிலிருந்த மேஜையில், சன்னமாய் தாளமடித்துக் கொண்டிருந்தன. பிறகு சிறு பெருமூச்சினை வெளியிட்டு, முணுமுணுத்தார்: ''முடித்து விட வேண்டியது தான்.''

அவர் முகத்தில் ஒரு வெற்றிப் பெருமிதப் புன்னகை விளைந்து நீண்டது. ''காலம் தாழ்த்தக் கூடாது.''

சிற்பங்கள் செதுக்கும் போது அணிந்துக் கொள்ளும் உடைக்குள் புகுந்துக் கொண்டார்.

சிற்பம் வளர வளர, ரீட்டா முகவாய் கன்னங்களில் களிமண் தீற்றல்கள்! ஈடுபாடு! கேசம் கலைந்து ஆரவாரமாயிற்று. ஒன்றரை மணி நேர ஆழ்ந்த சிற்ப வேலைக்குப் பிறகு, சற்று பின் சென்று நின்றுக் கொண்டு, தான் செய்து முடித்திருந்த வேலையின் முழுமையைப் படித்தார். தான் எதிர்பார்த்த சிற்பம் அப்படியே உருவாகி நிற்பதாய் பூரிப்படைந்தார்.

அது, சீராய் முற்றுப் பெறாத, குதிரை போன்ற சாயல் கொண்ட ஓர் உவமானச் சிற்பம். களிமண் உருண்டைகள், ஓர் ஒழுங்கற்று, மொத்தம் மொத்தமாக அறையப்பட்டிருந்தன. இதை மட்டும் ஒரு

குதிரைப்படை வீரன் பார்த்தானென்றால், தசையும் புலன்களும் முடுக்கப்பட்டு வாதம் கொண்ட ஒரு நோஞ்சான் குதிரை என்றே கருதுவான். சிற்பமேயானாலும், ரத்த ஓட்டம் மிகுந்து உயிரோட்டமாய் காணப்படும் ஏனைய ரீட்டா கை வண்ண சிற்பம் போலில்லாமல், சிற்பத் தகுதியேதுமற்று முடிந்திருந்தது இது. குதிரையோடு வாழ்ந்து வரும் ரீட்டாவின் மூதாதைய ஐரீஷ்காரர்கள் பார்த்தால் உயிரையே விட்டு விடுவார்கள். எதுவாயினும் - இது குதிரை.

இதை இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் மட்டும் பார்த்தால் என்ன நினைப்பார் என வியந்து கற்பனை செய்த ரீட்டாவின் சிறு வாய், அந்தக் கற்பனைக் காட்சியை மனதில் ஓட்டிப் பார்க்கும் போது, ஆச்சரிய சிரிப்பில் மெல்ல மெல்ல விரிந்துக் கொண்டே பெரிதானது.

24

சூழன்றடித்துக் கொண்டிருந்த ஜன சந்தடியின் நடுவில் எப்படி நகர்வது எனும் தயக்கத்தோடு நின்றுக் கொண்டிருந்தார் எட்வர்ட். மேடம் அல்ஃப்ரெஜ் என்று தங்க எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருந்த பெயர் பலகை தாங்கி இருந்த ஸ்தாபனத்துக்குள் நுழைய முன்னேற முடியாமல், சிறு அதிர்வோடு, வாசல் பக்கத்து நடைபாதையிலேயே நின்றுக் கொண்டிருந்தார் அவர்.

இனம்புரியாத ஓர் உள்ளுணர்வு, தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு மிக்டேவை வரவழைத்து மதிய விருந்துக்கு கூட்டிச் செல்வதிலிருந்து எட்வர்டைத் தடுத்து நிறுத்தியிருந்தது. ஹாலோ விலிருந்த போது நிகழ்ந்த அந்த சிறு தொலைபேசி உரையாடல் எட்வர்டை உலுக்கியிருந்தது - சொல்லப்போனால் அதிர்ச்சிகுள்ளாக் கியிருந்தது; மிக்டேவின் அந்த உரையாடலில் ஒரு கீழ்ப் பணிதல் இருந்தது; முதலாளி என்ன சொன்னாலும் கேட்டுக் கொள்ளும் பணிவு இருந்தது; இவை, எட்வர்டின் உணர்வுகளையெல்லாம் கூனிக் குறுகி அவமானப்பட வைத்தன.

பழக இதமான, சுறுசுறுப்பான, மனதில் பட்டதைப் பட்பட் டென்று பேசும் வெகுளியான மிக்டே - பாவம், இப்படி அடிமையாய் பாதம் தொடும் படி மாறியே போக வேண்டிய துரதிர்ஷ்டம். தொலைபேசியின் அடுத்த பக்கத்திலிருந்து வழிந்தோடி வந்த அரக்கத்தனத்துக்கும் அசுரத்தனத்துக்கும், அப்போது மிக்டே நிறைவேற்றிக் காட்டியது போல, ஒடுங்கிப் போவது ஒன்றே வழியாய் போய் விட்ட துர்கதி. இவை தவறு - எல்லாம் தவறு! இதனால், மிக்டேவின் இந்த நிலைக்குத் தானடையும் மன விசாரத்தை எட்வர்ட் உவந்து முன் வைக்கும் போது, எந்த வித சங்கோஜமுமின்றி, வெளிப்படையாக, கருத்தாலும் மனதாலும் அங்கீகரிக்க இயலாத பின்வரும் உண்மை நிலையைப் பேசினாள் மிக்டே : "வேலை கிடைப்பதே குதிரைக் கொம்பாயுள்ள இக்காலத்தில், கிடைத்த வேலையை தக்க வைத்துக் கொள்ள, முதலாளிகளால் நேரும் திருப்தியில்லாத நிகழ்வுகளுக்கு நம்மை சாசனம் எழுதி வைக்கத் தான் வேண்டும்; இது, முதலாளியிடம், நமக்கு ஒதுக்கப்பட்ட

வேலையை சிறப்பாய் செய்து பெயர் வாங்குவதை விட முக்கியமானது எட்வர்ட்.''

இது வரை, 'இக்காலத்தில் எல்லா பெண்களுமே வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டார்கள்' எனும் அளவில் தான் எட்வர்டின் மனதில் மேலோட்டமாய் பதிந்திருந்தது. வேலைக்குப் போக வேண்டும் - நாமும் சுதந்திரமாக வாழ வேண்டும் - அப்பொழுது தான் வாழ்க்கையில் ஒரு பிடிப்பு உண்டாகும் - போன்ற எண்ணங்களின் வீச்சினால் தான் பெண்கள் வேலைக்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்ற அளவில் தான் எட்வர்டின் மூளைக்கு உறைத்திருந்தது.

ஆனால், காலை ஒன்பதிலிருந்து ஆறு வரை, இடையே வெறும் ஒரு மணி நேர மதிய உணவு இடைவேளை மட்டும் வாய்க்க வேலைக்குச் சென்று வரும் பெண்கள் - சராசரி பெண்கள் இஷ்டப்பட்டதையெல்லாம் செய்து நாள்முழுவதும் அனுபவிக்கும் சந்தோஷங்கள், பொழுது போக்குகள், ஓய்வுகள் ஆகிய அனைத்தையும் ஆதங்கத்தோடு பறி கொடுத்துத் தான் வாழ்ந்து வருகிறார்கள் எனும் நிதர்சனம் - எட்வர்டின் கருத்துக்கள் எட்டியிருக்கவேயில்லை. மிக்டே போன்ற அதிகக் கல்வித்தகுதியற்ற வேலைக்குப் போகும் பெண்கள் வாடிக்கையாக வீட்டுப் பெண்கள் காலை நீட்டிக் கொண்டு சாவகாசமாக அனுபவிக்கும் மதிய நேரத்து ஓய்வினையெல்லாம் மீட்டிப் பார்க்க வேண்டுமாயின், ஒன்று தங்கள் மதிய உணவினைத் தியாகம் செய்து அந்நேரத்தில் தனிமையில் அமர்ந்தோ, இல்லை ஏதாவது ஒரு கலைப் பொருள் கண்காட்சிக்குள் நுழைந்தோ, இல்லை அமைதியாய் பராமரிக்கப்படும் தூரத்து உணவகத்தில் புகுந்துக் கொண்டோ, இல்லை ஞாயிறு மட்டும் கிடைக்கும் விடுப்பு நாளில் வீட்டு வேலை எதையும் கவனியாமல் தெய்வமே என்று ஆளரவமற்ற மரத்தடியில் போய் அமர்ந்தோ தான், அனுபவித்தாக வேண்டும்!

'மிக்டே குட்டி...' - எண்ணிக் கொண்டார் எட்வர்ட். கொஞ்சம் கூச்சத்தோடும், புது இட அதிர்வில் விரிந்த விழிகளோடும், இவற்றால் வாய் திறக்காமல் இறுகியே இருக்கும் மிக்டே - ஏய்ன்ஸ்விக்கில் விடுமுறைக்காக வந்திறங்கும் மிக்டே - பிறகு கொஞ்சம் அறிமுகம் கிடைத்துப் பழகியதும் சுறுசுறுப்பும் அன்பும் ஒரு சேர பொங்கி வழிய வலம் வரும் மிக்டே - என மிக்டேவின் மீதான எண்ணங்கள், எட்வர்டுக்குள், பாலாய் பொங்கி வழிந்தன. எட்வர்டின் கடந்தக் கால இன்பங்களின் நினைவுகளை மட்டும் ஏற்றுக் கொண்டு வாழும் குணாதிசயத்திற்கும், எல்லா நிகழ்கால நிகழ்வுகளும் எப்படி

முடியுமோ எனும் சந்தேகக் கண் கொண்டு வாழும் பண்புக்கும் - மிக்டே, ஒரு தினக்கூலி பெற்று வாழும் பெண்மணி என்பது விளங்காமலே தான் உள்ளது. இது இப்போது விளங்கும்போது, மிக்டே, இனி ஒரு போதும் மிக்டே குட்டி அல்ல என்பதும் விமரிசையாய் புரிந்தது.

இந்தப் புரிதல், மிக்டே செழித்து வளர்ந்துள்ள கன்னி எனும் புரிதல்--- அன்று, ஹாலோவில், அந்நியனொருவனோடு நிகழ்த்தப் பட்டது போல நிலைகுலைந்துப் போகும்படி ஹென்ரீட்டாவுடன் இடம்பெற்ற வாய்ச் சண்டைக்குப் பிறகு பயந்து நடுங்கிப் போய் உள்ளே நுழைந்தாரே.... அன்று, அப்போது, சுள்ளிகளுக்கு நெருப்பு மூட்ட மூட்டியிட்டிருந்த மிக்டேவின் விம்மி வெடித்த இளமை வளைவுகளைப் பக்கவாட்டில் நோக்கும் போது தான் முதன் முதலாய் அரங்கேறியது.

அது, எட்வர்டை நிலைகுலைய வைத்த காட்சி. அந்நொடியில், தன் மனதுக்குப் பிரீத்தியான ஒன்று கண்களுக்கு முன்னால் நழுவிக் காணாமல் போய் விட்டதாய் உணர்ந்தார். ஏய்ன்ஸ்விக்'கின் விலைமதிப்பற்ற பிரீத்தியான பதிவு நழுவி விட்டதாய் உணர்ந்தார்; வருந்தினார். அந்தக் குழந்தைத் தன மிக்டே - இனி கிடையாதே! இதனால் தான் உணர்ச்சிவசப்பட்ட அவசர உந்துதலில் சொல்லியிருக்கிறார், 'டியர் மிக்டே...! அடிக்கடி உன்னை இனி நான் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் உன் மாற்றங்கள் என்னைத் தாக்காது' என்று!

அந்த நிலா ராத்திரியில், கொட்டும் பனியில் வெட்ட வெளியில் நின்றுக் கொண்டு, அத்தனை நாட்கள் நெஞ்சு முழுக்கச் சுமந்து களித்த ஹென்ரீட்டா போலல்லாது, அதிர்ச்சியூட்டும் பாவனையில் முழுக்க முழுக்கப் புது முகம் தரித்துப் பேசிய ஹென்ரீட்டாவை மூச்சு வாங்க எதிர் கொண்ட போது, மிதமிஞ்சிய நடுக்கமும் குழப்பமும் அடைந்தார் எட்வர்ட். அப்போது, கண் கட்டப்பட்ட குதிரை போல ஒரே வடிவமாய் தன் வாழ்க்கையை நிர்ணயித்துத் தான் தனிமையில் வாழ்ந்து வரும் உண்மை வெளிக் கொணரப்பட்டதால் நிலை தடுமாறிய குழப்பமடைந்தார். ஹென்ரீட்டாவைப் போலவே, மிக்டே குட்டியும் ஏய்ன்ஸ்விக்'கின் முக்கிய அங்கம் என்பதும், தன்னைத் திணறடித்து ரீட்டா வெளிப்படையாய் மாற்றம் காட்டியது போல, வயது வந்து விட்ட மிக்டேவுக்குள் கவலையே உருவாய் உண்மை

யான மிக்டே வாழ்ந்துக் கொண்டிருக்கும் வெளிப்படாத மாற்றமும் விளங்கின.

மாற்றங்கள் - ரீட்டாவிலிருந்து மிக்டேவுக்கு!

இந்தத் தடுமாற்றம் வந்தது முதல் தவித்துக் கொண்டுதானிருக் கிறார் எட்வர்ட். மிக்டேவின் சந்தோஷம் மற்றும் வசதி குறித்து இதுநாள் வரை தான் கண்டு கொள்ளாமலே இருந்ததற்காக தன்னைத் தானே அதீதமாய் நொந்துக் கொண்டுமிருக்கிறார். மனதுக்கு நிம்மதியளிக்காத சூழலில் மேடம் அல்ஃப்ரெஜ்' ஜிடம் மிக்டே பணியாற்றி வருவது குறித்த சிந்தனையும் தொடர்ந்து எட்வர்டைக் கவலையடைய வைத்தது. ஒரு வழியாக, துணிந்து, அப்படி என்ன தான் அந்தத் துணிக்கடையில் இருக்கிறது என்று தனக்குத் தானே பார்த்து அறிய முடிவு செய்துக் கொண்டு கிளம்பியுள்ளார் எட்வர்ட்.

நீச்சல் குள உடை, இரவு நேரத்து படுக்கை உடை, தொடை வரை மட்டுமே நீண்டிருந்த சிறு உடை என உடைகள் காட்சிப் பொருளாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்த அலமாரிகளை, வெளியிலிருந்தபடியே, சிறு தயக்கம் மற்றும் சந்தேகத்துடன் எட்டிப் பார்த்தார் எட்வர்ட்.

எட்வர்டுக்குப் பெண்கள் உடைகள் பற்றி எவ்வித அறிவும் கிடையாது ஆனாலும் வாடிக்கையாளர்களை ஈர்க்க எனத் தொங்க விடப்பட்டிருந்த துணி வகைகளைப் பார்த்த போது, கவர்ச்சி காட்டி அலையும் பெண்களுக்கு மட்டுமே உகந்த உடைகள் மிகுந்துக் கிடக்கும் கடையாய் இது அவருக்குள் பதிந்தது. அப்படிப்பட்ட அடங்காப்பிடாரி பெண்களையா வாடிக்கையாளர்களாக தினசரி சந்தித்தாக வேண்டும்! சே! இந்த இடம், குணம் மிகுந்த மிக்டேவுக்கு ஏற்ற இடமே அல்ல! யாராவது, ஏதாவது, குறிப்பாக ஓரசி போன்றோர், மிக்டேவுக்குப் பரோபகாரமாய் உதவி செய்தேயாக வேண்டும்.

சிறு பிரயத்தனம் மேற்கொண்டு தனக்குள் எட்டிப்பார்த்த லஜ்ஜையை ஓரம் வைத்து, அதனால் குறுகி வளைந்த தோள்களை நிமிர்த்தி செங்குத்தாய் நடந்து உள்ளே நுழைந்தார்.

நுழைந்தக் கணத்திலேயே தர்ம சங்கடமாய் கலவரமானார் எட்வர்ட். தகரத்தை வைத்துக் கீறுவது போன்ற அசிங்கமான குரல் கொண்ட இரு வாடிக்கையாளர்கள், அவர்களை எதிர் கொண்டிருந்த கறுப்புப் பெண் பணியாளரிடம், அவள் காட்டிக் கொண்டிருந்த துணியின் தரம் குறித்தோ என்னவோ அப்படி கத்திக் கூச்சலாய்

கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தனர். உள்ளேயிருப்பது எல்லாம் வெளியே தெரிவது போன்ற ஓர் இரவு கவுனை மாற்றித் தைக்கச் சொல்லி, பயமுறுத்தும் அதிகாரத்தோடு கத்தும் மற்றொரு குண்டான வாடிக்கையாளரிடம் இன்னொரு பணிப்பெண் நமஸ்காரம் செய்வது போல பேசிக் கொண்டிருந்தார். இவையெல்லாம் எட்வர்டின் மூச்சையே நிறுத்தி விடும்படி செய்துக் கொண்டிருக்க, அவருக்கு மிக அருகிலிருந்த சிறு அறையிலிருந்து துல்லியமாய் குரல்கள் வந்து விழுந்தன.

''கண்றாவி. ஆபாசம். என்னைப் பார்த்தால் இப்படி எல்லாவற்றையும் விளம்பரப்படுத்தி உடை உடுத்துபவள் போலத் தெரிகிறதா? நான் உடுத்திப் பார்க்க பாங்காக உடையைக் கொண்டு வந்து தந்துத் தொலையக் கூடாது?''

இதற்கு பதிலாக, மதிப்பும் மரியாதையும் கலந்த, அதிக ஓசையெழுப்பாது அடங்கிப் போகும் குரலில், முணுமுணுப்பாய் பேசிய மிக்டேவின் குரல் வந்தது.

''இந்தக் கருஞ்சிவப்பு நிற உடை, மிக நாகரீகமான, புதிய மாடல். இப்போது தான் சந்தைக்கே வந்துள்ளது. உங்களுக்குப் பொருந்தும் என்பது என் கணிப்பு. ஒரு முறை போட்டுப் பார்த்தீர்களென்றால்... ... ...''

''மூடு வாயை. எனக்கு சரிப்படாத ஒன்றைப் போட்டுப் பார்க்க நான் நேரம் செலவழிக்க முடியாது. புரிகிறதா. நீ வேலைபார்க்க சுணங்கி இதை என் தலையில் கட்ட வேண்டாம். போ. போய் மெனக்கெடு. எனக்கு சிவப்பு வேண்டாம் என்று சொல்லியிருக்கிறேன். என் தேவையை நீ கேட்டிருந்தாயென்றால்... ... ...''

வீசியெறியப்பட்ட அந்தக் கருஞ்சிவப்புத் துணி, கோணம் மாறி, எட்வர்டின் தோளில் வீரியமாய் வந்து விழுந்தது. இப்படி ஒரு நடவடிக்கையை அந்த வாடிக்கையாளப் பெண்மணி மேற்கொண்டதற்கு, மிக்டே, அவள் கன்னங்களில் நாலு சாற்று சாற்றுவாள் என எதிர்பார்த்தார் எட்வர்ட். ஆனால் நடந்தது வேறு. மிக்டே, ''சரி. இதோ உங்கள் தேவையை ஏற்றுப் பார்க்கிறேன். பச்சை சரிப்படுமா? இல்லை இந்த தந்த நிறம்?'' என ஆதரவாய் முணுமுணுத்தாள் மிக்டே.

''மிகத் தொந்தரவடீ நீ. போதும். இனி நான் எதையும் பார்ப்பதாகவே இல்லை. நேரம் தான் வீணாகின்றது.''

இவற்றையெல்லாம் கண்காணித்துக் கொண்டிருந்த மேடம் அல்ஃபிரெஜ். எட்வர்டைப் பார்த்து, என்ன வேண்டும் எனும்

பாவனையில் அருகில் வந்தார். பதிலளிக்க தன்னை வசதிப்படுத்திக் கொண்ட எட்வர்ட், ''மிக்டே இருக்கிறாரா? அ... அ... அவரை நான் சந்... சந்திக்க... சந்திக்க வேண்டும்'' என ஒருவழியாய் சொல்லி முடித்தார்.

மேடம் அல்ஃப்ரெஜ்'ஜின் புருவங்கள் வியப்பினாலான கேள்விக் குறியாய் மேல் நகர்ந்து விரிய, ஆனால் உடனேயே, எட்வர்டின் நாகரீகமான மட்டு மரியாதை நிறைந்த உடையமைப்பில் நம்பிக்கை கொண்டு, ஆசுவாசமாயின.

இப்போதும் உள்ளிருந்து ''பார்த்து, பார்த்து. எத்தனை திறமையற்றவள் நீ. துணியைக் கழற்ற உதவுகிறேன் பேர்வழி என்று இப்படியா என் தலைமுடியையெல்லாம் பிய்ப்பாய்? இரு. உன் முதலாளியிடம் சொல்லி உன் சீட்டைக் கிழிக்கிறேன். கறுப்பு நாய்.''

மாடர்ய் தோல் மாறி விட்டதா என சந்தேகம் கொள்ளும் படி மிக்டே பதில் தந்தார் : ''மன்னித்து விடுங்கள், மேடம்.''

''போதும் போ. விடு. நானே போட்டுக் கொள்கிறேன். அவலட்சணமாய் பணி புரிகிறாய் நீ. ஏன் நின்றுக் கொண்டிருக்கிறாய். என் பெல்ட்'டை எடேன்.''

''மிக்டே இப்போது வருவாள்'' என்ற மேடம் அல்ஃப்ரெஜ்'ஜின் சிறு புன்னகையில், இத்தனை நேரம் மிக்டே பட்ட பாட்டிற்கான அவதிகளுக்குக் கிஞ்சித்தும் கரிசனையில்லாமல், அலட்சியமும் ஏளனமும் மட்டுமே மிகுந்திருந்தன.

முகமெங்கும் கோப விகாரம் மிகுந்திருந்த வயதான ஒரு பெண் வெளிப்பட்டு, என்னவெல்லாமோ வாங்கியிருந்த சிறு சிறு மூட்டைகளை அள்ளியபடி தெருவிறங்கினார். அப்பகுதி கதவைத் திறந்துக் கொண்டு வெளியான மிக்டே, மிகவும் வெளிறி நொந்துப் போயிருந்தார்.

''உன்னை அழைத்துக் கொண்டு மதிய உணவுக்காக வெளியே போக எண்ணம். அதனால் வந்துளேன்'' என்றார் எட்வர்ட், வேறு எவ்வித முன்னுரையும் இன்றி.

தர்மசங்கடமாய் நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தார் மிக்டே. ஒன்று பத்து. ''ஒன்றே காலுக்கு ஒரு நிமிடம் முன்னால் கூட நகர முடியாது'' என்றார் ஏக்கமாய்.

அப்போது மேடம் அல்ஃப்ரெஜ் ''உன் நண்பன் வந்து அழைப்பதால், நீ வேண்டுமென்றால் கிளம்பு மிக்டே'' என்றார்.

''ஓ, நன்றி மேடம் அல்ஃப்ரெஜ்'' என்ற மிக்டே, ''ஒரு நிமிடத்தில் வந்து விடுகிறேன்'' என்று எட்வர்டிடம் சொல்லி விட்டுக் கடையின் பின் பகுதிக்கு விரைந்தார்.

மேடம் அல்ஃப்ரெஜ், தன்னை நண்பன் என்று குறிப்பிட்டதால் உண்டான திடீர் பயம் ஏற்படுத்திய வலியால் பின்வாங்கிய எட்வர்ட், இதனால் உண்டான நடுக்கம் பரவக் காத்திருந்தார்.

காத்திருக்கும் இந்நேரத்தில், மேடம் அல்ஃப்ரெஜ், எட்வர்டுடன் உரையாட வாய் திறந்த போது, செல்வம் மிகுந்த பெண்மணியாய் தோன்றிய ஒருத்தி கடைக்குள் வாசனையாய் நுழைய, மேடம் அல்ஃப்ரெஜ்'ஜின் காலந்தாழ்த்தாத உத்தியோக உள்ளுணர்வு, அந்த ஐசுவரியப் பெண்ணை எதிர்கொள்ள ஓடியது.

வெளிப் பனிக்கு ஏற்ற தடிமனமான மேல் அங்கியொன்றை அணிந்துக் கொண்டு மிக்டே வெளிப்பட, அவளை தன் முழங்கைகளுக்குள் திணித்துக் கொண்ட எட்வர்ட், சரேலென்று கிளம்பி ஆரம்பத்திலேயே சீறிப் பாயும் ஊர்தியாய், முதல் வேலையாய் இங்கிருந்து வெளியே போனால் போதும் எனும் உணர்த்தலில், பாய்ந்து வெளியேறினார்.

''கடவுளே'' - இது எட்வர்ட். ''இப்படி ஒரு வேலையிலா நீ தொடர வேண்டும்? கதவுக்குப் பின்னால் அந்த மரியாதை தெரியாத வாடிக்கையாளப் பெண்மணி பேசியதையெல்லாம் நான் கேட்டுக் கொண்டு தானிருந்தேன். எப்படிப் பொறுத்துக் கொள்கிறாய் மிக்டே? நாய்! என்ன பேசி விட்டாள் அவள்! அந்த கவுனைத் தூக்கி அவள் முகத்தில் வீசுவாயா, அதை விட்டு விட்டு...!''

''அப்படியெல்லாம் நான் நடந்துக் கொண்டால், உடனடியாய் என் வேலை போகும்.''

''போகட்டுமே.''

''எட்வர்ட்!''

''இப்படிப்பட்ட பெண்களின் முகத்தில் பலமாக வீசியெறிந்து அவர்களை சிதறடிக்க உனக்குத் தோன்றவே தோன்றாதா?''

மிக்டே சுற்றுவட்டாரக் காற்றையெல்லாம் வழித்து ஒரு நீண்ட உள்மூச்சு வாங்கிக் கொண்டார். ''தோன்றும்! தோன்றாமலா! துவண்டுப் போகும் வார இறுதி நாட்களில் - நாளை விடுமுறை எனும் நினைப்பிலிருக்கும் வெள்ளி-சனிக் கிழமைகளில் - கடை மூடும் போது வந்து கடுப்படிக்கும் வாடிக்கையாளர் முகம் சிதறித் தூள்

ஆளாகும் படி வெடிக்கத் தான் தோன்றும். 'ஆமாம் மேடம்', 'இல்லை மேடம்', 'இதோ... இன்னொன்று காட்டுகிறேன் மேடம்' என்றெல்லாம் அடிபணியாது, அப்படியே... அப்படியே...'' என ஆவேசமான மிக்டே, இறுதியில், ''ஆனால் செயல்படுத்த முடியாது எட்வர்ட்'' என அமைதியானார்.

''மிக்டே! மிக்டே குட்டி! இனி இந்நிலை உனக்குத் தொடரக் கூடாது.''

விரக்தியாய், ஆனால் பலமாய், எட்வர்ட் அதிரும்படி சிரித்தார் மிக்டே.

''வருந்தாதே எட்வர்ட். இதெல்லாம் நீ பழகாதது! ஏன் வந்தாய்? ஒரு தொலைபேசி செய்திருக்கலாமே!''

''உன்னைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது.''

மிக்டேவும், ஏன் எட்வர்டும் கூட, இவ்வார்தைகளால் சிலிர்த்தனர். சிறு இடைவேளைக்குப் பிறகு எட்வர்ட், உடைந்துப் போன குரலில் தொடர்ந்தார்: ''சிறு கவலை. உன்னைப் பற்றி. வேறு வேலையா கிடைக்காது? எல்லா முதலாளிகளுமா இப்படி இருப்பார்கள்? ஹாசியை எடுத்துக் கொள்! எப்படி வைத்திருக்கிறார், தன் வேலையாட்களை! கத்துகிறாரா! வைகிறாரா! கிடையாதே! ஒரு ரௌடியைப் போல நடந்துக் கொள்ளும் அல்ஃப்ரெஜ்'ஜிடம் நீ வேலையிலிருக்க நினைப்பதே தவறு. உன் தவறு. போதும் மிக்டே. இந்த அத்தனை சலசலப்புகளிலிருந்தும் விடுவித்து உன்னை நேராக 'ஏய்ன்ஸ்விக்'குக்கு தூக்கிச் செல்லப் போகிறேன். இது முடிவு. மாற்ற முடியாது. ஒரு வாடகைக் காரை அமர்த்தி, உன்னை குண்டுக் கட்டாக அதனுள் போட்டு, மதியம் இரண்டே கால் ரயிலில் ஏற்றி, 'ஏய்ன்ஸ்விக்'குக்குக் கொண்டு சென்று விடப் போகிறேன்.''

மிக்டே, புறப்பட்ட அம்பாய் கையமர்த்தி எட்வர்டின் உரையாடலை நிறுத்தினார். வலுக்கட்டாயமாய் எட்வர்டின் மீது அவர் கடைப்பிடித்திருந்த கோபப்படாத சாந்தமான நிதானம் கட்டவிழ்ந்தது. காலையிலிருந்து, தன் முதுகு மீது சவாரி செய்த அல்ஃப்ரெஜ் மற்றும் மாற்றி மாற்றித் துணிமணிகளைப் போட்டுப் பார்த்து வெறுப்பேற்றிய வாடிக்கையாளர்கள் ஆகியோரால் நைந்துப் போய், எதைக் கண்டாலும் எரிச்சல் உண்டாகும் உச்சியிலிருக்கும் மிக்டேவுக்கு, நாதியற்ற ஒரு சராசரிப் பெண் தான் வாழ இவற்றையெல்லாம் எதிர் கொண்டாக வேண்டும் என்ற சிறிய அறிவு கூட இல்லாத எட்வர்ட் மீது, மனக்கசப்பும் வெறுப்பும் மிகுந்தன.

எட்வர்டை நோக்கி, திடுமென வளர்ந்து கொழித்த ஆத்திரத்தால், ''மூடுங்கள் வாயை. ஏய்ன்ஸ்விக் போக வேண்டுமென்றால் போய்த் தொலைய வேண்டியது தானே. நான் எதற்கு? இதோ, எத்தனை வாடகைக் காரர்கள் இழைகின்றன. கிளம்பித் தொலையுங்களேன்'' என்று ஆக்ரோஷமானார்.

மிக்டேவிடமிருந்து சடுதியில் வெடித்த ஆவேச வெறியால் விக்கித்து, பின்வாங்கினார் எட்வர்ட். தன் கொழுந்து விட்டு எரியும் கோபத்தை, எட்வர்ட் மீது வீசியபடியிருந்தார் மிக்டே: ''எதற்காக நீங்கள் வந்து இப்படியெல்லாம் பேச வேண்டும்? இப்படிப் பேசவில்லை என்று யார் அழுதது? கவலையாம்! என் மீது! நான் கேட்டேனா என் மீது இரக்கப்படுங்கள் என்று? காலையிலிருந்து ரத்தமெல்லாம் சுண்டிப் போகும் அளவு தவித்துப் போய் நரக வேதனையிலிருந்து விடுபட்டு வந்திருக்கும் என்னிடம் ஏய்ன்ஸ்விக் போன்ற இடங்களைப் பற்றிப் பேசினால், அப்படியே புளகாங்கிதம் அடைந்து விடுவேன் என்று தோன்றியதாக்கும்! முட்டாள் யோசனை! அந்தக் கடை வாசலில் பரிதவித்தபடி காத்திருந்து என்னை அப்படியே வெளியே கொத்தி வந்து விடுவதால் நான் உங்கள் மீது மனமிளகிப் போய் விடுவேன் என்று நினைப்பா? உண்மை போன்ற நடத்தை. பாகற்காயில் சர்க்கரை தடவித் தரும் போக்கு. நீங்கள் பேசுகிறீர்களே தவிர, பேசிய ஒரு வார்த்தையைக் கூட நடைமுறைபடுத்த துணிய மாட்டீர்கள். முடியாது. உங்களால்! இரண்டே கால் மணி ரயிலைப் பிடிக்க உத்தேசமா! முடியுமா? மணி என்ன இப்பொழுது? ஒன்றரை. இங்கிருந்து, உயிரை விற்றால் கூட, ஒரு மணி நேரமாகும் ரயிலடி போக...! நீங்கள் தங்கத் தட்டில் என்னை ஏந்தி இரண்டே கால் மணி ரயிலில் ஏய்ன்ஸ்விக் கூட்டிச் செல்லப் போகிறீர்கள்! சே! ஏய்ன்ஸ்விக்'கின் வசந்தக் காலத்தை நினைக்கும் போதெல்லாம் சொல்லொணா ஏக்கத்தில் நான் பரிதவித்துப் போவது உங்கள் மூளைக்குள் எட்டவே எட்டாதா எட்வர்ட்? தேனொழுகப் பேசுவீர்கள் எட்வர்ட்! நீங்கள் அவ்வளவு தான்! சொல்லிக் கொண்டே இருப்பீர்கள்! தேனாய்! பாகாய்!''

தாராளமாய் புழங்க இடமில்லாது குழுமிக் கிடந்த மதிய உணவு கும்பலுக்கு மத்தியில் நின்றுக் கொண்டு, உணவகத்தில், இருவரும், ஒருவரை ஒருவர் விரோதிகள் போல பார்த்தபடி ஆவேசத்திலிருந்தனர்; ஆயினும், கட்டுப்பாடிழக்காமல்! எட்வர்ட், பாவமாய், திடுமென தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்டவனாய் விழித்தபடியிருந்தார்.

''பார்த்து விடுவோம்'' என்று முழக்கமாய் ஆரம்பித்த எட்வர்ட், ''எப்படியும் இரண்டே கால் ரயிலில் உன்னைக் கொண்டு போய் சேர்க்கிறேனா இல்லையா, பார்'' என்று ஒரு சபதமாகவே பேசினார்.

சட்டென வெளியேறி, கடந்துப் போன ஒரு வாடகைக் காரைக் கை தட்டி அழைத்து அமர்த்தி, பின் கதவினைத் திறந்து மிக்டேவைக் கூர்மையாய் பார்த்தார். ஒன்றும் விளங்காது திகைத்த மிக்டே, செய்வதறியாது உள்ளே நுழைந்தார். ''ரயிலடிக்கு, இரண்டுக்குள் அடைய வேண்டும்'' என்று ஓட்டுநருக்கு ஆணை பிறப்பித்து விட்டு, மிக்டேவைத் தொடர்ந்து உள்ளே ஏறினார் எட்வர்ட்.

பேச்சில்லை. அமைதியாய் பிரயாணம் இருந்தது. இத்தனை பேசிய மிக்டேவால் இப்பொழுது அரங்கேறிக் கொண்டிருக்கும் நிஜத்தை உணரும் போது எதுவுமே பேசயியலாது உதடுகள் இறுகிப் போயின. ஆனால் அவர் கண்கள் எதிர்ப்புக் காட்டின; கீழ்ப்படிய மறுத்திருந்தன. எட்வர்ட், சீறிப் பாய்ந்த காரின் முன் விரிந்திருந்த சாலையில் மட்டுமே கண்ணையும் கருத்தையும் பொதித்திருந்தார்.

வழியில் போக்குவரத்து சமிக்ஞைக்கு கார் நின்றபோது, ''நீங்கள் என் ஆறுதலுக்காக வெறுமனே பேசுவதாய் நினைத்தேன்'' என மிக்டே மெதுவாய் பேச்சை ஆரம்பித்தார்.

எட்வர்ட் குறியாய் சொன்னார்: ''நான் சொன்னவை வெறும் பேச்சல்ல.''

சிறு குலுக்கலோடு மீண்டும் சீறியது கார்.

இந்த சிறு உரையாடல் நடந்து முடிந்த சில நிமிடங்களுக்குப் பிறகு, தன் சுய குணாதிசயத்துக்குள் நுழைந்தார் எட்வர்ட். இருக்கையில் விரல்களால் தாளமிட்டபடி மிக்டேயிடம் ''இரண்டே கால் ரயிலில் செல்ல வேண்டாம்'' என்று சொன்ன எட்வர்ட், ஓட்டுநரிடம், சந்தைகள் நிறைந்த பகுதிக்கு முதலில் காரினைக் கொண்டு செல்லுமாறு பணித்தார்.

மிக்டே மறுபடியும் கோபங்கொண்டவராய், ''இந்த வேகத்தில் போனால் இரண்டுக்கெல்லாம் ரயிலடி போய் விடலாமே. ஏன் திட்டத்தைப் மாற்றுகிறீர்கள்?'' என்றார்.

மிக்டேவைப் பார்த்து சிறு சிரிப்பினை உதிர்த்த எட்வர்ட், ''மிக்டே குட்டி'' என்று அழைத்து விட்டு, ''நீ எந்த உடையும் கொண்டு வரவில்லை. பல் துலக்க, இரவு உடுத்த, அழகு செய்துக் கொள்ள, ரயில் பிரயாணத்துக்கு செருப்பு... எதுவுமே உன்னிடமில்லை. வாங்கிக் கொள்வோம். நாலே கால் ரயிலில் ஆற அமர

பயணமாவோம். இப்பொழுது முதலில் மதிய உணவு. பிறகு பேசுவோம். பேச வேண்டிய அனைத்தையும்'' என்றார்.

எட்வர்டை ஆழமாய் பார்த்து சற்று நெருங்கி அமர்ந்துக் கொண்ட மிக்டே, ''இது தான் எட்வர்ட்! வெகு சராசரி. உணர்ச்சி வேகம் உங்களை முடக்கிப் போடுவதில்லை. வெளி வந்து விடுகிறீர்கள். ஏய்ன்ஸ்விக்! ஓ, ஏய்ன்ஸ்விக்! கனவு நனவாகப் போகின்றது!'' என்றார். அவரது உள்ளங்கைகளுக்குள் தன்னுடைய உள்ளங்கையை நழுவ விட்டு நிலை நிறுத்திய மிக்டே, தனது இயல்பான புன்முறுவலை விடுவித்தபடி, ''மன்னித்து விடுங்கள் எட்வர்ட். உணவக வாயிலில் நின்றுக் கொண்டு ஒரு மீன் காரியைப் போல கத்தித் தீர்த்து விட்டேன். உங்கள் மானம் போயிருக்கும். எரிச்சலாகி யிருப்பீர்கள். இல்லையா?''

''ஆமாம்'' என்றார் எட்வர்ட். ''கட்டுப்படுத்திக் கொண்டேன்.''

''மன்னித்து விடுங்கள் எட்வர்ட்.''

இருவரும் தோளோடு தோளாக சேர்ந்துக் கொண்டு மகிழ்ச்சியாக சந்தைக்குள் நுழைந்தனர். ஜன்னலோரமான மேஜையைத் தேர்ந்தெடுத்து இருவரும் அமர, எட்வர்ட் தடபுடலான உணவுக்கு சொன்னார்.

ருசிகரமான உயர்ரக உணவினை சுவைத்துக் கொண்டிருக்கும் போது பாதியிலேயே துணுக்குற்ற மிக்டே, ''சீக்கிரமாய் முடியுங்கள் எட்வர்ட். நான் கடைக்கு அவசரமாய் திரும்ப வேண்டும். நேரம் கடந்து விட்டது'' என்றார்.

''பாதகமில்லை. ருசித்துச் சாப்பிடத் தேவையான அவகாசத்தை எடுத்துக் கொண்டு அவசரமே இல்லாமல் சாப்பிடுகிறாய். புரிந்ததா. பிறகு வெளியே கிளம்பிப் போய் உனக்குப் புது உடைகள் எடுக்கிறோம்.''

''எட்வர்ட். மிக இனிமையானவர் நீங்கள்'' உணர்ச்சி வசப்பட்டார் மிக்டே. ''நன்றி எட்வர்ட்.''

இப்போது மிருதுவாகக் கேட்டார் : ''நீ உன் அடிமனத்தின் ஆழம் வரை ஏய்ன்ஸ்விக்கை நேசிக்கிறாய்! இல்லையா?''

''மறுபடியும் பார்த்தீர்களா? ஏய்ன்ஸ்விக் பற்றிப் பேசத் தான் வேண்டுமா? பேசி, என் ஆதங்கத்தைக் கூட்டத் தான் வேண்டுமா? இரண்டே கால் மணி ரயிலைப் பிடிக்க முடியாமல் போயாச்சு. என்ன பேசி என்ன பயன்? நாலே கால் மணி ரயிலுக்கும் நான் ஒன்றும் வரப்

யாவதில்லை. ஒரு கும்பிடு சாமி. தயவுசெய்து இப்படி வாய்ப்பந்தல் போடாதீர்கள்.''

எட்வர்ட் மிக்டேவுக்குள் மிகும் கோபத்தைக் கண்ணுற்று லேசாய் சிரித்து விட்டுப் பேசினார் : ''நாம் நாலே கால் மணி ரயிலைப் பிடித்துப் பறக்கப் போகிறோம் எனச் சொல்ல வரவில்லை. ஆனால் நீ ஏய்ன்ஸ்விக் வந்து விடு என்று ஆலோசனை சொல்கிறேன். அங்கு ஒரு நல்ல காரியத்திற்காக வா என அழைக்கிறேன். நல்ல காரியம் - நீ என்னுடன் வாழ நான் முன் மொழியும் நல்ல காரியம்!''

வாயருகே தூக்கிச் சென்றிருந்த காபி கோப்பையின் விளிம்பு வழியே உடனடியாய் எட்வர்டைக் கண்ணகலப் பார்த்தார் மிக்டே. நரம்புகள் அதிர்ந்தன - சந்தோஷத்தில். இது காபி கோப்பைத் ததளித்ததில் தெரிந்தது! ஸ்திரமாக்கிக் கொள்ள கோப்பையை அப்படியே மேஜையில் வைத்து விட்டு படபடப்பாய் எட்வர்டைப் பார்த்தார். கேட்டார்: ''எட்வர்ட்? என்ன பேசினீர்கள் தெரியுமா? அதில் நீங்கள் உண்மையில் என்ன சொல்ல வந்தீர்கள் எனப் புரிந்துத் தான் சொன்னீர்களா?''

''நீ என்னைத் திருமணம் செய்துக் கொள்ளும்படி உணர்த்தினேன், மிக்டே. நான் மயங்க வைக்கும் ஆணழகன் என அறிவுறுத்தவில்லை. இது எனக்கே கூட தெரியும். நான் ஒரு விவேகம் மிகுந்த வேட்டை நாயல்ல - ஜான் போல! திரியும் வெறும் தெரு நாய்! அவ்வளவே! எதிலுமே திறனற்ற சாதனையற்ற பிறவி. புத்தகங்கள் படித்து விமர்சனம் என எதையோ கிறுக்கித் தள்ளிக் கொண்டு திரிபவன். பெண்ணுக்குள் மின்சாரம் பாய வைக்கவல்ல காந்தனுமல்ல! பல வருடங்களாய் என்னுடன் பழகும் உனக்கும் இது தெரிந்தது தான்! ஆனால் என்னிடம் குறைந்துள்ள இவையெல்லாம் ஏய்ன்ஸ்விக் - ஈடுகட்டி விடும். இப்படியான என்னிடம் நீ முழுவதுமாக சந்தோஷம் காணுவாயோ இல்லையோ... ஏய்ன்ஸ்விக் எனும் உன் உயிர் பூமியில், மிக்டே, நீ ஏகாந்தம் காணுவாய் என்பது திண்ணம்'' என்ற எட்வர்ட், ஆர்வமாய் கேட்டார் : ''வருவாயா?''

இப்போது நிகழ்வது மிக்டேவால் நம்பவே முடியாதது. எட்வர்ட் தன்னை மணப்பார் என்பது, அவரை அணுஅணுவாக நேசித்துக் கொண்டிருக்கும் மிக்டே, அணுவளவு கூட நினைத்திராதது. ஆனால் நிஜமாகி கை கூடியுள்ளது. உமிழ் நீரை சில மடங்கு முழுங்கி காய்ந்துப் போன நாவை ஈரமாக்கிக் கொண்டு ''எ... எட்...எட்வர்ட்...! நான்..

என்ன... நினைத்திருந்தேனென்றால்... வந்து... ஹென்ரீட்டா...'' என்று விட்டு, பேச வராது நிறுத்திக் கொண்டார்.

தராசுத்தனமான குரலில், உணர்ச்சியேதும் காட்டாது, ''நீ சரி தான். ஹென்ரீட்டா. ஆமாம். அவளை மூன்று முறை என்னை மணமுடித்துக் கொள்ளும்படி நான் கேட்டது கூட உண்டு. ஒவ்வொரு முறையும் நிராகரித்து விட்டாள். முகத்திலறைந்தாற் போல். நான் அவற்றையெல்லாம் மனம் வரை எடுத்துக் கொள்ளவில்லை. ரீட்டாவுக்கு தனக்கு எது வேண்டும், எது வேண்டாம் என்று தெரியும். அப்படி எடுத்த முடிவிலிருந்து மாற மாட்டாள்'' என்றார் எட்வர்ட்.

அங்கு இருவருக்கிடையேயும், சில நொடிகள் மௌனம் நிலவியது. பிறகு எட்வர்ட் கேட்டார் : ''நாம்? சொல் மிக்டே கண்ணே! நாம்?''

மிக்டே எட்வர்டை ஆழமாய் ஊடுருவினார். அவர் குரலில் ஈர்ப்பு மிகுந்திருந்தது. முடிவான முடிவு இது எனும் உணர்த்தலும் செறிந்திருந்தது.

''எனக்குக் கிட்டியுள்ளது போல அபூர்வமான- வியப்பான- அசாதாரணமான முறையில், யாருக்காவது, சொர்க்கம் அன்பளிப்பாகக் கிட்டியிருக்குமா என்பது சந்தேகமே. உணவகத் தட்டில் வைக்கப்பட்டு இந்தா என நீட்டப்படும் சொர்க்கம்!''

பளபளவென எட்வர்டின் முகம் பிரகாசமாயிற்று. தன் உள்ளங்கையைக் கொண்டு போய் அவள் விரல்களுக்குள் பொருத்தி, கொஞ்ச நேரம் அப்படியே விட்டு வைத்திருந்தார். ''சாப்பாட்டுத் தட்டில், சாப்பாட்டுடன் ஒப்படைக்கப்பட்ட சொர்க்கம்'' என்று சொல்லிக் கொண்ட எட்வர்ட், ''மிக்டே! ஒரு சொர்க்கம் எனும் அளவுக்கா நீ ஏய்ன்ஸ்விக்கை நெஞ்சுக்கள் அடை காத்து வைத்துள்ளாய். வெகு சந்தோஷம் கண்ணே!''

இருவரும் மிக சந்தோஷமாயிருந்தனர். உணவகத்தில் எல்லோரும் காற்றில் அப்படியே கரைந்துப் போக இவர்களிருவரும் மட்டுமே இருப்பது போல பிரமையாயிற்று, இருவருக்கும்! சாப்பாட்டுக்குக் காசு தரும் போது, பரிமாறியவனுக்கு ஏராளமாய் இனாம் தந்தார் எட்வர்ட்.

புதிதாய் அண்டிக் கொண்ட நாணத்தால், சற்றுப் பிரயாசைப் பட்டுப் பேசினார் மிக்டே ''கிளம்பலாமா? மேடம் அல்ஃப்ரெஜ்' ஜைப் போய்ப் பார்க்கிறேன். பாவம், என்னை மிக நம்பியிருக்கிறார் அவர். திடுதிப்பென்று உங்களுடன் கிளம்பி விட முடியாது.''

''சரி. போய் உடனடியாக ராஜினாமா செய்து விடு. அல்லது ஒரு வாரமோ ஒரு மாதமோ அறிக்கை கொடுத்து விடு. நீ அங்கு, அந்தப் பிசாசிடம், மறுபடியும் வேலைக்கெல்லாம் போக முடியாது. அங்கென்றில்லை. எங்குமே! ஆனால் அதற்கு முன்னால் முக்கியமான ஒரு வேலை உள்ளது. உடனடியாக நிறைவேற்ற வேண்டிய வேலை.''

விளங்காமல் புதிராய் பார்த்தார் மிக்டே.

''மோதிரக் கடைக்குச் செல்ல வேண்டும்'' என்றார் எட்வர்ட்.

''மோதிரம்?''

''நிச்சயமானவுடன் மோதிரம் அணிவிப்பதென்பது வழக்கமானது தானே.''

இன்பம், பெருமிதம் கலந்து புன்முறுவிக் கொண்டார் மிக்டே.

ஒளியூட்டப் பெற்றிருந்த நகைக்கடையில், நிச்சயதார்த்த மோதிரங்கள் என்று கடைக்காரன் நீட்டிய செவ்வக மோதிரத் தட்டுக்களில், மோதிரங்களைத் தேர்ந்தெடுக்க மேய்ந்துக் கொண்டிருந்தனர் இரு காதலர்களும்!

அப்போது ''எமரால்ட் மட்டும் வேண்டாம்'' என்று ஒதுக்கினார் எட்வர்ட்.

ஹென்ரீட்டா மிக நேசிப்பது - எமரால்ட்.

இச்சிந்தனையால், இருவரும் நெஞ்சுக்குள் சிறு வலி மேவ சில நொடிகள் நின்றனர். பிறகு, ஒரு வைரம் மட்டும் பதிக்கப்பட்டு, சிறியதாயினும் சிறந்ததாய் மினுமினுத்துக் கொண்டிருந்த மோதிரமொன்றை ஆர்வம் மேலோங்கச் சுட்டிக் காட்டிய எட்வர்ட், ''எனக்கு இது மிகப் பிடித்துள்ளது'' என்றார். மிக்டே ஏற்றுக் கொண்டார். அந்த மோதிரத்தினை ஆர்வம் பொங்க அவர் அணிந்துக் கொண்டதை, எட்வர்ட் ஒதுங்கி நின்றுப் பார்த்து ரசித்தார்.

முன்னூற்று நாற்பத்தி இரண்டு பவுண்டுக்கான காசோலையை எழுதி கடைக்காரனிடம் நீட்டி விட்டு, சந்தோஷமாக சிரித்துக் கொண்டு உடன் வந்த மிக்டேவோடு வெளியேறிய எட்வர்ட், ''இப்போது போய் அந்த மேடம் அல்ஃப்ரெஜ்ஜை என்ன செய்கிறேன் பார்'' என்றார் காரமாய்!

25

''கண்மணிகளா...! நான் எத்தனை... எத்தனை மகிழ்ச்சியில்... உவகையில் மிதக்கிறேன் தெரியுமா?!''

லூசி, தன் வலக்கையை எட்வர்டை நோக்கி நீட்டிய படியும் இடக்கையை அருகிலிருந்த மிக்டேவின் உச்சந் தலையை வருடியபடியும் இவ்வாறு ஆனந்தமடைந்து சொன்னார்.

''அந்த பயங்கரியிடம் பார்க்கும் துணிக்கடை வேலையை விட்டு விடச் சொல்லி மிக்டேவை இங்கே அழைத்து வந்திருக்கிறாய் பார், எட்வர்ட், இது நீ செய்துள்ள அதிபுத்திசாலித்தனம். இவள் இங்கேயே தங்கட்டும். இங்கு தான் உங்கள் திருமணம் நடக்க வேண்டும். செயிண்ட் ஜார்ஜ் சர்ச்'சில் தடபுடலாக நடத்துவோம். என்ன! அது இங்கிருந்து பிரதான சாலை வழியே போனால் மூன்று கல் தூரம். மரக்காட்டு வழியே போனால் ஒரு கல்தான். ஆனால் கலியாணத் துக்குப் போய் மரக்காடுகள் வழியே போவார்களா? அந்த கிருத்துவலாய புரோகிதன் ஒரு சீக்காளி. அதிலும் இந்தப் பனிக்காலங்களில் சொல்லவே வேண்டாம். மண்டை முழுக்கச் சளி கொண்டு, லொக்லொக்'கென்று பேசக் கூட வராது, திண்டாடுவான். இந்த லட்சணத்தில், இவன், அதி மேதாவித்தனமாய்,இங்கிலாந்தின் சுத்தமான இலக்கிய ஆங்கிலத்தில் தான் ஓதுவான். இது மதரீதியில் சரிதான். ஆனால் யார் புரிந்துக் கொள்வது? இந்த அழகில் அடைத்த மூக்கின் வழியாகவே வேறு மந்திரங்கள் வந்து விழும். இது ஒரு கூடுதல் சிரமம்!''

லூசித்தனமான வரவேற்பு நிகழ்ந்துக் கொண்டிருந்தது! கலியாணம் செய்துக் கொள்ள முடிவு செய்திருக்கிறோம் என்றதற்கு எத்தனை விளாவாரியான விரிவுரையை நிகழ்த்துகிறார் என்று எண்ணிய மிக்டேவுக்கு அழுவதா சிரிப்பதா என விளங்கவில்லை! ஆயினும், ''இங்கு என் திருமணம் நடத்தப்படுவதில் எனக்கு மிக திருப்தி, லூசி'' என்றார்.

''ஓ! அப்படியென்றால் கலியாணம் முடிந்ததாகவே நினைத்துக் கொள்'' என்று அந்நொடியில் திருமணத் திட்டங்களைத் தீட்ட ஆரம்பித்தார் லூசி. ''பாதி வெள்ளை, அதாவது மெலிதான சந்தன

நிறம், சரியா, இந்நிறத்திலான பட்டுத் துணியில், உனக்கு, தலை முதல் கால் வரை, இல்லையில்லை தரை வரை, தேவதை அலங்காரக் கலியாண உடை. கையில் பூங்கொத்துக்கு பதில் தந்த நிறத்தில் ஒரு புது பைபிள். கர்த்தர் ஆசீர்வாதத்திற்காக! மாப்பிள்ளை பையனுக்கு?''

''எந்த கலாட்டாவும் எனக்கு வேண்டவே வேண்டாம். ஆடம்பரமற்ற மிகச் சிறிய அளவிலான திருமணத்தைத் தான் நான் விரும்புகிறேன்.''

''அது தான் நீ எட்வர்ட். எப்போதும் அடக்கி வாசிக்கும் அணுகுமுறை. இருந்தாலும் நீ சொல்வதும் சரி தான். நம் திருமணங்களுக்கு பூ அலங்காரம் அத்தியாவசியம். ஆனால் இந்த முலையுதிர் காலத்தில் போய் என்ன மலரைத் தேடுவது? கள்ளி மலர்கள் தான் கிடைக்கும்! வ்வே! கலியாணப் பையனின் தங்கை என்று ஒருத்தி வேண்டுமே! கலியாணம் முடிந்து விட்டதை அறிவிக்க! ஆனால் உன் விஷயத்தில்...''

''கிடையாது'' என்று சிரித்தார் எட்வர்ட். ''என் பக்கமுள்ள ஓர் அனுகூலமன்றோ இது!''

இடைமறித்த எட்வர்டைப் பொருட்படுத்தாமல் லூசி வெளுத்துக்கட்டிக் கொண்டிருந்தார்: ''இந்த குட்டிக் குழந்தைகள் படுத்தும் பாடு, கலியாணங்களின் தலைவிதி. சமாளிக்கவே முடியாது. ஒன்று சமையல்காரனை வம்பிழுக்கும். இன்னொன்று வழுக்கி விழுந்துக் கதறித் தீர்க்கும். மற்றொன்று மூக்கை ஒழுக விட்டுக் கொண்டு காய்ச்சலில் திண்டாடும்; திண்டாட வைக்கும்! கலியாண மண்டபத்தில் எங்கிருந்து தான் இந்த வாண்டுகளுக்கு ஜுரம் வந்து சேருமோ! பத்தில் ஏழுக்குக் காய்ச்சலிருக்கும்! அப்பப்பா....! கலியாணமா... ஆஹா என்று தான் உறவு வட்டம் சொல்லும். ஆனால் அது முடியும் வரை உடம்பும் மனசும் அதிரும் அதிர்வு இருக்கிறது பார், நல்லபடியாக முடிய வேண்டுமே என்று, அது சொல்லி மாளாது. அனுபவித்தால் தான் விளங்கும். இந்தக் களேபரத்தில் புது வீட்டுக்கு, ஒரு பெண், மாப்பிள்ளைப் பையனுடன் கிளம்புகிறாள் என்றால், எப்படித் தான் அவள் தன்னைத் தயார் படுத்திக் கொள்கின்றாளோ...!''

''ஏன் லூசி வளர்த்துக் கொண்டே போகிறாய்'' என்றார் மிக்டே. ''எனக்கு ஒரு பாவடையும் சட்டையும் போதும்.''

''கொன்றே விடுவேன். பட்டுத் துணியாய் எடுப்பேனடீ! ஆனால் அந்த அல்ஃப்ரெஜ்ஜிடமிருந்து மட்டுமல்ல!''

மூவரும் கொல்லென சிரிக்க, ''ஆமாமாம்'' என்று தீவிரமாய் ஆமோதித்தார் எட்வர்ட்.

''பெரிய பட்டு மாளிகைக்குக் கூட்டிக் கொண்டு போய்.. ... ...''

''... ... ... அதற்கெல்லாம் எனக்கு வசதி கிடையாது லூசி.''

''மூடுடீ வாயை. உன்னிடம் யார் பணம் கேட்டது? எனக்கும் ஹென்றிக்கும் என்ன பண்ண வேண்டும், எப்படி பண்ண வேண்டும் என்று தெரியும். கொட்டிக் கிடக்கிறதடீ செல்வம். உனக்கில்லாததா! இந்த ஹென்றிக்குப் புதிதாய் ஒன்றும் வேண்டாம் என நினைக் கிறேன். இரண்டு வருடத்துக்கு முன் தான் ஒரு கலியாணத்திற்காக விமரிசையாய் தைத்துக் கொண்டார். மனிதர் இளைக்கவுமில்லை, பெருக்கவுமில்லை. அதுவே போதும். ஆங்... எனக்கு?!''

சிந்திக்க சிறு இடைவேளை. ஆண்மையாய் அறிவித்தார்: ''வான் நீலம்.''

தொடர்ந்தார்: ''எட்வர்ட், உனக்கு நம்பகமான ஒரு நண்பனை மாப்பிள்ளைத் தோழனாக அமர்ந்திக் கொள். இது முக்கியம். டேவிட் நல்ல வாய்ப்பாய் எனக்கும் படுகின்றது. அவனுக்கு முக்கியத்துவம் தந்து உட்கார வைக்கும் போது, நாமெல்லோரும் அவனை ஆழமாய் விரும்புகிறோம் என உணர்வான். இது தானே டேவிட்டுக்கு நாம் முக்கியமாய் செய்ய வேண்டியது! உம்மணாம் மூஞ்சியான அவன் மாற ஒரு வாய்ப்பு. புத்திசாலியாகவும் மேதாவியாகவும் இருந்தும் அவற்றிற்காக மற்றவர்கள் நெருங்கி வந்து மரியாதை தராத போது, பாவம், நெஞ்சுடைந்து தான் வரும். இப்படியும் பிறப்புகள்! சிந்திக்கிறேன் பேர்வழி என்று கடைசி நேரத்தில் மோதிரத்தைத் தொலைத்து நின்று விடப் போகிறான் - சொல்லி வைக்க வேண்டும்.''

★ ★ ★ ★

நீச்சல் குளத் தளத்திலிருந்து மேல் நோக்கி ஏறிய பாதையின் முடிவில் அமைந்திருக்க பூஞ்சோலையைக் கவனித்தபடி தோட்டத்தில் அமர்ந்திருந்தார் ஹெர்குல். அவ்வப்போது, அருகே, காலுக்கடியில் மிதிபட்டு உடையும் காய்ந்த சுள்ளிகளின் ஒலியும், மேலும், மரக்காடுகளுக்குள் எதையோ தேடி அலைந்துக் கொண்டிருந்த சில காவலாளிகளின் உருவமும் ஹெர்குல்லின் சிந்தனைக்கு வேலை தந்துக் கொண்டிருந்தன.

இத்தருணத்தில், ஹென்ரீட்டா, பிரதான சாலையிலிருந்து ஹாலோ பகுதிக்குள் நுழையும் பாதையின் வழியே வந்துக் கொண்டிருந்தார். வழியில் ஹெர்குல் எதிர்படவே, சில கணங்கள் தயங்கி நின்றவர், பிறகு அவரை நெருங்கி, அவருக்கருகிலிருந்த இடத்தில் அமர்ந்துக் கொண்டார். சொன்னார் : ''அன்பு காலை வணக்கங்கள், திருமிகு பொய்ரெட். உங்களைத் தேடித்தான் போயிருந்தேன். ஆனால் வீட்டில் நீங்கள் இல்லை. இங்கிருக்கிறீர்கள். இன்று, சிறந்த பலசாலி போல கட்டுமஸ்தாகத் தெரிகிறீர்கள். இங்கு என்ன செய்துக் கொண்டிருக்கிறீர்கள் திரு பொய்ரெட்? அதோ, காட்டுக்குள் விவேகமற்று எதையோ தேடிக் கொண்டிருக்கும் கூட்டத்துக்குத் தலைமை தாங்கிக் கொண்டிருக்கிறீர்களா?! அட... இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜூம் அன்றோ மாய்ந்து மாய்ந்து தேடிக் கொண்டிருக்கிறார்! எதைத் தேடி இப்படிக் கூர்மாவதாரம் எடுத்துள்ளனர்? துப்பாக்கி?''

''ஆமாம், செல்வி ஹென்ரீட்டா!''

''அவர்கள் கண்டுபிடித்து விடுவார்கள் என்றா நினைக்கிறீர்கள்?''

''ம்! மிக விரைவில் கண்டுபிடித்து விடுவார்கள் என்று கூட சொல்லுவேன்.''

துளைத்துப் பார்த்தார். கேட்டார்: ''எனில், அது எங்கிருக்கலாம் என்று உங்களுக்கு ஏதேனும் அனுமானம் உள்ளதா?''

''கிடையாது. ஆனால் அது மிக விரைவில் அகப்பட்டு விடும் என்கிறது என் உள்ளுணர்வு. இது, அது கிடைக்கும் நேரம்.''

''நீங்களும் தாவித் தாவி சம்பந்தமற்றுப் பேச ஆரம்பித்து விட்டீர்கள் திரு பொய்ரெட்.''

''இங்கு சம்பந்தமற்ற விஷயங்கள் தானே அரங்கேறுகின்றன! லண்டனிலிருந்து உடனடியாய் திரும்பி இங்கு வந்துள்ளீர்கள், ரீட்டா!''

ரீட்டாவின் முகம் இறுகியது. வெறுப்பான சிறு சிரிப்பினை உதிர்த்தார். கேட்டார்: ''என்ன சொல்ல முனைகிறீர்கள்? கொலைகாரி, மீண்டும் களத்துக்குள் நுழைந்து விட்டாள் என்றா? அது தானே உங்கள் பழைய நம்பிக்கை - மூடநம்பிக்கை! ஆக, நீங்கள் மாற்றமின்றி நினைக்கிறீர்கள் - நான் தான் ஜானைக் கொன்றேன் என்று! நான் உயிர்களை சிற்பங்கள் வாயிலாக படைப்பவள் என்றும், என்னால் ஓர் உயிரைக் கொல்ல முடியாது - கொல்ல மாட்டேன் என்று நான் விளக்குவதையும் நீங்கள் நம்ப மாட்டீர்கள்! இல்லையா!''

உடனடியாய் பொய்ரெட் பதில் சொல்லவில்லை. சிறிது அவகாசம் எடுத்துக் கொண்டு பின் பேசினார் : ''இக்கொலையைப் பொறுத்த

வரை, ஆரம்பம் முதலே, எனக்கு சில நிலைகள் உள்ளன. மிக மிக சுலபமாக முடிய வல்ல - அதாவது... எப்படிச் சொல்வது... ஆங்... இப்படிச் சொல்லலாம் - இப்படியும் சிக்கலற்ற ஓர் எளிமையான வழக்கா, என்று நம்ப முடியாத வண்ணம் மிக சுலுவாக முடியவல்ல வழக்காய் எதிர்பார்த்திருக்கிறேன்; அல்லது, சுருட்டை முடியில் வீரியமாய் விழுந்த சிக்கல் போலக் கதற வைக்கும் வழக்காய் அமைந்து விடலாம் எனவும் எதிர்பார்த்திருக்கின்றேன். ஆனால், மிஸ் ரீட்டா... சிக்கலான மேலும் சாதுர்யமான நூதன கற்பனைகளால் புதுப்புது வழிகளைக் கண்டறிந்து, அவற்றை உண்மை போல நம்மை நம்ப வைத்துக் கழுத்தறுக்கும், ஒரு சாணக்கியத் தனம் வாய்ந்த மூளையை எதிர்த்து தான், நாம் போராடிக் கொண்டிருக்கிறோம். விளக்குகிறேன். அறிமுகமாகும் ஒரு புது துப்பினை, உண்மைக்கு வழி காட்டும் இலக்காய் எண்ணி அவசர அவசரமாய் பிரயாணிக்க, அந்தத் துப்போ, நம்மை உண்மையிலிருந்து வெகு தூரம் இழுத்துச் சென்று கடைசியில், வெறுமையில் சேர்த்து விட்டுச் சிரிக்கும். அத்தனை முயற்சியும், பயனேதும் தராது இளிக்கும். இந்தப் பயனின்மை - கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட நிலைமை - தொடரும் இந்தத் தரிசு முடிவுகள் - மலட்டு முடிவுகள் - இவை அத்தனையும் நிஜமாய் நிகழ்பவை கிடையாது. அத்தனையும் செயற்கை. மாயை. கானல். திட்டமிட்டுப் படுகுழியில் எங்களைத் தள்ளித் தள்ளிக் கொக்கரிக்கும் சூழ்ச்சி. தந்திரம் மிக்க மிக கூரிய மூளை, ஒரு புத்திசாலி மூளை, எங்களுக்கு எதிராய் திட்டம் தீட்டி வாழ்ந்துக் கொண்டிருக்கிறது, ஆரம்பம் முதல், ஒவ்வொரு முறையும்! தனது எல்லா திட்டத்திலும் வென்றபடி!''

''இதை ஏன் என்னிடம் இப்போது விளாவாரியாக விளக்க வேண்டும்?'' என்றார் ரீட்டா.

''அந்த மூளை, மாபலம் பொருந்திய லண்டன் போலீஸ் இலாக்காவையே அசடு வழிய செய்துக் கொண்டிருக்கும் அந்த மூளை, மிக கற்பனை வளம் செறிந்தது.... கலை நுணுக்கம் மிகுந்தது, செல்வி ரீட்டா.''

''அப்படியா! ஆக, இந்த அபிப்பிராயத்தில் நான் பொருந்துகிறேனாக்கும்!''

கேட்டு விட்டு அமைதியானார். வெறுப்பில் அவரது இதழ்கள் இறுகியேயிருந்தன. பொங்கும் உணர்வினைக் கொட்ட வேண்டும் எனத் துடித்தார். பொய்ரெட்டுடன் மோத விருப்பமில்லை அவருக்கு.

சட்டென தனது சட்டைப் பையிலிருந்து பென்சிலை எடுத்துக் கொண்ட ரீட்டா, தனது மனத்தாழத்து ஆனந்தமான ஏய்ன்ஸ்விக்'கின் மரத்தினை, இவர்களிருவரும் அமர்ந்திருந்த நீண்ட வெள்ளை நிற மரப்பலகையினாலான இருக்கையில், திருப்திகரமாக வரையத் தொடங்கினார். அது வளர வளர ஆழ்ந்து பார்த்துக் கொண்டதில், மன அரிப்பும் தணிந்தது போலிருந்தது ரீட்டாவுக்கு.

பொய்ரெட் கூர்ந்து கவனித்த வண்ணமிருந்தார். இவ்வழக்கு குறித்த சில நிகழ்வுகள் அவருக்குள் அலைஅலையாய் எழுந்தன. கொலை நிகழ்ந்த மதியம் லூசியின் வரவேற்பறைக்குள் நின்றுக் கொண்டிருந்தது - மறுநாள் காலையில் பெவிலியனில் இரும்பு மேஜையருகே நின்றுக் கொண்டிருந்தது - கட்ஜனிடம் நடத்திய விசாரணை... ... ...

கேட்டார்: ''இதைத் தானே நீங்கள் ஆங்காங்கே வரைந்து வைத்திருக்கிறீர்கள்?''

''ம்.''

பதில் சொன்னதும் தான், தான் என்ன செய்துக் கொண்டிருக் கிறோம் எனும் பிரக்ஞையே எழுந்தது ரீட்டாவுக்கு. ''மர்ஜோரி-பாங்க்ஸ்...!'' சொல்லி விட்டுச் சிரித்துக் கொண்டார் ரீட்டா.

''மர்ஜோரி-பாங்க்ஸ்...! ஏன் இப்படி ஒரு பெயர்?''

மர்ஜோரி-பாங்க்ஸ் எனும் பெயரின் பிறப்பு ரகசியத்தை விளக்கினார் ரீட்டா.

''எதையோ நினைத்துக் கொண்டு இப்படி பிரக்ஞையற்றுக் கிறுக்குவது உங்கள் இயல்பா?''

''அப்படித்தான் நினைக்கிறேன். ஒரு பைத்தியக்காரப் பழக்கம்.''

''இப்படி செய்யும் போதெல்லாம் நீங்கள் வரைவது இம்மரம் தானா?''

''ஆமாம்.''

''இப்பொழுது இங்கு. ஞாயிற்றுக் கிழமை காலையில் நீச்சல் குளப் பார்வையாளர் அறையான பெவிலியனில்.''

மரத்தினை வரைந்துக் கொண்டிருந்த கையின் இயக்கம் இறுகிற்று. பின் நின்று விட்டது. முக்கியத்துவம் தராத ஆச்சரிய தொனியில் கேட்டார் : ''பெவிலியனில்?''

''ஆமாம். அங்கிருந்த வட்ட வடிவ இரும்பு மேஜையில்.''

''ஓ! அது சனிக்கிழமை மாலையாயிருக்கும்.''

''கிடையாது. அது சனி மாலை கிடையாது. ஞாயிறு காலை பனிரெண்டு மணிக்கு, அங்கிருந்தத் தட்டுக் கோப்பை எல்லா வற்றையும் கட்ஜன் அள்ளிக் கொண்டு வந்தபோது, இந்த மரக் கிறுக்கல் போல வரைந்த படமேதும் மேஜையில் இல்லை. குறிப்பிட்டு நான் கேட்டேன். நிச்சயப்படுத்தி பதில் தந்தான் கட்ஜன்.''

''எனில்...'' என்று கண நேரம் ஆழ்ந்து சிந்திக்க ரீட்டா, ''எனில், அது ஞாயிறு மதியமாயிருக்கும்.''

முகச் சிரிப்பு மாறாது மறுத்துத் தலையசைத்தார் ஹெர்குல். ''வாய்ப்பில்லை. க்ரேஞ்ஜ்'ஜின் ஆட்கள் ஞாயிறு மதியம் முழுவதும் நீச்சல் குளத்தைச் சுற்றி தானிருந்தனர் - உடலைப் புகைப்பட மெடுத்துக் கொண்டு, நீரிலிருந்து துப்பாக்கியை எடுத்துக் கொண்டு, என! அந்த இடத்தை விட்டு அவர்கள் அப்படியிப்படிப் போக வில்லை. யாராவது பெவிலியனுக்குள் போயிருந்தால் அவர்கள் நிச்சயம் பார்த்திருப்பார்கள்... சொல்லியிருப்பார்கள்.''

''இப்பொழுது எனக்கு நினைவுக்குள் வருகின்றது'' மெதுவாய் சிந்தித்தபடி சொன்னார் ரீட்டா: ''அந்தப் பகுதி வழியாக அந்தி சாய்ந்து வெகு நேரம் கழித்து நான் சென்றிருந்தேன். இரவு உணவுக்குப் பிறகு.''

பொய்ரெட்டின் குரல் சடுதியில் வந்தது: ''கும்மிருட்டில் யாரும் கிறுக்குவதில்லை, செல்வி ரீட்டா. என்னிடம் என்ன சொல்ல வருகிறீர்கள்? ம்?'' சற்று எரிச்சலானார் ஹெர்குல். ''கன்னங்கரிய இரவில் ஹாலோவிலிருந்துக் கிளம்பி பெவிலியனுக்குள் சென்று, அந்த வட்ட இரும்பு மேஜையினருகே நின்றுக் கொண்டு, என்ன வரைகிறோம் என்பதை அறியவேயியலாத மையிருட்டில் கனக்கச்சிதமாய் மரத்தின் சாயலைக் கிறுக்கினேன் என்றா? இதையும் நான் நம்ப வேண்டும், இல்லை?''

ஹென்ரீட்டா அதிரவில்லை. ''உங்களிடம் நான் உண்மையை சொல்லிக் கொண்டிருக்கிறேன்'' என்றார் அமைதியாய். பின், ''அதை வழக்கம் போல் நீங்கள் நம்ப மாட்டீர்கள்'' என்றார் கிண்டலும் விரக்தியும் கலந்து. ''உங்களுக்கென்று சில தீர்மானங்கள் இருக்கின்றன. எதற்கு இப்படி இருவருக்குள்ளும் பனிப்போர், திரு பொய்ரெட்? சொல்லுங்கள். உங்கள் தீர்மானம் தான் என்ன?''

''நீங்கள், ஞாயிறு நண்பகல் பனிரெண்டு மணிக்குப் பிறகு கட்ஜன் தட்டு கோப்பைகளை பெவிலியனிலிருந்து எடுத்து வந்ததும், அங்கு

சென்றிருக்கிறீர்கள் என்பது தான் என் கணிப்பு. அப்போது அந்த மேஜையருகே போய் நின்றிருக்கிறீர்கள். அங்கு நின்றபடி யாரையோ கவனித்துக் கொண்டு, அல்லது யாருக்காகவோ காத்துக் கொண்டு இருந்திருக்கிறீர்கள்! அப்போது, உங்கள் சுயக் கட்டுப்பாடின்றி, என்ன செய்கிறோம் என்பதை அறியாத நிலையில், பென்சிலால் பெவிலியனின் வட்ட மேஜையில் உங்கள் மனங்கவர்ந்த மரச் சாயலை வரைந்துள்ளீர்கள்.''

''கிடையாது'' - அவசரமற்று ஆனால் ஸ்திரமாய் மறுத்தார் ஹென்ரீட்டா. ''ஞாயிறன்று காலை வேளையில் நான் பெவிலியனுக்கு செல்லவே இல்லை. மொட்டை மாடியில் சிறிது நேரமிருந்தேன். பிறகு தோட்ட வேலைக்கான கூடையை எடுத்துக் கொண்டு நந்தவனத்துக்குள் சென்று விட்டேன். காய்ந்து மற்றும் பழுத்து விட்டிருந்தக் கிளைகளைப் பறித்து சுத்தம் செய்து உருவாகியிருந்த விதைகளைச் சேகரித்து வந்தேன். தோட்டம் என்றால் எனக்கு உயிர். அப்புறம் ஒரு மணியளவில் நீச்சல் குளம் பக்கமாய் போனேன். இதையெல்லாம் இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜிடம் விளக்கமாய் சொல்லி விட்டேன். ஒரு மணி வரை, அதாவது ஜான் சுடப்பட்ட தருணம் வரை, நீச்சல் குளம் பக்கமே நான் போகவில்லை.''

''இது நீங்கள் சொல்லும் கதை'' என்ற ஹெர்குல், ''ஆனால் பெவிலியனில் வரையப்பட்டிருக்கும் பெரிய ஆலமரத்தின் சாயல், அதாவது நீங்கள் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும் போதெல்லாம் வரைந்துத் தள்ளும் அதே சாயல்,நீங்கள் கூறும் கதைக்கு எதிரான சாட்சியாய் நிற்கின்றது'' என்றார்.

''நிறுத்துங்கள் பொய்ரெட். ஒரு நபரைக் குடைவதற்கும் அளவுண்டு. நான் அங்கு பெவிலியனிலிருந்தேன். அங்கிருந்து குறி பார்த்து ஜானை சுட்டுக் கொன்று மகிழ்ந்தேன். இல்லையா? இப்படித்தானே அர்த்தப்படுத்துகிறீர்கள்?''

''நீங்கள் அங்கு தான் இருந்தீர்கள், குறி வைத்து ஜானை வீழ்த்தினீர்கள் - அல்லது நீங்கள் பெவிலியனிலிருந்தீர்கள், அங்கிருந்து யார் ஜானை சுட்டு வீழ்த்தினாரோ அவரைப் பார்த்திருக்கிறீர்கள் - அல்லது பெவிலியனில் யாரோ இருந்திருக்கிறார்கள், அவருக்கு உங்களுடைய இந்த மரம் வரையும் வியாதி தெரிந்திருக்கின்றது, அவர் ஜானைக் கொன்று விட்டு இந்த மரச் சாயலை வேண்டுமென்றே அங்கு வரைந்து வைத்து, சந்தேகத்தை உங்கள் மீது பாயும் படி செய்து ஓடி விட்டார் - இத்தனை சாத்தியக் கூறுகள் உள்ளன, செல்வி ரீட்டா.''

ஹென்ரீட்டா போதும் போதும் எனும் தொனியில் எழுந்து விட்டார். தைரியமாய் தலை நிமிர்த்தியப் பார்வையை ஹெர்குல்லை நோக்கி வீசினார். ''இத்தனை விளக்கியும், உண்மையைப் பேசியும், நான் தான் ஜானைக் கொன்றேன் என்றே நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள், திரு பொய்ரெட். இதில்,நான் தான் கொன்றேன் என்று நிரூபிக்கலாம் எனவும், பாவம், நம்பிக்கையுடன் இருக்கிறீர்கள். இப்பொழுது சொல்கிறேன் திருமிகு பொய்ரெட். முடியாது. உங்களால் முடியாது. நான் தான் கொன்றேன் என உங்களால் நிரூபிக்கவே முடியாது. முடியவே முடியாது திரு பொய்ரெட்.''

''ஓ! எங்கள் போலீஸ் கூட்டத்தை விட நீங்கள் புத்திசாலி என்ற நினைப்பா?''

''உங்களால் நிரூபிக்கவே முடியாது. சவால்.''

கட்டை விரலை உயர்த்திக் காட்டிய ரீட்டா, வளைந்து சுழிந்து நீச்சல் குளம் நோக்கி நீண்ட பாதையிலிறங்கி, வேக வேகமாய் நடக்க ஆரம்பித்தார், குளம் நோக்கி.

26

க்ரேஞ்ஜ், ரெஸ்ட் ஹெவன் குடிலுக்கு வந்திருந்தார், ஹெர்குல்லுடன் அமர்ந்து, ஆற அமர ஒரு கோப்பை தேநீர் அருந்துவதற்கு! எப்படியும் மோசமான தேநீராகத் தான் கிடைக்கப் போகிறது என அவர் நினைத்து வந்தது மாதிரியே, டீயும், மிகவும் சாரமின்றி நீர்த்துத் தானிருந்தது.

''இந்த கிராமத்தான்களுக்கு எப்படி டீ போடுவது என்பது சுட்டுப் போட்டாலும் வராது. கழுதைகளுக்கு சொல்லித் தந்தாலும் விளங்காது'' - தனக்கு ஊட்டமளிக்கவல்ல நல்ல டீ கிடைக்கப் பெறாததால் கோபங்கொண்டார் இன்ஸ்பெக்டர்! ஆயினும் கோபத்தை வளர விடவில்லை அவர். ஏனென்றால் இந்த ஒப்பேறாத டீயை விட மேலான ஓர் ஒப்பேறாத விஷயம் பற்றியன்றோ க்ரேஞ்ஜ் பேச வந்திருக்கிறார்! இதனை, ''நாளை மறுநாள் இரண்டாவது மரண விசாரணை. நாம் வழக்கில் எந்த இடத்தில் நின்றுக் கொண்டிருக் கிறோம்? எங்குமில்லை!'' என்று கோடிக்காட்டி ஆரம்பித்தார் அவர்:

''ஆம், திருமிகு பொய்ரெட். எந்த முன்னேற்றமுமற்ற ஆரம்ப நிலையிலேயே இருக்கிறோம். எப்படி நீதிபதிகளை எதிர் கொள்வது? அந்த பாழாய்ப் போகிற துப்பாக்கி! கொலைகாரத் துப்பாக்கி! இங்கு தான் எங்கோ பதுக்கப்பட்டிருக்கிறது! ஆனால் எங்கே? இது ஒரு வனாந்திரக் கிராமம். எங்கு பார்த்தாலும் மரம், மரம்! ராணுவம் முழுவதையும் வழித்தெடுத்து அழைத்து வந்து தேடினாலும் கிடைக்கப் போவதில்லை. பெருங்குப்பைக்குள் விழுந்து விட்ட குண்டூசியைத் தேடும் கதை. ஆம், இது தான் நடந்துக் கொண்டிருக்கின்றது! ஆனால் நிதர்சனமாய் ஒரே ஓர் உண்மை தான் எனக்குத் தோன்றுகிறது திரு பொய்ரெட். அந்த உண்மையை நாம் எதிர் கொண்டு அதற்கேற்றாற் போல வியூகம் அமைக்க வேண்டும்; இது அவசியம், அத்தியாவசியம்.''

''என்ன நிதர்சனம் அது, இன்ஸ்பெக்டர்?''

''துப்பாக்கி கிடைக்கவே கிடைக்காது என்பதே அது.''

சற்று முன்பு ரீட்டா விடுத்த சவால் வார்த்தைகள் ஹெர்குல்' லுக்குள் வெட்டின. காட்டிக் கொள்ளவில்லை. இப்பொழுது,

இன்ஸ்பெக்டரின் கருத்துக்கு மறுப்புத் தெரிவித்துத் தலையசைத்த ஹெர்குல், ''உங்களுக்குக் கிடைக்கும்'' என்று ஆறுதலாயும் அழுத்தமாயும் சொன்னார்.

''முயற்சி திருவினையாக்கும் என்கிறீர்களா?!''

''நீங்கள் அந்தத் துப்பாக்கியைக் கண்டு பிடித்து விடுவீர்கள். உடனடியாகவோ அல்லது கொஞ்ச காலம் கழித்தோ. எனக் கென்னவோ உடனே கிடைக்கத்தான் போகின்றது என்றே தோன்றுகின்றது'' என்ற பொய்ரெட், ''இன்னொரு கோப்பை டீ?'' என்று கேட்டார்.

''ம்ம்'' அவசர அவசரமாய் மறுத்த இன்ஸ்பெக்டர், ''வெறும் வெந்நீர்'' என்று வர்ணித்தார். சற்று காட்டமாய் தொடர்ந்தார் : ''நான் குரங்காகவே மாறி விட்டேன், திரு பொய்ரெட். இவனா அவனா என்று இந்த ஹாலோ மக்கள் ஒவ்வொருவராய் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறேன்! உதவுவது போலத்தான் தெரிகிறார்கள் - ஆனால் அவர்களின் உதவி ஒவ்வொன்றும் இயன்ற அளவு வழக்கிலிருந்து விலக்கி நம்மை வெகு தூரத்தில் கொண்டு போய் நிறுத்தி விடுகின்றன. காட்டுப் பன்றி வேட்டை - பின்னாலேயே ஓடிக் கொண்டிருக்கிறோம். இது தான் என் கணிப்பு.''

''வெகு தூரத்திற்கு?'' - ஓர் ஆச்சரிய பார்வை கண்களுக்குள் டாலடிக்க ஒரு முறை சொல்லிக் கொண்ட பொய்ரெட், ''ஆமாம்'' என்று இன்ஸ்பெக்டரை முழுவதுமாய் ஆமோதித்தார். ''ஒவ்வொரு நகர்த்தலும் நம்மை வழக்கிலிருந்து வெகு தூரத்திற்குத் தான் தள்ளுகின்றன.''

தன்னுடைய இந்த ஆதங்கத்தை விளாவாரியாக வளர்த்து விவரித்தார் இன்ஸ்பெக்டர் : ''ஒரு பேச்சுக்கு இந்தத் துப்பாக்கிக் குழப்பத்தை எடுத்துக் கொள்வோம். ஜான் கிறிஸ்டோ சுடத்தான் பட்டுள்ளார். மருத்துவ கணக்குப்படி, நீங்கள் ஸ்தலத்திற்கு சென்ற ஒரு சில நிமிடங்களுக்கு முன்னால் தான் இது நடந்துள்ளது. ஹூசி தனது முட்டைக் கூடையை சுமந்தபடியும் - மலர்ந்த பூக்களின் சேகரிப்படங்கிய கூடையோடு ரீட்டாவும் - குண்டுகள் போடப் பட்டிருந்த துப்பாக்கிகள் அடங்கிய வேட்டை உடையோடு எட்வர்டும் - அப்போது அங்கிருந்தனர். இவர்களில் யாரேனும், ஒருவர் கொலை செய்ய உபயோகப்படுத்தப்பட்டத் துப்பாக்கியைப் பதுக்கிக் கொண்டு

நழுவியிருக்கலாம். இது தான் நடந்துள்ளது. திருமிகு பொய்ரெட்...! துப்பாக்கி குளத்தருகேயெல்லாம் ஒளித்து வைக்கப்படவில்லை. என் ஆட்கள் குளப்பகுதியைத் தலைகீழாய் கவிழ்த்துப் போட்டு துளாவி விட்டார்கள். எனவே, இனி துப்பாக்கியை குளம் ஒட்டிய பகுதியில் தேடி அலைவது வீண்.''

பொய்ரெட் ஒப்புக் கொண்டு தலையசைத்தார்.

க்ரேஞ்ஜ் தொடர்ந்தார்:

''அங்கு நின்றுக் கொண்டிருந்த கெர்டா கிறிஸ்டோ - பாத்திரமாக உருவாக்கப்பட்டவர். அப்படி நிற்க வைக்கப்பட்டவர்! யாரால்? இதை அறிவது முக்கியம். இங்கு தான் நமக்குத் தேவையான - அத்தனை துப்புகளும் - சாட்சிகளும் - உதவிகளும் - அடித்துச் செல்லப்பட்டு காற்றோடு காற்றாய் கரைகின்றன. இதற்கு விடை தெரிந்து விட்டால், ஒவ்வொரு நகர்த்தலிலும் இனி நாம் தோற்க மாட்டோம்.''

''அசம்பாவிதம் நிகழ்ந்த காலையில் எப்படியெல்லாம் நேரம் கழித்தனர் என ஒவ்வொருவரும் சொல்லும் காரணக் கதைகளும் திருப்தியளிக்கின்றனவா?''

''சரியாய் சொன்னீர்கள் திரு பொய்ரெட். கதைகள் தான். காரணங்கள் அல்ல. ஏற்றுக் கொள்ளும்படியான நம்பிக்கையான கதைகள்! செல்வி ரீட்டா தோட்டத்திலிருந்திருக்கிறார். அன்றைய முட்டைகளை சேகரித்துக் கொண்டிருந்திருக்கிறார் லூசி. எட்வர்டும் திரு ஹென்றியும் துப்பாக்கிச் சுடுதலில் அன்று காலையிலிருந்தே ஈடுபட்டிருந்திருக்கின்றனர்; எனவே மதியம் வரை ஹாலோவுடன் தொடர்பற்று இருந்திருக்கின்றனர். பிறகு இருவருமாய் குளத்தை நாடி வந்துள்ளனர் - உங்களுக்கு அங்கு விருந்து ஏற்பாடு ஆகியிருந்த படியால்! அந்த விடலைப் பையன் அவனுக்கான அறையிலேயே தான் இருந்திருக்கின்றான். புத்தகங்களைப் படித்தபடி. எல்லாம் இயற்கையாகவும் நம்பும்படியாகவும் தான் உள்ளன, ஆனாலும், உண்மையா என சோதித்துப் பார்க்க வழியில்லை. கட்ஜன் மதியம் பனிரெண்டு மணியையொட்டி பெவிலியன் வரை சில பதார்த்தத் தட்டுகளைக் கொண்டு போய் வைத்திருக்கிறான். இது விசாரணையில் தெரிய வந்துள்ளது. இதெல்லாம் இருந்தாலும் திரு பொய்ரெட், இவர்கள் அனைவருக்கும் எதிராகவும் ஏதோ ஒன்று இயங்கிக் கொண்டிருக்கிறது.''

''உண்மையாக?''

''ஆமாம். இந்த என் ஆலோசனைக்கு உடனடி காரணமாக வருவது வெரோனிக்கா க்ரே. கிறிஸ்டோவோடு அன்று காலை அப்படி ஒரு சண்டை போட்டிருக்கிறாள் இவள் - ஜானின் மன உறுதியை வெறுத்துப் பொசுக்கியிருக்கிறாள்.''

''என்ன மன உறுதி?''

''இவளுடன் ஓடி வர மறுத்த ஜானின் மன உறுதி. பொங்கி சீறியிருக்கிறாள். ஜானைச் சுட்டுத் தள்ள இவளிடம் அதிக இலக்கு தென்படுகின்றது. ஆனால் இவள் தான் ஜானைக் கொன்றாள் என்பதற்கு கடுகத்தனை அளவு கூட தடயம் அகப்பட மறுக்கின்றது! அதிலும் குறிப்பாக திரு ஹென்றியின் துப்பாக்கி இவரால் காணாமல் சென்றதற்கான தடயங்களே கிடையாது. இது மட்டுமா? அன்றைய தினம் குளத்துப் பக்கமாய் க்ரே வந்து சென்றதற்கான சுவடுகளோ கண் சாட்சியோ கிடையாது. இப்படி அவளுக்கு எதிராய் எந்தத் தடயமும் இன்றி, நமக்குள் உருவாகியுள்ள இலக்கினை மட்டும் வைத்துக் கொண்டு என்னத்தை செய்வது? ம்? இன்னும் கேளுங்கள்! தொலைந்துப் போயுள்ள அந்தக் கொலைகார துப்பாக்கியும் க்ரேயின் கையகத்தில் இல்லை.''

''ஆஹ்...! நன்றாய் ஊர்ஜிதப்படுத்திக் கொண்டீர்களா?''

''என்ன நினைக்கிறீர்கள்? அவள் குடிலைத் தேடுவதற்கான நீதிமன்ற உத்தரவு கூட பெற்றிருக்கலாம். அத்தனை வலுவான வழக்கு இது. ஆனால் தேவைப்படவில்லை. க்ரேயை அணுகியதும் முழு ஒத்துழைப்புத் தந்தார். அவள் தங்கியுள்ள சொகுசு பங்களாவின் எந்த மூலையிலும் துப்பாக்கி காணப்படவில்லை. மரண விசாரணை முடிந்ததும் முதல் வேலையாக இந்த க்ரே மற்றும் ரீட்டாவைப் பின் தொடர உளவாளிகளை நியமித்தேன். அவர்கள் எங்கு செல்கிறார்கள், என்ன செய்கிறார்கள் என்றெல்லாம் அறிய, அவர்களின் வால் போல உளவாளிகள் சென்று வருகின்றனர். இப்பொழுது க்ரே நடித்துக் கொண்டிருக்கும் படப்படிப்புத் தளத்திலும் ஓர் ஆளைப் போட்டுள்ளேன். அங்கு க்ரே துப்பாக்கியைப் பதுக்க முயற்சிப்பதாய் எவ்வித அறிகுறியும் இல்லை என்கிறான் அவன்.''

''ரீட்டா பற்றிய துப்பு?''

''அவரிடமும் இதே நிலை தான். முக்கியமாய் ஒன்றும் இல்லை. இங்கிருந்துக் கிளம்பியதும் அவருடைய சிற்பக் கூடத்துக்குத் தான்

சென்றுள்ளார் அவர். வேறு தொடர்புகள் எதுவும் அவருக்கு இல்லை. அவரது சிற்பக் கூடத்திலோ அல்லது அவரிடமோ, அந்தத் துப்பாக்கி இல்லை. அங்கும் தேடினோம். பதறாது ஒத்துழைத்தார். எங்கள் தேடல் அவருக்கு ஒரு பொழுதுபோக்காய் தோன்றியது என்பதே நிஜம். தேடலில் மிஞ்சியது ஒன்று தான் - அவரது சில சிற்பங்கள் எங்கள் ஆட்களுக்கு சிரிப்புக்கும் வம்புப் பேச்சுக்கும் வழி வகுத்துத் தந்தன என்பது தான் அது. உயர் தர சிற்பங்கள் மட்டுமின்றி, சராசரி சிற்பங்களிலும் ரீட்டா ஈடுபடுகிறார், தெரியுமோ! இப்படியெல்லாம் விகிதாச்சாரமற்று வெறுமனே களி மண்ணை எடுத்து அப்பியது போலெல்லாம் சிலை செதுக்கி வைத்திருப்பது ஏன் என்று ஆச்சரியமானார்கள் அவர்கள். கலை நுணுக்கமும் அழகும் தெறிக்கும் பல உயர் ரக சிற்பங்களுக்கிடையே ஒழுங்காக நிரவப்படாத களி மண்ணால், அங்குமிங்கும் வீங்கியது போல செய்யப்பட்டிருந்த சிற்பங்களையும், நவீன வேலை எனும் பெயரால் வளைத்து சுழித்து இழுக்கப்பட்ட அலுமினியத்தால் ஆக்கப்பட்டிருந்த சிற்பங்களையும், ஜீரணிக்க முடியவில்லை! சில குதிரைகளை சமீப காலத்தில் ஆக்கியிருக்கிறார் - அவற்றைக் குதிரை என்றே அடையாளம் காண முடியாதபடி!''

சற்று கலக்கப்பட்டார் பொய்ரெட். ''குதிரைகள் என்றா சொன்னீர்கள்?'' - சிந்தனை பொதித்துக் கேட்டார்.

''ம், ஒரு குதிரை! யாராவது அடையாளம் காட்டினால் தான் அது குதிரை சிற்பம் என்றே விளங்கும். குதிரை செய்ய வேண்டும் என முடிவு செய்து விட்டால், ஒரு குதிரையைப் போய் அணுஅணுவாக பார்த்து வந்தல்லவா செதுக்கியிருக்க வேண்டும்! அவசரக் கோலத்தில் அள்ளித் தெளித்தது போல் இருந்தது அது.''

''ஒரு குதிரை'' என்று மறுபடியும் தன்னுள் பதியுமாறு சொல்லிக் கொண்டார் ஹெர்குல்.

க்ரேஞ்ஜ், துப்பறியும் நிபுணர் பக்கமாய் இன்னும் முகத்தினைத் திருப்பிக் கொண்டார். கேட்டார்: ''இந்தக் குதிரையில் அப்படி என்ன உங்களுக்கு சிலிர்ப்பூட்டும் அம்சத்தைக் காணுகிறீர்கள், திரு பொய்ரெட்?! எனக்கு விளங்கவில்லையே.''

''தொடர்பு! இனத் தொடர்பு! ஓர் உளவியல் குறிப்பு!''

''ம்ம்! எனக்கொன்றும் அர்த்தமாகவில்லை. போகட்டும். ஓரிரு நாட்களில் மீண்டும் மூட்டை முடிச்சோடு இங்கு வந்துள்ளார் ரீட்டா! இந்தக் கூத்து தெரியுமா உங்களுக்கு?''

''தெரியும், தெரியும்! வந்திருந்தார். பேசிக் கொண்டிருந்தோம். பிறகு கிளம்பி மரக் காட்டுக்குள் மறைந்தே விட்டார்.''

''இருப்புக் கொள்ளாமை! காரணம்?'' என்று ரீட்டாவின் நடவடிக்கையைக் காற்றில் விமர்சித்த இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார்: ''திரு பொய்ரெட்... ரீட்டா, ஜானோடு நெருக்கமான நம்பகத்தனமான தொடர்பு வைத்து தான் வாழ்ந்துள்ளார். மேலும், இறக்கும் தறுவாயில், ஜான், ஹென்ரீட்டா என்று சொன்னதும் கூட, இவர் மீது குற்றம் சுமத்தும் தொனியில் தான் அமைந்துள்ளது. ஆனாலும் இது இடிக்கின்றது என்கிறேன் நான். அதாவது ஒரு தொனி தான் தெரிகின்றதே அன்றி ஆணித்தரமான குற்றச்சாட்டாய் எனக்குப் படவில்லை.''

''ஆமாம்'' என ஏற்றுக் கொண்ட பொய்ரெட், ''நானும் அன்று இப்படித் தான் உங்களுக்கு விளக்கினேன். தொனி தான் உள்ளது.''

க்ரேஞ்ஜ் வருத்தமான மனத்துடன் சற்று ரகசியமாய் சொன்னார்: ''நம்மைச் சிடுக்குப் போட்டு குழப்ப என்றே இந்த சுற்று வட்டாரத்தில் நிகழ்வுகள் நிகழ்கின்றன. இந்த ஹாலோ கூட்டத்துக்கு ஜான் கொலை சம்பந்தமாக என்னவோ தெரிந்துள்ளது. ஆனால் சொல்ல மறுக்கிறார்கள். அப்படி ஏதாவது சொன்னாலும் கூட, நம்மை திசை திருப்பும் படி தான் சொல்கிறார்கள் - அப்படிச் செய்வது தெரிந்து விடாமல்! இந்த லூசி! அசம்பாவிதம் நிகழ்ந்த காலையில் எதற்காக துப்பாக்கியைத் தூக்கி முட்டைக் கூடைக்குள் போட்டுக் கொண்டு இவர் கிளம்ப வேண்டும் என்பதற்கான நம்பும்படியான காரணத்தைத் தர மாட்டேன் என்கிறார். அல்லது தர முடியவில்லை. முட்டாள் தனமான செயல். பல சமயங்களில் அவரை ஒரு பைத்தியக்காரியாய் தான் நான் கணிக்கிறேன்.''

ஏதோ அறிந்தவராய் மறுத்துத் தலையசைத்த பொய்ரெட், ''இல்லை'' என்றார். ''அவர் பித்துக்குளி கிடையாது.''

''கட்ஜன், துப்பாக்கியை, வரவேற்பறையின் மேஜையிலிருந்து கொண்டு சென்றேன் என்கிறான். லூசியோ அவனைத் துரத்தி விட்டு, அப்படி கிடையாது. துப்பாக்கியை முட்டை கூடைக்குள் போட்டு நான் தான் தூக்கிச் சென்றேன் என்கிறார். சம்பந்தமில்லாத இரு வாக்குமூலங்கள். அந்த எட்வர்ட்! இவரைக் காணும் போதெல்லாம் எனக்குள் சந்தேக மின்னல் பிரகாசமாய் வெட்டுகின்றது. பல வருடங்களாக, எட்வர்ட், ரீட்டாவை உளமாறக் காதலித்து வந்துள்ளதாக, லூசி என்னிடம் கோடிக் காட்டியுள்ளார். இதை

வைத்துப் பார்த்தால் ஜானை வீழ்த்த எட்வர்டிடம் ஸ்திரமான இலக்கு தெளிவுபடுகின்றது. தென்பட்டு என்ன பிரயோஜனம். மறுபடியும், வழக்கம் போல், நாம், வெறுமையில் தான் வந்து முட்டிக் கொண்டு நிற்கின்றோம். எட்வர்ட், மிக்டேவுடன் நிச்சயமாகியுள்ளாராமே!''

நீங்கள் மிகப் பரிதாபமானவர் என்ற பார்வையை இன்ஸ்பெக்டர் மீது வீசினார் ஹெர்குல் பொய்ரெட்.

''இவர்களுக்கு நடுவில் அந்த விடலைப் பையன்'' - விடப் போவதில்லை எனத் தொடர்ந்தார் இன்ஸ்பெக்டர். ''இவனைப் பற்றியும் சில விஷயங்களைச் சொன்னார் லூசி. புத்திசுவாதீனமற்று பைத்தியமாகி இறந்தவராம், இவனது தாயார். உலகிலுள்ள அனைவரும் அவளைக் கொல்ல முனைவதாய் கருதி கஷ்டப்பட்ட பைத்தியம். இது நமக்கு என்ன மாதிரி உதவும் என்பது உங்களுக்குப் புரிந்திருக்கும். ஆரோக்கியமற்ற இத்தகைய மரபணுவைத் தன் தாய் வழி சொத்தாய் பையன் அடைந்திருக்கும் பட்சத்தில், டாக்டர் கிறிஸ்டோ பற்றி தப்பபிப்ராயம் கொண்டிருக்கலாம் - அதாவது அவர் தன்னைக் கண்காணிக்க வரவழைக்கப்பட்டுள்ள மன நல மருத்துவர் - என்றெல்லாம் கற்பனை செய்திருக்கலாம். டாக்டர் ஜான் கிறிஸ்டோ அப்படிப்பட்ட மருத்துவரல்ல என்பதும் தீராத நோய்களோடு அல்லாடும் வகையைச் சார்ந்தவர் அவர் என்பதும் பையன் டேவிட் தலையில் ஏறியிருக்கவே செய்யாது; ஆனால் அவர் ஒரு மருத்துவர் என்ற ஒரே காரணத்தால், தன்னைப் பரிசோதிக்க என்றே வரவழைக்கப்பட்டவர் என்று மட்டும் ஏறியிருக்கும். இது ஆபத்து அல்லவா! அசாதாரணப் பையனவன். பூனையைப் போல எப்போதும் ஒரு நரம்பதிர்வுடனேயே சுற்றுகிறான்.''

இப்படிப் பேசி முடித்த க்ரேஞ்ஜ் சற்று நேரம் அமைதியற்று சந்தோஷமின்றி அமர்ந்திருந்தார். ''நான் என்ன சொல்கிறேன் என இப்போதாவது புரிந்ததா! எல்லாம் நாம் கொள்ளும் வெறும் சந்தேகங்கள்! எந்த முன்னேற்றமும் தராமல் வெற்றிடத்திலேயே நம்மை நிற்க வைக்கும் சந்தேகங்கள்.''

தன் தலையை ஒரு முறை உலுக்கிக் கொண்ட பொய்ரெட் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டார் : ''வெற்றிடம் நோக்கி - முடிவை நோக்கி அல்ல! விலகி விலகி - முடிவை நெருங்கி நெருங்கி அல்ல! மங்கலாய் தோன்றும் ஏதோ ஒரு பிடிப்பை நோக்கி அல்லாது

வெற்றிடம் நோக்கி. ஆம். இது தான் நாம் இப்போது அனுபவித்துக் கொண்டிருப்பது.''

க்ரேஞ்ஜ் பொய்ரெட்டைக் கூர்மையாய் பார்த்து சொன்னார் : ''ஒழுங்கினைக் குலையச் செய்து, வழக்கு அடையவிருக்கும் அனுகூல முடிவுகளைத் தடுத்துக் கொண்டேயிருக்கும் கூட்டம், இந்த ஆங்கெட்டெல் கூட்டம். இல்லையென்றால் ஒவ்வொரு துப்பும் வழக்கிலிருந்து நம்மை விலக்கி விலக்கிப் போட வேண்டாம் திரு பொய்ரெட். சத்தியமாய் ஒன்று சொல்கிறேன். ஜான் கொலை குறித்த அத்தனையும் அறியப் பெற்றவர்கள், இவர்கள்.''

''அவர்களுக்குத் தெரியும்'' என்று பொய்ரெட்டும் ஒப்புக் கொண்டார்.

''யார் செய்தது என்று அவர்களுக்கு, அங்குள்ள அத்தனை பேருக்கும், தெரிந்திருக்கிறது என்றா சொல்ல வருகிறீர்கள்?'' - இன்ஸ்பெக்டர் சந்தேகம் தலைதூக்கக் கேட்டார்.

ஒப்புதலாய் தலையசைத்தார் பொய்ரெட். ''ஆமாம். அவர்களுக்குத் தெரியும். பல முறை இவ்வாறு நினைத்துள்ளேன். இப்பொழுது அடித்துச் சொல்லுகிறேன். அவர்களுக்குத் தெரியும்.''

''ஓ! அப்படியா சங்கதி!'' என்ற இன்ஸ்பெக்டரின் முகம், போலீஸ் இறுக்கம் கொண்டது. ''தெரிந்த அந்த உண்மையை அவர்களுக் குள்ளேயே மறைத்து வைத்து வித்தை காட்டுகிறார்களா? போலீஸ் உதை அறியாதவர்கள்! அடிக்கிற அடியில் எப்படி உண்மையை வாங்குகிறேன் பாருங்கள்! விட மாட்டேன்! அந்தத் துப்பாக்கியைக் கண்டு பிடித்தே தீருவேன்!''

சிரித்துக் கொண்டார் பொய்ரெட் - உங்கள் போலீஸ் பாடும் வழக்கமான பாட்டுத் தானே இது - 'கண்டு பிடித்து விடுகிறேன்... கண்டு பிடித்து விடுகிறேன்...!'.

இதை கவனிக்காது கர்ஜித்துக் கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர்: ''குட்டையைக் கலக்கிக் கலக்கி என்னமாய் குழப்பியிருக்கிறார்கள்! பல ஆலோசனைகள்! பல குறிப்புகள்! என் ஆட்களுக்கு உதவுவதாய் மனமுவந்து ஒத்துழைப்பு! எல்லாம் பாசாங்கு, ம், பாசாங்கு! அனைத்தும், உதவாத, வழக்குக்கு விளக்கேற்றாத, சிலந்தி வலை சிடுக்குகள்! நான் தேடி அலையும் ஸ்திரமான சாட்சியையா மறைக்கிறார்கள்! கண்டந்துண்டமாய் ஆக்கப் போகிறேன், அவர்களை, பார்த்துக் கொண்டே இருங்கள்!''

இன்ஸ்பெக்டரை அப்படியே விட்டு விட்டு எழுந்த பொய்ரெட், ஜன்னல் பக்கமாய் போய் கொஞ்ச நேரம் நின்றுக் கொண்டார்; இருவரும் பேசிக் கொள்ளவில்லை. அப்போது, பொய்ரெட் கண்களை, ஒரே சீராக இல்லாது, சீரற்று, ஒத்தப் பரிமாண அமைப்புக்குப் புறம்பாய் தோன்றிய அவர் குடிலின் எல்லை, ஈர்த்தது.

இப்படி லட்டு போல் ஒரு சாட்சி, என் வீட்டு வாசலிலேயேவா! எதிர்பாராத திருப்பமாய் இதை எதிர் கொண்டார் பொய்ரெட்.

''உங்களுக்கு ஸ்திரமான உண்மையான சாட்சி வேண்டும், இல்லையா? என் கணிப்பு தவறாயிருக்காத பட்சத்தில், நான் தங்கியுள்ள இந்த ரெஸ்ட் ஹெவன் குடிலின் காம்பவுண்ட் 'கேட்'டுக்கருகே அதோ தெரிகிறதே மண்டிக்கிடக்கும் புதர், அதனுள், அந்தப் புதரில் சாட்சிக் கிடக்கிறது'' என்றார் பொய்ரெட்.

இருவரும் விறுவிறுவென வெளியேறி தோட்டப்பாதை வழியே நடந்தனர். க்ரேஞ்ஜ் முட்டி போட்டு அமர்ந்து, இடைப்பட்ட புதர் தழைகளைக் கைகளால் பிடுங்கி வழி செய்து, காய்ந்த சருகுகளையும் சுள்ளிகளையும் பிய்த்தெறிந்துக் கொண்டிருந்தார், அவர்களுக்குப் புதருக்குள் மறைந்திருந்த வஸ்து தென்படும் வரை. அங்கு கறுப்பான உலோக சாமான் கண்டறியப்பட்டதும் அதிர்ச்சியாய் பெருமூச் செறிந்தார் இன்ஸ்பெக்டர். ''இது துப்பாக்கி!''

பொய்ரெட் கண்ணகலப் பார்த்த வண்ணமிருந்தார்.

''கிடைத்து விட்டது. திரு ஹென்றியின் துப்பாக்கிக் கிடங்கி லிருந்து தொலைந்தத் துப்பாக்கியாகத் தானிருக்க வேண்டும். இதை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளலாம். பிறகு இது தான் ஜானைக் கொன்ற துப்பாக்கியா என்று பார்க்க வேண்டும். இதுவும் கடினமானதல்ல.''

இப்படிப் பேசிய இன்ஸ்பெக்டர் மிகுந்த சிரத்தை காட்டி, பட்டுக் கைக் குட்டையால் துப்பாக்கியைக் கையாண்டு புதருக்குள்ளிருந்து எடுத்தார். எடுக்கும்போதே, ''எத்தனை தைரியமிருந்தால் உங்கள் ஜாகைக்குள்ளேயே கொண்டு வந்து இதனைப் போட்டிருப் பார்கள்...!'' என்று பிரமிப்படைந்தார்.

''இதிலுள்ள கைரேகைகளை அறிவதற்காக அனுப்பி வைப்போம். திருமிகு பொய்ரெட்! கடைசியாக நம் துரதிர்ஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து விட்டன என்றே தோன்றுகிறது'' என்ற இன்ஸ்பெக்டர், இதற்கான பதிலை துப்பறியும் நிபுணரின் முகத்தில் தேடினார். அவரோ, ''கைரேகை குறித்த தகவல் வந்ததும் சொல்லி அனுப்பவும்'' என்று க்ரேஞ்ஜின் கருத்தைக் கவனிக்காதது போல மறுபதில் தந்தார்.

''உங்களுக்குத் தெரிவிக்காமலா? முதலில் உங்களுக்குத் தான் தொலைபேசி செய்வேன்.''

பிறகு இரு தொலைபேசி அழைப்புகள் வந்தன பொய்ரெட்டுக்கு.

முதல் அழைப்பு அன்றைய மாலையே வந்தது. இன்ஸ்பெக்டரிடமிருந்து. க்ரேஞ்ஜ் ஆரவாரத் துடிப்பிலிருந்தார். ''நன்றி திரு பொய்ரெட், உங்கள் ஒத்தாசைக்கு'' என்று ஆரம்பித்தார். ''நாம் புதருக்குள்ளிருந்து கண்டெடுத்தத் துப்பாக்கி திரு ஹென்றியின் சேகரிப்பிலிருந்து களவு போனது தான். மேலும், இந்தத் துப்பாக்கியால் தான் ஜான் சுட்டுக் கொல்லப்பட்டுள்ளார்; இது ஊர்ஜிதமாகி விட்டது. ஜானின் உடலில் பாய்ந்திருந்த குண்டு இத்துப்பாக்கியில் பொருத்தப்பட்டிருந்த குண்டு தான். துப்பாக்கியில் நிறைய ரேகைகள் உள்ளன - கட்டை விரல், நடுவிரல், ஆள் காட்டி விரல் என்று! எத்தனை நிம்மதியாக இருக்கிறது இப்பொழுது தெரியுமா? நம் துரதிர்ஷ்டங்கள் அகன்று விட்டன என்றேனா இல்லையா!''

இப்போதும் இன்ஸ்பெக்டரின் சந்தோஷ வர்ணிப்புக்கு பிடி கொடுக்காது ஹெர்குல் கேட்டார் : ''அந்தக் கை ரேகைகளை அடையாளம் கண்டு விட்டீர்களா?''

''இது வரை இல்லை. அவை நிச்சயமாக திருமதி கெர்டா கிறிஸ்டோ'வுடையவை அல்ல. அவரது கைரேகைகள் கை வசம் உள்ளன. ரேகைகளின் அளவினை வைத்துப் பார்க்கும் போது, அவை பெண்ணுடையவை என்பதை விட ஆணுடையவை என்றே தோன்றுகின்றது. நாளை ஹாலோ செல்கிறேன். சிறிதாய் நடந்தவற்றை விளக்கி அனைவரது கைரோகைகளையும் பெற்று வரப் போகிறேன். அப்பொழுது தெரியும் திருமிகு பொய்ரெட், நாம் எங்கு நின்றுக் கொண்டிருக்கிறோம் என்று!''

பதிலேதும் கூறாது செவிக்குழலை வைத்தார் பொய்ரெட்.

இரண்டாவது தொலைபேசி மறுநாளே வந்தது. இன்ஸ்பெக்டரிடமிருந்து. களையிழந்து, வாட்டமான குரலில் பேசினார் க்ரேஞ்ஜ். மொட்டு மலராமல் உதிர்ந்து விட்ட தொனியில் இருந்தது அவர் குரல். ''மிக சமீப நகர்த்தலைச் சொல்லவா! துப்பாக்கியில் பதிந்துள்ள ரேகைகள், இந்த வழக்கோடு தற்சமயம் நாம் பொருத்தி வைத்துள்ள எவருடைய கைரேகையும் அல்ல. எட்வர்ட்டுடையவை அல்ல - டேவிட்டோ அல்லது ஹென்றி கைரேகைகளோ அல்ல -

ரீடாவினுடையனவோ அல்லது வெரோனிக்காவினுடையனவோ அல்ல - அந்தக் கறுப்புப் பெண், கட்ஜன், சமையற்காரி.... இவ்வளவு ஏன், வீட்டிலுள்ள எந்தப் பணியாளுடையதும் அல்ல. அல்ல, அல்ல, அல்ல! என்ன திருமிகு பொய்ரெட் இது?''

ஹெர்குல் பொய்ரெட் ஆறுதலாய் சில வார்த்தைகள் பேசினார். இவர் நிறுத்தியதும் க்ரேஞ்ஜ் வருத்தம் தோய்ந்த குரலில் விடாது தொடர்ந்தார்: ''யாரோ வெளியிலிருக்கும் நபரால் தான் கொலை நடந்துள்ளதாய் புரிகின்றது. யாரோ ஒருவன் - டாக்டர் ஜான் மீது தீராத வஞ்சம் கொண்டிருந்த, ஆனால், இதுவரை நாமறிந்திராத - ஒருவன்! நம் கண்களுக்குப் புலப்படாதவன்! நம் அறிவுக்குக் கிட்டாதவன்! அவன், ஓசைப்படாது திரு ஹென்றியின் சேகரிப்பிலிருந்து துப்பாக்கியைக் கடத்தி, ஜானைக் கொன்று தீர்த்து விட்டு, குளத்திலிருந்து விரியும் ஏதோ ஒரு வழி மூலமாக தப்பித்துள்ளவன்! அந்த யாரோ ஒருவன்! சுடப் பயன்படுத்திய துப்பாக்கியை எதிர்பாராது உங்கள் குடிலுக்கருகாமையிலுள்ள புதருக்குள் வீசி விட்டு காற்றோடு காற்றாய் கரைந்தே போனவன்!''

தாமதியாது தன் அலுவலக மூளையைக் காட்டினார் பொய்ரெட்: ''நானும் ஜான் கொலையான சமயத்தில் அங்கு தானிருந்திருக்கிறேன், திரு க்ரேஞ்ஜ். என் கைரேகைகளும் வேண்டுமா?!''

''தந்தால் பாதகமில்லை என்று தான் நினைக்கிறேன், திருமிகு பொய்ரெட். சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவர் நீங்கள் என்றாலும், இவ்வழக்கினோடு எவ்விதத் தொடர்பும் அற்றவர் எனும் போதிலும், நீங்களும் கொலை நடந்த இடத்திலிருந்தீர்கள் என்ற காரணத்தாலும், துப்பாக்கி, உங்கள் வீட்டுக்குள் இருந்து எடுக்கப்பட்டுள்ளது என்ற காரணத்தாலும், திருமதி பொய்ரெட், நீங்கள் ஆலோசிப்பது சரியெனவே படுகின்றது...!''

இருவரும் கலகலவென சிரித்துக் கொண்டனர்!

## 27

துர்மரணமடைந்தோரின் பிரேதங்களைப் பற்றி விசாரணை நடத்தும் அதிகாரி, ஜான் வழக்கு விசாரணையைக் கவனித்து நீதிபதிக்கு அபிப்ராயம் தரவல்ல ஜுரி எனும் மன்றத்தின் தலைவரை எதிர்பார்ப்போடு பார்த்தபடியிருந்தார்.

தன் கையிலிருந்த தாளைக் குனிந்து பார்த்த மன்றத் தலைவர், தீர்க்கமான உச்சரிப்பில் பின்வருமாறு வாசித்தார்: ''இறந்தவரின் துர்மரணம் யாரோ ஒருவராலோ அல்லது ஒரு கூட்டத்தாலோ திட்டமிட்டு நடத்தப்பட்ட கொலையால் நிகழ்ந்துள்ளது என இம்மன்றம் அறிகின்றது.''

நீதிமன்ற அறையின் மூலையில் நின்று உற்று நோக்கிக் கொண்டிருந்த பொய்ரெட், தீர்ப்பை அமைதியாய் ஏற்றுக் கொண்டு தலையசைத்தார். இது தவிர சிறந்தத் தீர்ப்பு சாத்தியமில்லை எனவும் எண்ணிக் கொண்டார்.

வெளியே, கூடியிருந்த ஆங்கெட்டல் கூட்டம், கெர்டா மற்றும் அவரது சகோதரியுடன் பேசுவதற்காக அவர்களிருவரையும் கூடி நின்றது. கெர்டா போன முறை அணிந்து வந்திருந்த அதே கறுப்பு நிற உடையில் வந்திருந்தார். அவர் முகம் பேயறைந்தாற் போன்றும் சந்தோஷமற்றும் கிடந்தது. இம்முறை சகோதரிகளிருவரும் வாடகைக் காரில் வரவில்லை. ரயில் போக்குவரத்து வசதியாக இருந்ததாக சொன்னார், எலிஸி பீட்டர். மதியம் 1.20 ரயிலில் திரும்பவுள்ளதாக சொன்னார்கள்.

ஆதரவாக கெர்டாவின் கைகளைப் பற்றிக் கொண்ட லூசி, ''எங்களுடன் தொடர்பு அற்றுப் போகாமல் பார்த்துக் கொள் கெர்டா. அடிக்கடி தொடர்பு வைத்துக் கொள். என்ன! வந்து போ! மதிய உணவுக்கு, பண்டிகை நாட்களில் - என்று! சரியா! சாமான்கள் வாங்க என்று கூட நீ இங்கு வந்து போகலாம்!''

''எ...என..எனக்குத் தெரியவில்லை.'' - கெர்டா.

எலிசி, ''நாங்கள் கிளம்பியாக வேண்டும். நேரமில்லை. ரயிலைப் பிடித்தாக வேண்டும்'' என பரபரத்தார். கெர்டா, இக்கூட்டத்திலிருந்து விடுவித்தாயே என நன்றியோடு அக்காளைப் பார்த்தார்.

அவர்கள் சென்றதும், ''அப்பாடா! எல்லாம் ஒரு வழியாக முடிந்தது என்று எண்ணும் போது நிம்மதியாக இருக்கிறது இல்லையா?'' என்று கேட்டார் லூசி, அனைவரையும் பார்வையால் துளைத்தபடி.

''இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜ் தவிர! அவர் மட்டும் தான் முடிந்தது பற்றி வருந்துவார். கொலையாளி, அகப்படாமலே போய் விட்டதே! பாவம் அவர்! இந்தக் கவலையைப் போக்க ஒரு நாள் மதிய விருந்துக்காக அவரை அழைத்தால் ஏற்றுக் கொண்டு வருவாரா! ஒரு நண்பராக சொல்கிறேன், இன்ஸ்பெக்டராக அல்ல!''

''என்னைக் கொஞ்சம் தனியாக விட்டு விட்டால் நலமாயிருக்கும்'' என்றார் ஹென்றி.

''தனியாகவா! நான் ஒரு சிறு கொண்டாட்டம் வைத்துக் கொள்ளலாம் என்றோ திட்டமிட்டிருக்கிறேன்! நடக்கும் எல்லாமும் நமக்கு சாதமாய் மாறிப் போவது தான் எத்தனை சுகமானது! அதைக் கொண்டாட வேண்டாமா!''

''வேண்டாம் லூசி. என்ன தான் நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்?''

''தவறில்லை, அன்பே. கவலை வேண்டாம்.''

எல்லோரும் ஹாலோவை அடைந்ததும் கட்ஜன் வந்து நின்ற காரின் கதவினைத் திறக்க வந்தான்.

''எல்லாம் திருப்திகரமாய் முடிந்தன கட்ஜன்'' என்றார் லூசி. ''மெட்வே மற்றும் மற்ற பணியாட்களுக்கும் இதைச் சொல்லி விடு. உங்கள் எல்லோருக்கும், ஹாலோவில் நடந்த விசாரணையெல்லாம் எத்தனை அதிருப்தியை ஏற்படுத்தின என்று எனக்குத் தெரியும். அதே நேரத்தில், குழம்பிய நிலையிலும், நீங்களனைவரும் காட்டிய நன்றி விசுவாசத்தினை நானும் ஹென்றியும் எப்படிப் போற்றினோம் என்பதையும் சொல்லியாக வேண்டும்.''

''உங்களிருவரின் பேரிலும் நாங்களனைவரும் அதிக கரிசனையும் மதிப்பும் கொண்டுள்ளோம்'' என்று பணிவாய் குறிப்பிட்டான் கட்ஜன்.

''என் அருமை மக்களே'' என்றபடி வரவேற்பறைக்குள் நுழைந்த லூசி, ''இங்கு நடைபெற்ற விசாரணை முழுவதையும் நான் மிக மிக சந்தோஷமாய் எதிர் கொண்டேன் தெரியுமா! நீங்களெல்லோரும் தான் பயந்தீர்கள்! நம் மடியில் கனமில்லாத போது என் பயப்பட வேண்டும்! ஹாலோவின் வழக்கமான நடவடிக்கைகளுக்கு மாறாக, மரண விசாரணை எனும் பெயரில் இடம்பெற்ற அத்தனையும் எனக்குப்

புதிதாகவும் புதுமையாகவும் இருந்தன! ஆச்சரியமாய் கவனித்து பங்கெடுத்து வந்தேன். டேவிட் கண்ணா! சொல்! இது போன்ற எதிர்பாராத அகால மரண அனுபவம் நம் அறிதலை அகலமாக்கி, வாழ்க்கையை உணர வைத்து, முதிர்ச்சியினை ஏற்படுத்துகிறது, இல்லையா? நீ கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் படித்தறிபவற்றை விட பல மடங்கு வலிமை வாய்ந்த வாழ்க்கைப் பாடம்!''

''அது கேம்பிரிட்ஜ் அல்ல. ஆக்ஸ்ஃபோர்ட்.''

'நீ பேசியது போதும்' என்று உறைக்கும்படி, லூசி பேசியதையெல்லாம் விட்டு விட்டு, தான் படிக்கும் பல்கலைக் கழகத்தின் பெயரை மட்டும் திருத்திக் காட்டிய டேவிட்டின் சாதுர்யத்தை உணராமல், அங்கிருந்த தொலைபேசியின் செவிக்குழலைக் கையிலெடுத்துக் கொண்ட லூசி, ''நீ மறுபடியும் வந்து இங்கு எங்களுடன் தங்குவாய் என எதிர்பார்க்கிறேன், டேவிட். கொலை நடந்த வீட்டில் உன் அறிவைப் பகிர்ந்துக் கொள்ள சம்பாஷணையெல்லாம் நிகழ்த்த முடியாமல் போயிருக்கலாம். பாவம் நீ. மறுபடியும் வா. உன்னுடன் நுணுக்கமான விஷயங்களைப் பேச வேண்டும்'' என்றார்.

''நன்றி'' என்ற டேவிட், ''வருகிறேன். ஆனால் இப்பொழுது ஏதேன்ஸ் வரை போய் வர வேண்டும் - பிரிட்டிஷ் பள்ளிக்கு'' என்றான்.

தன் கணவர் ஹென்றி பக்கம் திரும்பிய லூசி, ''அதன் தூதரகம் எங்குள்ளது?'' என்று கேட்டார். உடனேயே ஓஓ, நினைவு வந்து விட்டது என்று அதற்கான முகவரியை அறிவித்து ஹென்றியிடம் சரிபார்த்துக் கொண்டார்.

இந்த சரிபார்த்தல் முடிந்ததும், திடுக்கிட்டவராய், ''என்னது இது'' என தனக்குத் தானே சற்று பலமாய் கேட்டுக் கொண்டார், கையிலிருந்த செவிக் குழலைப் பார்த்தபடி. ''இப்பொழுது எதற்காக இதைத் தூக்கிச் சுமந்துக் கொண்டு நிற்கிறேன்?''

''யாருக்காவது தொலைபேசி செய்ய எடுத்திருப்பீர்கள்'' என்றார் எட்வர்ட்.

''அப்படியேதும் இல்லையே!'' என்ற லூசி திருப்பி அதனிடத்திலேயே செவிக்குழலை வைத்தவர், ''உனக்குத் தொலைபேசி பிடிக்குமா டேவிட்?'' என்று கேட்டார்.

ஓப்படி எரிச்சலூட்டும் கேள்விகளைக் கேட்கவென்றே இங்கு வந்தி என்பது போல பார்த்தான் டேவிட். எவ்வித புத்தி நுட்பமான பதிலும் தரயியலாத அடிமட்டக் கேள்வி. இந்த நினைப்பையே அலட்சணியமற்ற பதிலாக்கினான் அவன்.

''ஏன் டேவிட்? வேண்டாதவற்றைப் பேசுவதால், வழவழ கொழகொழ இயந்திரமாகத் தெரிகிறதா! இல்லை 'ரப்பர் பேண்ட்' போல ஓர் இழுவையாகத் தோன்றுகிறதா!''

இப்பொழுது அனைவரின் உரையாடலையும் தடுக்கும் வண்ணம், ''உணவு தயார்'' என வந்து அறிவித்தான் கட்ஜன்.

மிக சுவையாய் உணவு தயார் செய்யப்பட்டிருந்தது. ஹாலோவின் மீது அமர்ந்திருந்த இறுக்க நிலைமை போய் விட்டது என்பதையே, பழைய படி உருவாகியிருக்கும் இந்த சுவை மிகு பதார்த்தங்கள் உணர்த்துகின்றன என்றார் லூசி.

''லூசியைப் புரிந்துக் கொள்ளவே முடியவில்லை. சில சமயங்களில் முகத்திலடித்தாற் போல் தயவேயின்றி பேசி விடுகிறார். சில சமயம் நெஞ்சைத் தொடும்படி காரியங்கள் செய்கிறார்'' என்றார் மிக்டே. மிக்டேவும் எட்வர்டும் ஹாலோவிலிருந்து விலகி மரக்காட்டுக்குள் நடந்துக் கொண்டிருந்தனர்.

எட்வர்ட் சிறு சிந்தனையோடு பதில் தந்தார் ''என்னைப் பொறுத்தவரை லூசியின் மூளை மிகப் பிரகாசமான, வினாடி வினாக்களில் பட்பட்டென பதில் தந்து பார்ப்போர் கருத்தை அள்ளிச் செல்லும் புத்திசாலியின் மூளையாகத் தான் தெரிகின்றது.''

''லூசியின் நடவடிக்கைகள் சமயங்களில் என்னை எப்படி பயமுறுத்துகின்றன தெரியுமா எட்வர்ட்?'' என்ற மிக்டே, சிறு நடுக்கத்தோடு சொன்னார் : ''இப்போதெல்லாம் இந்த ஹாலோவே கூட என்னை கலங்கடிக்கின்றது.''

''ஹாலோ?''

இப்படிக் கேட்ட எட்வர்ட் ஆச்சரியமாய் மிக்டேவைப் பார்த்து சொன்னார் : ''ஏய்ன்ஸ்விக் கின் சிறு மாதியாய் அல்லவா ஹாலோ என்னை மகிழ்வித்து வருகின்றது! இது ஏய்ன்ஸ்விக்' கே அல்ல. ஆனால் அது மாதிரி -''

எட்வர்டைத் தொடர விடாது கையமர்த்தி நிறுத்தினார் மிக்டே. ''இது தான்... இது தான் எட்வர்ட்... உண்மையாக இல்லாது

மாதிரியாகத் தெரிபவற்றைக் கண்டு தான் நான் அஞ்சுகிறேன். உண்மை தன்மையற்ற மாதிரிகள். இந்த மாதிரிகளுக்குப் பின்னால் என்ன உள்ளன என்பது, அன்பு எட்வர்ட், நமக்குத் தெரிவதே இல்லை. இது.... இது... ஒரு முகமூடி போன்றது எட்வர்ட்.''

''குட்டி மிக்டே...'' என்று அன்பொழுக அழைத்த எட்வர்ட், ''அதிக கற்பனை ஆபத்து'' என்றார்.

அப்படியே அள்ளிக் கொள்வது போல் எட்வர்டைப் பார்த்தார் மிக்டே. அதே பழைய கட்டிளங்காளை எட்வர்ட்! கடுமையற்ற, எதற்கும் இடங்கொடுக்கும் தயை மிகுந்த குரல். பல வருடங்கள் முந்தைய காந்தக் குரல்! மீண்டும்! ஆனால் அப்பொழுது இன்பம் தந்த வசீகரக் குரல் இப்பொழுது ஏனோ துன்புறுத்தியது! ஏனென்றால் தான் சொல்லிய வார்த்தைகளில் அர்த்தமுள்ளது - அவற்றை எட்வர்ட் காண வேண்டும் எனும் ஆதங்கமே ஆகும். கற்பனை என்று எட்வர்ட் குறுப்பிட்டதன் பின்னால் மங்கலாக சில நிஜங்கள் நகம் விரித்து ஆடுவதை அவர் காணவில்லையே என அவசரமானார் மிக்டே.

''லண்டனிலிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்தீர்கள். இப்பொழுது இங்கு போட்டு விட்டீர்கள். இரண்டும் எனக்கு ஒன்று போலத் தான் உள்ளது எட்வர்ட். சிறை. ஜான் கிறிஸ்டோவைக் கொன்றது யார் என்பது ஒவ்வொருவருக்கும் தெரிந்துள்ளதாய் தான் நான் உணர்கிறேன். இது தெரியாத ஒரே ஒரு நபர் - அது நான் தான்.''

எரிச்சலானார் எட்வர்ட் : ''நாம் ஜான் கிறிஸ்டோவைப் பற்றி அலச வேண்டியது ரொம்ப அத்தியாவசியமா? அவரோ இறந்தாயிற்று. போயாயிற்று.''

கோபங்கொண்ட எட்வர்டின் கைகளை இறுகப் பற்றிக் கொண்டார் மிக்டே: ''யார் அவரைக் கொன்றுள்ளது எட்வர்ட்? கெர்டா என நினைத்திருந்தோம். ஆனால் கெர்டா இல்லை. எனில் யார் அது? சொல்லுங்கள்! உங்கள் கணிப்பைச் சொல்லுங்கள்! அது யார்? நாமறியாத புது நபரா?''

மிக்டேவின் கைகளை விலக்கி விட்டார் எட்வர்ட், எரிச்சல் குறையாமல். ''இப்படிப் போய் சிந்தித்துக் கொண்டிருப்பது எந்த லாபமும் ஈட்டித் தரப்போவதில்லை மிக்டே. போலீஸால் கண்டு பிடிக்க முடியாவிட்டால், அல்லது போதுமான சாட்சியங்களை அவர்களால் துப்புத் துலக்கி அடைய முடியாவிட்டால், இவ் வழக்கினை அப்படியே போட்டு விட வேண்டியது தான்.

அப்பொழுது நாமும் வழக்கிலிருந்து தானாக வெளியேறி விடுவோம். வேறென்ன செய்ய?''

''அது சரி தான். ஆனால் கொலைகாரன் அறியப் படாமலே போகின்றானே! நான் அதைக் குறிப்பிடுகிறேன்.''

''நாம் எதற்கு அறிந்துக் கொள்ள வேண்டும்? நமக்கும் ஜானுக்கும் என்ன உள்ளது?''

'நமக்கும்' என்பதை தனக்கும் எட்வர்டுக்கும் என்று பொருத்திப் பார்த்தார் மிக்டே. ஒன்றுமில்லை தான். வசதியான சிந்தனை - எட்வர்டும் மிக்டேவும் ஸ்தூலப் பொருட்களாய் இணைய! ஆனால்... ஆனால்... ஆன்மா சாந்தியடைய என, எத்தனை தான் தோத்திரங்கள் ஓதியும் மந்திரங்கள் ஜபித்தும் கல்லறைக்குள் ஜான் புதைக்கப் பட்டிருந்தாலும், அவர் முழுமையாக புதைக்கப்படவில்லை. ஆம். அவர் முழுமையாக இறக்கவில்லை - அவர் முழுமையாக போகவில்லை - எட்வர்ட் பிரார்த்திருந்தது போல்! ஜான் கிறிஸ்டோ இங்கேயே தான் இன்னுமிருக்கிறார். சூட்சமப் பொருளாய். இங்கேயே. இந்த ஹலோவிலேயே.

நினைக்கும் போதே நெஞ்சு கனத்துப் போயிற்று மிக்டேவுக்கு.

எட்வர்ட் கேட்டார் : ''நாம் எங்கு சென்று கொண்டிருக்கிறோம்?''

அக்குரலில் நனைந்திருந்த எதுவோ ஒன்று மிக்டேவை ஆச்சரியப்பட வைத்தது. ''தெருக் கோடி வரை போய் வருவோம். சரியா?''

''சரி.''

இப்படிச் சொன்னாலும் ஏனோ எட்வர்டுக்கு முழு ஈடுபாடு இல்லை. ஏன் என ஆச்சரியப்பட்டார் மிக்டே. சிறு நடை என்பது எட்வர்டுக்குப் பிடித்தமான ஒன்று என்பதாலேயே மிக்டே கிளம்பி வந்திருக்கிறார். ஆனால் இப்பொழுது அவரிடம் ஈடுபாடு இல்லை. ஒவ்வொரு முறையும், இது போன்ற சிறு நடை சென்று வர, இவரும் ஹென்ரீட்டாவும் - மிக்டேவுக்குள் உதித்த இந்த எதிர்பாரா எண்ணம் உடைந்து வெடித்தது. இவரும் ஹென்ரீட்டாவும்! தன்னிச்சையாகக் கேட்டார் : ''இந்த முறை நீங்கள் இப்பக்கமாய் நடை வந்தீர்களா, எட்வர்ட்?''

இறுக்கமாய், ''இங்கு வந்திறங்கிய மத்தியானம் நானும் ஹென்ரீட்டாவும் நடை வந்திருந்தோம்.'' என்றார்.

அமைதியாய் இருவரும் நடந்தனர்.

'இங்கு தான் இவரும் ஹென்ரீட்டாவும் அமர்ந்திருக்க வேண்டும்...' - எண்ணிக் கொண்டார் மிக்டே. அமர்ந்து... அமர்ந்து... அமர்ந்து...

கையிலணிவித்திருந்த மோதிரத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டார் மிக்டே. அது டாலடித்தது. எமரால்ட் வேண்டாம் என எட்வர்ட் கூறிய காரணம் மிக்டேவை அறைந்தது.

சிறு முயற்சி எடுத்துச் சொன்னார்: ''கிருஸ்துமஸுக்கு மறுபடியும் ஏய்ன்ஸ்விக்'கில் இணைவது குதூலகமாயிருக்கும்.''

மிக்டே சொன்னதை எட்வர்ட் கவனித்ததாய் தெரியவில்லை. அவர் வெகு முன்னேறி சென்றிருந்தார் சிந்தனையில்!

ஹென்ரீட்டாவின் நினைவுகளாலும் ஜானின் நினைவுகளாலும் எட்வர்ட் அலைக்கழிக்கப்படுவதாய் புரிந்துக் கொண்டார் மிக்டே. இந்த ஏதோ ஓரிடத்தில் அமர்ந்துக் கொண்டு ஹென்ரீட்டாவிடம் இவர் ஏதாவது காதலாய் சொல்லியிருக்க வேண்டும், அல்லது அவள் ஏதாவது அன்பாய் மொழிந்திருக்க வேண்டும். தனக்கு வேண்டாததை வெட்டு ஒன்று துண்டு ரெண்டு என வகுந்துப் போடும் பிராணி அவள். இவரோ, இன்னும் ஹென்ரீட்டாவின் நினைவுப் பிடிகளில். மிக்டே இப்பொழுது நிதர்சனமாய் ஒன்றைப் புரிந்துக் கொண்டார்: 'எட்வர்ட், எப்பொழுதும், ஹென்ரீட்டாவுடையவர்!'

இந்த நிதர்சனம் உண்டு பண்ணிய வலி மிக்டே உடலெங்கும் இறங்கிற்று. ஒரு சில நாட்களாக மிக்டே வசித்து வந்த நீர்க்குமிழி உருண்டை - சந்தோஷமும் நிறைவும் மட்டுமே அடங்கியிருந்த உருண்டை - உடைந்துத் தெறித்துக் காணாமற் போயிற்று.

'இப்படி ஒரு வாழ்க்கையை என்னால் வாழ இயலுமா?' - சட்டென விளைந்த இக்கேள்வி பூதாகாரமாய் வளர்ந்து, 'ம்ம்.. உன்னால் முடியவே முடியாது' என்ற பதிலைக் தந்தது. 'ஹென்ரீட்டாவை இவர் ஒவ்வொரு நொடியும் மனதுள் இறக்கி நினைத்துக் கொண்டேயிருக்க அப்படி ஒரு நிலையில் இவரோடு என்னால் வாழவே இயலாது. அப்படிப்பட்ட வாழ்க்கையை என்னால் எதிர் கொள்ள இயலாது. தாங்க இயலாது.'

முகவாய் துடித்தெழ அழுகை முட்டியது மிக்டேவுக்கு. இழப்பு. நீண்ட பெருமூச்சு விட்டபடி காற்று, மரக் காட்டினை உலுக்கிக் கிளம்பிற்று. இலைகள் அதிகமாகவும் வேகமாகவும் இப்பொழுது

விழுந்தன. கூடவே எட்வர்டும் விழுந்தார், மிக்டேவின் மனத்திலிருந்து.

''எட்வர்ட்'' - அழைத்தார்.

குரலில் தொங்கி நின்ற அவரசம் எட்வர்டைத் தட்டியெழுப்பிற்று. மிக்டே பக்கமாய் உடனே தலையைத் திருப்பிக் கொண்டார். ''என்ன மிக்டே?''

''என்னை மன்னித்து விடுங்கள் எட்வர்ட்.''

மிக்டேவின் உதடுகள் நடுங்கின. வார்த்தைகள் அடி வாங்கின. ஆயினும் அமைதியையும் சுயக் கட்டுப்பாட்டையும் குரலில் பிரயத்தனப்பட்டுக் கொண்டு வந்து சொன்னார் ''உங்களிடம் சொல்லித் தான் தீர வேண்டும் எட்வர்ட். இனி பிரயோஜனமில்லை. உங்களை என்னால் மணக்க முடியாது எட்வர்ட். மணந்தாலும் அவ்வுறவினைக் கொண்டு போக முடியாது.''

அவசரமானார் எட்வர்ட்: ''மி..மி...மிக்...டே...! என்ன குழப்பமிது? ஏய்ன்ஸ்விக் எல்லாவற்றையும் ஆற்றும்!''

இடைமறித்தார் மிக்டே. ''ஏய்ன்ஸ்விக்'கிற்காக உங்களை நான் மணந்துக் கொள்ள இயலாது எட்வர்ட். இது... இது உங்களுக்கு.... இதன் உள்ளர்த்தம் உங்களுக்குப் புரிய வேண்டும்.''

தலையை அப்படியே கீழே போட்டுக் கொண்டு நீளமான பெருமூச்சு விட்டார் எட்வர்ட். அமைதியான சூழலில் விழும் காய்ந்த சருகுகள் உண்டாக்கும் எதிரொலியாய் அது இருந்தது.

''நீ சொல்வது விளங்குகின்றது'' என்ற எட்வர்ட், ''உன் கணிப்பு சரியென்றே எனக்குப் படுகின்றது'' என்றார்.

''என்னைப் பெண் கேட்டீர்களே....! அது எத்தனை சுகமானது! இனிமையானது! உங்கள் பெருந்தன்மை அது! ஆனால் அது உதவாது எட்வர்ட். ஏட்டுச் சுரைக்காய்!''

ஒரு சிறு எதிர்பார்ப்பு இருந்தது மிக்டேவிடம் - எட்வர்ட் மறுத்துப் பேசுவார் என்றும், வாக்குவாதம் செய்வார் என்றும், எப்படியாவது ஒப்புக் கொள்ள வைக்கத் துடிப்பார் என்றும்! ஆனால் இவை எதையும் எட்வர்ட் செய்யவில்லை. மாறாக அமைதியாயிருந்தார், மிக்டே மன எண்ணம் போலவே தான், தானும் இருப்பதாய் உணர்த்தியபடி! ஹென்ரீட்டாவின் நினைவு ஓர் ஆவி போல தன்னைப் பீடித்திருக்கும் போது, எட்வர்ட் கூட, மிக்டேவுடனான தன் திருமணம் கானல் நீர் தான் என பிரித்தறிந்தார்.

*''மிக்டே...'' என்றழைத்த எட்வர்ட், ''நம் திருமணம் சரிவராது'' என மிக்டேவின் கருத்தையே எதிரொலித்தார்.*

*உடனேயே, தன் விரலில் மிளர்ந்த வைரக் கல் மோதிரத்தை அவிழ்த்தெடுத்து எட்வர்டின் கைகளுக்குள் திணித்தார் மிக்டே.*

*இருவரும் இணைவதை விட இணையாதிருப்பதை மேல். மிக்டே எட்வர்டைக் காதலித்துக் கொண்டேயிருப்பார், எட்வர்டோ ஹென்ரீட்டாவைக் காதலித்துக் கொண்டே காலங்கழிப்பார். வாழ்க்கையானது, கலப்பு நிகழாத வெறும் நரகமாகிப் போகும்.*

*மோதிரத்தை அவிழ்த்து எட்வர்டின் கைகளில் மீண்டும் ஒப்படைத்தபோது, கவரும் குரலில் மிக்டே சொன்னார் : ''இது ஓர் அற்புதமான மோதிரம் எட்வர்ட்.''*

*''நீயே வைத்துக் கொள்ள வேண்டும் என விரும்புகிறேன், மிக்டே. உன்னிடம் இருப்பதைத் தான் நான் விரும்புகிறேன்.''*

*மறுத்துத் தலையசைத்தார் மிக்டே. ''என்னால் அது மட்டும் இயலாது.''*

*இதழ்களில் சிறு கேலிச் சிரிப்பினைப் பொருத்தி எட்வர்ட் சொன்னார்: ''வேறு யாருக்கும் இதை நான் தந்து விட மாட்டேன் மிக்டே. இதையும் நீ புரிந்துக் கொள்.''*

*நட்பு கமழ்ந்தது. பிரிந்தனர். இப்போது மிக்டேவின் மனது என்ன உணர்கிறது என்பது எட்வர்டுக்குத் தெரியாது - இனி எப்போதும் அவருக்குத் தெரியவும் வராது. தட்டில் வைத்துத் தரப்பட்ட சொர்க்கம்! அந்தத் தட்டு எதிர்பாராது உடைய, மிக்டேவின் விரல் இடுக்குகளில், அவர் பார்க்கப் பார்க்க, அவரால் தடுக்க இயலாது வழிந்து மறைந்தது அந்த சொர்க்கம்!*

*அல்லது, நிஜமாகவே, அப்படி ஒரு சொர்க்கம் இருந்ததா?*

★ ★ ★ ★

அன்றைய மதியம், பொய்ரெட் குடிலுக்கு மூன்றாவது விருந்தாளி வரப்பெற்றார். ஹென்ரீட்டா மற்றும் வெரோனிக்கா க்ரே ஆகியோர் ஏற்கெனவே பொய்ரெட்டை வந்து பார்த்துச் சென்றுள்ளனர். இம்முறை, லூசி. தனக்கே உரிய பரபரப்புடன், பொய்ரெட்டின் குடிலுக்கு இணைப்புத் தந்த பாதையில், மிதந்து வரும் காற்று போல வந்து நுழைந்தார் லூசி.

ஹெர்குல் பொய்ரெட் கதவினைத் திறக்க, வெளியே புன்முறுவியபடி நின்றுக் கொண்டிருந்தார் லூசி. "நான் உங்களைக் காணத் தான் வந்திருக்கிறேன்" என அறிவித்தார் அவர்.

"வருக, வருக" என்று உள்ளே அழைத்தார் பொய்ரெட்.

துள்ளிக் குதித்து உள்ளே முன்னேறிய லூசியைப் பார்த்த பொய்ரெட், 'வயதான பெண்மணி - தலை முடியெங்கும் வெள்ளி நரை - முகமும் சுருக்கம் கண்டாயிற்று - இருப்பினும் காந்த ஈர்ப்பு இருந்து மிளிரும் ஜீவன். ஆமாம், ஜீவன் தான். அப்படி ஒரு படைப்பு எப்போதும் ஈர்ப்பு இருக்கும் படி!' என்று நினைத்துக் கொண்டார். இந்நினைப்பூடே, ஏற்கெனவே போய் அங்கிருந்த சோபாவில் பரப்பிக் கொண்டு அமர்ந்து விட்ட லூசியின் எதிரில் அமர்ந்தார் ஹெர்குல்.

லூசி மிருதுவாய் பேச ஆரம்பித்தார்: "எனக்கு நீங்கள் சில உபகாரங்கள் செய்ய வேண்டும்."

"அப்படியா, திருமதி ஹென்றி?"

"அப்படியே திருமிகு பொய்ரெட்!"

இருவரும் கலகலவென சிரித்துக் கொண்டனர்.

"ஆரம்பிப்போம். முதலில் நான் உங்களுடன் பேச வேண்டும் - ஜான் கிறிஸ்டோ பற்றி."

"ஜான் கிறிஸ்டோ பற்றி?"

"ஆமாம். அவர் அகால மரண வழக்கு பற்றி. இவ்வழக்கு பற்றி எனக்கு ஒன்று தான் தோன்றுகிறது. புதிதாய் ஒன்றுமில்லை. ஜூரி சொன்ன அதே கருத்து தான். இவ்வழக்கிற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட வேண்டும். உடனடியாக. என்ன சொல்ல வருகிறேன் என்று புரிகிறதா?"

"என்ன சொல்ல வருகிறீர்கள் என எனக்குப் புரிந்ததாகப் படவில்லை. விளக்க முடியுமா, திருமதி ஹென்றி."

அவரைப் பார்த்து, லூசி, தன் வசீகரமான வெகுளித் தனம் மிகுந்த புன்னகையை வீசி விட்டு, அவருடைய தோள்களில் தன் அழகிய நீண்ட வெண்ணிற கையைப் பதித்தார். "விளக்கமா? உங்களுக்கா? நான் என்ன அர்த்தத்தில் சொன்னேன் என்று உங்களுக்கா புரிந்திருக்காது" என்றவர் இருந்தாலும் பரவாயில்லை, விளக்குகிறேன் எனும் தொனியில் தொடர்ந்தார் : "துப்பாக்கியில் பதிந்திருக்கும் கைரேகை யாருடையது என்றறிய போலீஸ் தேடுதல் வேட்டையை முடுக்கி விடும். அது யாருடையது என்பது கடைசி வரை தெரிய

வராமலே போய் விட, ஒன்றும் செய்ய முடியாமல், இறுதியில், வழக்கை அப்படியே போட்டு மூடி விடுவர். இது தான் முடிவு என்று வழக்காடு மன்றமும் சூசகமாக சொல்லி விட்டது. எனவே போலீஸ் பற்றி எனக்கு பயமேயில்லை. என் பயமெல்லாம் உங்களைப் பற்றித்தான், திருமிகு பொய்ரெட். நீங்கள், 'என்ன முயன்றும் முடியாமற் போயிற்று... போகட்டும்' என்று ஆறி, வழக்கினை அப்படியே போட்டு விட மாட்டீர்களே!''

''மாட்டேன்'' என்று லூசியின் கருத்தை பிரதிபலித்தார் பொய்ரெட். ''வழக்கினை அப்படியே போட்டு மூடி விட நான் ஒரு போதும் விழைய மாட்டேன்.''

''இதைத் தான்... இதைத் தான் நான் கணித்தேன். அதற்காகத் தான் வந்திருக்கிறேன். உங்களுக்கு உண்மை தெரிந்தாக வேண்டும். இல்லையா? வழக்கு பைசல் ஆகிறதோ இல்லையோ, அதெல்லாம் இரண்டாம் பட்சம் தான் உங்களுக்கு!''

''மிகச் சரியாக. எனக்கு உண்மை தெரிந்தே ஆக வேண்டும். அது வரை ஓய மாட்டேன்.''

''பொறுமை, பொறுமை. நான் வந்த ஜோலியை இன்னும் முழுவதுமாக விளக்கவில்லை. வழக்குகளில் உண்மையைக் கண்டறியாமல் முடிப்பதில்லை என, அப்படி என்ன ஒரு பிடிவாதம் உங்களுக்கு என்று நான் அறிய முற்படுகிறேன். இது, உங்கள் கௌரவம் கருதி அல்ல. கொலைகாரனைத் தொங்க விட வேண்டும் எனும் சாதனை கருதியும் அல்ல. இது, உண்மையை அறிந்தே தீர வேண்டும் எனும் உங்களது தராசு நிலையால் - தராசு குணத்தால்! இதைத் தான் நான் சற்று முன் சொல்ல வந்தேன் என உங்களுக்கா புரியவில்லை! உண்மையை உங்களுக்கு அடையாளம் காட்டி விட்டால், உண்மையை உங்களுக்கு சொல்லி உணர்த்தி விட்டால், அது, அது, அது மட்டும் உங்களைப் பரிபூரணமாய் திருப்திபடுத்தி விடும், இல்லையா! அதில் தானே உங்களுக்கு இமாலய சாந்தி! என்ன, திரு பொய்ரெட்?''

''அப்படியென்றால் உண்மையை சொல்லட்டுமா என முன்மொழிகிறீர்களா, திருமதி ஹென்றி!''

ஏற்றுக் கொண்டு தலையசைந்தார் லூசி.

''ஓ! எனில் உங்களுக்கு உண்மை தெரிந்தே இருக்கிறது?''

லூசியின் கண்கள் மிக அகலமாக விரிந்து படபடத்தன. ''ஆமாம். எனக்கு ரொம்ப நாட்களாகவே தெரியும். இப்பொழுது உங்களிடம்

சொல்லி விட விரும்புகிறேன். அறிந்துக் கொள்ளுங்கள். அறிந்துக் கொண்டவுடனேயே, இருவரும், ஒருவருக்கொருவர் சாட்சி வைத்து ஒப்புக் கொள்ள வேண்டும் - 'இந்த வழக்கு முடிந்து விட்டது; இதற்கு சமாதி கட்டியாயிற்று' என்று! சம்மதமா!''

இப்படிச் சொன்ன லூசி, ஹெர்குல்லைப் பார்த்து சிரித்தார். கேட்டார் : ''இப்படி கேட்பது பண்ட மாற்று வியாபாரமாய் தோன்றுகின்றதா, திரு பொய்ரெட்?''

''கிடையாது திருமதி லூசி. இது அப்படி கிடையாது.''

உள்ளுக்குள் சற்றே அவசரப்பட்டுக் கொண்டிருந்தார் பொய்ரெட் - லூசியிடமிருந்து வரவுள்ள உண்மையை எதிர்பார்த்து.

லூசி தனக்கே உரிய பாணியில் பேசிக் கொண்டிருந்த தளத்தினை அப்படியே மாற்றிக் கொண்டு பேச ஆரம்பித்தார் - இனி, துவங்கி இவ்வளவு நேரம் பேசிய விஷயத்துக்குள் மீண்டும் புகுவாரா என சந்தேகம் வரும்படி!

''எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது, திரு பொய்ரெட்'' என்றார் லூசி. ''நீங்கள் என்னிடம் உண்மையைத் தேடுகிறீர்கள்! எனக்கு எப்படி தெரிய வாய்ப்புள்ளது! என்ன செய்கிறோம் - பேசுகிறோம் என தெரிந்து தான் நீங்கள் செய்கிறீர்களா என எனக்கு அவ்வளவு ஆச்சரியமாயுள்ளது!''

## 28

மிக்டே தூங்கவில்லை. வறண்ட விழிகளோடும் ஓசையற்று இருந்த இருட்டுக்குத் துணையாகவும் நள்ளிரவு கடந்தும் தூங்காமல் அமைதியற்று தலையணை யில் புரண்டுக் கொண்டேயிருந்தார் அவர். அப்போது அருகில் கதவொன்று திறக்கப்படும் ஓசையும் அதனைத் தொடர்ந்து இவர் அறையை யாரோ கடந்து நடந்து போகும் ஓசையும் எழுந்தன. அருகிலிருப்பது எட்வர்ட் தான். எனில் திறக்கப்பட்டது எட்வர்டின் அறைக் கதவு; நடந்து கடப்பதும் அவரே. மிக்டேவின் கட்டிலுக்கு அருகில் கைக்கெட்டும் தூரத்திலிருந்த பொத்தானை அழுத்தி விளக்குக்கு ஒளி தந்தாள். எதிரே சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். மணி, அதிகாலை மூன்றாக பத்து நிமிடம்.

இப்பொழுது கிளம்பி, மிக்டே அறையைக் கடந்து, மாடிப்படி யிறங்கி கீழே போகிறார் எட்வர்ட். இது வழக்கத்துக்கு மிக முரணாய் அன்றோ படுகின்றது!

நேற்று எல்லோரும் கொஞ்சம் சீக்கிரமாகவே படுக்கைக்குச் சென்றிருந்தனர். மிக்டே மட்டும் தான் இத்தனை நேரம் தூங்கவில்லை. எரியும் கண்களோடும் வெடிக்கும் தலைவலியால் காய்ச்சலடிப்பது போன்ற உடல் சூட்டோடும் படுத்தே கிடந்தார்.

கடிகார ஒலி டிக்டிக்' கென துல்லியமாய் கேட்கும் படுக்கை யறையின் அமைதியைக் கிழித்துக் கொண்டு கேட்டது, வெளியே ஆந்தை ஒன்று அலறியபடி சிறகடித்துப் பறந்து போன ஓசை.

மிக முரண்பாடாய் தோன்றும்படி இப்பொழுது, இந்த அகாலத்தில், எட்வர்ட் எங்கே எழுந்து போகிறார்? விடை கிடைக்காததால், மிக்டேவுக்குள் இருப்புக் கொள்ளாமை வளர்ந்தது. சமீப காலமாய் மிக்டேவுக்குள் ஹாலோ உண்டு பண்ணித் தந்துக் கொண்டிருக்கும் இருப்புக் கொள்ளமைகளில் இதுவும் ஒன்று! இந்த விடிகாலையில் நட்டநடு வரவேற்பறையில் என்ன வேலை உள்ளது எட்வர்ட்டுக்கு? ஒரு வேளை வெளியே போயிருப்பாரோ? எனில், எதற்கு? போதும், போதும்! இப்பொழுது தான் ஒரு வழக்கு முடிவுக்கு வந்துள்ளது! இதென்ன புதுக் கூத்து!

சிந்தனையோடு ஒன்றும் செய்யாமல் படுக்கையிலே கிடக்கும் நேரம் உச்சத்தைத் தொட்டு நின்றது. தாள முடியாது எழுந்தார். அணிந்திருந்த இரவு உடைக்குள் இறுக்கமாய் நுழைந்துக் கொண்டார். கையில் ஒரு பாட்டரி விளக்கினை எடுத்துக் கொண்டு, கதவு திறந்து வெளி வந்து, பாதையில் நடக்கலானார்.

எங்கும் காரிருள். மருந்துக்குக் கூட ஒரு விளக்கும் பொருத்தப் படவில்லை. அப்படியே நடந்து படிக்கட்டின் உச்சிக்கு வந்து நின்றுக் கொண்டு, கீழே வரவேற்பறையைப் பார்த்தார். அங்கும் முழு இருட்டு தான் மேவிக் கிடந்தது. படிகளில் வழியே நழுவி கீழே வந்தவர், சில பயக் கணங்களின் நழுவலில், தயக்கமாய், வரவேற்பறை விளக்கு ஒன்றினை ஒளியூட்டினார். மூலைக்கு மூலை அறையும் அமைதி. முன் கதவும் மூடி பூட்டியிருந்தது. பிரெஞ்சு ஜன்னல்களை திறக்க முயன்று பார்த்தார் ; அவையும் பூட்டப்பட்டிருந்தன.

எனவே எட்வர்ட் வெளியே போயிருக்கவில்லை. எனில் எங்கே தான் போயிருப்பார்?

பயக் கலவரம் மூள அவர் உடலெங்கும் ஒரு நடுக்கம் வியாபித்து நின்றது. அப்போது திடுமென, தன் தலையைத் தூக்கி இப்படியும் அப்படியும் திரும்பி மோப்பம் பிடிக்கும் பூனை போல, காற்றில் எதையோ நுகர்ந்து அறிந்தார் மிக்டே

ஓர் அலை - ஒரு சிறு அலை - அறைக்குள் அடித்துக் கொண்டி ருந்தது; அது - சமையல் எரிவாயுவினுடையது!

அதிர அதிர அடுக்களைப் பக்கம் கண்களைத் திருப்பினார் மிக்டே. அடுக்களைக் கதவு பாதி திறந்து ஒருக்களித்த நிலையி லிருந்தது. வேகமாய் உள்ளே நுழைந்தார். வெளியே எங்கோ எரிந்த ஒரு விளக்கு, அடுக்களை ஜன்னலில் பட்டு எதிரொலித்து, உள்ளே சன்னமாய் ஒளி தந்துக் கொண்டிருந்தது. சமையல் வாயுவின் தாக்கம் இங்கு அதிகமாயிருந்தது.

மிக்டே, விசாலமான அடுக்களையின் உள்ளே ஓடி அடுப்பு இருக்கும் இடத்தைத் தேடினார். அங்கு, அடுப்பினை முழுவதுமாக திறந்து விட்டுக் கொண்டு அதன் மீது தன் முகத்தினை முழுவதுமாக பதித்த நிலையிலிருந்தார் எட்வர்ட்.

நடந்துக் கொண்டிருக்கும் தீவிரத்தை உணர்ந்த மிக்டே, பதறக் கூடாது என்ற சுய அறிவுறுத்தலின் பேரில், துரிதமானார். அவருடைய முதல் நடவடிக்கை எல்லா கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து

விடுவதில் இருந்தது. இருட்டு, மேலும் உயரம் இவற்றின் காரணத்தால், ஜன்னலை அவரால் திறக்க முடியவில்லை. உடைத்தார். இருக்கும் தட்டு முட்டு சாமான்களை வீசி உடைத்தெறிந்தார். பிறகு மூச்சினை இழுத்துப் பிடித்துக் கொண்டு, எட்வர்டைக் குண்டு கட்டாக இறுக்கிக் கட்டிக் கொண்டு, இழுத்து, அடுப்பிருக்கும் பகுதியிலிருந்து வெகு தூரம் தள்ளிப் போய் போட்டார். ஓடி வந்து, வெளியேறிக் கொண்டிருந்த எரிவாயுவினை அணைத்து நிறுத்தினார்.

சற்றே மூர்ச்சையாகி, அதனால் சுவாசிக்க இயலாது திணறிக் கொண்டிருந்தார் எட்வர்ட். இருந்தாலும் நிலைமை முன்னேறி, அவரது மூர்ச்சை தெளிந்து விடும் என்பதும் மிக்டேவுக்கு விளங்கிற்று. சற்று நிலையிழந்துள்ளார், அவ்வளவே. ஜன்னல் வழியாக உள்ளே புகுந்து சுழன்ற காற்று, எரிவாயுவை விரட்டிக் கொண்டிருந்தது. அப்படி அதிகமாக காற்று வீசிய ஒரு ஜன்னலருகே, வீசும் காற்றின் முழு பலனும் விரைவாக கிடைக்கும் வண்ணம், எட்வர்டை நகர்த்திப் போட்டார் மிக்டே. இப்பொழுது அவரருகில் உட்கார்ந்துக் கொண்ட மிக்டே, எட்வர்டை தன் வலுவான தளிர்க் கரங்களுக்குள் சிறை பிடித்தார்.

எட்வர்ட் பெயரை உச்சரித்தார். முதலில் மிக சன்னமாக. பிறகு நம்பிக்கையற்ற எண்ணதால் கூடிய பயத்தால், மளமளவென அவர் பெயரைச் சொல்ல ஆரம்பித்தார்.

''எட்வர்ட்.... எட்வர்ட்... எட்வர்ட்....''

எட்வர்ட் குழப்பமாய் அசைந்தார். சுவாசச் சுமையால் முனகினார். இப்படியே சில நிமிடங்கள் போயின. பிறகு இமை மேல் பாறாங்கல் வைத்த உணர்வில் மிகச் சிரமப்பட்டு கண்களைத் திறந்து, உடனே மூடி, பின் சில நிமிட நழுவலில் ஒரு வழியாய் கண்களைத் திறந்துப் பார்த்தார், எதிரேயிருந்த மிக்டேவை. வார்த்தையின் ஒலி வெளி வராது சொன்னார் : ''அடுப்பு.... வாயு... சமையல் வாயு.''

அவள் கண்கள் உடனடியாய் அடுப்பைத் தேடின.

''நீங்கள் செய்யத்துணிந்தது என்ன என்று தெரியும் எட்வர்ட்! ஆனால் எதற்காக...?''

இப்பொழுது நடுங்க ஆரம்பித்தார் எட்வர்ட். அவர் கைகள் மிகச் சில்லிட்டு மரித்தாற் போலாயின. ''மிக்டே...'' என்று சிரமப்பட்டுச் சொன்னார். குரலில், ஆச்சரியத் தேடலும் புளகாங்கிதமும் கலந்திருந்தன.

''நீங்கள் கதவு திறந்து வெளியேறிய அரவம் கேட்டேன். எதற்கு? விளங்கவில்லை. தொடர்ந்து நானும் கீழிறங்கி வந்தேன்.''

நீண்ட பெருமூச்சு விட்டார், பல காத தூரம் ஓடி வந்தது மாதிரி. ''வெளியேற மிகச் சிறந்த வழி இது'' என பொதுவாய் சொன்னார். பிறகு, நேற்று, செய்தித் தாளில் வெளியாகியிருந்த இது போன்ற ஒரு சம்பவத்தை லூசியுடன் விவாதித்துக் கொண்டிருந்தது, சமாதானம் கூற முடியாத துக்கத்துக்கு இடையே, எட்வர்ட்டின் நினைவுக்குள் புகுந்தெழுந்தது. ''எட்வர்ட்... எட்வர்ட்... என்ன இதெல்லாம்? எதற்கு இதெல்லாம்?''

தொங்கியிருந்த தன் தலையை சற்றுப் பிரயாசைப்பட்டுத் தூக்கி மிக்டேவைப் பார்த்த எட்வர்டின் கண்களிலிருந்து புறப்பட்ட வெறுமையும், வெறுப்பும், ஒளியற்ற முடிவும், நிலை குத்தியத் தன்மையும், மிக்டே வயிற்றுக்குள் பய உருண்டைகளை உருள விட்டன. அவர் முகத்தைத் தட்டித் தட்டி ''எட்வர்ட்... எட்வர்ட்...'' என அழைத்த வண்ணமிருந்தார் மிக்டே.

''நான் என்றுமே விரும்பப்பட்டவனாக வாழ்ந்ததில்லை மிக்டே''

மூச்சிழுக்க, தடுமாற்ற வார்த்தைகளைப் பேச ஆரம்பித்தார் எட்வர்ட். ''எப்போதும் தோல்வி. எப்போதும் பிரயோஜனமற்றவன். ஜான் போன்ற ஆண்களுக்குத் தான் வாழ்க்கை. அவர்கள் தான் வாழ்கிறார்கள். இருக்குமிடத்திலெல்லாம் காந்த ஈர்ப்பினை உண்டு பண்ண வல்லவர்கள்; அதன் மூலம் பெண்களை வசியம் பண்ணிக் கையகப்படுத்தத் தெரிந்தவர்கள். நானோ வெறுமையானவன். வெற்றிடம். ஏய்ன்ஸ்விக்'கில் நான் பிறந்தது தான், அது தரும் ஏகாந்தம் தான், ஒத்தடம் தான், நான் இன்னும் உயிர் வாழக் காரணம். இந்த ஆறுதல் மட்டும் இல்லையாயின் என்றோ நான் கரைந்திருப்பேன். வேலையிலும் பெருமை கிடையாது - எழுத வேண்டும் என முயன்றேன், அதிலும் வெற்றி கிடையாது. எல்லாமும் என்னை வெறுத்தன, வெறுக்கின்றன. ஹென்ரீட்டாவுக்கு நான் வேண்டாம். அவளுக்கு மட்டுமா? எவருக்கும்! அன்று, உன்னுடன் மதிய உணவு பகிர்ந்துக் கொண்ட போது எதிர்பார்த்தேன் - ஆனால் முடிவு, வழக்கமான கதை தான்! நீயும் என்னைப் பொருட்படுத்த வில்லை, மிக்டே. எனக்காக இல்லையாயினும் ஏய்ன்ஸ்விக்கைக் காரணம் காட்டியாவது உன்னை என்னுடையவளாக ஆக்கிக் கொள்ள வெட்கத்தை விட்டு முயற்சித்தேன் - என்னுடன் உன்னால் இணைய

முடியவில்லை! எனவே முடிவு செய்து விட்டேன் - ஒரேயடியாக கழன்றுக் கொள்ள.''

இப்போது மிக்டேவின் வார்த்தைகள் காட்டு வெள்ளமாய் அடித்துக் கொண்டு வந்தன : ''அன்பே... அன்பே...! நீங்கள் என்னைப் புரிந்துக் கொள்ளவில்லை. ஹென்ரீட்டாவுக்காகத் தான் நான் விலகினேன். இன்னும், இக்கணமும், இனியும், நீங்கள் ஹென்ரீட்டாவைத் தான் மனதார வரித்துள்ளீர்கள் என எண்ணியதால் அப்படிச் செய்தேன்.''

''ஹென்ரீட்டா?'' - கைக்கெட்டாத தூரத்தில் உள்ள வஸ்துவை ஆதங்கமாய் எண்ணிச் சொல்வது போல் முணுமுணுத்தார் எட்வர்ட். ''ஆமாம். அவளைக் காதலித்தேன் தான். வெறியாய். வெறியாய்.''

இப்போது உள்ளே வீழ்ந்த குரலில் எட்வர்ட் சொன்னார்: ''குளிர்கிறது மிக்டே.''

''கண்ணா... என் அன்பே... எட்வர்ட்''

மிக்டேவின் கைகள் எட்வர்டை மிக இறுக்கமாய் போர்த்திக் காத்தன! அந்த அணைப்பில் சிறிதாய் சிரித்த எட்வர்ட், முணுமுணுப்பாய், ''நீ மிகக் கதகதப்பாயிருக்கிறாய் மிக்டே. இதமாயுள்ளது'' என்றார்.

இது தான்... நினைத்துக் கொண்டார் மிக்டே.... இது தான் மனோதிடமிழந்த நிலை என்பது... இந்நிலையில் துணை நாடுவதென்பது! பய அழுத்தம் - அளக்கயியலா பயமும் தனிமையும் சேர்ந்து அழுத்தும் நிலை. இது நாள் வரை, துணை நாடி நிற்பதென்பது இத்தனை சிலுசிலுப்பானது என்று மிக்டே எதிர்பார்த்திருக்கவே இல்லை. தனிமையில் துணை தேடுவதென்பது ஒரு வெப்பத் தேடலென்றும், காதல் தேடலென்றும், மிருக வெறியின் உந்துதலால் நிகழும் இயக்கமென்றும், வெப்ப ரத்தத்தின் தாகமென்றும், அது தரும் தாக்கமென்றும் தான் எண்ணியிருந்தார். அது காமத் தேடல்! ஆனால் இது அப்படியல்ல! இந்தத் தேடல், ரத்தம் உறைய வைக்கும் பயத் தேடல்! ஒருவர் கூட கிடைக்காமலே போய் விடுமோ என உடல் இறுக வைக்கும் நடுக்கத் தேடல்! கதகதப்பான மனிதப் பாதுகாப்பு வளையங்கள் எல்லாம் அறுக்கப்பட்ட அனாதைத் தேடல்! இது காமமற்ற உன்னத துணைத் தேடல்! ஓர் உறைநிலைத் தேடல்! குளிர்த் தேடல்! அதனால் தான் உறைந்திருக்கிறார்!

மிக்டேவின் இந்த அறிதலைக் கலைக்கும் வண்ணம் எட்வர்ட் மீண்டும் சொன்னார் : ''நீ கதகதப்பாயிருக்கிறாய் மிக்டே!''

இதைக் கேட்டதும், பெருமை கலந்த தன்னம்பிக்கை கொண்டு, பின்வருமாறு நினைத்துக் கொண்டார் மிக்டே: 'இந்தக் கதகதப்பைத் தான், பாவம், என் எட்வர்ட் எதிர்பார்க்கிறார். இதைத்தான், இதை மட்டும் தான் என்னால் முழுசாய் கொடுக்கவும் முடியும். எட்வர்ட், ஹென்ரீட்டாவைக் காதலித்துக் கொண்டே இருக்கட்டும். அது ஒரு நிறைவேற்ற இயலாத கை கூடா கனவு. போகட்டும். ஆனால் அதையும் மீறி அவருக்கு இப்போது அத்தியாவசியமாய் தேவைப் படுவது - ஒரு துணை மட்டுமே தரவல்ல கதகதப்பு, ஸ்திரத் தன்மை, நிலையான குடும்பம்! தன்னுடனேயே இருந்து, தான் மிக நேசிக்கும் 'ப்ரன்ஸ்விக்'கில் தன்னுடன் சிரித்து மகிழ ஒரு ஜீவன்! அவரைப் பொறுத்தவரை அவர் வாழ்க்கையில் இரு கோடுகள்! இருந்து விட்டுப் போகட்டுமே!'

முடிவாய் மிக்டே மனதில் எழுதிக் கொண்டார் : 'வாழ்க்கையைப் பிடிப்புடன் வாழ நம்பிக்கைத் தருமாறு, அவர் நெஞ்சுக்குள் அக்னி விளக்கினை ஏற்ற ஒருவரைத் தேடுகிறார் எட்வர்ட். அது நானாக இருந்து விடுகிறேன்!'

எட்வர்ட் நிமிர்ந்து பார்த்தார். இதை அறிந்த உடனேயே இவர் பக்கமாய் குனிந்த மிக்டேவின் முகம், அம் முகத்தின் தாராளப் புன்னகை, கதகதப்புத் தூவும் கண்கள், பின்னாலிருந்து விழும் இரு கரு இறக்கைகள் போலக் குவியும் கூந்தல் எல்லாம் தெரிந்தன.

ஹென்ரீட்டாவை, கடந்த கால வசந்தங்களை நினைவுபடுத்திக் கொண்டேயிருக்க உதவும் கருவியாய் தான், தான் நினைத்து வந்திருப்பதாய் பிரித்துணர்ந்தார் எட்வர்ட். வளர்ந்து விட்ட அப்பெண்ணுக்குள் இவர் வேண்டியதும் தேடியதும், விடலைப் பருவத்தில் நெஞ்சு நிறையக் காதலித்த பதினெழு வயது குமரியைத் தான். ஆனால் நிமிர்ந்து இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கும் மிக்டேவில், தொடர்ச்சியாய் வளர்ந்து வந்திருக்கும் ஒரு ஜீவன் தான் எட்வர்டுக்குத் தெரிந்தது. இருபுறமும் பின்னிவிடப்பட்டு ஆடும் இரட்டை ஜாடையோடு பள்ளிக் கூடம் சென்ற மிக்டேவையும், அந்த அடர்த்தி குறைந்ததால், அவிழ்த்து விடப்பட்டு, இப்போது அவள் முகமெங்கும் கூந்தல் விழுந்து குறுகுறுக்கும் மிக்டேவையும், பின் எதிர்காலத்தில் இதுவே நரைத்துப் போய் இறுக்கிக் கட்டப் பட்டிருக்கும் நிலையும், ஒரு சேர எட்வர்டால் அறிய முடிந்தது.

'மிக்டே...' என்று எண்ணிய எட்வர்ட், 'இவள் மட்டுமே நிஜம்' என ஸ்திரமாய் மனதில் எழுதிக் கொண்டார். 'நான் இதுவரை கண்டவற்றிலேயே மிக நிஜமான ஜீவன்' என்றும் கருதிக் கொண்டார். கருமையான, மன வலிமையான, 'நடக்கும்' என்று மட்டும் கருதும் நிஜம்! மிக்டே! 'வாழ்க்கையை எதிர் கொள்ளவல்ல கடும்பாறை. இந்த அஸ்திவாரத்தில் என் வாழ்க்கை எனும் வீடு எழும்பட்டும்.'

''மிக்டே'' என அழைத்த எட்வர்ட், ''உன்னை நான் மிக அதிகம் நேசிக்கிறேன். மிக மிக. என்னை மறுபடியும் தனித்து விட்டு விடாதே.''

இவ்வார்த்தைகள் மிக்டேவின் உயிரைத் தொட்டன. வெதுவெதுப்பான தன் தளிர் இதழ்களை எட்வர்டின் இளமை இதழ்களில் பொருத்தி எடுத்தாள். மிக்டேவின் காதல் எனும் அரண் மெல்ல மெல்ல தன்னைச் சுற்றி எழுவதையும், பாதுகாக்கப் போவதையும், தனிமையாய் தான் இருந்து வந்த பயக் குளிர் கொண்ட பாலைவனத்தில் இனி அன்பு மழை தான் என்றும் ஆசுவாசமானார் எட்வர்ட்.

''ஓ எட்வர்ட். இங்கு இன்னும் சமையல் வாயு வாசமடிக்கும் தரையில் வீழ்ந்தே கிடக்க வேண்டுமா? இனி சலனங்களே இராது. இன்பம் தான். கிளம்புவோம். போய் சற்று தூங்குவோம். மணி நாலு! இந்த ஜன்னல் கண்ணாடிகள் எப்படி உடைந்தன என்று லூசி விடிந்ததும் கேட்டால் என்ன பதிலைச் சொல்லி சமாளிப்பது!''

எனினும், அதிருஷ்டவசமாக, எதைச் சொன்னாலும் 'ஓஹோ...' என வாய் பிறந்து அப்படியே நம்பி விடும் குழந்தை குணம் கொண்டாவள் தான் லூசி எனும் உண்மையும் உடனேயே தோன்றி, மிக்டேவைக் காப்பாற்றிற்று!

எட்வர்டை அவரது அறையில் கூட்டிப் போய் படுக்க வைத்த மிக்டே, லூசியறை அடைந்து, ''எட்வர்ட் நட்டநடு நிசியில் கிளம்பி கீழே போகும் ஓசை கேட்டு நானும் எழுந்து பின் தொடர்ந்தேன். நான் அவர் நடந்துப் போன ஓசையைக் கேட்டது நம் அதிர்ஷ்டம். தேடிப் போய் பார்த்தால் சமையல் வாயுவை முழுக்கத் திறந்து விட்டுக் கொண்டு அடுப்புக்குள் தலையை விட்டபடி நிற்கிறார் இவர்! ஜன்னலை உடைப்பதைத் தவிர வேறு வழியில்லாமல் போனது லூசி, ஏனென்றால், விறுவிறுவென என்னால் அவற்றைத் திறந்து விட முடியவில்லை'' என நடந்தவற்றை அப்படியே மறைக்காமல் உள்ளது உள்ளபடி சொன்னார்.

இனி லூசியைப் பழிக்கக் கூடாது; அவர் பிரமாதமானவர் என ...ரமாய் மிக்டே முடிவு கட்டும் படி நடந்துக் கொண்டார் லூசி.

விவரத்தை முழுவதுமாகக் கேட்டுக் கொண்டு "அன்பு மிக்டே" என ஆரம்பித்த லூசி, "நீ விவரம் தெரிந்தவளடீ" என்று பாராட்டினார். தொடர்ந்தார்: "எட்வர்ட்டுக்கு உகந்த ஆதரவாக நீ நிச்சயம் இருப்பாய் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது."

மிக்டே சென்றதும் நடந்தவற்றை மண்டைக்குள் போட்டு எதையோ சிந்தித்த வண்ணம் படுத்திருந்தார் லூசி. பிறகு எழுந்து தன் கணவர் அறை நோக்கி விரைவாய் பாய்ந்தார். துரதிர்ஷ்டவசமாக அது உள் பக்கம் தாளிடாமலிருந்தது!

"ஹென்றீய்ய்...." என கூவியபடி லூசி நுழைய, "அடடா...!" என தூக்கம் கலைந்து விட்ட துக்கத்தில் எழுந்த ஹென்றி, "இன்னும் காகங்கள் கரையவில்லை லூசி. என்ன அவசரமாம்?" என்று அலுத்துக் கொண்டார்.

"முதலில் இதைக் கேளுங்கள்" என்று படுத்திருந்த கணவரின் அருகில் குழைவாய் அமர்ந்துக் கொண்ட மனையாள், "சமையலுக்கு இனி மின்சர அடுப்புத் தான் உபயோகப்படுத்த வேண்டும். அதற்கான ஏற்பாடுகளை முடுக்கி விடுங்கள். சமையல் எரிவாயுவெல்லாம் இனி வேண்டவே வேண்டாம்" என்றார்.

"எதற்கு வீண் செலவு இப்பொழுது? இதுவும் திருப்திகரமாகத் தானே உள்ளது?"

"இருக்கலாம். ஆனால் அது சிலருக்கு விபரீத சிந்தனையை யெல்லாம் கொடுக்கின்றது. எல்லோரும் மிக்டேவைப் போல் சாதுர்யமாக இருக்க முடியுமா என்ன?"

சொல்லி விட்டு, மின்சார அடுப்பளையாக மாற்றினால் தான் ஆச்சு என்று அதிகாரமிட்டு விட்டு சிட்டாய் பறந்து வெளியேறினார் லூசி. சில முறை சுற்றிவிட்டாற் போல் ஆயிற்று ஹென்றிக்கு! அரைத் தூக்கம். ஏதோ கனவிலிருந்து எழுந்தாற் போல தோன்றிற்று அவருக்கு. நிஜமாகவே, லூசி வந்தாளா... வந்து, சமையல் வாயு அடுப்புகளை மாற்றி மின்சார அடுப்புகள் வைக்க வேண்டும் என்று சொன்னாளா... என்ற குழப்பம் ஹென்றிக்குள் விளைந்தது. நடந்தது கனவே என்று கூட நம்பினார், முன்னாள் கமிஷனர்!

தன் அறைக்குள் நுழைய வராண்டாவில் நடந்து சென்ற லூசி, சிலருக்கு இளங்காலை தேநீர் பிடிக்கலாம் என்று சிந்தித்து, தேநீருக்கான கெண்டியை அடுப்பில் பொருத்தி நகர்ந்தார்.

தன் அறை நுழைந்த லூசி, படுக்கையில் படுத்துக் கொண்டார். தூக்கம் ஓய்ந்திருந்தபடியால், அவர் குணாதிசயப்படி, எண்ணங்கள் தாவித் தாவிப் பறந்தன.

தலையணையின் மிருதுத் தன்மையை உணர்ந்தபடி, என் வாழ்க்கையும் சரி... நானும் சரி... மிக இனிமையாகக் கழிந்தோடி விட்டன என உளப்பூர்வ நிம்மதியை அனுபவித்தார்.

எட்வர்ட், மிக்டே, ஏய்ன்ஸ்விக்...! மரண விசாரணையும் முடிந்து விட்டது. பட்ட பாடெல்லாம் மறந்து சுகமாய் வாழட்டும், இளசுகள் என வாழ்த்திக் கொண்டார்.

இனி ஒரு முறை மீண்டும் பொய்ரெட்டைப் போய் பார்த்து இளைப்பாறிப் பேச வேண்டும். பழக உகந்த அற்புதமான மனிதர். அவரை சந்தித்தது முதல், வழக்கு, விசாரணை, என்று - கலகலப்பாய் பேசும் வாய்ப்பே இல்லாமற் போய் விட்டது என ஏங்கிக் கொண்டார்.

இத்தனை எண்ணங்களையும் ஓரங்கட்டி, இன்னுமோர் எண்ணம், அவருள் மின்னலாய் வெட்டியது. அது தோன்றியதும் அப்படியே எழுந்து நெட்டுக் குத்தலாய் உட்கார்ந்துக் கொண்டார் லூசி. ''எனக்கு சந்தேகமாய் தான் உள்ளது'' என தனக்குத் தானே ஆருடம் சொல்லிக் கொண்டார்: ''அது பற்றி இந்த ஹென்ரீட்டாவுக்கு சந்தேகம் வந்திருக்குமா, வந்திருக்காதா!''

வேகம் சற்றும் குறையாது, விறுவிறுவென ஹென்ரீட்டாவின் அறையைக் குறி வைத்து, மேலிருந்து வழியும் நீராய் பாய்ந்தார் லூசி. ஹென்ரீட்டாவின் எல்லைக்குள் அகப்படும் முன்னமே, ''அடியே பெண்ணே! நேற்றே உன்னிடம் கேட்க வேண்டும் என்று எண்ணியிருந்தேனே...!'' என தன் வர்ணனைகளை உதிர்த்தபடி நுழைந்தார் லூசி.

ரீட்டாவின் தலைமாட்டில் போய் நின்றுக் கொண்டு, ''நீ இதை விட்டேற்றித் தனமாய் விட்டிருப்பாய் என்றே தோன்றியது'' என அலறலாய் கூறினார்.

கண் திறக்காது முணுமுணுத்தார் ரீட்டா: ''போ லூசி. பறவைகள் கூட இன்னும் எழுந்திருக்காத இளங்காலை. தொந்தரவு வேண்டாம். தயவுசெய்து.''

''தெரியும். எனக்கும் தெரியும். ரொம்ப சீக்கிரம் எழுந்து விட்டேன் என்று எனக்கும் தெரியும். ஆனால் நேற்று இரவு முழுதும் மிகத் தொந்தரவான இரவாய் அமைந்து விட்டது ரீட்டா. சரியாக தூக்கமில்லை. இந்த அழகில் எட்வர்ட் - காஸ் அடுப்பு - மிக்டே - உடைந்த அடுப்பளை கண்ணாடி என ஒரே கூத்து! பொய்ரெட்டின் நினைவு வேறு!''

''போ லூசி'' - கண்களைத் திறக்காமல் பாதி தூக்கத்திலேயே வெறுப்பாய் பேசினார் ரீட்டா. ''நீ சொல்லும் எதைப் பற்றியும் நானறியாததால் எல்லாம் எனக்கு உளறலாகவே படுகின்றன. விடியட்டும். அப்புறம் கேட்டு விளாவாரியாகப் புரிந்துக் கொள்கிறேனே!''

''சரி. இதையெல்லாம் விட்டு விடுவோம். அந்தத் துப்பாக்கி உறை! நீ அந்தத் துப்பாக்கி உறை பற்றி சிந்திக்கவே இல்லையோ என எனக்குத் தோன்றியது.''

''துப்பாக்கி உறை?'' - தூக்கிவாரிப் போட்டு எழுந்தார் ரீட்டா. கணத்தில் முழுவதுமாக விழித்து விட்டார். ''துப்பாக்கி உறை பற்றி என்ன சொல்லவருகிறாய்?''

''தொலைந்துப் போயிருக்கும் ஹென்றியின் துப்பாக்கி ஒரு தோலுறைக்குள் இருந்தது, தெரியமோ! அந்த உறையும் இன்னும் கண்டுபிடிக்கபடவில்லை. துப்பாக்கியைப் பற்றித் தான் எல்லோரும் கலவரமாய் தேடி அலைவார்களே தவிர யாரும் அதன் உறையைப் பற்றி சிந்திக்கப் போவதில்லை. இருந்தாலும், ஏதேனும் ஒரு கூர்மையான மூளை, உறை பிரச்சனையைக் கிளப்பினால்... ... ...''

தூக்கி வீசப் பட்டது போல படுக்கையிலிருந்து எழுந்து கீழிறங்கி நின்றார் ரீட்டா. சொன்னார் : ''முக்கியமான எதையாவது மறந்து விடுவது மனித இயல்பு என்பர்! அது உண்மை தான்!''

லூசி மனத்தினை அரித்துக் கொண்டிருந்ததை சொல்லி விட்ட திருப்தியில் தன் அறைக்குப் பயணமானார். படுக்கையில் படுத்த மறு நொடியில் தூங்கிப் போனார்.

தேநீர் கெட்டில், கொதிநிலை தாண்டி எங்கோ சென்றுக் கொண்டிருந்தது.

## 29

கெர்டா படுக்கையின் நுனி வரை உருண்டு வந்து, பின் எழுந்து, கால்கள் தரை தொட அமர்ந்துக் கொண்டார். அவரது தலைவலி கொஞ்சம் சொஸ்தமாகியிருந்தது. இது தேவலையென பட்டாலும், உல்லாசமாய் வெளியே போயிருக்கும் குடும்பத்தாரோடு தானும் போகாமல் தனியாய் வீட்டிலேயே இருந்து விட்டது தான் மேலும் தேவலாம் எனப்பட்டது கெர்டாவுக்கு. தனிமையில் வீட்டிலிருப்பது நிம்மதியாகவும் அமைதி தருவதாகவும் மனதுக்கு வசதியாகவும் இருந்தது.

எலிசி கருணையாக, மிக மிக கனிவாக இருந்தார் - ஆரம்பத்தில். ஜானின் அசம்பாவித நிகழ்வு முடிந்து, கெர்டா வீடு வந்து சேர்ந்த தினத்திலெல்லாம், படுக்கையிலிருந்தபடியே சிற்றுண்டியைச் சாப்பிடும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளப்பட்டார். படுக்கை வரை சிற்றுண்டி பதார்த்தத் தட்டுக்களும் தேநீர் கோப்பைகளும் கொண்டு வந்து பரிமாறப்பட்டன. வசதியான பெரிய சாய்வு நாற்காலியிலேயே உட்காரும்படி வழியமைத்துத் தரப்பட்டது. காலுக்கு மெத்தென்ற தலையணை வைத்துத் தந்தார்கள். உடலுக்குக் கடினமான எந்த வேலையும் தரப்படவில்லை.

ஜானை இழந்து விட்டாளே என்று அத்தனை வருத்தமும் கரிசனமும் கொண்டிருந்தனர், எல்லோரும். அந்தப் பாதுகாப்பு வெளிச்சத்துக்குள் நன்றியோடு ஒடுங்கிக் கொண்டு இருக்கலானார் கெர்டா. எதைப்பற்றியும் சிந்திக்கவோ, உணரவா, ஞாபகப்படுத்திப் பார்க்கவோ விரும்பாது வாழத் துவங்கியிருந்தார்.

ஆனால் நாட்கள் நகர நகர, இப்போதெல்லாம் - மறுபடியும் வாழத் துவங்க வேண்டும், எங்கு வாழ, எப்படி வாழ என முடிவெடுக்க வேண்டும் - போன்ற சிந்தனைகளெல்லாம் நெருங்கி நெருக்குவதாய் உணர்ந்தார் கெர்டா. ஏற்கெனவே, எலிஸி, கெர்டாவின் நடவடிக்கைகளில் பொறுமையின்மையைக் காட்ட ஆரம்பித்து விட்டார். 'ஓ கெர்டா! வேகமாக! இத்தனை மெதுவாகவா இயங்குவது!'

இது போலத் தான் முன்பெல்லாம் நிகழ்வுகள் நடந்துக் கொண்டிருந்தன - பற்பல வருடங்களுக்கு முன்னால் - கெர்டா

வாழ்க்கைக்குள் ஜான் புகுந்து தூக்கிச் செல்லும் வரை! கெர்டா உறவு முழுதும், கெர்டாவை, முட்டாள் என்றும், மெதுவாக இயங்க மட்டுமே இயன்ற ஆமை என்றும் முத்திரை குத்தி ஓரங்கட்டியே வைத்திருந்தன. 'நான் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்' என ஜான் சொன்னது போல சொல்ல, கெர்டாவுக்கு யாருமே இருந்ததில்லை.

மீண்டும் தலைவலி மீண்டு விடும் போலத் தோன்றியது. கொஞ்சம் டீ கலந்துக் குடிக்கலாம் எனும் முடிவில் எழுந்தார் கெர்டா.

அடுக்களையில் நுழைந்து, தேநீருக்கான வஸ்துக்களைக் கெண்டியில் போட்டு அடுப்பைப் பற்ற வைத்தார். ஏறத்தாழ அது கொதிநிலைக்குள் நுழையும் போது வாசலின் அழைப்பு மணி ஒலித்தது. அனைத்து பணியாட்களுக்கும் அன்று விடுமுறை. எனவே, அடுப்பின் நெருப்பை முழுதுமாய் குறைத்து விட்டு, நிலையை அடைந்துக் கதவைத் திறந்தார் கெர்டா. ஹென்ரீட்டாவின் கார் நுழைவு வரை வந்து நின்றுக் கொண்டிருப்பதையும், எதிரே ஹென்ரீட்டாவே நிற்பதையும் பார்த்து அதிசயித்துப் போனார் கெர்டா.

''என்ன ஹென்ரீட்டா!'' - ஆச்சரியமாய் கேட்டார். சில அடிகள் பின்னுக்கு நகர்ந்து வழி விட்டபடி, ''வா, வா! எல்லோரும் வெளியே சிறு உல்லாசப் பயணம் சென்றுள்ளனர். இப்போது போய் நீ----''

''ரொம்பவும் வசதியாகப் போயிற்று'' என்று கெர்டாவை மேலே பேச விடாமல் நிறுத்தி உள்ளே வந்து நின்றுக் கொண்டார் ரீட்டா. ''உங்களைத் தனியாகப் பிடிக்கத்தான் எண்ணி வந்தேன். நன்றி கடவுளே! ம், சொல்லுங்கள்! கெர்டா! அந்தத் துப்பாக்கி உறையை என்ன செய்தீர்கள்?''

பின் தொடர்ந்து வந்து கெர்டா அப்படியே ஸ்தம்பித்து நின்றுப் போனார். எவ்வித விளக்கமும் தரயியலாத வெறுமையை, அதிர்ச்சியில் விரிந்த அவர் கண்கள் பிரதிபலித்தன. எனினும் கேட்டார் : ''துப்பாக்கி உறை?'' பிறகு வலப்புறமிருந்த ஓர் அறைக் கதவைத் திறந்தபடி, ''இங்கே வந்து விடு ரீட்டா. அங்கு வேண்டாம். அந்த அறை மிக அசுத்தமாயுள்ளது'' என்றார்.

தேவையில்லை என மறுத்துத் தலையசைத்த ரீட்டா, ஒருவித பரபரப்போடு, எந்த நேரத்திலும் அகப்பட்டு விடலாம் எனும் பயக் கலவர அவசரத்தில் பேசாலானார் : ''கெர்டா! என்னிடம் நடந்த அனைத்தையும் நீங்கள் சொல்லித் தான் ஆக வேண்டும். அந்தத்

துப்பாக்கி உறையைத் தவிர எல்லாவற்றையும் மறைத்தாயிற்று - போலீஸ் கண்களிலிருந்து. நீர்ப்புகா பெட்டி போல புதைத்தாயிற்று; இனியாரும் - அந்த ரகசியப் பெட்டிக்குள் நுழையவே முடியாது! உங்களைக் கொலையோடு இணைத்துப் பார்க்க இனி ஒரு துப்பும் கிடையாது. நீச்சல் குளத்தின் பக்கத்திலிருந்த அடர்த்தியான ஒரு புதருக்குள் நீங்கள் அடைத்துத் திணித்து வைத்திருந்த துப்பாக்கியை நான் கண்டுபிடித்து எடுத்தேன். நீங்கள் ஊகித்திருக்க முடியாத ஓரிடத்தில் அதை மறைத்து வைத்தேன். அதில் இப்போது உங்கள் கைரேகை கிடையாது; யாராலும் கண்டே பிடிக்க முடியாத கைரேகையை இடம் பெறச் செய்துள்ளேன். இருக்கும் ஒரே ஆபத்து - காணாமல் போன துப்பாக்கியின் தோல் உறை. அதை என்ன செய்தீர்கள் என எனக்குத் தெரிந்தாக வேண்டும்.''

நிறுத்தினார் ரீட்டா - நல்ல விதமாக கெர்டா உதவ வேண்டும் எனும் பிரார்த்தனையோடு.

தனக்குள் ஏன் இப்படி ஓர் அவசரம் திக்கு முக்காடுகின்றது என ரீட்டாவுக்கே கூட தெரியவில்லை - ஆனால் அது இருந்தது! இத்தனைக்கும் ரீட்டாவின் கார் கூட பின் தொடரப்படவில்லை. இதை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டார். லண்டன் நெடுஞ்சாலையில் புறப்பட்டு, காருக்குத் தேவையான எரிபொருளை ஊற்றிக் கொண்டு, லண்டனுக்குப் போவதாய் அந்த பெட்ரோல் கடைக்காரனிடம் சொல்லி விட்டுக் கிளம்பி, பிறகு பாதி வழியில் சட்டென பாதை மாற்றி இந்தப் பட்டிக்காட்டுக்கு வந்து சேரும் வரை, எந்த வாகனமும் தன் காரைத் தொடரவில்லை என ஊர்ஜிதப்படுத்திக் கொண்டு தான் வந்துள்ளார். எனினும் அவசரம்!

கெர்டா இன்னமும் ரீட்டாவை முறைத்த வண்ணமே தானிருந்தார். எதிலும் மிக மெதுவாக இயங்கும் கெர்டாவின் உபத்திரவான குணம் ரீட்டாவை சங்கடப்படுத்தியது.

''அது இன்னும் உங்களிடம் இருந்தால், கெர்டா, அதை என்னிடம் நீங்கள் தந்தே தீர வேண்டும். அதை எப்படியாவது நான் தலைமுழ்கி விடுகிறேன். அது ஒன்று தான் கெர்டா, அது ஒன்றே ஒன்று தான், இப்பொழுது, உங்களை, ஜானின் மரணத்தோடு முடிச்சு போட்டு பார்க்க வல்லது! உங்களிடமா அது உள்ளது?''

சிறு இடைவேளை அமைந்தது. பிறகு ஆம் என தலையசைத்தார் கெர்டா!

''பைத்தியக்காரி! அதைப் போய் பத்திரப்படுத்தி வைத்திருப்பது பைத்தியக்காரத் தனமாய் தோன்றவில்லையா?'' - ரீட்டாவால் பீறிட்ட கோபத்தைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

''நான் அதை பற்றி மறந்தே விட்டேன்'' என்றார் கெர்டா. ''மாடியில் என் அறையில் உள்ளது'' என்று சொல்லி'விட்டு, தொடர்ந்தார் : ''போலீஸ் ஹார்லி தெருவிலுள்ள என் வீட்டிற்கு சோதனைக்கு வந்த போது, அந்தத் துப்பாக்கி உறையை கண்டந் துண்டமாக வெட்டி, என் தோல் வேலைக்கான தட்டு முட்டு சாமான்களோடு போட்டு வைத்து விட்டேன்.''

''இது ஒன்றையாவது புத்திசாலித்தனமாய் செய்தீர்களே!''

''ம்..'' என்று விரக்தியாய் சிரித்துக் காட்டிய கெர்டா, ''நான் ஒன்றும் இந்தச் சமுதாயம் நினைப்பது போல அடி முட்டாள் அல்ல'' என்றார். இப்பொழுது தன் கையினைத் தனது கழுத்தை நெறிக்குமளவு கொண்டு போய் இறுக்கிக் கொண்டவர், ''ஜான்... ஜான்...'' என்று கத்தினார். குரல் உடைந்து வந்தது.

''புரிகிறது, திருமதி ஜான், புரிகிறது.''

''என்ன புரிந்தது உனக்கு?'' என வெறியாய் கேட்டார் கெர்டா. ''என்னடீ புரிந்தது உனக்கு? உனக்குத் தெரியாது. உனக்குத் தெரிய வாய்ப்பு கிடையாது. மற்றவர்கள் நினைப்பது போல ஒன்றும் ஜான்... ஜான்..'' - கண் காது புலன்களெல்லாம் அடங்கிய மிகப் பரிதாபமான ஜென்மமாய் நின்றார் கெர்டா. தொடர்ந்தார் : ''எல்லாம் பொய். எல்லாமுமே! அவரைப் பற்றி என்னவெல்லாம் நான் நினைத்திருந் தேனோ, அவையெல்லாம்! ஆம்... அவையெல்லாம் பொய்! அந்த நடிகை வெரோனிக்கா க்ரேயைத் தொடர்ந்து வாலைச் சுருட்டிக் கொண்டு அன்றிரவு சென்ற ஜானின் முகத்தினைப் பார்த்தேன். ஆழப் பார்த்தேன். என்னைத் திருமணம் செய்துக் கொள்ளும் முன், பற்பல வருடங்களுக்கு முன்பு, அவளே கதி என்று அவளை சார்ந்தே தான் ஜான் வாழ்ந்து வந்திருக்கிறார் என்று எனக்கே கூட தெரியும். ஆனால் அந்தக் கூத்து அத்தனையும் முடிந்துப் போன கதை என்று தான் எண்ணியிருந்தேன்.''

ஹென்ரீட்டா மிருதுவாய் இடைமறித்து, ''அது முடிந்து போன கதையே தான் கெர்டா'' என்றார்.

கெர்டா ஸ்திரமாகவும், பற்களை நரநரத்தபடி வெறியாகவும் மறுத்துத் தலையசைத்தார். ''கிடையாது. க்ரே அங்கு வந்து, ஜானை

வருடக்கணக்காய் சந்திக்கவே இல்லை எனத் தொண்டையைப் பிடித்துக் கொண்டு சத்தியம் செய்தாள். ஆனால் நான் ஜானின் முக பாவத்தை மட்டுமே ஊடுருவிக் கொண்டிருந்தேன். அது சொன்னது வேறு. அது நிஜம்! அத்தனை பேருக்கும் முன்னாடி அவள் பின்னாடியே கிளம்பிப் போனார். தனியாய் வந்த அவளுக்குத் தனியாய் போகத் தெரியாதா என்ன! நான் படுக்கைக்குப் போய் படுத்தேக் கிடந்தேன் - மணிக்கணக்காய்! புரண்டேன். தூக்கம் வரவில்லை அவர் படித்துக் கொண்டிருந்த துப்பறியும் நாவலைப் படித்துப் பார்த்தேன். ம்ம்! தேறவில்லை. ஜான் வந்தபாடாயில்லை. பிறகு ஒரு வழியாய் நானே கிளம்பி வெளியேறினேன்.''

கொர்டாவின் கண்கள் உள்ளே புதைந்தன - அன்று நடந்த காட்சிகளை மீண்டும் காண!

''நல்ல நிலா. குளிர்ச்சி. நீச்சல் குளத்திற்கு இட்டுச் செல்லும் பாதை வழியே நடந்து சென்றேன். குளத்தின் பார்வையாளர்கள் அறையான பெவிலியனில் விளக்கு எரிந்துக் கொண்டிருந்தது. அங்கு அவர்கள் இருந்தனர் - ஜானும், அந்த நடிகையும்.''

இதைச் சொன்ன கெர்டாவின் முக பாவம் சடசடவென மாறியது. அதில் எப்போதும் தெரியும், அடங்கிப் போகும் தன்மையும் வெறுமையும் இல்லை. இப்பொழுது, அவர் முகத்தில், பச்சாதாபமற்ற, இரக்கமற்ற குரூரம் கூடி குடி கொண்டது!

''நான் ஜானை அவ்வளவு நம்பியிருக்கிறேன் ரீட்டா. என்னையே ஒப்படைத்திருக்கிறேன். உறவு ரீதியினாலான ஒப்படைப்பல்ல அது! அது, பாசாங்கற்ற ஒப்படைப்பு! கடவுளை நம்புவது போல நம்பியிருக்கிறேன். உலகிலேயே மிகக் கருணையான மனிதர் ஜான் தான் என கருதியிருக்கிறேன். அவரே பரோபகாரி! அவரே கனிவு! இப்படி வாழ்ந்தவள் நான்! ஆனால் அனைத்தும் பொய். பொய். பொய். பொய். நம்பிக்கை துரோகம் செய்யப்பட்டுக் கடைசியில் ஒன்றுமே இல்லாமல் விடப்பட்டவள் நான். நா.. நா.. நான், அவரைப் பூஜித்திருக்கிறேன். ஆங்...!''

ஹென்ரீட்டா பிரமித்துப் போய் கெர்டாவை வைத்த கண் எடுக்காமல் பார்த்தபடியிருந்தார். இதோ, இங்கு ரீட்டாவின் கண்களுக்கு முன்னால், கெர்டாவுக்குள் இருப்பதாய் நம்பி உயிரோவியமாய் தீட்டியிருந்த சிலை, பக்தையின் சிலை, உயிர் பெற்று நிற்கின்றது! கெர்டாவாகவே! குருட்டு நம்பிக்கை கொண்டு நின்ற

ப்பக்தை! அது பொய்த்துப் போனதால் பிரளமாய் வெடித்து ஓய்ந்துள்ள ப்பக்தை!

சம்பாஷணையின் தொடர்ச்சியாய் உயிர்த் தோழியிடம் கொட்டுவது போல் சொன்னார் : ''நான் ஏமாற்றப்பட்டேன். பொய் சொல்லிச் சொல்லி வஞ்சிக்கப்பட்டேன். வருடக்கணக்காய்! என்னால் இந்த உண்மையைத் தாங்க இயலாது ரீட்டா. கொல்ல வேண்டும்! கொன்றே ஆக வேண்டும்! கொன்றே தீர வேண்டும்! அதுவும் நானே! என் கைகளாலேயே ! புரிகிறதா ரீட்டா! என மன ஓட்டம் அர்த்தமாகிறதா ரீட்டா!''

தொடர்ந்தார் :

''இந்த முடிவு அப்போது என்னுள் முளைத்து மரமாகி நிலைபெற்றதும், அதி புத்திசாலியான போலீஸுக்கு முன்னால் மிக எச்சரிக்கையாக இயங்க வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டேன். ஒன்று தெரிந்துக் கொள் ரீட்டா! உலகம் என்னை முத்திரை குத்தியுள்ளது போல நான் ஒன்றும் முட்டாளல்ல! மிக மெதுவாகவும் நிலை குத்திய பறந்த விழிகளோடும் மந்தமாக ஒருவர் செயல்களை செய்தால், உலகம், அத்தகையவர்களின் உணர்வுகளுக்குள் எதுவும் புகாது என்றும் அவர்கள் உணர்வற்றவர்கள் என்றும் முடிவு கட்டி விடுகின்றது - இதைக் கேலி செய்து உள்ளுக்குள் பரிகாசமாய் சிரித்தும் கொள்கின்றது. ஆனால் நடைமுறை உண்மை வேறு! ஒருவருக்கும் தெரியாமல் ஜானைக் கொல்லும் வழிமுறை எனக்குத் தெரியும் - கண்டுபிடித்தேன். ஹென்றியிடமிருந்த துப்பறியும் புத்தகத்தில் எந்தத் துப்பாக்கிலிருந்து ஒரு குண்டு சுடப்பட்டது என்பதைக் கண்டுபிடித்து விடலாம் என்றும் துப்பாக்கிக்குத் துப்பாக்கி குண்டின் அளவுகள் வேறுபடும் என்றும் படித்தறிந்தேன். மத்தியானம் எல்லோரும் துப்பாக்கி பயிற்சி செய்துக் கொண்டிருந்த போது ஒரு துப்பாக்கியில் எப்படி குண்டினைப் போட்டுத் தயார் நிலையாக்குவது என்பதையும் பிறகு எப்படிச் சுடுவது என்பதையும் கிளிப்பிள்ளைக்கு சொல்லித் தருவது போல எனக்கு விளக்கினார் ஹென்றி. ஆக நான் இரு துப்பாக்கிகளை எடுத்துக் கொள்ள வேண்டும். ஜானை ஒரு துப்பாக்கியில் சுட்டு வீழ்த்தி விட்டு அதை மறைத்து விடுவேன் - இன்னொரு துப்பாக்கியைக் கைகளில் ஏந்தியபடி எல்லோரும் பார்க்க மரித்துக் கிடக்கும் ஜானின் அருகில் நிற்பேன் - இந்த காட்சியைப் பார்க்கும் அனைவரும் நான் தான் அவரைக் கொன்றேன் என முதலில்

முடிவு கட்டுவர் - பிறகு பரிசோதனையில் அந்தத் துப்பாக்கியின் குண்டு ஜானின் உடலில் இல்லை என்பது தெரிய வரும் - என் கையிலிருந்த துப்பாக்கியால் அவர் கொலை செய்யப்படவில்லை என்பது ஊர்ஜிதமாகும் - பிறகு சந்தேகப் பிடியிலிருந்து நான் விடுவிக்கப்படுவேன்!''

பெருமிதக் களிப்பில், பாராட்டாய் தலையை ஆட்டிக் கொண்டார் கெர்டா.

''ஆனால் அந்தத் துப்பாக்கியின் தோல் உறை பற்றி நான் மறந்தே விட்டேன். என் படுக்கை அறையின் மேஜையில் அது இருந்தது. இனி நிச்சமாய் அந்த உறையைப் பற்றி போலீஸ் கவலைப் படாது.''

''சொல்ல முடியாது'' என்றார் ரீட்டா கலவரமாய். ''பேசாமல் அதை என்னிடம் கொடுத்து விடுங்கள் கெர்டா. உங்களிடம் அது இருக்கக் கூடாது. அதை நான் எடுத்துச் சென்று விடுகிறேன். உங்கள் கையிலிருந்து அது மாறி விட்டால் உங்களை எந்தக் கொம்பனாலும் அசைக்க முடியாது.''

ரீட்டா தாராளமாய் உட்கார்ந்துக் கொண்டார். திடீரென மிகத் தளர்ச்சியாய் ஆயாசமாய் உணர்ந்தார். உடம்பே இற்று வந்தது.

கெர்டா, ''விட்டு விடு ரீட்டா. இது என் குடும்ப சமாச்சாரம். நீ மிகவும் சோர்வாய் இருக்கிறாய். நான் தேநீர் தயார் செய்துக் கொண்டிருந்தேன்'' என்று சொல்லி விட்டு, அறையை விட்டு அடுக்களை நோக்கி சென்றவர், தற்சமயம், ஒரு தட்டுடன் திரும்பி வந்தார். அதில் ஒரு தேநீர் குவளையும் பால் குவளை ஒன்றும் இரு கோப்பைகளும் இருந்தன. பால் குவளை முழுவதும் நிரம்பியிருந்ததால் தளும்பி வழிந்துக் கொண்டிருந்தது. தட்டினை சிறு நாற்காலியில் வைத்த கெர்டா, ஒரு கோப்பை தேநீரினை நிரப்பி ரீட்டாவிடம் நீட்டினார். தரும் போது ''சற்று சூடு குறைந்துள்ளது'' என்று மன்னிப்புக் கோரும் தொனியில் சொன்னார்.

''பரவாயில்லை'' என்றார் ஹென்ரீட்டா. ''போங்கள். போய் அந்த துப்பாக்கி உறையைக் கொண்டு வாருங்கள் கெர்டா.''

கொஞ்சம் தயக்கம் காட்டினார் கெர்டா. பிறகு எழுந்து அறையை விட்டு வெளியேறினார். தனிமையில் ரீட்டா. தன் கைகளை நீட்டி அப்படியே எதிரேயிருந்த சிறு நாற்காலியில் தலையைக் குப்புறப் போட்டு, படுத்த மாதிரி அமர்ந்துக் கொண்டார் அவர். களைத்திருந்தார். தளர்ந்திருந்தார்.

'எல்லாம் முற்றும் முடிந்துப் போயின' - பெருமூச்செறிந்தார் ரீட்டா. இனி கெர்டாவுக்கு ஆபத்தில்லை. ஜான் எதிர்பார்த்து ஆசைப்பட்ட அளவுக்குத் துளியும் அபாயமின்றி பத்திரமாயிருப்பார்.

மீண்டும் எழுந்து அமர்ந்துக் கொண்டார். நெற்றியில் குழுமியிருந்த முடிக்கற்றைகளை அள்ளிப் பின்னுக்குத் தள்ளி விட்டுக் கொண்டு தேநீர் தட்டினைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ளும் போது ஃபிட்டின் வாயிலில் ஏதோ அரவம் கேட்க சட்டென நிமிர்ந்துப் பார்த்தார். இந்த முறை, சுறுசுறுப்பாய் வேலையை முடித்து விட்டு கெர்டா வந்திருப்பாரோ என்ற ஐயம் ரீட்டாவுக்கு!

ஆனால் நிலை வாயிலில் நின்றுக் கொண்டிருந்ததோ ஹெர்குல் பொய்ரெட்.

''வாசல் கதவு திறந்தே இருந்தது'' என குறிப்பிட்டுக் கொண்டே ரீட்டா அமர்ந்திருந்த பகுதிக்கு விரைந்து வந்த ஹெர்குல் ''அதனால் தான் காத்து நில்லாது உள்ளே நுழையும் சுதந்திரத்தை எடுத்துக் கொண்டேன்'' என்றார்.

''நீங்கள்?'' - இது ஹென்ரீட்டா. ''இங்கே எப்படி வந்தீர்கள்?''

''ஹாலோவிலிருந்து எதிர்பாராது திடுதிப்பென்று நீங்கள் கிளம்பியதும் நீங்கள் எங்கு போவீர்கள் என எனக்குத் தெரிந்து விட்டது. வாடகைக் காரினை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு நேராய் இங்கு வருகிறேன்.''

''ஓ'' - பெருமூச்செறிந்த ரீட்டா, ''எமன்'' என்று முணுமுணுத்துக் கொண்டார்.

''நீங்கள் அந்த டீயைக் குடிக்கக் கூடாது'' என்ற ஹெர்குல், ரீட்டா கையில் சுமந்திருந்த கோப்பையை வாங்கி மீண்டும் தட்டிலேயே வைத்தார். ''நன்றாய் கொதிக்க விடாமல் தயார் செய்த டீ உடலுக்குத் தீங்கானது.''

''அதனாலென்ன? சரியாய் சூடு படுத்தப்படாத நீர் போன்றவையெல்லாம் ஒரு பொருட்டா என்ன?''

பொய்ரெட் ''இங்கு எல்லாமும் ஒரு பொருட்டுத் தான்'' என்றார். அப்போது அவருக்குப் பின்னாலிருந்த அறையிலிருந்து சிறு ஒலி எழ கெர்டா வந்து நின்றார். பெண்களுக்கான சிறு தோல் கைப்பையை சுமந்து நின்றுக் கொண்டிருந்தார். அவர் கண்கள் பொய்ரெட்டின் முகத்தில் பதிந்து பின் நகர்ந்து ரீட்டாவின் முகத்தில் நிலைத்தன.

கெர்டா ஏதாவது பேசி விடக்கூடாது என்று வேகமாய் ரீட்டா முன்னேறி, ''நான் சந்தேகத்துக்குள்ளாகியிருக்கும் பெண், கெர்டா''

என விரக்தியாய் ஆரம்பித்து'' பொய்ரெட், நான் தான் ஜானைக் கொன்றவள் என முடிவாயிருக்கிறார். அதனாலேயே நான் எங்கு போனாலும் என்னை நிழல் போல் பின் தொடர்ந்து வந்து துப்பறிந்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நிச்சயம் இதை அவரால் நிரூபிக்கவே முடியாது'' என்றார்.

இந்த வார்த்தைகளை, மெதுவாய், தீர்க்கமாய், கெர்டா எதையும் பேச அவகாசம் தந்து விடக் கூடாது எனும் குறிக்கோளில் மொழிந்தார் ரீட்டா.

கெர்டா, ஏதும் புரியாத தொனியில், ''பாவம் நீ ரீட்டா'' என்றார். ''கொஞ்சம் டீ குடிக்கிறீர்களா, திரு பொய்ரெட்'' என துப்பறியும் நிபுணரைப் பார்த்துக் கேட்டார்.

''நன்றி. ஆனால் வேண்டாம், திருமதி ஜான்.''

அருகிலிருந்த நாற்காலியில் அமர்ந்துக் கொண்டார் கெர்டா. தனக்கே உரித்தான பரிதாபமான பயந்த குரலில் பேசினார் அவர் : ''எல்லோரும் வெளியே போயிருக்கிறார்கள். என் சகோதரியும் குழந்தைகளும் சிறு உல்லாசப் பயணம் சென்றுள்ளனர். எனக்கு மனதும் சரியில்லை. உடம்பும் ஒத்துழைக்கவில்லை. எனவே என்னை விட்டு விட்டுப் போயுள்ளனர்.''

''உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள், திருமதி ஜான்.''

ஒரு கோப்பையை எடுத்து அதிலிருந்து டீயைக் குடித்தார் கெர்டா.

''எல்லாம் என்னைக் கவலைப்படுத்துகின்றன. ஒவ்வொன்றும். எனக்காக எல்லாவற்றையும் ஜான் செய்துக் கொடுத்தார். ஆனால் இப்போது அவர் இல்லை... ... ....''

கெர்டாவின் குரல் சோகத்தில் அமுங்கிற்று. ''இப்போது ஜான் போய் விட்டார் - திரும்ப முடியாமல்.''

அவரது பரிதாபமான பயந்த நிலைகுத்திய வழக்கமான பார்வை, எதிரேயிருந்த இருவருக்குள்ளும் பயணித்துக் கொண்டே இருந்தது.

''ஜான் துணை இல்லாமல் என்ன செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை. ஜான் என்னைக் குழந்தை போல் கவனித்து வந்தார். அத்தனைக் கரிசனம் அவருக்கு என் மேல். இப்போது அவர் போயே விட்டார் - எல்லாமும் போய் விட்டன. குழந்தைகள், அவர்களது அப்பாவைப் பற்றி எண்ணற்றக் கேள்விகள் கேட்டுத் துளைக்கின்றன.... என்னிடம் ஒன்றுக்காவது பதில் இல்லை. இந்த டெர்ரிக்கு எதைச் சொல்லிப் புரிய வைப்பது என்றே தெரியவில்லை.

அவன் திருப்பித் திருப்பிக் கேட்கும் ஒரே கேள்வி: ''ஏன் அப்பா கொலை செய்யப்பட்டார்?''. நிச்சயம் ஒரு நாள் காரணத்தைக் கண்டே பிடிப்பான். இல்லையென்றால் ஓய மாட்டான் அவன். ஒரு சந்தேகம் என்று வந்து விட்டால் அதன் காரணம் அவனுக்குத் தெரிந்தே ஆக வேண்டும் - அப்படி ஒரு பிறப்பு அவன். யார் என்பதை விட ஏன் என்று அவன் கேட்டுக் கொண்டே இருப்பது தான் எனக்குப் புதிராய் உள்ளது.''

இப்படிப் பேசிக் கொண்டேயிருந்த கெர்டா திடீரென்று அமர்ந்திருந்த நிலையிலேயே அப்படியே நாற்காலியில் சாய்ந்து விட்டார். அவர் கண்கள் தள்ளாடின. இதழ்கள் முழு நீலம் கண்டன. கைகளும் கால்களும் வீழ்ந்து தொங்கிப் போயின. அந்தத் துடிப்போடு, ''என்..னவோ... செய்கின்றதே.... ஜானிருந்தால்.. என்னை... என்னை... காப்பா... ஜா...ன்...'' என அல்லாடினார்.

எழுந்து மேஜையை சுற்றி கெர்டா அமர்ந்திருந்த நாற்காலியை நெருங்கிய ஹெர்குல், இன்னும் வசதியாக கெர்டாவை அமர்த்தி விட்டார். இப்படிச் செய்யும்போது கெர்டாவின் தலை கட்டுப்பாடிழந்து முன்னால் வந்து விழுந்தது. தொய்ந்த முகத்தருகே குனிந்து மூடி விட்டிருந்த கண்களைத் திறந்து ஏதோ பரிசோதித்தார் ஹெர்குல். பிறகு அவரை இறக்கிக் கீழே போட்டு நேராக்கினார்.

''மிக சுலபமான வலியற்ற மரணம்.''

விக்கித்துப் போனார் ஹென்ரீட்டா. ''ஆ! ஆ!'' - வார்த்தையெழாது தவித்தார். ''கடவுளே! என்னது இது?''

இப்படிக் கேட்டுக் கொண்டவுடனேயே, ரீட்டாவின் துரித மூளை முன்னுக்குப் பாய்ந்து விடையைக் கண்டது. ''தேநீரில் ஏதாவது? தன் விடுதலைக்காக தானே ஏதாவது விஷத்தைக் கலந்துக் கொண்டு விட்டாளா? இப்படி ஒரு முடிவையா கெர்டா தேர்ந்தெடுத்தாள்?''

ஹென்ரீட்டாவின் நடுக்கமான அலறலுக்கு மறுப்பாய் தலையசைத்த ஹெர்குல், ''கிடையாது. அப்படி இல்லை'' என்று கூறினார். ''அந்தத் தேநீர் உங்களுக்காக வைக்கப்பட்டது. பாருங்கள். நீங்கள் பிடித்திருந்த டீ கோப்பையால் தான் விபரீதம் நிகழ்ந்துள்ளது.''

''எனக்காகவா?'' - நம்பவே நம்பாது கேட்டார். ''ஆனால் அவரை இந்த வழக்கிலிருந்து முழுவதுமாக விடுவிக்கவன்றோ நான் ஆரம்பம் முதல் அத்தனைப் பிரயாசைப் பட்டு வருகிறேன். இது கெர்டாவுக்கே கூட தெரியுமே.''

''அதெல்லாம் துச்சம். தெருவில் பிடிபட்டு விட்ட நாயைப் பார்த்திருக்கிறீர்களா? தொட வரும் யாராயிருந்தாலும் பற்களைப் பதித்து விடும். அது காப்பாற்ற வருபவராயினும். ஜான் விபரீதத்தின் அத்தனை உண்மையும் உங்களுக்கு மட்டும் தான் தெரிந்திருக்கிறது என புரிந்துக் கொண்டு விட்டார். எனவே நீங்களும் இறக்க வேண்டும் என்பது அவர் வகுத்த விதியாகியது.''

ஹென்ரீட்டா மெதுவாக சொன்னார்: ''நீங்கள் அந்தக் கோப்பையை வைக்கச் சொன்னீர்கள். அப்படியானால், அதில், விஷக்கலப்பு இருக்கிறது என்று, அது கெர்டாவால் தான் கலக்கப்பட்டது என்று...''

முன்னேறிய ரீட்டாவை அமைதியாக இடைமறித்தார் பொய்ரெட்: ''இல்லை, செல்வி ஹென்ரீட்டா! நீங்கள் ஏந்தியிருந்த டீ கோப்பைக்குள் ஏதோ இருக்கிறது என்றெல்லாம் ஸ்திரமாய் நான் சந்தேகப்படவேயில்லை. ஆனால் ஏதோ இருக்கலாம் என சந்தேகப்பட்டேன்! நீங்கள் குடித்திருப்பீர்கள் என கருதித் தான், நீங்கள் குடிக்காமல் வைத்து விட்ட கோப்பையைத் தன் கோப்பை எனக் கருதி கெர்டா குடித்திருப்பார். தற்செயலாய் - சந்தர்ப்பவசத்தால் நடந்து விட்ட துரதிர்ஷ்டம். அல்லது அதிர்ஷ்டம்? என்னைப் பொறுத்தவரை இப்படி வலி தெரியாது கருணை மரணம் போல் நிகழ்ந்து விட்ட கெர்டாவின் மரணம் தான் அவருக்கு நல்லது - அவரது வெகுளியான இரு குழந்தைகளுக்கும் நல்லது. வாய்ப்பின் அடிப்படையில் எதிர்பாராது நேரிட்டு விட்ட விதி! கொலை ரகசியத்தோடு ஒருவரால் நீண்ட நாட்கள் வாழ முடியாது. போலீஸிடமிருந்தும் தப்ப முடியாது.''

''பைத்தியக்காரியா இவள்! நானே குடித்திருந்தாலும் இத்தனை நேரத்துக்கு வீழ்ந்திருக்க மாட்டேனா? இதை ஆராயாது இப்படியா குடித்து மடிவாள்?''

''இதைத் தான் வாய்ப்பின் அடிப்படையில் நிகழ்ந்தது என்றேன் ரீட்டா.''

இவ்விதமாய் விளக்கிய ஹெர்குல் ரீட்டாவிடம் நெருங்கி மிக மிருதுவாக சொன்னார் : ''செல்வி! மிகக் களைத்துத் தெரிகிறார்கள். இல்லையா?''

ஒப்புக் கொண்டாள். கேட்டாள்: ''நீங்கள் எப்போது அனுமானித்தீர்கள்?''

''எதை?''

''கெர்டா தான் என்று?''

''ஓ! குறிப்பாகத் தெரியவில்லை செல்வி ரீட்டா! நீச்சல் குளத்தில் நான் கண்டது - ஒரு நாடக மேடை. இந்த அபிப்பிராயம் ஆரம்பத்திலேயே என் மனதில் விழுந்து விட்டது. ஆனால் அது கெர்டா கிறிஸ்டோவால் தான் வடிவமைக்கப்பட்டுள்ளது என்று நான் கொஞ்சங்கூட கணித்திருக்கவில்லை. அந்நாடக மேடையின் ஒரு பாத்திரமாய் கெர்டாவும் இருந்து விட்டதால் அவரிடம் தொனித்த நாடகப் பாங்கு தான் அவரை சந்தேகத்திலிருந்து மறைத்துக் காத்துள்ளது. இவ்வழக்கின் சிக்கலோ-கலப்போ அற்ற எளிமையான நிலையும், அதே நேரத்தில், இவ்வழக்கில் தெரிந்துத் தெரிந்து மறைந்த அந்த சிக்கலான நிலைப்பாடுகளும் எனக்கு பயமுறுத்திய புதிராகப்பட்டன. இதனை அறிந்ததும் - இதன் மீது - இந்த புதிருக்கான காரணகர்த்தா யார் என்பதின் மீது தேடுதல் வேட்டை மேற்கொண்ட போது - இந்த வழக்கோடு போராடுவதை விட, உங்களுடைய புத்தி சாதுர்யத்திற்கு எதிராகத் தான் நான் முழுவதும் போராடிக் கொண்டிருக்கிறேன் என்பது சிறப்பாய் புரிந்துப் போனது!''

சற்று நிறுத்தி விட்டு பொய்ரெட் கேட்டார் : ''எதற்காக இப்படி?''

''ஏனென்றால் ஜான் இப்படிச் செய்யும்படி எனக்கு இட்டிருந்த கட்ளையால்!'' சொல்லும்போதே ரீட்டாவின் குரல் தழுதழுத்தது. ''கடைசியில் அவர் உதிர்த்த 'ஹென்ரீட்டா' என்ற வார்த்தையில் இந்தக் கட்டளையைத் தான் உணர்த்தினார். அத்துணை அர்த்தம் பொதிந்த ஆழமான உணர்ச்சிப் பெருக்கு - அந்த ஒரு வார்த்தை. அப்படிச் சொன்னதன் மூலம் கெர்டாவைப் பொத்திப் பொத்திப் பாதுகாக்கும்படி போதித்தார் ஜான். திருமிகு பொய்ரெட்... ஜான், கெர்டாவைக் காதலித்தார். தான் மிக மிக ஆழமாக கெர்டாவைக் காதலிப்பதை உணராமலேயே தீவிரமாய் விரும்பினார் என்று கூட சொல்வேன். வெரோனிக்கா க்ரேயை விட அதிகமாய். என்னையும் விட! கெர்டா, ஜானுக்குச் சொந்தமானவர். தனக்குச் சொந்தமான வற்றை, அபரிமிதமாய் விரும்பக் கடியவர் ஜான்! தான் சுடப்பட்ட கணத்தில் அவர் உணர்ந்த உண்மைகளிலிருந்து ஜானுக்கு மிக நன்றாய் புரிந்துப் போயிற்று - கெர்டா செய்துள்ள காரியத்தால் தோன்றவுள்ள விளைவுகளிலிருந்து அவளை யாராவது காப்பாற்றி வெளியேற்ற முடியுமென்றால், அது நான் தான் என்று! அவர் வேண்டும் எதையும் நான் தட்டாது நிறைவேற்றுவேன் என்பதும் அவருக்குத் தெரியும் -

ஏனென்றால்...'' என்ற ரீட்டா தொண்டை முழுதும் துக்கம் அடைக்கச் சொன்னார்: ''நா.. நான்... அவரை மனப்பூர்வமாய் காதலித்தேன்.''

பொய்ரெட் சற்று கடுகடுப்பாய் சொன்னார்: ''எனவே அந்தக் கணம் முதல் உங்களுக்கிடப்பட்ட கட்டளையை நிறைவேற்றத் துவங்கி விட்டீர்கள்.''

''ஆமாம். எனக்குள் உதித்த முதல் சிந்தனை - கெர்டா கையிலிருந்து துப்பாக்கியைப் பறித்து நீச்சல் குளத்துக்குள் போட்டு விடுவது! கைரேகை குழப்பங்களை இந்த முதல் நகர்த்தல் தீர்த்து விடும். ஜான் வேறொரு துப்பாக்கியால் சுடப்பட்டிருக்கிறார் என்ற உண்மையை நான் கண்டுபிடித்ததும், அந்த இரண்டாவது துப்பாக்கிக்கான தேடுதல் வேட்டையில் இறங்கினேன். சிரமமில்லாமல் உடனடியாய் கண்டுபிடித்து விட்டேன் - எனக்குத் தெரியும் என்ன மாதிரியான இடத்தில் அதை கெர்டா போட்டு வைத்திருப்பார் என்று. சிந்தனையற்ற பெண். நீச்சல் குளத்திற்கு அருகிலேயே இருந்தக் கடும் புதர்களில் ஒன்றுள் வீசியிருந்தாள். இதில் ஒரு மாபெரும் அதிர்ஷ்டம் என்னவென்றால், இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜின் ஆட்கள் அந்தப் புதருக்குள் புகுந்துத் துளாவுவதற்கு சில நிமிடங்கள் முன் நான் முந்திக் கொண்டு விட்டேன் என்பது தான்! இல்லையென்றால், பரிதாபத்துக்குரிய கெர்டா, இந்நேரம் நீதி மன்ற தண்டனை மூலம் இறந்திருப்பார்.''

ஒரு மடங்கு நீர் குடித்து விட்டுத் தொடர்ந்தார் : ''அதை லண்டன் எடுத்துச் செல்லும் வரை என் கைப்பைக்குள் வைத்து அடை காத்தேன். லண்டனில் அதனை என் சிற்பக் கூடத்துள் மறைத்து வைத்திருந்தேன். மரண விசாரணை முடிந்ததும் மீண்டும் அதனை எடுத்து வந்து, நீச்சல் குளத்திலிருந்து வெகு தொலைவில், போலீஸ் தேடாது என நான் முடிவெடுத்தப் பகுதியில் புதர்கள் மண்டியிருந்த ஓரிடத்தில் போட்டு விட்டு கை கழுவினேன்.''

''களிமண் குதிரை?'' - முணுமுணுத்தார் பொய்ரெட்.

''ஆஹா! அதெப்படி உங்களுக்குத் தெரியும்? ஆமாம்! ஒரு சிறு பைக்குள் கொலைக்கு உதவிய துப்பாக்கியை வைத்து அதனை இறுக்கமாய் சுட்டி அதனைச் சுற்றி களிமண் குதிரையை உருவாக்கி நிலைநிறுத்தினேன். ஒரு கலைஞன் தன் மிக உயரிய படைப்பாய் கருதும் சிற்பத்தை, விசாரணை எனும் பேரில் போலீஸ்

டைத்தெறியாது இல்லையா! திருமிகு பொய்ரெட்... துப்பாக்கி அங்கு தான் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் என்று எது உங்களை ஊகிக்கத் தூண்டியது?''

''ஒரு குதிரையைக் காரணமின்றி திடீரென நீங்கள் வடிவமைத்து முடித்த உண்மை தான்! உங்கள் மூதாதையரின் குதிரைகளுடனான வாழ்க்கை, சுய நினைவுக்கு அடியில் உங்கள் மூளையில் படுத்துக் கிடக்கும் ஒரு நிரந்தரத் தொடர்பு - பரம்பரைத் தொடர்பு. இது தான் என்னை ஊகிக்கத் தூண்டியது! ஆனால் அந்தக் கைரேகைகள்! அசாத்தியம் அது! கைரேகைகள் வெளி வராது எப்படி அவ்வளவு சாதுர்யமாக திட்டம் திட்டினீர்கள்?''

''ஒரு கிழவன். குருடன். என் வீடு அமைந்திருக்கும் தெருக் கோடியில் சிறு பெட்டிக் கடை ஒன்றை வைத்து ஜீவன் நடத்துகின்றான். அவனிடம் எதையோ வாங்கி அதற்கு காசு தர சில்லறை எடுப்பது போன்ற அவசரம் காட்டி சற்று பிடித்திருக்குமாறு அவனிடம் தந்தேன் - துப்பாக்கியை! இறுதியாக அவன் கை ரேகைத் தான் கொலைகாரத் துப்பாக்கி முழுதும் நிலைத்தது.''

''விந்தையாக உள்ளது செல்வி ரீட்டா. சரி. அந்தத் துப்பாக்கியை மீண்டும் ஹாலோ அருகே கொண்டு வந்து தான் வீச வேண்டுமா?''

''கொலை நடந்த அருகாமை இடத்தில் துப்பாக்கியைக் கண்டுபிடிக்க இயலாததும், சற்று தள்ளி இருக்கும் பகுதிகளையும் போலீஸ் அலசும் என அனுமானித்தேன். அப்படி கிடைக்கும், இத்துப்பாக்கியில் புது கை ரேகைகள் காணப்படும் பட்சத்தில் அது யாருடையது என அறியப்படாமலே வழக்கு முடியுமல்லவா! வேறு எங்கு போட்டாலும் துப்பாக்கி தேடும் முடிவடையா படலத்தாலேயே வழக்கு இழுத்துக் கொண்டிருக்குமே! முடியாத இவ்வழக்கு, என் தூக்கத்திற்கான முதல் எதிரி!''

''இறைவா....! எதிர்க்க முடியாத திட்டங்கள்! இது வரை நான் எதிர் கொண்ட எதிரிகளில், அதாவது ஒவ்வொரு நகர்த்தலிலும் முன் சென்று வென்று கொக்கரிக்கும் எதிரிகளில் என்ற அர்த்தத்தில் சொல்கிறேன், செல்வி ரீட்டா, நீங்கள் தான் நெம்பர் ஒன்!''

''இதில் பாராட்ட ஒன்றுமில்லை திருமிகு ஹெர்குல். மிக சாமர்த்தியமான ஒருவரை மடக்கிப் போட்டு விட்டு, ஒவ்வொரு முறையும் முன் சென்று வெல்வது என்பது, வலிமையும் பொறுமையும் இழக்கச் செய்கிற பயங்கரமான உயிர்க் கொல்லும் அனுபவம்.''

''ஏற்றுக் கொள்கிறேன்'' - பெருமையாய் ஆமோதித்துக் கொண்டார் பொய்ரெட். ''ஒவ்வொரு முறையும் வழக்குக் கொள்ளும் கோணம், யாரோ ஒருவரை மட்டும் குற்றவாளியாய் சுட்டிக் காட்டுவது போல் அமையாது, ஒட்டு மொத்தமாக ஹாலோவாசிகள் எல்லோரையுமே கூண்டில் ஏற்றும்படி அமைந்து, அதிலும் குறிப்பாக கெர்டா கிறிஸ்டோவை மட்டும் மிக நல்லவராக உருவகித்து காட்டப்பட்டபோது - அதாவது திறமையோடு, கலைத்திறமையோடு, சிந்தனா திறனோடு கெர்டாவை உயர்த்திக் காட்டியபோதுதான் - நான் தெளிவாக ஓர் உண்மையை உணர ஆரம்பித்தேன். பிரம்மாண்டமாய் உருவான ஒவ்வொரு துப்பும், கெர்டாவை மட்டும் நல்லவராக்கி, அவரிடமிருந்து விலகியே சென்றன. இத்தனை நுணுக்கமான நகர்த்தல்கள் கை தேர்ந்த கலைஞனால் மட்டுமே முடிந்தவை என்றும் ஆணித்தரமாய் நம்பினேன். அப்படி ஒரு பிறவிக் கலைஞராய் நீங்கள் அமைந்திருந்தது என் நம்பிக்கைக்கு நெய்யூற்றிற்று! உங்களது ஆலமர கிறுக்கலை ஆங்காங்கே வேண்டுமென்றே நீங்கள் நட்டு வைத்தது கூட, உங்கள் மீது யாவரும் சந்தேகம் கொள்ள வேண்டும் எனும் திசை திருப்பல் கருதித் தான்! இதில் ஏனைய அனைவரும் கூட்டு என்பதும் எனக்கு சமீபத்தில் தான் தெளிவானது. லூசி! உங்கள் திட்டத்திற்கு படாடோபமாய் துணை வந்து, அவர் பங்குக்கு, பரிதாபமான இன்ஸ்பெக்டர் க்ரேஞ்ஜை இத்திசையிலும் அத்திசையிலுமாக ஆட்டிப் படைத்தார்!''

பொய்ரெட் ஆலோசித்த உண்மைகளை அமைதியாய் கேட்டுக் கொண்டிருந்தார் ரீட்டா - எனக்கு வேறு வழியே இல்லை எனும் முக பாவத்தோடு!

பொய்ரெட் தன் பதிவுகளைத் தொடர்ந்தார் ''ஒன்று தான் இயலும், செல்வி ரீட்டா. ஒரு குற்றமுள்ள நபரை சந்தேகப் பிடியிலிருந்து கழற்றி எறிய வேண்டுமாயின் ஒன்று தான் சாத்தியம். அது, குற்றத்தை, வாகாக ஓரிடத்தில் குவிய விடாமல், வேறெங்கெல்லாமோ திசை திருப்பி விட்டுக் கொண்டே இருப்பது! இதைத் தான் நீங்கள் வெற்றிகரமாய் கையாண்டீர்கள். ஒவ்வொரு துப்பும் மேன்மையாய் நம்புக்கையூட்டி, பிறகு பிசுபிசுத்து ஒன்றுமில்லாமல் போய், சூன்யத்தில் முடிந்தன.''

ஹென்ரீட்டா பரிதாபகரமாய் மரித்துக் கிடத்தப்பட்டிருந்த கெர்டாவின் உடலைப் பார்த்தார். கண்களில் நீர்த் துளிகள் சுரந்தன.

..ால் தழுதழுக்க ''எத்தனை பூஜித்தார் ஜானை'' என்றார். இந்த வார்த்தைகள், வெறும் ஆராதனை எந்த விளிம்பில் கொண்டு போய் தள்ள வல்லது எனும் உளவியல் உண்மையை, ஆழமாய் எதிரொலித்தன.

''இத்தனை நாட்களாக இப்படித் தான் நினைத்திருந்தீர்களா?'' என்றார் ஹெர்குல்.

''ஆமாம். கெர்டா ஒப்புயர்வற்று ஜானை விரும்பினார். ஆனால் ஜான் இப்படிப்பட்டர் என்ற நிலையோடு விரும்ப - ஏற்றுக் கொள்ள ஒப்பவில்லை... ஒதுக்கி விட்டார்! ஜானைப் பீடத்தில் ஏற்றி வைத்து, சுயநலமற்ற, தியாகம் பொதித்த, உதார குணத்தோடு - இறைவனே மெச்சும்படி ஆராதனை செய்து வந்தார் கெர்டா. இப்படிப்பட்ட ஒரு பெருமகளை சிலையாக்கினால், ஒரு சிற்பி எனும் ஸ்தானத்திலிருந்து சொல்கிறேன், அந்த முகத்தில் ஒன்றும் இருக்காது. ஆம். கெர்டாவும் தனக்கென்று கடுகத்தனையும் இன்றி எல்லாம் ஜானே என்று தான் வாழ்ந்தார்.''

தான் பேசுவதை அப்படியே நிறுத்திக் கொண்டார் ரீட்டா. சற்றே நீண்ட இடைவேளை. ''ஆனால், ஜான், திருமிகு பொய்ரெட்... ஜான், பீடத்திலிருக்கும் சிலையை விடவும் ஒரு படி உயர்ந்தவர். அதைப் பிரித்தறிய இயலாத பேதை... ஜடம்... இந்த கெர்டா! கொன்று விட்டாள்! அவர் உண்மை - நிஜம் - பட்டுப் போகாத வாடாமல்லி - ஜீவாதாரமான மனிதப் பிறவி - உயிர்ப்புடன் வாழ்ந்த, இறந்த ஒரே மனிதம்.''

''தலை வணங்கி ஒப்புக் கொள்கிறேன்'' என்ற பொய்ரெட் சிரத்தையாய் தலை வணங்கியும் காட்டினார். ''தன் கடைசி மூச்சினை விடுத்த கணத்தில் அவர் சொன்ன ஹென்ரீட்டா எனும் ஒரு வார்த்தையில் தான் என்ன உயிர்ப்பு...!''

இழப்பின் துடிப்பில் ''இது மட்டுமா திருமிகு பொய்ரெட்..'' என்ற ரீட்டா குறிப்பிட்டார் : ''தயாள குணம் கொண்டவர் ஜான். நோயாளிகளின் வலிக்கு தானும் கதறும் ஆதரவான மருத்துவர் அவர். ஆம். அற்புதமான மட்டுமல்ல, அபூர்வமான டாக்டர்! அவர் இன்று நம்மிடையே இல்லை. பணம் பணம் என்று அலையும் ஹேர்லி தெருவின் நூற்றுக் கணக்கான கழுகுகளுக்கு மத்தியில் தலை நிமிர்ந்து வாழ்ந்த தன்னலமற்ற ஒரே மருத்துவர். என் வாழ்வின் முதலும் கடைசியுமான காதலையும்... காதலரையும்...''

ரீட்டாவால் மேற்கொண்டு பேச முடியவில்லை.

பொய்ரெட் தன் விரல்களை மிக ஆதரவாகவும் மிருதுவாகவும் ரீட்டாவின் தோள்களில் பதித்தார். ''உங்களுக்கா ரீட்டா வருத்தம்! நெஞ்சில் கூர் வாள் கொண்டு, அந்த வலியைக் காட்டிக் கொள்ளாது, வாழ்க்கையை சிரித்த முகத்தோடு எதிர் கொண்டு வளைய வரும், மிக சொற்பமானவர்களில் முதல்வர் நீங்கள்''.

ஹென்ரீட்டா நேராய் தீர்க்கமாய் பொய்ரெட்டைப் பார்த்தார். சிறு விரக்தி சுழிப்பு உதடுகளில் மூள, ''என்னைத் தூக்கி வைத்து நாடக வசனமாய் பேசுகிறீர்கள், திருமிகு பொய்ரெட்'' என்றார்.

''வசனமில்லை, செல்வி! நான் வெளியிலிருந்து வந்து உங்களோடு பழகியவன். இப்படிப்பட்டவர்களால் தான் ஒருவரை நன்கு கணிக்க முடியும்.''

இதற்கு பதிலாய், உடனே, ''நீங்கள் என்னிடம் வெகு கனிவாகவே நடந்து வந்துள்ளீர்கள்'' என்றார் ரீட்டா.

''நான் உங்களின் இயக்கத்தைக் கண்டு அதிசயித்து வியந்து சிலாகித்திருந்தது தான், இதற்குக் காரணம்.''

பெருந்தன்மையாய் அமைதியை பதிலாக்கிய ரீட்டா கேட்டார் : ''திருமிகு பொய்ரெட்.... நாம் இனி என்ன செய்யப் போகிறோம்? கெர்டாவைப் பற்றிக் கேட்கிறேன்.''

பொய்ரெட், கெர்டா கொண்டு வந்திருந்த தோல் பையினை தன் பக்கமாய் இழுத்துக் கொண்டார். திறந்து கவிழ்ந்தார். பல தோல் துண்டுகள் வந்து விழுந்தன. அவற்றோடு பளபளவென இருந்த சில தோல் துண்டுகளும் விழுந்தன. அவற்றை மற்றும் சற்று சிரத்தைக் காட்டி பொருத்திப் பார்த்தார். சொன்னார் : ''துப்பாக்கி உறை.''

தொடர்ந்தார் : ''இதை நான் என்னிடமே வைத்து மறைத்து விடுகிறேன். பரிதாப கெர்டா - திருமதி கெர்டா ஜான் கிறிஸ்டோ! ரொம்ப அனுபவித்து விட்டார். அவருக்கு நிகழ்ந்துள்ள கணவரின் இழப்பு, மேலும் சேரும் கூடுதல் கொடூரம். தனிமையின் கொடுமையில், நிலை தடுமாறிய மனத்தில், இப்படி ஒரு முடிவை எடுத்து விட்டார் என ஆக்கி விடுகிறேன். மரணத்தில் அவர் கொலைகாரியாக வேண்டாம்.''

ஹென்ரீட்டா கேட்டார்: ''எனில் ஒருவர் கூட நடந்த உண்மையை அறிய மாட்டார்களா?''

''ஒரே ஒருவருக்கு மட்டும் தெரிய வரும். தெரிய வேண்டும். டாக்டர் கிறிஸ்டோவின் மகன். நிச்சயம் ஒரு நாள் அவன் என்னைத் தேடி வருவான். என்ன நடந்தது என உண்மையைக் கேட்பான்.''

''ஆனால் சொல்லி விடாதீர்கள்'' - ஏறத்தாழ கெஞ்சினார் ரீட்டா.

''ம்ம். சொல்வேன்.''

''கூடாது. தயவு செய்து திருமிகு பொய்ரெட்!''

''உங்களுக்குப் புரியவில்லை. தன் அப்பாவை அம்மாவே கொன்றுள்ளார் என்ற உண்மை உங்கள் மனத்துக்கு வேண்டுமாயின் உயிர் குடிக்கும் துயரமாக அறையலாம். ஆனால் சில மனங்கள் இருக்கின்றன - அவற்றிற்கு உண்மை என்ன என தெரியாமல் இருப்பது தான் தாங்க முடியாத துயரம்! உண்மை எதுவாயினும் பரவாயில்லை, அது என்ன என்பது மட்டும் தெரிந்து விட்டால் அவர்களுக்குப் போதும். தாங்கி விடுவார்கள். சற்று முன் கெர்டா சொன்னது நினைவில்லை... ''ஒரு சந்தேகம் என்று வந்து விட்டால் அதன் காரணம் அவனுக்குத் தெரிந்தே ஆக வேண்டும் - அப்படி ஒரு பிறப்பு டெர்ரி!'' டெர்ரி போன்றவர்களால் - உண்மை, சத்தியம் - எத்தனை கசப்பானதாயினும் ஏற்றுக் கொள்ளப்படும். அதன் பிறகு தான் அவர்களது வசந்தக் கால வாழ்வே துவங்கும்.''

ஹென்ரீட்டா எழுந்துக் கொண்டார்.

''நான் இங்கு இருக்க வேண்டும் என நினைக்கிறீர்களா? அல்லது வெளியேறி விடட்டுமா?''

''இங்கிருந்து கிளம்பி விலகிப் போய் விடுவதே மேல் என்பது என் கருத்து.''

ஏற்றுக் கொண்டார். அவருக்கு இல்லாமல் தனக்குத் தானே முணுமுணுத்துக் கொண்டார் : ''நான் எங்கு போவது? என்ன செய்வது? - ஜான் இல்லாமல்!''

''இரும்பு மனுஷியான செல்வி ரீட்டா, திருமதி கெர்டா கிறிஸ்டோ மாதிரி பேசலாகாது! கிளம்புங்கள். எங்கு போவது - என்ன செய்வது என்பதெல்லாம் தானாக உங்கள் முன்னால் விரியும்.''

''கிளம்பட்டுமா? திருமிகு பொய்ரெட்! பாரம் கழிந்து விட்டது! மிக களைத்து, வலுவிழந்து, இற்று உணர்கிறேன், திருமிகு பொய்ரெட்.''

''கிளம்பு குழந்தை! நீ இருக்க வேண்டியது ஜீவன்களோடு. நான் மரித்த உடலோடு இங்கு காத்திருக்கிறேன்!''

## 30

லண்டன் நோக்கி காரினை செலுத்திக் கொண்டு செல்லும் போது இரண்டு வாக்கியங்கள் ஹென்ரீட்டா வின் இதயத்துக்குள் எதிரொலித்த வண்ணமிருந்தன.

நான் என்ன செய்வது? நான் எங்கு செல்வது? - என்பவையே அவை.

கடந்த சில வாரங்களாக கட்டுண்டிருந்தார் ரீட்டா. பதற்றமும் மனவெழுச்சியும் கலந்த தீவிரவுணர்ச்சிப் போராட்டத்திலிருந்தார். கணமும் ஓய்வெடுக்கவில்லை - மனதாலும், உடலாலும்! செய்து முடிக்க வேண்டிய ஓர் இலக்கு - கடமை - அவர் முன்னே கிடந்தது. ஓர் இலக்கு - ஜானால் அவர் தோள்களில் வைக்கப்பட்ட இலக்கு. இப்போது அந்தக் கடமையினாலான இலக்கு நிறைவாகி விட்டது. அதை நிறைவேற்றுவதில் தோற்று விட்டார் ரீட்டா - அல்லது, ஜெயித்து விட்டார்? இந்நிறைவினை ஒருவர் எப்படி வேண்டு மாயினும் நோக்கலாம். எப்படி பார்த்தாலும் பாதகமில்லை - அந்தக் கடமை இலக்கு முடிந்தே விட்டது. இம்முடிவு ஏற்படுத்திய விளைவினை - தாளா அயர்ச்சியை - இப்போது அனுபவிக்கிறார் ரீட்டா.

நிலா காய்ந்த இரவில், வெட்ட வெளியில் நின்றுக் கொண்டு எட்வர்டுடன் பேசிய வசனங்களுக்கு சென்று நின்றது ரீட்டாவின் மனம். அது ஜான் மறைந்த நாளின் இரவு. அந்த நள்ளிரவில், தான் குளம் வரை தனியாய் செல்ல பிரியப்படுவதாய் சொல்லி விட்டுக் கிளம்பிய ரீட்டா, இரவின் பயத்தையும் பொருட்படுத்தாது, தன்னந்தனியாய், நீச்சல் குளமடைந்து அங்கிருந்த பார்வையாளர் அறைக்குள் பிரவேசித்தார். வேண்டுமென்றே, சிறு வத்திக்குச்சி ஒன்றின் ஒளியில், அங்கிருந்த இரும்பு மேஜையில், தான் எப்பொழுதும் வரையும் ஆல மரத்தினைக் கிறுக்கி வைத்தார். திட்டமிட்டு. வேண்டுமென்றே. அப்போது கூட அங்கு அமைதியாய் உட்கார்ந்து துக்கம் அனுஷ்டிக்க முடியவில்லை ரீட்டாவால். துக்கம் - மரித்து விட்ட ஜானின் உயிருக்காக! கடமை துரத்தியது! ஆனாலும் எட்வர்டுடனான உரையாடலில் தன் அடி மன ஆதங்கத்தைச் சொல்லியிருக்கிறார் ரீட்டா : ''நான் உட்கார்ந்து துக்கப்படுவேன்.''

அப்போது, அந்தத் தனிமையில் கூட, வாய் விட்டுக் கதறி அழ என்று, ஓர் ஓரத்தில் அமர முடிவெடுக்கவில்லை ரீட்டா. துக்கமும் துயரமும் தன்னை வெல்ல அவர் அப்போது அனுமதிக்கவில்லை.

ஆனால் இப்பொழுது முடியும். துயரப்பட்டு நெஞ்சுடைய உடைய அழலாம் - தன் உயிரினும் மேலான ஜானுக்காக. நேரம் கிடைத்து விட்டது.

முதல் முறையாய், ஜானின் நிரந்தரப் பிரிவினை நெஞ்சார உணர்ந்து, தன் மூச்சோடு இணைத்துச் சொன்னார் : ''ஜான்.''

கதறலும், அழுகையும், இயலாமையும், ஏக்கமும் ஒன்று கூடி தெறிக்க பதற்றமாய் முனகினார் : ''ஜான்... ஜான்... ஜான்... ஜாஆஆஆஆன்...''

துடிதுடிப்புனூடே, ''நான் அந்தக் கோப்பை தேநீரைக் குடித்திருக்கக் கூடாதா'' என ஆவேசமாய் எண்ணிக் கொண்டார்.

குளிரான எதிர்க் காற்றில் காரினை ஓட்டிச் செல்வது, தற்சமயத்துக்கு தற்காலிக இதமாக இருந்தது ரீட்டாவுக்கு. இருப்பினும் துரித நேரத்தில் லண்டனை அடைந்து, காரினை அதனிடத்தில் நிறுத்தி பூட்டிய பிறகு, சிற்பக் கூடத்துக்குத் தானே போயாக வேண்டும் என்ற நிதர்சனம் முன் வந்து நிற்கும் போது, ரீட்டா உணர்ந்த தற்காலிக இதம் கூட அவருக்கு எரிச்சலாய் போனது. வெற்றிடமாய் போய் விட்ட சிற்பக் கூடம். வெற்றிடம் - ஜான் இனி அங்கு வந்தமர்ந்து தான் பேசும் ஒவ்வொரு வார்த்தையிலும் ரீட்டாவின் காலை வாரி விட்டுக் கொண்டு இருக்க மாட்டாரே - அதனால் உருவாகி விட்ட வெற்றிடம்! அங்கு வந்து ஜான் இனி கோபமாய் ரீட்டாவுடன் சண்டை போட மாட்டார் - ரீட்டாவை சொல்லில் காதலிப்பதை விட செயலில் அதிகம் காதலித்துக் காட்ட மாட்டார் - ஆனந்தம் பொங்கி வழிய ரிட்ஜ் வே நோய் பற்றியும் அதன் மீதான ஆராய்ச்சி தரும் வெற்றி தோல்விகளின் தாக்கம் பற்றியும் பேச வர மாட்டார் - திருமதி க்ரேப்ட்ரீ பற்றி பேச ஓடோடி வர மாட்டார் - செயின்ட் கிறிஸ்டோபர் மருத்துவமனை பற்றி... .... ....

நெஞ்சு துடிக்க இப்படியெல்லாம் நிரந்தரமாய் உருவாகி விட்ட இட்டு நிரப்ப முடியாத வெற்றிடத்தை நினைந்து நினைந்து உருகிக் கொண்டிருந்த ரீட்டாவுக்கு, கடைசியில் தோன்றிய சிந்தனை, அவருக்குள் கருமை படர பரவிக்கிடந்த கேள்விக்கு விடையாய் அமைந்தது.

'எங்கு செல்வது என திசை தெரியாது திண்டாடினேனே! அங்கு செல்வேன். அது தான் தீர்வு. செயின்ட் கிறஸ்டோபர் மருத்துவ மனை.'

தனக்கு ஒதுக்கப்பட்டிருந்த சிறு கட்டிலில் நோஞ்சான் உடம்போடு படுத்துக் கிடந்த திருமதி க்ரேப்ட்ரீ, தன்னைக் காண என்று எதிரில் வந்து அமர்ந்திருக்கும் விருந்தாளியை, மினுமினுக்கும் தன் தைரியக் கண்களால் துளைத்து விடுவது போல பார்த்தார்.

ஜான் எப்படி விவரித்துக் காட்டியிருந்தாரோ அது போலவே தைரியப் பிறவியாய் மிளிர்ந்த கிழவியைப் பார்த்ததும், ஜானே வந்து மீண்டும் நேரில் விவரித்துக் காட்டுவது போல ரீட்டாவின் காதுகளில் ஒலிக்க, திடீர் ஆறுதலை, ஒத்தடத்தை, ஆன்மாவின் புத்துணர்ச்சியை உணர்ந்தார் அவர்.

இது தான் நிஜம் - இது நிலைக்கும். இதோ, சிறு கட்டிலின் விளம்பில் இருக்கிறார் - ஜான்.

''பாவப்பட்ட ஜென்மம், இந்த ஜான், இல்லை...?!'' - திருமதி க்ரேப்ட்ரீ ஆரம்பித்தார். வாழ்க்கையின் மீதும் ஜானின் மீதும் கொண்டிருந்த தாளா பிரியத்தின் காரணமாக, அன்பின் சாரமும் தயவின் ருசியும் கலந்து தெறித்த அவர் குரலில் வருத்தத்துக்கும் குறைவில்லாதிருந்தது. மனம் நெருங்கிய - விரும்பிய மனிதர்களின் அகால மரணங்களை எக்காலத்திலும் ஜீரணிக்க முடியாது. அக்காயம் - போர்த்தி மறைக்கப்படலாம்; ஆனால் நெஞ்சுள்ளிருந்து மறையாது.

''இப்படியா அவர் உலகத்திலிருந்து எட்டி உதைக்கப்பட வேண்டும்? சேதியைக் கேட்டதும் என் வயிறு ஒரு திரும்புத் திரும்பி நின்றது. துளியும் விடாது செய்தித்தாளைப் படித்து அறிந்துக் கொண்டேன். எனக்கு என்னவெல்லாம் வேண்டுமோ அவை அத்தனையையும் அள்ளிக் கொண்டு வந்து தருவாள் என் தாதி. ஜான் அப்படிப் பழக்கி வைத்துள்ளார் அவளை! ம்...! அது தான் பழைய கதையாகி விட்டதே! அவள் மூலம் செய்தித் தாள்கள் வாங்கி அறிந்தேன். செய்திகளும் படங்களும் இருந்தன. அந்த நீச்சல் குளம், எல்லாமும்! அவர் மனைவி விசாரணை முடிந்துக் கிளம்பியது - அந்த நீச்சல் குளத்தின் சொந்தக்காரியான லூசி - எல்லா படங்களும்! எத்தனை பெரிய கொடுமையிது!''

தீவிரமாய் பேசிக் கொண்டிருந்த கிழவியிடம் அங்குலம் அங்குலமாய் ஜான் விவரித்த நடை தெரிய, ஜானே அருகிலிருப்பதாய் உணர்ந்து ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தார் ரீட்டா.

''யார் இந்தப் படுகொலையை செய்தாரோ அவரைப் பிடித்துத் தூங்க விட வேண்டும் என்பது தான் ஆசை'' என தொடர்ந்துக் கொண்டிருந்தார் கிழவி. ''பொது இடத்தில் இந்தக் கயவர்களைத் தூக்கிலேற்ற மாட்டார்கள் இல்லை? செய்ய வேண்டும். அந்தக் காலத்து மன்னராட்சி வழக்கம் போல! அவளைத் தூக்கிலிடுவதை நான் என் கண்ணாரக் காண வேண்டும். ஏன் தெரியுமா? ஜானுக்காக! ஜான், ஆயிரத்தில் ஒருவர். எத்தனை புத்திசாலி, ஜான்! அவருடன் இருப்பதே போதும்... பேரின்பம். உங்களுக்குப் பிடிக்கிறதோ, இல்லையோ, எதையாவது பேசியோ செய்தோ சிரிக்கச் செய்து விடுவார். வாய் விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும் என்பது அவர் வழி. அப்படி நோயும் விட்டுப் போயிருக்கின்றது - குறைந்த பட்சம் தற்காலிகமாக! அப்படி ஒரு தொழில் பக்தி. குணப்படுத்த முடியாத என்னை குணப்படுத்திக் காட்டுகிறேன் என்று அரும்பாடு பட்டாரே, மனிதர்! அவருக்காக, அவர் சிரத்தைக்காக, அவர் காட்டிய அன்புக்காக நான் எதையும் செய்திருப்பேன்!''

'நானும்' என ஆத்மார்த்தமாய் நினைத்துக் கொண்ட ரீட்டா, திருமதியின் உரையாடலுக்கு உரம் சேர்க்கும் விதமாய், ''அவர் புத்திசாலி மட்டுமல்ல. மிகப் பெரியவரும் கூட'' என்றார்.

''தாதிகளும் அவரின் நோயாளிகளும் அதிர்ந்துக் கிடக்கின்றனர். அவர் அருகிலிருந்து விட்டால் போதும்.. ஒரு முறை நாடி தொட்டுப் பார்த்து விட்டால் போதும்... நிச்சயம் குணமாகி விடலாம் என ஆனை பலம் வந்து விடும். அத்தனை கரிசனம் அவருக்கு.''

''அந்த ஜானின் ஸ்பரிஸத்தை நினைந்துக் கொண்டே இருங்கள், திருமதி க்ரேப்ட்ரீ. நீங்கள் சீக்கிரம் சொஸ்தமாகி விடுவீர்கள்.''

''நிச்சயமாய் சொல்ல முடியவில்லை பெண்ணே! எலி போல் வாயை வைத்துக் கொண்டு ஒரு கண்ணாடியையும் மாட்டிக் கொண்டு ஒல்லியான டாக்டர் ஒருவர் புதிதாய் என்னைக் கவனிக்க வந்திருக்கிறார். டாக்டர் கிறிஸ்டோவுக்கும் இவனுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. சிறு புன்சிரிப்பு - ம்ம்! டாக்டர் கிறிஸ்டோ அடிக்கும் ஹாஸ்யம் போல இருக்கிறான் இவன்! டாக்டர் கிறிஸ்டோவுக்கு என்று உயரிய மருத்துவ வழி இருந்தது. 'என்னை விட்டு விடுங்கள் நீங்கள் புது மருந்து கண்டு பிடித்துப் பெயர் வாங்க நானா கிடைத்தேன்' என்பேன். 'உங்களால் முடியும் திருமதி க்ரேப்ட்ரீ. உங்களால் நான் பெயர் வாங்கினால் அது இரண்டாம்பட்சம். நீங்கள் பிழைக்கிறீர்கள் பாருங்கள். அதுவே எனக்கு முதல் பட்சம்' என்று

பேசி என்னை மடக்கி விடுவார். ஆனால் அது உண்மையான பேச்சு தான், தெரியுமா பெண்ணே! 'நீங்கள் வைரம் பாய்ந்தவர் தெரியுமா. நீங்கள் என் பரிசோதனைகளை சர்வ சாதாரணமாய் தாங்குவீர்கள் பாருங்கள். மருத்துவ சரித்திரத்தில் நாம் இடம் பிடிக்கப் போகிறோம் - நீங்களும், நானும்' என்பார். இப்படிச் சொல்லி விட்டு ஒரு கண்ணடிப்பார் பார்... அமுங்கி விடுவேன்! அது என்னவோ எனக்குத் தெரியாது பெண்ணே! அவரின் ஆசையை நிராசையாக்க மட்டும் எனக்கு மனம் வராது. எனக்கு மட்டுமென்ன! இங்கு யாருக்குமே மனசு வராது! புரிகிறதா!''

''எனக்கும் அது தெரியும்'' என்றார் ஹென்ரீட்டா. கிழவி சொல்லும் இவ்வார்த்தைகளை நிஜத்தில் அனுபவித்தவராயிற்றே, ரீட்டா!

கிழவியின் கண்கள் இப்படிச் சொன்ன ரீட்டாவை ஈட்டியாய் பார்த்தன. கேட்டார் : ''நீ ஜானின் மனைவியா?''

''இல்லை'' என்றார் ரீட்டா. ''அவரின் தோழி.''

''அப்படியா'' என்றவர், கேட்டார்:

''கேட்கலாமென்றால்... உன்னை எது இத்தனை தூரம் கொண்டு வந்து நிறுத்தியுள்ளது என்று சொல்ல முடியும்?''

''உங்களைப் பற்றி வண்டி வண்டியாய் என்னிடம் பேசியிருக்கிறார் ஜான். நீங்களிருவரும் சேர்ந்து முயற்சி செய்யும் புது மருத்துவ சாதனை குறித்தும் நிறையவே சொல்லியிருக்கிறார். நான் உங்களைப் பார்க்க விரும்பினேன். எப்படி உள்ளீர்கள் என அறிய விழைந்தேன்.''

''நான் நழுவிக் கொண்டிருக்கிறேன். அது தான் இப்போது இங்கு நடந்துக் கொண்டிருக்கின்றது.''

ஹென்ரீட்டா கெஞ்சலாய் சொன்னர் : ''கூடாது. நீங்கள் நழுவிப் போய்விடக் கூடாது. நலமடைய வேண்டும்.''

''இப்படியே ஆப்படித்தாற் போல் என்னை இருக்கச் சொல்லுகிறாயா? கொடுமை இது.''

''எனில் போராடுங்கள். பரிசோதனைகள் தொடரட்டும். ஜான் கிறிஸ்டோ சொல்லியிருக்கிறார் நீங்கள் மகா மானோ தைரியர் என்று.''

''அப்படியா! என் குண்டு தைரியத்தையுமா அவர் கண்டுபிடித்து வைத்திருக்கிறார்!'' - எத்தனை கெட்டிக்கார மருத்துவர் எனும் நினைப்பில் அப்படியே ஒரு நிமிடம் போல கிடந்த திருமதி க்ரேப்ட்ரீ,

...துவாய் சொன்னார்: ''யார் அவரை சுட்டுக் கொன்றதோ, அவன் ... மகா கோழை. அப்படி உலகில் யாருமே இருக்க முடியாது. ...ண்ணே! அவரைக் கொன்றது யார் என்பது போன்ற துப்புகள் ஏ...தும் கிடைத்தனவா?''

''இல்லை.''

''அவரைப் போல ஒரு ஜீவனை இனி நாம் வாழ் நாளில் தரிசிக்கப் ...வதில்லை.''

இந்த ஏக்கம் ஹென்ரீட்டாவின் சிந்தனைக்குள் அலை அலையாய் ...யது. இதனை ஆழ்ந்து கவனித்துக் கொண்டார் திருமதி க்ரேப்ட்ரீ. ...ொன்னார்: ''உன் ஆத்மபலத்தை இழந்து விடாதே பெண்ணே! ...ன்னைப் பார்த்தால், என்னைப் போல் போராடுபவளாய் படுகிறாய். ...லைப் படாதே.''

இப்படிக் கேட்டுவிட்டு சிறு மரியாதை கலந்த ஆர்வம் பொங்க, ''அவரது இறுதிச் சடங்குகள் சிறப்பாய் நடைபெற்றன, இல்லையா'' என்று கேட்டார்.

அதே மரியாதை ஆர்வம் மேலோங்கி நிற்க, ''மதிப்பும் மரியாதையும் முன் போக, மிகச் சிறப்பாய் நடந்தேறின'' என்றார் ரீட்டா.

''எனக்கு அதில் பங்கேற்று ஜானுக்கு இறுதி மரியாதைகள் செலுத்த கொடுத்து வைக்கவில்லை'' - பெருமூச்செறிந்தார் கிழவி. ''அடுத்த இறுதிச் சடங்கு என்னுடையதாக தான் இருக்கும்.''

''கூடாது'' - வெடித்துப் போனார் ரீட்டா. ''உங்கள் உயிரை அவ்வளவு சீக்கிரம் நீங்கள் விட்டுவிடக் கூடாது. நீங்களும் ஜானும் சேர்ந்து மருத்துவ உலகமே கிடுகிடுத்துப் போகுமளவு சாதனை நிகழ்த்தவுள்ளதாய் அடிக்கடி ஜான் சொல்வார் என்றீர்களே! அதை நீங்களே முன் நின்று முடித்துக் காட்ட வேண்டும். ரிட்ஜ் வே நோய்க்கான ஆராய்ச்சிகள், ஜான் விட்டுச் சென்ற வழித்தடத்தில் தொடரத் தான் போகின்றன. அவருக்குத் துணை நின்ற அத்துணை மருத்துவர்களும் ஏற்கெனவே இந்த இலக்கினைத் தொடர ஆரம்பித்து விட்டனர். திருமதி க்ரேப்ட்ரீ. நீங்கள் மிகப் பெரியவர். உங்கள் மனோ உரம், இரு காரணங்களுக்காக, துவண்டு விடாமல் உயர்ந்தே இருக்க வேண்டும் - நீங்கள் மருத்துவ உலகின் சாதனையாளராக எழ வேண்டும் - ஒன்று உங்களுக்காக; மற்றொன்று ஜானுக்காக.''

பிரமிப்பாய் ரீட்டாவைப் பார்த்த கிழவி, ''கேட்க பிரம்மாண்ட மாகத் தானிருக்கிறது பெண்ணே! என்னாலியன்ற அத்தனை ஒத்துழைப்பையும் தருகிறேன். இதை மீறி ஒன்றும் சொல்வதற் கில்லை'' என்றார்.

ஹென்ரீட்டா எழுந்து அவரின் கைகளை ஆதரவாகப் பிடித்துக் கொண்டார்.

''கிளம்புகிறேன். மீண்டும் உங்களைக் காண வருவேன்.''

''வா. தவறாதே. உன்னோடு டாக்டரைப் பற்றிப் பேசினால் சக்தி வரும்.'' இப்படிச் சொன்னவரின் கண்களில் மீண்டும் அந்தப் பிரகாசம் டாலடித்து ஓய்ந்தது. சொன்னார் : ''எல்லா வகைகளிலும் மிகச் சரியான ஆண் மகன் - டாக்டர் ஜான் கிறிஸ்டோ.''

''ஆமாம்'' என்றார் ரீட்டா. ''சரியான வர்ணனை.''

''போனதை நினைத்துக் கொண்டே இராதே குழந்தை. வாழ்பவர்களோடு கல. போனது போனது தான். திரும்பி வராது.''

ஒரே கருத்தை இரு வேறு பாணியில் ஹெர்குல் பொய்ரெட்டும் திருமதி க்ரேப்ட்ரீயும் அறிவுறுத்தி தனக்கு பிரியா விடை தருவதாக உணர்ந்தார் ரீட்டா.

சிற்பக் கூடத்தை அடைந்த ஹென்ரீட்டா, தரைக்குக் கூட அதிகம் வலிக்காது, மிக மெதுவாய் நடந்தார்.

'இப்பொழுது... இதோ, இப்பொழுது...', ஆவேசமாய் நினைத்துக் கொண்டார் ரீட்டா. 'இதோ இப்பொழுது கிடைத்து விட்டது. நான் பரிதவித்துக் காத்துக் கிடந்த விடுதலை தனிமை கிடைத்து விட்டது.'

'இனி நான் ஒத்திப் போட வேண்டாம். ஜானின் இழப்புக்காக மனது கரையும் வரை துக்கம் அனுஷ்டிக்கலாம்.'

அன்று எட்வர்டிடம் என்ன சொல்லியிருந்தாள் - 'ஜானின் இறப்பிற்காக நானும் ஒரு நாள் துக்கித்துக் கதறுவேன்.'

தன்னை அப்படியே அங்கிருந்த நாற்காலியில் தொப்பென்று போட்டு புதைத்துக் கொண்டார் ரீட்டா. தலையை நாற்காலியின் பின்னுக்குப் போட்டுக் கொண்டு, முகத்தில் விழுந்த அத்தனை முடிக் கற்றைகளையும் வழித்தெடுத்துக் கொண்டு, கூரையைப் பார்த்தபடி சாய்ந்தே கிடந்தார்.

தனிமை.

வெறுமை.

ஆதரவற்றுப் போய் விட்ட கொடுமை.

அ...தை நிலைமை.

...முடியாத வெற்றிடம் - நிரந்தர வெற்றிடம்.

கண்ணீர் பூக்கள் ரீட்டாவின் கண்களில் மலரத்தொடங்கி, கன்னங்களில் ஒரு நீர்க்கோடாய் கோர்த்துக் கொண்டு விழுந்த வண்ணமிருந்தன.

...றுக்கு நிகழ்ந்துக் கொண்டிருக்கும் கண்ணீர் சமர்ப்பணம் என நினைத்துக் கொண்டார். இப்படி நினைக்கும்போது, மிகுந்த வலியுடன் கூர்வாளாய் நினைவுக்குள் வந்து விழுந்தன, ஜான் கூறிய ...ம் வார்த்தைகள் : 'என்னை விட உன் கலைத் தான் உனக்கு ...தி. நான் ஒரு வேளை மண்டையைப் போட்டு விட்டால், கண்களில் பொங்கி வழியும் கண்ணீரோடு என் உடம்பின் அருகில் ...கார்ந்திருப்பதை விட்டு விட்டு, சோகம் கொண்டாடும் ஒரு பெண் முகத்தைச் செதுக்க நீ கிளம்பியிருப்பாய்...'

...ர் உலுக்கு உலுக்கிக் கொண்டார் - இந்த நினைப்பு எதற்காக இப்போது எனக்கு வருகின்றது?

உடனடியாய் இக்கேள்விக்கான பதிலும் விளங்கிற்று. ரீட்டாவினுள் இருக்கும் கலைஞன் சிலிர்த்தெழுந்தாள்.

துக்கத்தின் பிரதிபலிப்பு - முக்காடு போட்டுக் கொண்ட ஒரு துயரப் பெண் - முகந்தெரியாது ஆனால் முக்காடுக்குள் நிகழும் துயரப் போராட்டம் - தலையை போர்த்திக் கொண்ட சந்தியாசினிக் கோலம்...

மிருதுவான வெண்கல் தான் இச்சிலைக்கான பொருத்தமான களம்.

அச்சிலை எப்படி முடிவு பெற வேண்டும் எனும் சாரமும் கருவாயிற்று.

நல்ல உயரமான, ரீட்டாவைப் போன்ற சிலை - துயரம் முழுதும் சிலைக்குள்ளேயே கிடக்க வேண்டும் - சிலை நீள அகலம் முழுதும் ...டி கட்டியது போல நீளும் சிலையின் பட்டியில் மட்டுமே அமைதியாய் துக்கம் வெளியாக வேண்டும். கடினமான சவால் பணி.

வெளிப்படையான மிருதுவான வெண் கல்லிலிருந்து பிரதிபலிக்கும் - காதல் வலி.

'நான் ஒரு வேளை மண்டையைப் போட்டு விட்டால்....'

திடீரென ஒரு புரிதல் ரீட்டாவின் உடலெங்கும் பாய்ந்தடிக்கும் அலையாய் விழுந்தது.

'இது தான் நான்' - நினைத்துக் கொண்டார். 'ஜான் மிகச் சரி. எப்பொழுதும் போல். என்னால், மிக அதிகமாக சந்தோஷப்படவும்

முடியாது. துக்கப்படவும் முடியாது. எல்லா உணர்வுகளும் உடனேயே கை வழி நழுவி கலை வழி சிலையாகி விடும். அப்படிப்பட்ட கலைஞன் நான்.'

'மிக்டே போன்றவர்கள் தான் சராசரியானவர்கள்' - ரீட்டாவின் சிந்தனை தொடர்ந்தது. 'மிக்டே போன்றோர் தான், இந்த பூமியிலுள்ள மனிதப் பிறவிகளின் உப்பு காரம் பொதிந்த சாரம். பூமி இயக்கத்தின் அச்சாணிகள். மிக்டே - எட்வர்ட் - ஏய்ன்ஸ்விக் - இது தான் நிஜம். நிதர்சனம். வலு. கதகதப்பு.'

'ஆனால் நான்...?' - கசப்பான பின்வரும் விடையை உணர்ந்தார்: 'நான் ஒரு முழு மனுஷி கிடையாது. நான் எனக்கும் யாருக்கும் சொந்தம் கிடையாது. கலைக்குள் மூழ்கி அதனுள் கரைந்து விட்ட நான், என்னிடமிருந்து வெளியே, வெகு தூரத்தில், யாருக்கோ சொந்தமானவள். இதோ, இப்பொழுது கூட, முழுதுமாக, உயிரினும் மேலான என் ஜானின் இழப்புக்கு உட்கார்ந்து என்னால் அழ முடியாது. மாறாக, அப்படி அழுதுக் கூப்பாடு போடுவதை விட உயர்வாய், என் துக்கத்தை, இழப்பை, சோகத்தை, வலியை, ஒரு கற்சிலையாக நிரந்தரமாக்க முடியும்.'

வெளிப்படையான, மிருதுவான, வெண்கற்சிலை.

சிலைக்கு அடியில், 'துக்கம்' எனும் தலைப்பிட்டு, சர்வதேச பொருட்காட்சிக்கு அனுப்ப வேண்டுமாய் முடிவெடுத்துக் கொண்டார்.

மூச்சின் அடியில் மிருதுவாக வலிக்காது சொல்லிக் கொண்டார்: "ஜான்... உயிரே.. உயிரின் உயிரே.. மன்னித்து விடு. நீ நினைத்தது போன்றவள் தான் நான். என்னால், என்னை, மாற்றிக் கொள்ள இயலாது கண்ணா."

(முடிந்தது)



இரு ஆண்கள், நாலு பெண்கள் -
ஆறு பேருக்குள்ளும் சுழலும்
ஒரே பூதாகரச் சுழல் - காதல்!
ஒருவரையே இருவர் காதலிக்க,
அந்த இருவரை மற்ற ஒருவர் காதலிக்க....
ஆற்றுச் சுழலாய் உணர்ச்சிப்
போராட்டங்கள் வெடிக்கின்றன.
இச்சுழல், இவர்களில் ஒருவரைப் பலி வாங்கிவிடுகின்றது.

கொலை!
செய்தது யார்?



இதற்கான பதில் தேடி, காதலின்
அடியாழத்தைத் தொட்டுக்கொண்டுப்
பிரயாணிக்க ஆரம்பிக்கும் துப்பறிதலின் சிறப்பான ப்ளஸ்
பாயிண்ட்டாக அமைந்துள்ளது - காதல் தவிப்புகள்.

குழம்பிய குட்டையாய் நடக்கும் காதல் போராட்டங்களை
மெல்ல மெல்லத் தெளிய வைத்து, சீர் செய்து,
அனைத்துக் கதாபாத்திரங்களையும் ஆசுவாசப்படுத்திவிட்டு,
கடைசி அத்தியாயங்களில், கொலைகாரனைக்
காரண காரியங்களோடு அறிமுகப்படுத்துவது-
நாவல் எனும் எழுத்து வகைக்கே இலக்கணம்
வகுத்துத் தரும் மேதைமையாகிவிடுகின்றது.

